உ

# கம்பன் கலை நிலை



ஆசிரியர்

ஜெகவீர பாண்டியன்



மதுரை,

மதுரூஸ, சி. வரதராஜுலு நாயுடு பிரஸில்

பதிப்பிக்கப்பெறறது.

பங்குனிமீ

1941.

# முகவுரை



அமிழ்தினும் இனிது என நம் தமிழ் மொழியை அழகுறப் புனைந்து அறிவு நலங்களை அமைவுடன் நல்கிக் கலையுலகில் தலைமை பெற்றுள்ள புலவர் பெருமக்களை நாம் பெரிதும் உரிமையாகப் பெற்றிருக்கின்றோம். பெறலரிய பெரும் புலவர்களை இந்நாடு பெற்றிருப்பது போல் வேறு எந்நாடும் பெறவில்லை. நாம் பெற்றும் என்? நம் முன்னோர்கள் ஈட்டி வைத்துள்ள கலைச் செல்வங்களை விழைந்து பேணாது வறிதே இழந்து நிற்கின்றோம். இந்நிலையில் நமக்கு இணையாக யாண்டும் துணை காண்டல் அரிது. இந்நிலத்திலிருந்து விளைந்துள்ள அரிய கலை நலங்களை மறுபுலங்களிலுள்ளவர்களும் வியந்து நோக்கி விரைந்து பயன் அடைந்து வருகின்றார்.

இங்ஙனம் உலகமெல்லாம் நலமுறும்படி தலைமையுடன் வந்துள்ள நம் நாட்டுக் கலைஞானிகளுடைய அரிய சரித வரலாறுகளையும், இனிய கவி நலங்களையும், விழுமிய கலை நிலைகளையும் எல்லாரும் அறிந்து அநுபவியாமல் அகன்று நிற்பது மிகவும் இரங்கத்தக்கதே. பின்வரும் சந்ததிகளுக்கு என்று முன்னோர் வைத்துப் போயுள்ள அறிவுப் பொருள்களைப் பொதுமக்கள் இழந்திருக்கும் நிலைமையை நினைந்து அறிஞர் பலரும் இரங்கி நிற்கின்றார். பொன் புதையல் மண்புதைந்துள்ளது போல் கண் படாதுள்ள நம் நாட்டுக் கலைச் செல்வத்தை நம்மவரனைவரும் தெளிவாகக் கண்டு ஒளிபெறும் வண்ணம் தொழில் புரிதல் நலம் என்று நானும் சிலமுறை நினைந்து

அந்நினைவின் முதிர்ச்சியினால் எனது நிலையையும் மறந்து புலவர் உலகம் என்னும் பேரால் ஒரு நூல் செய்யத் துணிந்தேன். தண்டமிழ்ப் புலமையில் தலை சிறந்து பண்டைக் காலத்திலிருந்தே தெய்வத் தேசுடன் நிலவி நிற்கின்ற * அகத்திய முனிவர், தொல்

---

* இவர் சரிதம் அரிய ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் இனிய வசன நடையில் எழுதி வெளியிட்டிருக்கின்றேன். 1938ல் மைசூர் யூனிவர்சிட்டியில் அது பாடமாக வைக்கப்பெற்றது. சென்னை யூனிவர்சிட்டியில் B. A. வகுப்புக்கு இவ் வருடம் (1941-42) பாடமாக வைக்கப்பட்டுள்ளது.

காப்பியர், நக்கீரர், திருவள்ளுவர், திருத்தக்கதேவர், உருத்திரங் கண்ணனார், கொங்கு வேளிர், கோவூர் கிழார், ஆவூர் மூலங்கிழார், அம்மூவனார், அறிவுடைநம்பி, இளம்பெருவழுதி, ஓரம் போகியார், கிரந்தையார், நப்பூதனார், பொன்முடியார், ஒதலாந்தையார், பூங் குன்றனார், மாங்குடி மருதனார், சாத்தனார், இளங்கோவடிகள் முதலிய பழம்பெரும் புலவர்களின் வாழ்க்கை வரலாறுகளும், கவித் திறங்களும், உவமை நயங்களும், உள்ளுறை வளங்களும், அவர்கள் உலகினுக்கு உணர்த்தியுள்ள உணர் வுறுதிகளும் எவரும் தெளி வாக எளிதறிந்து இனிது பயனுறும் வகையில் எழுத முயன்றேன்.

அவ்வாறு முனைந்து நிற்றலை நண்பர் சிலரிடம் மொழிந்தேன். அதற்கு அவர், "சங்கத் தமிழ்ச்சுவையினும் கம்பனுடைய காவியச் சுவையையே உலகம் இன்புற முன்னதாக நீங்கள் உதவுதல் வேண் டும்; அதனைப் பின்பு தரலாம்" என்று என்பால் அன்புரிமையுடன் உரைத்தார்.

அன்னாரது உரிமையுரையை உள்ளங்கொண்டு முதலில் குறித்த புலவர் உலகம் என்ற தலைமையான அந் நூலின் ஒரு பகுதியாகக் கம்பன் கலை நிலையை இதுபொழுது வெளியிடுகின்றேன்.

முத்தமிழ்ப் புலமையும் வித்தகக் கவித்திறமும் வியனுற வாய்ந்து பரனருளும் தோய்ந்து நிற்றலால் தெய்வப் புலவன் என வும், கலையுலகில் தலைமைபெற்று யாண்டும் நிலைத்த அதிபதியாய்த் தனிச்செங்கோல் செலுத்தி வருதலால் கவிச்சக்கரவர்த்தி எனவும் இம்பரெல்லாம் புகழக் கம்பர் இலங்கி நிற்கின்றார். இத்தகைய மேதையை உலகம் மீண்டும் பெறுதல் மிகவும் அரிதாம். மலைகளுள் இமயமலை உயர்ந்து நிற்றல் போல் கவிஞர்களுள் கம்பர் சிறந்து விளங்குகின்றார்.

உணர்வொளி பரப்பிக் கலைக்கதிர் விரித்து
ஞாயிறாய்க் கலையுலகில் நிலவி நிற்கின்ற கம்பர் தம் புலமை நலம் தோன்றவும், உலகம் நலமுறவும் உரிமையுடன் இயற்றிய நூல் இராமாயணம் என்பது. இராமனுடைய சரிதம் கூறுதலால் அஃது இப் பெயர் பெற்றது. தமது நூலுக்குக் கம்பர் முதலில் இட்ட பெயர் இராமாவதாரம் என்பதே. அவதாரம் என்ற குறிப்பினால் இராமனுடைய அற்புத நிலை புலனாம்.

எந் நிலையிலும் அவன் தன்னிகரில்லாத் தலைவன். அகில மங்கள குணகண வடிவினன்; அழகு அறிவு அருள் அமைதி வாய்மை தூய்மை வண்மை திண்மை அருந்திறலாண்மை பெரும் போர் வீரம் முதலிய உயர் நலங்களெல்லாம் ஒருங்கே குடிகொண்ட பெருந்தகையாளன்; அருங்குலக்குரிசில்; காணினும் கேட்பினும் கருதினும் களிதரும் விழுமிய நிலையினன். அந்த அற்புதமூர்த்தியின் அருமைச் சரிதத்தை விற்பன நலம் கனியத் தமிழில் இவர் விளக்கி யிருத்தலால் கம்ப ராமாயணம் அற்புத காவியம் என வந்தது. அது இதிகாசமாயினும் அதிசய அமைதிகளால் பாரகாவியம் எனவும், வீரகாவியம் எனவும் பாராட்டப்பெறுகின்றது. அதன் அருமை யும் பெருமையும் அழகும் இன்பமும் அளவிடலரியன. அலைகளை மறிந்து கொழிக்கும் அமிர்த வாரிதி எனக் கலைகளை விழைந்து கொழித்துப் பேரின்ப நிலையமாய் அது பெருகி யுள்ளது.

அதன் ஆழமும் நீளமும் அகலமும் அறிய அறிய அகன்று விரிகின்றன. அறிவானந்தமாய்ப் பரந்து, அரிய கலைகளாகிய பெரிய அலைகளை வீசி, நீள நிமிர்ந்து, நெடிது முழங்கி, நிலை யெழுந்தலறி, அறிவுலகில் பெரியதோர் ஆரவாரம் செய்து ஊழியும் போராத உயர்சுவைக் கடலாய் அது ஓங்கி ஒளிர்கின்றது.

அத்தகைய அரிய பெரிய இனிய நூலின் கனிவுகளை யெல்லாம் யாவரும் எளிதில் நுகர்ந்து இன்புறும்வகையில் இது பண்புற்று வரு கின்றது.

கவிகள் தோறும் பொருள் கூறிக் கதைகளை விரியாது, உணர்வு நலம் கனிய உளநயங்களை விளக்கிக் கலைச்சுவைகளையே இந் நூல் தலைப்பெய்துவரும். அவ்வாறு நிலை வரன்முறையே விளைந்தெழுந்து மாபு நிலை தழுவி வளஞ்சுரந்து மணம் பொதிந்து வருவதாகும்.

இராமன்
இலக்குவன்
பரதன்
சத்துருக்கன்
தசரதன்
சுமந்திரன்
சனகன்

பரசுராமர்
கலைக்கோட்டு முனிவர்
வசிட்டர்
ராா
பாரதுவாசர்
ர்

கோசலை
சுமித்திரை
கைகேசி

முதலாயினோர் ஒரு நிலையிலும்,

குகன்
சடாயு
சரபங்கர்
விராதன்
கவந்தன்
வாலி
சுக்கிரீவன்
அனுமான்

சாம்பவான்
சபரி
தாரை

முதலாயினோர் மற்றொரு நிலையிலும்,

இராவணன்
கும்பகருணன்

இ ந் த ப
அதிகாயன்
அட்சயன்
கரன்
மாரீசன்

மாலியவான்
மகோதரன்
சூர்ப்பணகை
மண்டோதரி

முதலாயினோர் பின்னொரு நிலையினும் இந் நூலில் இடம் பெற்று நிற்கின்றனர்.

மேற்குறித்தவர்கள் யாவரும் இராமாயணம் என்னும் காவிய அரங்கில் நடிக்கும் நாடக பாத்திரங்களாவர்.

இந்தக் கதா பாத்திரங்களைத் துணையாகக் கொண்டு, இராம சரிதத்தை இணைபிரியாது இனிது மருவிக் கம்பர் தமது காவிய உலகத்தை அறிவொளி பரந்து மிளிர, அழகு சுரந்து திகழ, அதிசயமிகுந்து பெருக, ஆனந்தமயமாகப் படைத்திருக்கின்றார்.

இவரது படைப்புத் திறனும், கற்பனை நிலைகளும், கருத்தமை திகளும், கலை வளங்களும், கவிவிளைவுகளும், உலக மகாகவிகள் எவ ரிடமும் காணமுடியாத அற்புத ஆற்றல்களும், இடங்கள்தோறும் உரிமையானவர்களை இனிது காட்டி இவர் இயக்கிவரும் காட்சியும், இடை இடையே அரிய உண்மைகளை எளிமையாக இசைத்து நிற் கும் மாட்சியும், மனோதத்துவங்களும், பாத்திரங்களின் பான்மை மேன்மைகள்யாவும் உள்ளும் புறமும் ஒருங்கே தெரியத்தெள்ளிதின் விளக்கும் திறமையும், அவர்கள் வாயிலாக உள்ளுறைந்து உலகிற்கு இவர் உணர்த்தியிருக்கும் உணர்வொழுக்கங்களும், உவமை நிலைக ளும், உறுதிநலங்களும், பிறவும் அறிவு நலம் சுரந்து யாண்டும் இனிய சுவைகள் நிறைந்துள்ளன. சொன்னலங் கனிந்து பொருள் நலம் பொலிந்து எந்நலங்களும் மலிந்து எழில்மிகுந்துள்ள அந்நன் னயங்களையெல்லாம் ஒருங்கே விளக்கி அருங்கலை விநோதமாய் இந் நூல் விளைந்து வருதலால் கம்பன் கலை நிலை என வந்தது.

இதனால் இந்நூலின் அழகும் அமைதியும் அருமையும் பெரு மையும் இனிது புலனும். அறிவு நிலையமான இத்தகைய அரிய பெரிய துறையில் யான் துணிந்து புகுந்ததற்குக் காரணம், இராமா யணத்தில் இளமை தொடங்கியே இயல்பாக எனக்குள்ள பேராவ லும், அக்காவிய நிலையைக் குறித்து அமயம் வாய்த்தபோது உயர்

நியாசங்கள் செய்துவருங்கால் அவைகள் தோறும் அறிஞர்கள் வியந்து பாராட்டிச் "சுவைசுரந்துள்ளது" என உள்ளூற உவந்து என்னை ஊக்கி வந்த உறுதிப்பாடுகளுமேயாம். ஆயினும் பேச்சில் காட்டி வந்த சுவைப் பண்புகளை எழுத்தில் காட்ட முடியுமா? என்று இன்னும் ஐயுறவு என்னுளத்தில் எழுந்து விழுகின்றது. தெய்வத் திருவருள் கூட்டிய அளவு செய்யப் பெறுவோம்.

சுவைமயமான இந்நூலை உரிமையுடன் கண்டு உலகம் உவந்து கொள்ளும் என உறுதியாக நான் நம்பி யிருக்கிறேன்.

செந்தமிழ் நலம் சுரந்து அந்தமில் இன்புடன் வந்துள்ள இந்த அருமை நூலை எல்லாரும் இனிது பயின்று இன்புற வேண்டும் என்று எம் செந்திற்பெருமான் திருவருளைச் சிந்தித்து வந்தித்து வாழ்த்துகின்றேன்.

கம்பர் கலைச்சுவையைக் காசினியில எலலாரும்
உமபர் அமிர்தா உவநதுணணா—இமபர்
இனிதருளி என்னுள் இருநதருளுந் தெய்வம
தனியருளி நிற்கும தழைத்து.

திருவள்ளுவர் நிலையம்,
மதுரை.
1—4—41.

இங்ஙனம்
ஜெகவீரபாண்டியன்.

## சிறப்புப்பாயிரம்

கம்பனுயர் கலைநிலையைக் கறறவரும் மறறவரும்
கனிந்து கேட்கச்
செம்பவள வாய்திறந்து தெள்ளமிர்த மெனப்பொழிந்து
சீர்த்தி பெற்றான்
இம்பரெல்லாம் இன்பமுற இன்றெழுதி வெளியிந்தான்
எழிலவேற் செவ்வேள்
பைமபொனடி முடிபுனைந்த செகவீரபாண்டியனும்
பணபார் வேந்தே.

உ

# கம்பன் கலை நிலை

## கடவுள் வாழ்த்து

புலமைநலம் சிறந்த புண்ணிய சரிதமும்
அலகில் கல்வி யவரறி வமைதியும்
கவியின் சுவையும் கருத்தின் குவையும்
சவியுயர் ஒழுக்கும் தகவும் தன்மையும்
பலகலை நலனும் பழந்தமிழ் இயல்பும்
தலைமையும் நிலைமையும் சார்பும் சால்பும்
உலகம் நலமுற ஒளிசெய் துதவும்
நிலவொளிர் வேணி நின்மலன் கண்மலர்
வலமுயர் யானை முன்வர வந்த
இலகொளி முருகன் என்னுளத் திருந்தே.

## புலவர் நிலை

உலகம் இன்புற ஒழுகி உணர்வு நலங்களை உதவி யுள்ளமையால் புலவர்கள் இனிய உபகாரிகளாய் என்றும் தலைமை யெய்தி நிற்கின்றார். மலர்க்கு மணமும், மணிக்கு ஒளியும் போல் மனிதனுக்கு அறிவு பெருமை தருகின்றது. உணர்வின் அளவே மனிதன் உயர்ந்து வருகின்றான். உயிர்நிலையமான அவ்வுணர் வொளி குன்றிய பொழுது மனிதன் இருகால் விலங்கென இழிந்து திரிகின்றான். அவன் பிறப்பும் இருப்பும் பிழையாய் ஒருவழியுமின்றி உருவழிந் தொழிகின்றன. உள்ளொளியாகிய அறிவினை யுடையான் தெள்ளி யணுகித் தெய்வம் எனத் திகழ்கின்றான்.
அருமையும் பெருமையும் இனிது புலனும்.

அறிவே இறைவனுக்கு உருவம் ஆதலால் அப்பரமனது உ வுரிமையுடைய உயிரினங்களும் இயல்பாகவே அறிவுடையனவாய் அமைந்திருக்கின்றன. இயற்கையாக அமைந்துள்ள அவ் அறிவை வளம்படுத்தி வராமல் வறிதே இழந்திருப்பவர் பான்மைதிரிந்து ஆன்ம ஒளி குன்றி அவமே இழிந்து நிற்கின்றார். உளமலி கல்வி

யால் அறிவை உரஞ்செய்துகொண்டவர் ஒளிமிகப்பெற்றுவெளியே உயர்ந்து விளங்குகின்றார். நிலையறிவு கலையறிவோடு கலந்தபொழுது தலையறிவாய்த் தழைத்தெழுந்து தனியே ஒளிர்கின்றது. ஒளிநலம் கனிந்த அவ் வுயரறி வுடையவரே புலவர் என உலகில் உருவெய்தி வருகின்றார். புலவர் என்பதற்கு அறிவுடையவர் என்பதே பொருள். புலம் = அறிவு. அதனையுடையவர் புலவர் என்க. கலைநலம் சுரந்த அறிவே இங்குப் புலம் என வந்தது.

இப் புல நலம் பலநலங்களையும் பயந்து நிலைமிகச் செய்கின்றது. இந்நிலவுலக முழுவதும் ஆளும் அரசனும் கலைநலமுடையானுக்கு நிகராகான். அவன் புறத்திருவினன்; இவன் அகத்திருவினன்; அத்திரு விரைந்து அழியும்; இத்திரு என்றும் அழியாது நின்று நிலவும்; அது உடலமினுக்கி உலகநிலையில் சிறிது உயர்வுதரும்; இது உயிரை உயர்த்தி இருமையினும் என்றும் பெருமையருளும்; அது தொட்டவுடல் தொலையத் தொலைந் தொழியும்; இது யாண்டும் தொலையாது தொடர்ந்து உயிர் புக்குழியெல்லாம் புகுந்து பொலிவு செய்து நிற்கும். ஒருமுறை தொட்ட உயிரை ஊழியும் விடாது மருவி உயர் நிலையில் உய்க்கும் கல்விபோல உயிர்க்கு உறுதுணை யாவது யாது? வேறு யாதுமே யில்லை என நீதி நூல்கள்யாவும் ஓதியுள்ளன.

" ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் *ஏமாப் புடைத்து." (குறள் 398)

என்றது பொய்யாமொழி. கல்வி உதவியின் எல்லையின்மை தெரிந்தே எழுமை என ஓர் அளவுகூறி இதில் உள்ள உளவினை வள்ளுவப் பெருந்தகை உய்த்துணர வைத்தார்.

---

* ஏமாப்பு=உதவுதல். ஏமம் என்னும் சொல் சேமம் காவல் இன்பம் முதலியவற்றைக் குறித்துவரும். ஆதலால் ஏமாப்பு என்பது உறுதியாய் நின்று உதவுதலை இங்கு உணர்த்தி நின்றது. உடைத்து = உடையது. கல்வி எழுமையும் இன்பம் தரும் என்னாது ஏமாப்பு உடைத்து என்றது உயிர்க்கு உண்மையான உறுதிநலம் நல்கிப் பரம்பரையாக உரஞ்செய்து நின்று என்றும் குன்றாத இன்ப நிலையில் இறுமாந்திருக்கச் செய்யும் என்பது தெரிய என்க. இதனால் அதனது ஆற்றலும் அருளமைதியும் அறியலாகும்.

இங்ஙனம் என்றும் அழியாத விழுமிய செல்வமாகிய கல்வியுடையாரை அன்றே அழியும் அவலமாகிய பொருளுடையாருடன் ஒரு துலையில் வைத்து ஒப்பு நோக்கலாகாது. ஒரு முறை ஔவையார் இருவரையும் நடுவு நிலைமையுடன் நேரே சீர்தூக்கி நோக்கினர்; நோக்கவே ஏற்றத் தாழ்வு தெரிந்தது; தெரியவே,

“ மன்னனும் *மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்” (ஔவையார்)

எனத் தம் நோக்கில் கண்டதைக் காரணத்துடன் தூக்கி யுரைத்தார். இதனால் கல்வியினது எல்லையற்ற பெருமையும் அதனையுடையவரது அருமையும் இனிதறியலாகும். கொற்றவனையும் கற்றவனையும் ஒரு நிலையில் நிறுத்தி ஒப்புநோக்கும் இதில் முன்னவனுக்கு யாதொரு அடையும் கொடாமல், பின்னவனுக்கு மட்டும் அடைமொழி கொடுத்துக் கூறியிருப்பது இங்கு ஆராயத்தக்கது. பிறப்புரிமையில் இயற்கை மாண்புடன் வந்துள்ள மன்னனிலும் ஒருவன் மாட்சியுறவேண்டுமாயின் அவன் இன்ன நிலையில் கற்று இன்ன வகையில் இருக்கவேண்டுமென்பதாம். செல்வத்தின் மாட்சி உலகப் பிரசித்தம் ஆதலால் அதனை எதிர்நிறுத்திக் கல்வியின் உண்மையுயர்ச்சியை இங்ஙனம் உணர்த்தி யருளினர்.

உலகம் ஆளும் அரசரினும் புலமையாளர் தலைமையாளர் என்றதனால் அவரது நிலைமையும் நீர்மையும் புலனும்.

புவியர சொருவன் புகழ்மிகப் பெற்றுக்
குவியர சேத்தக் குலாவி நிற்பினும்
கவியர சனைய காட்சிகை வருமோ ?
எண்ணிய உடம்பில இயலுறுப பெழிலசொ
ஒண்மணிப் பூண்புனைந் துயர்வுற றிருப்பினும
கண்மணி யனைய கண்ணியம பெறுமோ ?
உடலே யனையா உலகாள் வேநதர் ;
உயிரே யனையர் புலமாள் வேந்தர் ;

* மாசு = குற்றம். அற என்றது மனம் மாசு அறவா' கல்வியில் மாசு அறவா' எது மாசற' என எண்ண நின்றது. கருத்திலும் கலையிலும் மாசு இன்றிப் புனித பூரணனாய் அவன் இருக்கவேண்டுமென்பதாம்.

அதனால்,

புலவரை அரசன் புகழுறப் பேணி
நலமிகப் பெறவே நிலமிகப் பெறவே.

என வரும் இதனால் புலவரின் சீர்மை நீர்மைகள் தெரியலாகும். இதில் குறித்துள்ள உவமைநிலைகளை ஊன்றிநோக்கிப் பொருள் நலங்களை உய்த்துணர்ந்து கொள்க.

புலவர்கள் இங்ஙனம் தலைமையாகப் போற்றப்படுவதற்குக் காரணம் அறிவின் ஏற்றமேயாம்.

"தேவர் அனையர் * புலவரும்; தேவர்
தமரனையர் ஓரூர் உறைவார்; தமருள்ளும்
பெற்றன்னர் பேணி வழிபடுவார்; கற்றன்னர்
கற்றாரைக் காத லவர்." (நானமணிக்கடிகை 75)

இதில் புலவரைத் தேவரோடு ஒப்பவைத்து உரைத்திருத்தலறிக. இக்கவியின்பொருளைக்கருத்தூன்றி நோக்கிக் கல்வி நலனை ஓர்ந்து கொள்க. மண்ணுலகில் உயர்ந்த அரசரினும் புலவர் சிறந்தவர்என முன்னம் தெரிந்தோம்; இதில், விண்ணுலகில் விளங்கும் புண்ணியர்களாகிய தேவர்கள் என்றே அவரை எண்ணவேண்டும் என்பது கண்டோம்.

என்ன ஏதுவால் இன்ன பெருமை அன்னவர்க்கு எய்தியது? மனித நிலையில் பலபடிகள் ஏறி உன்னத நிலையையடைந்து உணர்

* அறிவு நலம் சிறந்து உறுதியான இன்ப நிலையில் உயர்ந்திருத்தலால் "புலவர் தேவர்" என நின்றார். அவரை அணுகியிருப்பவர் அவருடைய அருமையான இனிய உணர்வுரைகளைக் கேட்டுச் சுவர்க்கவாசிகள்போல் புண்ணியம் பேணிக் கண்ணியமடைந்து உவகைமிகுந்து வருவர் ஆதலால் "ஓர் ஊர் உறைவார் தமர் அனையர்" என்றார். அவரை ஆதரித்து நிற்பவர், அறிவு நலங்களை எளிதடைந்து கொள்வர்ஆதலால் "காதலவர் கற்றன்னர்" என்றார். அன்புடன் வழிபட்டு அவரைப் பேணி வருபவர் கல்விப் பயனாகிய உயர்நலனை ஒருங்கே பெற்று மகிழுவராதலால் "வழிபடுவார் பெற்றன்னர்" என்றார். கற்றாரை அணுகி அன்புபுரிந்து ஆதரித்துவரின் அரிய இன்பநலங்களெல்லாம் எளிது கைவரும் என்பதாம்.

வொளிமிகுந்துள்ளமையால் தெய்வநிலையில் சேர்த்துப் புலவர் இங்ஙனம் போற்ற நின்றார் என்க.

இத்தகைய தெய்வத் திருவுடைய புலவர் பெருந்தகைகளை நாம் தலைமையாகப் பெற்றிருக்கின்றோம். நம் நாட்டில் இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரிருந்த எண்ணரிய புலவர்கள் நமக்கு எட்டாது போயினர். நம் முன்னோர்களாகிய அன்னார்கள் நமக்கு அருள் புரிந்து ஆக்கி வைத்திருந்த அருமை நூல்களை யெல்லாம் அலைகடல் கொண்டுபோய்த் தலைமறையச் செய்தது. அந்நிலையினை எண்ணுந்தோறும் ஐயகோ! எத்துணைய புத்துணர்வு நூல்கள் போயொழிந்தனவோ? என்று அறிஞர்கள் வாயுழந்து வருந்துகின்றார். "தமிழ்த் தென்னாட்டை ஊழி என வந்து மும்முறை ஆழி கவர்ந்தது; எழுநூறு காவதப் பரப்பிலிருந்த நாற்பத்தொன்பது நாடுகளும் தொலைந்து போயின" என்றால் அப்போக்கில் புலமை நலஞ்சுரந்த கலைநலங்கள் எவ்வளவு ஒழிந்துபோயிருக்கும்! அதனால் நமது மூதாதையர்களுடைய ஆதரவுகளை நாம் எவ்வளவு இழந்திருக்கின்றோம் என்பதை எண்ணி ஆராயின் இரங்கநேரும்.

பண்டைக் காலத்திலிருந்த புலவர் பெருமக்களில் போனவர் போக மீதமாய் நூல்கள் மூலம் இதுவரை நமக்குக் கிடைத்திருப்பவர் ஏறக்குறைய நானூற்றெண்பது பேராவர். பிற்காலப் புலவர்களும் சிலர் உளர். சென்ற முந்நூறு ஆண்டுகளுக்குப் பின்னர் இன்னிசைப் புலமை ஈண்டு இடம் பெறவில்லை.

கல்வி நலம் சிறந்து நல்லியல்புமிகுந்து சீலம் கொடை வீரம் நியாயம் முதலிய சால்புகள் யாவும் சால அமைந்து இந்நாடு ஒரு காலம் மிகவும் பீடு பெற்றிருந்தது. அப்பேற்றை மீண்டும் நம்மவர் யாண்டுப் பெறுவரோ? அக்காலத்தில் செல்வர்களும் அரசர்களும் கல்வியாளரைக் கண்ணினும் உயிரினும் இனியராகக் கருதிப்பேணி வந்தார். அவரும் நிறைமதியாளராய்த் திருந்திய பண்பும் பெருந்தன்மையும் வாய்ந்து எல்லா வுயிர்களும் இன்புறும்படி அன்பு புரிந்து நண்புமிகுந்து நயன்ஆற்றிவந்தார். கல்வியும் செல்வமும் உயிரும் உடலும்போல் ஒன்றை ஒன்று பேணி உரிமையுடன மருவி இருந்தன. அதனால் அனைவரும் நலமுற லாயினர். அந்நாளில் செல்வமும் கல்வியுமுடையார் இந்நாட்டில் இருந்த அமைதி

யும், இந்நாள் இருக்கும் நிலைமையும் எண்ணி அறியின் எவர் உள்ளம்தான் உருகாது? உண்மை யுணர்வார் கண்ணீர் சொரிவார்; உணரார் ஒன்றும் உணரா துறைவார்.

மனித சமூகத்திற்கு இரண்டு கண்களாக உள்ள கல்வியும் செல்வமும் அக்காலத்தில் இங்கு ஒளிமிகப்பெற்று உறுதி நலம் கனிந்து உயர்நிலையி லிருந்தன. இன்று அவை உள்ளொளி குன்றி வறிதே ஓங்கி யுள்ளன. படிப்போ, உள்ளம்படியாது கள்ளம் படிந்துள்ளது; பொருளோ, அருளொடு மருவாது மருள்மிகுந்துள்ளது. முன்னது உள்ளது சிறிதானாலும் கொள்ளைச்செருக்கு, தற்புகழ்ச்சி, பிறரிகழ்ச்சி, குதர்க்கம், குறும்பு, இச்சகம் பேசல் முதலிய கொச்சைகள் பலவுடன் கூடிக் குலாவுகின்றது. பின்னது பேராசை, பெருமோசம், நயவஞ்சகம், பதவி மோகம், படுலோபம், கொடுமை, இளிவினை உயர்வென ஏமாந்து விழைதல் முதலிய பழிவழிகளில் படிந்து படுதருக்குடன் நிமிர்ந்து நிற்கின்றது.

ஒரு நாட்டுக்குக் கண்கள் என்று சொல்லப்படுகின்ற கல்வி செல்வங்களாகிய இரண்டும் இங்ஙனம் புரண்டு நின்றால் அந்த நாடு காட்சியற்ற குருடன்போல் மாட்சி யழிந் தொழியாமல் வேறு என்ன செய்யும்? உயர்ந்த நிலையில் இருப்பதாகத் தோன்றுவதெல்லாம் விழிகண் குருடு போன்றதோர் வெறும் போலித் தோற்றமே யாம். “இளிவுக்கே ஏற்றம் தந்து இருங்களிப் பெய்துகின்றார்” என்றபடியே செய்து வந்தால் இங்கு உய்தியுண்டோ?

கண்போன்ற செல்வரும் கல்வியாளரும் இவ்வாறானால் அவை இரண்டும் சேரப்பெறாத மற்றவரைப்பற்றி நோவதால்? யாது பயன்?

“கற்றவர்கள் அகந்தையினால் கலந்துமகிழ பெரும்பேற்றைக்
கருதாது அந்தோ!
முற்றிழந்தார்; மற்றவரோ முறைதெரியா தயல்நின்று
மூடம் ஆனார்;
உற்றபெருஞ் செல்வர்களோ உளஞ்செருக்கி உதவாமல
உணர் வொழிந்தார்;
எற்றேநம தமிழ்ப்புலமை இன்பமுறப் பெற்றிங்கே
இலங்கு நாளே.”

என்று இரங்கு நாளாக இந் நாடு இந் நாள் இறங்கி உள்ளது.

இவ்வாறு பெரும்பாலும் மாறுபட்டுத் திரிந்து நின்றாலும் ஆங்காங்கு இந்நாட்டில் உபகாரச் செல்வர்களும், உத்தமக் கலைஞர்களும் இல்லாமல் இல்லை. இருந்துவருகிறார்கள்; இராமலும் இராது; இருக்கவுமுடியாது. இயற்கை அன்னையின் நியதி அது. அங்ஙனம் இல்லையாயின் இவ்வுலகம் இல்லாது முடியும். "பிறர்க்கென முயலுநர் உண்மையானே, உலகம் உண்டு" என்று பண்டு ஒரு பாண்டியன் கூறிய உண்மையே இன்று ஈண்டு ஆறுதல் தந்துள்ளது.

பயிர்க்குப் பெருமை பயன்படும் இயல்பே. பயனில் களைகள் பழிபட்டழிகின்றன. உற்ற கல்வி செல்வங்களுக்குப் பயன் உணர் வொழுக்கங்களும் உதவி நலங்களுமேயாம். அவற்றை ஆற்றி வரும் அளவே அவை போற்றப்பெறும்; ஆற்றாது அகலின் அவை அவலமாயழியும்.

தம் கல்வி யறிவை நல்வழிப் படுத்திப் பலவகையிலும் உலகினுக்குப் பழம்புலவர்கள் நலம்புரிந்திருக்கிறார்கள். அவருடைய உதவி நலங்கள் அளவிடலரியன. அப்பெருபகாரிகளை நாம் பெரிதும் மறந்திருக்கின்றோம். விலையுயர்ந்த மணிகள் நிலை தெரியாதவரிடம் தலைமயங்கிக் கிடத்தல் போல் அவர் நிலை இலை மறைகாயாய் நம்மிடை இருந்து வருகிறது.

பழம் பெருமை கண்ட பொழுது இளஞ் சிறுமை காண நேரும் ஆதலால் அந் நிலைமையை இனிமேல் நாம் உரிமையுடன் சிறிது துருவிப் பார்ப்போம்.

## கவிஞர் பெருமை

நம் முன்னோர்களுடைய மனநிலைகளையும் குணநலங்களையும் நாம் ஆர்வமுடன் அறிந்து ஆதரித்து ஒழுகின் அவ்வொழுக்கம் நம்மை ஆதரித்து நமக்குப் பேரின்பம் பயந்தருளும்.

செய்வன தவிர்வன தெரியாது கண் குருடுபட்டுக் கருத்தழிந்து கிடந்த பொதுமக்களுக்கு அறிவொளி காட்டி அருள்புரிந்துள்ள தெருளுடையாரை இருளுடையுலகம் எண்ணாதிருப்பினும் அறிவுடை யுலகம் நன்றியறிவுடன் என்றும் அவரை ஆதரித்து வருவதாம். உலக ஒழுக்கம் அவரது உணர்வொளியால் உயர்ந்து வருகின்றது. நெறிமுறை ஒழுகி வழி வழி உயிர்கள் விழுமிய நிலையில்

விளங்கி உயர மொழிவிளக்கு ஏற்றியுள்ளமையால் கவிகள் பூவில் அயன் எனப் புவியில் உயர்ந்து நிற்கின்றார். அவன் உடல் உயிர் களைப் புறவுலகத்தில் படைக்கின்றான்; இவர் உரை யுணர்வுகளை அகவுலகத்தில் படைக்கின்றார். அவன் படைப்பில் ஆறுசுவைகளே உள்ளன; இவர் படைப்பில் ஒன்பது சுவைகள் உள்ளன. அதில் மடமையும் மயக்கமும் மருளும் நிறைந்துள்ளன; இதில் அறிவும் தெளிவும் அருளும் சுரந்துள்ளன. அது துன்ப நோக்கில் தொடர்ந்து செல்கின்றது; இது இன்ப நோக்கில் எழுந்து வருகின்றது. உறுதி உண்மைகளை மறந்து பெரிதும் அது மறுகி யுழல்கின்றது; இது சிறிதும் வழுவாமல் திருவருளை நாடி எழுகின்றது. இவ்வாறே பிரம சிருட்டிக்கும் கவி சிருட்டிக்கும் மாறுபாடான வேறுபாடுகள் இன்னும் பல உள்ளன; ஆதலால் அப்பூவில்லோனினும் இப்பாவல்லோர் மேன்மையாகப் பாராட்டப் பெறுகின்றார்.

## பாவலர் படைப்பு நிலை

"கலைகள் வாழக்கை முகத்தது எனினும
மலரவன வன்டமிழோர்க்கு ஒவவான்; மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடமபு." (நீதிநெறி விளககம்)

எனவரும் இதில் குமர குருபரர் பிரமாவோடு கவிஞர்களைச் சீர்தூக்கி நோக்கி அவ்வேதாவினும் இம் மேதாவிகள் மேலானவர் எனக் காரணங்காட்டிக் கருத்துரைத்திருத்தலறிக. இங்கே இவர் செய்யும் உடம்பு என்றது கவிகளையும் நூல்களையும். பிரமன் படைப்பு விரைந்து அழிந்து ஒழிகின்றது; கவிஞர் படைப்பு என்றும் அழியாது நின்று விளங்குகின்றது. திருவள்ளுவப் பெருந்தகையார் திருக்குறள் என்று ஒரு நூல் செய்து உலகில் விடுத்தார்; அது இன்றும் ஒளி செய்து நின்று நிலவுகின்றது. இளமை எழில் குன்றாமல் வளமை சுருங்காமல் கிளரொளி வீசி உயிர்களெல்லாம் உளமகிழ்கூர முருகன்போல் என்றும் இன்ப நிலையமாய் அது நின்று திகழ்வதாம். அது வெளிவந்து ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகள் ஆகின்றன. இதற்குள் அயன் செய்தருளிய உருவங்கள் எத்தனையோ கோடிகள் இறந்து தொலைந்தன. இன்னும் அவ்வாறே எவ்வளவோ இறப்புக்களை எதிர்கண்டு யாண்டும் தளராமல் நீண்டு நிலைத்து அங்

நூல் நெடிது விளங்குவதாம். ஆகவே சின்னாள் நின்று செத்தொழியும் செத்தைகளைப் படைக்கின்ற பிரமா எந்நாளும் நிலைத்து இன்பம் பயக்கும் சத்துக்களைப் படைக்கின்ற கவிஞர்களோடு ஒத்தெதிர் நில்லார் என்க.

கலைமகளை அவர் முகத்தில் வைத்துள்ளார்; இவர் அத்திருவை அகத்தில் வைத்திருக்கின்றார். அவர் நாவில் கொண்டு நாயகியாக நயந்து நிற்கின்றார்; இவர் பாவிலும் நாவிலும் புனைந்து அப்பூவியலாளைத் தேவதையாகப் போற்றி வருகின்றார். அவர் காதலுற்றுக் களிக்கின்றார். இவர் உள்ளமுருகி உயரன்புடன் பேணித் தொழுகின்றார். அதனால் அக்கலாதெய்வம் கணவன் என்ற முறையில் அவர்பால் அன்பு செய்து நிற்கின்றது. இவர்பால் அருள் புரிந்து வருகின்றது. உற்ற நாயகனிடம் உரிமைகொண்டாடினும் பெற்ற தாய் தன் பிள்ளைகளிடம் பேரன்பு செய்துவருதல்போல் கலைத்தாய் கலைஞர்களிடம் பெருங்கருணைகாட்டி அவரைப் பேணிவருகின்றாள். ஆதலால் சிருட்டித் தொழில் அத்தாதையினும் மிஞ்சிய சீர்த்தியை அடைந்து கவிஞர் மேன்மை பெறலாயினர். சடவுலகத்தை அடலுடன் செய்துவருகின்ற அவனுடையதினும் அறிவுலகத்தை அழகுபெற ஆக்கிவருகின்ற இவரது ஆற்றல் போற்றற்குரியதாம். இவருடைய கலையொளி பரவவில்லையானால் இவ்வுலகம் கடுவிலங்குகள் உலாவும் காடுபோலக் கொடுமையாய் இருளடைந்துபோம். கலங்கியுழலும் உயிர்களுக்குக் கலங்கரை விளக்காய் கலைஞர்கள் இலங்கி நிற்கின்றார். "புலவன் கட்டியது உலகம்" என்னும் பழமொழி தொன்று தொட்டே எங்கும் வழங்கி வருகின்றது.

புலவர்கள் தம் கவிகள் மூலம் விதி விலக்குகளை விநயமாக நியமித்து நிற்கும் நிலைமையும், அந் நிலையில் அமர்ந்து உலகம் இயங்கிவரும் அமைதியும் ஊன்றி நோக்கின் வியப்பும் விம்மிதமும் எவர்க்கும் தோன்றும். அவர்களுடைய சொல்லால் உலகமெல்லாம் ஒருங்கே அசைந்து வருகின்றன. தீர்க்கதரிசிகளும் மதாசாரியர்களும் புலவர்களும் உலகிற்கு மார்க்கசகாயர்களாயிருக்கின்றனர். முன்னவர் மொழிகள் அருளுபதேசங்களாகின்றன. இன்னவர் உரைகள் அறிவொளிகளாய் வருகின்றன.

இவர்களிடம் எவரும் அறியமுடியாத ஒரு தெய்வீகத்தன்மை தனியே இனிதமைந்திருக்கிறது. இவர் நாவசையாமலே நாட்டை அசைத்துவிடுகின்ருர். விற்பனத் திருவுடைய இவரது அற்புத ஆற்றல் அளவிடலரியது. எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் எல்லா உயிர்களுக்கும் ஓர் இலகொளி ஞாயிறு போல் இவரது உணர் வொளி ஊடுருவி நின்று பேரொளி செய்கின்றது. இவர் காட்ட உலகம் காண்கின்றது. இவர் ஆட்ட உலகம் ஆடுகின்றது. தாம் அசையாது நின்று உலகத்தை இவர் அசைத்து வருகின்ருர். தாம் இட்டது சட்டமாய்க் காலாந்தரத்தில் கட்டளையாகி வருதலால் மனுக்குலத்திற்கெல்லாம் இவர் ஓர் தனியான இனிய நியமன கர்த்தர்களாய் நிலவி நிற்கின்ருர். தம்மை யாரும் நியமியாமலே தாமே எல்லார்க்கும் விதி விலக்குகளை நியமித்து உலகத்தை இவர் இயக்கி யருள்கின்ருர்.

இந்நிலை இந்நாட்டில் மட்டும் அன்று; எந்நாட்டிலும் எம் மொழியிலும் செம்மொழிப் புலவர் எல்லாரிடமும் இத்தலைமைத் தன்மை தனியே இசைந்திருக்கின்றது. ஷெல்லி என்னும் ஆங்கிலப் புலவர் சொல்லியுள்ளபடியை அடியில் பார்க்க.

"Poets are the unacknowledged legislators of the world"
Shelley.

"கவிஞர்கள் உலகிற்கு ஒரு தனியான சட்ட நிருபணர்கள்" எனவரும் இதனல் புவிக்கும் கவிக்கும் உள்ள உறவுரிமை இனிது புலனும். இன்னர் விதித்தார் அவ்விதிவழியேயொழுகி வருகின்ருேம் என்று எண்ணுமலே மனிதசமூகம் அறிஞர் ஆணைவழி இயல்பாக இயங்கி வருகின்றது. கண்ணுள் ஒளிபோல் கலைஞர் மண்ணுள் மருவியுள்ளார். வாலறிவனது பேரருள் பெற்று நூலறிவு சுரந்து ஞாலம் உய்யச் சீலம் தாங்கி மேலும் படைக்கும் மேன்மை வாய்ந்து போதம் பொலிந்திருத்தலால் போதனேடு புலவர்நேர் ஓத நின்ருர். படைக்கும் ஆற்றல் இருவரிடமும் ஒரு நிலையில் பதிந்துள்ளமை யான் இவ்வாறு நேராகப் பாராட்ட நேர்ந்தது. இருவகைப் படைப்பு நிலையையும் அடியில் காண்க:

"பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல
சொல்லால் பொருட்கிட ஞக உணர்வினில
வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்." (நன்னூல்)

என்பு தோல் இரத்தம் தசை முதலிய தாதுக்களாலாய உடம்பில் உயிர் அமைத்தல் போல் பெயர் வினை உரி முதலிய சொற்களாலாய கவியில் உறுதிப்பொருளைப் புலவர் அமைத்தருளுவர் என இது உணர்த்தி நிற்றல் அறிக. பிரம சிருட்டியோடு சேர்த்துக் கவி சிருட்டி இதில் எண்ணப்பட்டிருத்தல் ஈண்டு எண்ணத் தக்கது.

## கவி நிலை

புனிதமான இனிய உயிர் அழகிய உருவில் மருவி யிருத்தல் போல் அறிவு நலம் கனிந்த விழுமிய பொருள் அரிய கவியில் அமைந்திருக்கும் என்க. அகத்தே அருள் அமைதி மானம் வீரம் கொடை முதலிய குண நலங்களும், புறத்தே இளமை யொளி தவழ்ந்து எழில் நலம் கனிந்த உருவப் பொலிவும் ஒருங்கே யமைந்த ஓர் பெருங் குலக்குரிசில் போல் உயர்ந்த கவிகள் சொல்லும் பொருளும் சுவை சுரந்து உள்ளும் புறனும் உணர்வொளி ததும்பிக் கண்ணும் கருத்தும் களிமீக்கூரக் காண்பவரெவர்க்கும் காட்சி யின்பம் பயந்து சிந்தைக்கு இனிய செவிக்கு இனிய என மாட்சி மிகுந்து அறிவுலகத்தை என்றும் ஆட்சி புரிந்துவரும்.

சுவை ததும்பிய இத்தகைய அரிய கவிகளுக்கு இனிய விளைநிலமாய் நமது மொழி தனியமைந்துள்ளது.

## மொழி நிலை

இந் நில வுலகில் தோன்றி விளங்குகின்ற மொழிகள் பல. ஒவ்வொரு தேசமும் தனித்தனியே தனக்கென உரிமையான தனி மொழியை யுடையதாய் இனிதமர்ந் துள்ளது எல்லா நாடுகளும் சொல்லால் இயங்கி வருகின்றன. தம் கருத்தைப் பிறர்க்கு உணர்த்தவும், பிறர்கருத்தைத் தாம் அறிந்துகொள்ளவும் மொழிகள் துணையாயுள்ளமையான் மனிதர் வாழ்க்கை அவற்றால் மாண்புற்று வருகின்றது. உயிருணர் குறிப்பை இயலுடன் இசைத்து அயலே செலுத்தும் ஓசைக் கூறுகளே பேசும் மொழிகளாய்ப் பெருகியுள்ளன. ஏறக்குறையத் தொள்ளாயிர மொழிகள் உலகம் எங்கணும் இதுபொழுது சொல்லாடப்படுகின்றன. விலங்கினங்களினின்றும் வேறுபட்டு எல்லையில்லாத பெருமையுடன் மனித

வர்க்கம் தலைநிமிர்ந்து நிற்றற்குச் சொல்லாடல் ஒன்றே காரணமா யுள்ளது.

மாநிலத்துக்கு மழைபோல மானிட வாழ்க்கைக்கு மொழி அமைந்திருக்கிறது. மழைபெயல் இலையெனில் உலகியல் நடவாது; அதுபோல் மொழியியல் இலையேல் மக்கள் வாழ்க்கை மறுகி ஒழியும். மனிதர் ஒருவரோடு ஒருவர் அளவளாவி ஒருங்குகூடி வாழும் இயல்பினர் ஆதலால் அவர் வாழ்க்கைக்கு மூலாதாரமான பண்டமாற்றுப் போல் மொழி பண்புற்றிருக்கின்றது. மொழி இயங்கா வழி அவ்வாழ்க்கை இனிது இயங்காது.

"மொழியின் றமையா துலகியல் என்றும்
வழிநின் றதனால் வரும்."

என்றபடியே உலகம் வழங்கி வருவதை அநுபவத்தில் நாம் கண்டுவருகின்றோம். மொழி வழங்கல் இல்லையாயின் வாய் பேசா மிருகங்களாய் மானிடங்கள் மாண்பிழந்து படும். பேச்சு வழக்கே மனுக்குலத்தை மாட்சிமைப் படுத்தி வருகின்றது.

அரும்பெறல் யாக்கையைப் பெற்ற மக்களுக்குத் தக்க துணையாய் நின்று சால்புடன் அமைந்து சதுரடன் இயங்கிவரும் மொழிகள் நூல்களாலே மேன்மை எய்தி நிற்கின்றன. உயர்ந்த கருத்துக்கள் அமைந்த சிறந்த நூல்களை எவ்வளவுக்கு எவ்வளவு ஒரு மொழி அடைந்திருக்கின்றதோ அவ்வளவுக்கு அவ்வளவு அது தலைமையுடையதாய் நிலவி நிற்கின்றது. தளிர் இலை அரும்பு மலர் காய் கனி தழை கிளை முதலியன தழுவியுள்ள விழுமிய தருக்களைப்போல் பலவகை நூல்களையும் மருவி நிற்கும் மொழிகள் உலகில் பெரிதும் செழித்து ஒளிமிகப்பெற்று உயர்ந்து விளங்குகின்றன. சால்புடைய நூல்கள் இல்லாத மொழிகள் பட்டமரம் போல் பாழ்பட்டு நிற்கின்றன.

ஒவ்வொரு மொழியிலும் அவ்வக்காலத்தில் இருந்த அறிஞர்கள் தத்தம் அறிவுக்குத் தோன்றிய கருத்துக்களையும் அங்கங்கே நிகழ்ந்த சரித்திரங்களையும் என்றும் எவரும் அறிந்துகொள்ளும்படி எழுதிவைத்திருக்கிறார்கள். அவைகளே நூல்களாயாண்டும் வழங்கப்பட்டு வருகின்றன.

மக்கள் வாழ்க்கைக்கு இனிய துணையான மொழியை விழுமி தாக்கி நூல்கள் விளங்கி நிற்கின்றன. அந்நூல்கள் கவிகளாகவும் வசனங்களாகவும் பணைத்துச் செழித்துப் பலவு

வசனமானது இனிய ஓசை முதலிய இயல் நலங்களின்றி அணி வளங்கள் குன்றி ஒரு வரம்பு படாமல் நெகிழ்ந்து சிதைந்து விரிந்து செல்லும் இயல்பினது; செய்யுளோ சுருங்கிய சொல்லில் பெரும் பொருள் அமைந்து, செம்மையும் சீர்மையும் பொருந்தி இன்னோசை இசைந்து எழில் நலம் கனிந்து, இனிமை தெளிவு முதலிய எல்லா நலங்களும் நிறைந்து இன்பமீதூர்ந்துள்ளது. ஆதலால் ஆதியி லிருந்தே செய்யுளையே அறிஞர்கள் ஆர்வத்துடன் ஆதரித்து வந் துள்ளார். நெஞ்சில் பதிவு செய்யச் செஞ்சொற் கவியே சிறந்த தாகும். அதன் உருவும் செவ்வியும் உயர் வனப்புடன் உணர்வு நலஞ் சுரந்து ஓங்கியுள்ளமையால் கலையுலகம் எங்கணும் அது தலைமை தாங்கியுள்ளது.

## கவியின் பெருமை

எந்த மொழியிலும் கவிகளே முந்துறத் தோன்றி முதன்மை எய்தியிருக்கின்றன. ஏடுகளும் எழுதுகருவிகளும் தோன்றுதற்கு எவ்வளவோ காலங்களுக்கு முன்னரே கவிஞர் உள்ளங்களிலிருந்து கனிந்து விளைந்து செவ்விய கவிகள் வெளிவந்துள்ளன. அவற்றை அவ்வக்காலங்களிலிருந்த மக்கள் அதிக ஆர்வத்துடன் மனப்பாடம் செய்து மாண்போடு போற்றி வந்தனர். அவ்வரவு வரன்முறையே வளர்ந்து வந்தது. முதியவர் இளையவர்கட்கும், ஆடவர் பெண் டிர்கட்கும், தந்தையர் மைந்தர்களுக்கும், அம்மைந்தர் அவர் மக் களுக்கும் தம்மனங்கொண்ட பாடல்களை முறையே மொழிந்து வரலாயினர்; அவ்வாறே பரம்பரையாகக் கவிகள் பேணப்பட்டு மனனநிலையில் பெருகிவரலாயின. வரினும் காலதேசங்களின் மாறு பாட்டாலும், சன சமூகத்தின் இடையீட்டாலும் அரசாட்சியின் வேற்றுமையாலும் எத்துணையோ எண்ணிறந்த கவிகள் இறந்து போயின. பின்னர் எழுத்துப் பதிவுகள் வந்து இயன்ற வரையும் பழுதுபடா வகை அவற்றைப் பாதுகாத்துள்ளன. இருப்பினும் மூல முதலான முன்னைய மனன முறை முழுதும் மறந்து அறவே ஒழிவுற நேர்ந்தது. புறக்கருவிகள் வளர்ந்து வரவே அகக்கருவிகள் தளர்ந்து போயின.

அச்சுப் பொறிகள் எவ்வளவுக்கு எவ்வளவு வந்தனவோ அவ்வளவுக்கு அவ்வளவு மக்களுடைய மனன சக்தி மறைந்து போயது. போய்க்கொண்டே யிருக்கின்றது. போகும் வேகம் அபாயமாகவே யுள்ளது.

ஆகவே அச்சு முதலிய புதிய சாதனங்கள் யாதும் வேண்டாம் என்று நான் கருதியுள்ளதாக எவரும் உறுதிகொள்ளலாகாது. பின்னர் நோக்கம் என்னை? எனின், மனப்பாடம் செய்கின்ற அந்த அற்புதமான நினைவு நிலையை இடைவிடாது பயிற்சி செய்து மீண்டும் உயர்ச்சி யடைய வேண்டும் என்பதே ஈண்டு எனது வேண்டுகோள். அங்ஙனம் பயின்றுகொள்ளாமல் மேலும் அயர்ந்திருந்தால் மக்களுடைய உள நிலை உரம்கெட்டு உறுதி குன்றிப்போம். உள்ளம் குன்றினே எல்லாம் குன்றி இழிந்துபடநேரும்.

அறிவு நலம் சுரந்த இனிய கவிநுகர்ச்சி உள்ளத்துக்கு உறுதியும் இன்பமும் ஒருங்கே தருதலால் அவிநுகர்ச்சி என ஆன்றோர் வருகின்றார்.

நமது தாயகமாகிய தமிழ்மொழி பண்டு தொட்டே அந்தமில் இன்பமுடையதாய்த் திருந்திய பண்பும் சீர்த்த நாகரீகமும் அமைந்து சிறந்த கவிகளால் செழித்து வளர்ந்து உயர்ந்து வந்துள்ளது. அக் கவிகளின் இனிமையும், கருத்தின் ஆழமும், பொருட் பெருக்கமும், எண்ணின் பரப்பும் அளவிடலரியபடி கடலினும் பெரிதாய் விரிவடைந்துள்ளன. கலை அறிவாகிய கப்பலில் ஏறி அந்த அமிர்தக் கடலில் உல்லாசமாக உலாவிவருபவர் இந்த மண்ணுல இன்பத்தை மறந்தே விடுவர். விண்ணுலக இன்பத்தினும் சிறந்ததாகக் கவியின்பம் எண்ணப்பட்டுள்ளது.

தேக போகம், இந்திரிய சுகம், மானச இன்பம் ஆகிய இவைகளுக்கெல்லாம் அப்பால் அதீதமாய் அறிவானந்தம் அமைந்திருக்கின்றது. அந்த ஆனந்தம் சிறந்த கவிகளிலிருந்து தான் விளைந்து வருகின்றது. புத்தி தத்துவத்தில் நின்று அநுபவிக்கின்ற அந்த அற்புத இன்பம் ஆத்மானந்தத்திற்கு அடுத்தபடியாக அருகே இனி தமர்ந்துள்ளது.

அவ் வுயரின்பத்தை அநுபவிக்கும்பொழுது உள்ளம் கிளர்ந்து உயிர்ப் பண்பு வளர்ந்து வருதலால் அறநலங்களெல்லாம் அதனோடு உடனெழுகின்றன. பொறி யின்பங்களில் வெறி மண்டி நிற்றலால் அதில் தரும நிலை குன்றிச் சிறுமைகள் மிகுகின்றன. பொறி நுகர்விலும் அறிவு நுகர்விலும் உள்ள இழிவும், உயர்வும் முறையே இதனால் எளிது புலனும்.

அமிர்தத்தைப் பருகினவன் அதன் சுவையை இன்னதென்று பிறர்க்கு எளிது புலனும்படி இலகுவாக உணர்த்த முடியாது; அது போலவே கவிச் சுவையும் உள்ளது. ஆயினும், இந்த அறிவின்பம் உயிர்களுக்கு இயற்கையாக உள்ளூற உறைந்திருத்தலால் அதனை அறிந்து அநுபவித்து ஆனந்தம் அடைந்துள்ள மதிமான்கள் அச் சுவையைத் தெளிவாக உரைத்தருளின் அது எல்லாருடைய இரு தயங்களிலும் இனிது புலனாய்த் தனியே உவகையை விளைக்

செறிவு தெளிவு செம்மை தண்மை அமைதி இனிமை இய லொழுக்கு இன்னோசை முதலிய உயர் நலங்களெல்லாம் கவிகளில் ஒருங்கே அமைந்துள்ளமையால் அவற்றை ஓதுந்தோறும் உணருந் தோறும் தானாகவே இன்பம் மீதூருகின்றது. மனிதனது உள்ளத் திலும் உயிரிலும் கலந்து பொதிந்து உறைந்து கிடக்கின்ற உணர் வின்பமானது கவியோசையைக் கேட்டவுடனே தலை நிமிர்ந்து விரைந்தெழுந்து அதனோடு அநுநாதம் செய்கின்றது.

கவியின்பம் கலையறிவில் கனிந்து விளைந்துள்ளமையால் அது புலமை யுலகில் தலைமை பெற்றுள்ளது.

கற்புத் தெய்வமாகிய சீதையின் அற்புத உருவிற்குக் கவி யின்பத்தைக் கம்பர் ஒப்புரைத்துள்ளார். பொன்னின் சோதி பூவின் மணம் தேனின் சுவை என மேனியின் ஒளி முதலிய வற் றிற்கு உவமை கூறி வந்த அவர் முடிவில் "செஞ்சொற் கவி யின்பம்" என்று அப் பேரழகியின் குண சவுந்தரியங்களை உணர் வொளி ததும்ப உரைத்திருக்கின்றார். கவியின் சுவையில் அவர் கருத் தூறியுள்ள உண்மையும் இதனால் உணரலாகும்.

அன்பு அறம் அருள் அமைதி அறிவு ஆண்மை ஆனந்தம் முதலிய இனிய அமிர்த தாரைகளை இடையறாது சுரந்து என்றும்

குன்றாத இன்ப ஊற்றாய் நின்று உயிர்களை உண்பித்து உயர் வருகிற கவிகள் இல்லையேல் இப்புவி வாழ்க்கை புல்லிதாய்ப் புலனழிந்து போம். கவியானது உலகிற்கு உயிராதாரமாயுள்ளமையால் அது என்றும் வற்றாத நீர்ப் பெருக்கமைந்த சீவ நதியாக எண்ணப்பட்டுள்ளது.

கோதாவரி நதியைக் கம்பர் வருணிக்குங்கால் அதனோடு கவியை ஒப்புமையில் வைத்து ஒப்புரைத்துக் கவியின் அற்புத நிலையை அழகாகக் காட்டியுள்ளார். அப்பாட்டு அடியில் வருவது:

"புவியினுக்கு அணியாய் ஆன்ற பொருள் தந்து புலத்திற்றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறி யளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் தழுவிச் சான்றோர்
கவி யெனக் கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார்."

(இராமா-ஆரணிய-சூர்ப்ப 1)

அன்று இராம இலக்குவர் சென்று கண்ட கோதாவரியை இன்று நாம் எல்லாரும் இருந்த இடத்தே மானசக் காட்சியில் கண்டு மகிழும்படி கம்பர் இவ்வாறு காட்டியிருக்கின்றார். இதன் பொருளை ஈண்டு விரிப்பிற் பெருகும்; கருத்தை மட்டும் குறிப்பாகக் காட்டுகின்றேன்.

நதி நீர் ஆனது இடங்கள் தோறும் பரந்து பாய்ந்து எங்கும் இனிய நீர்மையாய் இதம் புரிந்து பயிர்களை வளர்த்து உயிர்களைச் செழிப்பிக்கும்; கவியானது மன்பதைகளிடமெல்லாம் இன்புற மருவி அன்பு அறிவு அமைதி வண்மை சத்தியம் சாந்தம் கருணை வீரம் முதலிய குண கணங்களை விளைத்து உயிர்களை உன்னத நிலையில் உயர்த்தும்; ஆதலால் உயிராதாரமாய் முதன்மை எய்தியுள்ள கவி இங்கே நதிக்கு உவமையாய் வந்தது.

புற உலகிற்கு நீர் எப்படி இன்றியமையாததோ அப்படியே அறிவுலகிற்குக் கவி அமைந்திருக்கிறது. நீர் ஓட்டம் உலக ஓட்டத்திற்கு ஏதுவாதல் போல் கவி ஒழுக்கு உயிரொழுக்குக்குக் காரணமாயுள்ளது. ஆருயிர்க்குப் பேராதரவாயுள்ள நீரோடு நேர் வைத்துக் கவியையும் ஒரு சேர எண்ணியிருத்தலால் அதன் நீர்மையும் சீர்மையும் நிலை தெரியலாகும்.

கம்பர் கோதாவரி நதிக்குக் கவியை உவமை கூறியுள்ளது போலவே கல்லாடரும் வையை நதிக்கு அதனைப் பெய்திருக்கிறார்.

"நிறையுடைக் கலவி பெறுமதி மாந்தர
ஈன்ற செங்கவி எனத் தோன்றி நனி பரந்து
பாரிடை இன்பம் நீளிடைப் பயக்கும
பெருநீர் வையை வளைநீர்க் கூடல்" (கல்லாடம 2)

இதில் கவியானது உலகிற்கு இன்பம் உலவாது பயக்கும் என்று உணர்த்தியுள்ள நிலை ஊன்றி உணரத்தக்கது.

அறிவுக்கு விருந்தான கவியுணவு இல்லையேல் புவியினர் இரு கால் விலங்குகளாய் இழிந்துபடநேர்வர். பாவின் சுவையை விரும்பாமல் நாவின் சுவையையே நயந்து நிற்குமாயின் அறிவு நலங்கள் யாவும் இழந்து நடமாடும் பாவைகளாய் மானுடங்கள் முடிவில் ஈனமடையும் என ஒரு ஞான முனிவர்

உயிர்க்கு உறுதியான இனிய உணர்வு நலங்கள் உள்ளுற நன்கு உறைந்திருத்தலினாலேதான் கவிகளுக்கு இவ்வளவு பெருமை அமைந்திருக்கின்றது.

இரசவாதி இழிந்த உலோகங்களையும் உயர்ந்த பொன் ஆக்குவதுபோலச் சாதாரணமான பொருள்களையும் எவரும் விழைந்து வியந்து நோக்கும்படி கவிகள் புனைந்து காட்டுகின்றன. உலகக் காட்சியில் ஒளிகுன்றி எளியனவாய்க் கிடப்பன கவிவசப்பட்டுப் புலமைக்காட்சியில் வெளிவரும்பொழுது ஒளிமிகப்பெற்று உயர்ந்து விளங்குகின்றன. இதில் ஒன்றும் இல்லை என்று இயல்பாகவே உதறித்தள்ளி உலகில் நாம் எள்ளிவிட்டுப்போகின்ற பொருள்களைக் கவிகளில் காணுங்கால் அன்பு நலம் கனிந்து இன்பவளஞ் சுரந்து அழகு மலிந்து விழுமிய நிலையில் விளங்கி அவை நம் உள்ளங்களைக் கவர்ந்து நிற்கின்றன.

புலங்களில் உழுகின்ற உழவு மாடுகளை நாம் நாளும் பார்த்திருக்கின்றோம்; பல காலம் பழகியும் வருகின்றோம்; அவற்றைக் குறித்து நாம் என்ன எண்ணியுள்ளோம்? புதுமையாக யாதாவது புரிந்துள்ளதா? மாடு மாடாகத் தான் தெரிகிறது; ஒரு பாடும் தோன்றவில்லை. இப்பொழுதாவது சிந்தித்துப் பாருங்கள்; சிக்

தனையில் ஏதேனும் வந்துபடுகின்றதா? ஒன்றும் இல்லை என்று தான் வருகிறது. நம் நெஞ்சு நின்ற நிலையிலேதான் நிற்கின்றது. ஆனால், பஞ்ச காவியங்களுள் ஒன்றாகிய சீவக சிந்தாமணியில் உழவு காளைகளைக் குறித்து ஒரு கவி வந்துள்ளது; அதில் அவற்றைக் காணும் பொழுது உள்ளம் வியந்து உவகை மீக் கூர்கின்றது. அந்தப் பாட்டின் பகுதியை இங்குக் கொண்டுவந்து காட்டுகின்றேன்; அக் காளைகளின் உருவம் செயல் அன்பு உள்ளப் பண்பு முதலியவற்றை எவ்வளவு அழகாக அது உணர்த்தி நிற்கின்றது என்பதை நீங்கள் கொஞ்சம் ஊன்றிப் பாருங்கள்.

## உழவு காளைகள்

"மாமனும் மருகனும் போலும மன்பின;
காமனும் சாமனும் கலந்த காட்சிய."
(சிந்தாமணி-நாமகள், 14)

எனவரும் இதில் அவ்வுழவெருதுகளின் உருவும் உள்ளமும் மருவியுள்ளன. புறநிலையும் அகநிலையும் பொருந்த விளக்கி அன்பு மணம் கமழ, அறிவுநலம்திகழ, ஆர்வம் விளைத்து நிற்கும் இக் கவியின் அருமை கருதத்தக்கது. இனிமை கனிந்த இதன்சொல் லொழுக்கும், பொருளமைதியும் உள்ளுந்தோறும் உணர்வு விரிந்து உரிமைமிகுந்து பிரியம் பெருகுவதாம்.

உலகத்தில் தாய் அன்பு சிறந்தது ஆதலால் அதனை ஈண்டு ஒப்புச்சொல்லாதது என்னை? எனின், இங்கே ஒன்றி நிற்கின்ற இரண்டும் ஆண்கள் ஆதலால் அது இசையாது நின்றது. ஆயின் தந்தையும் மைந்தனும்போல, அண்ணனும் தம்பியும்போல, குருவும் மாணவனும்போல, என ஆண் பகுதிகளுள் வேறு ஏதேனும் ஒன்றை உரைக்கலாகாதோ? எனின், ஒன்றின் நின்று ஒன்று தோன்றுமை யானும், ஒரே வயிற்றில் பிறவாமையானும், பருவங்கள் ஒவ்வாமை யானும், அவை யாவும் பொருந்தாவாயின என்க.

ஒவ்வொருவரும் வெவ்வேறு இடத்தில் தோன்றிப் "பெண்ணைக் கொடுத்தாயோ, கண்ணைக்கொடுத்தாயோ" என்றபடி உண்ணிறை அன்பிற்கு உரிமையான மகட்கொடை ஒன்றால் மருவி ஒத்த பிரியத் துடன் ஒருவரை ஒருவர் உள்ளுற அவாவி ஒருமையுற்றிருத்தலால் அந்நிலையில் இருவேறிடங்களிலிருந்து தேர்ந்தெடுத்து இணைக்கப்

பட்டுப் பிணைப்புற்றுள்ள இணை எருதுகளுக்கு உரிமையான உவமையாக மாமனும் மருகனும் இங்குக் கருத நின்றனர். இது ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றிய கவி. மாமன் மருகர்களுக்கு அன்றிருந்த உரிமை நிலையை இன்றும் உணர்த்தி இது குன்றாது நிற்கின்றது.

"அப்பன் நீ அம்மை நீ" என்ற தேவாரப் பாசுரத்தில் அன்புடைய மாமனும் நீ என்று இறைவனைச்சுட்டியிருக்கின்றது. அப்பாட்டில் அப்பன், அம்மைகளுக்கு யாதும் அடைகொடாமல் மாமனுக்கு மட்டும் அன்பு விசேடம் கொடுத்தது அவர்கள் இயற்கையாகவே உரிமையான பேரன்புடையவர்கள் ஆதலின் அது சொல்லவேண்டாதாயிற்று; மாமன் அன்பு செயற்கையானது ஆதலால் அதனை விதந்து சொல்ல நேர்ந்ததென்க.

மாமன் அன்பிற்கு ஓர் மாண்பு இந்நாட்டில் இருந்து வருதல் இவற்றால் தெரிந்து கொள்ளலாம். சாமன் = காமன் தம்பி.

உலக இயல்புகளை விளக்கி, உயிர்நிலைகளை மாட்சிமைப் படுத்தி நாம் ஆவலுற்று நோக்கும்படி கவிகள் எவ்வளவு காட்சியளிக்கின்றன. உள்ளமைந்த அன்பே ஒற்றுமைக்கும் உயர்நிலைக்கும் காரணமாயுள்ளது. அன்புடைமையால் மாடுகள் கூட மாட்சிமையடைகின்றன. அத்தகைய அன்பை இழந்துவிடுவரேல் மக்களாயினும் மாக்களினும் கடையராய் மாண்பிழந்து படுவர் என்பது இதில் தொனிக்குறிப்பாம்.

சாமானியமான பொருள்களையும் அழகுறுத்தி உயர்ந்த நோக்கத்தோடு உயிர்களுக்கு இனிமையாகக் கவிகள் எவ்வாறு உணர்த்துகின்றன என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக இது இங்கே காட்டப்பட்டது. இது போல்வன பல உள்ளன.

ஒரு மாட்டுப் பாட்டே இங்ஙனம் நம் உள்ளத்தைக் கவர்ந்து உவகைவிளைக்குமானால் வேறு உயர்ந்த கவிகள் எவ்வாறு நம்மை வசப்படுத்தி இன்புறுத்தும் என்பது இதனால் சிறிது அறியலாகும்.

நமது மொழியில் விளைந்துள்ள கவிகள் பெரும்பாலும் மறுமை நோக்கோடே மருவியிருக்கின்றன.

மனிதனைப் புனிதப்படுத்தி உன்னதநிலையில் உய்ப்பதே உத்தம கவிகளின் நோக்கமாகும். மனிதன் இன்பத்தை விரும்புகிறான்;

துன்பத்தை வெறுக்கின்றான். விரும்பியன பலவும் விலகிப்போகின்றன; வெறுப்பன பெரிதும் விரைந்து எதிர் வருகின்றன. தான் கருதியபடி கைவராமையால் மனிதன் கலக்கமுறுகின்றான். இங்ஙனம் எண்ணியன எண்ணியாங்கு எய்த முடியாமல் ஏங்கி யுழல்கின்ற மக்களுக்கு உறுதியான நலங்கள் உள்ளியவாறே உளவாகும் உபாயங்களைக் கவிகள் உரிமையுடன் நின்று இனிமையாக உணர்த்தி யருள்கின்றன.

ந்ன்ப நலங்களை இதமாக என்றும் உதவி வருதலால் கவிகள் கற்பகங்கள் எனவும், காமதேனுக்கள் எனவும் விழைந்து வியந்து போற்றப் பெறுகின்றன.

கவியானது உலக இயற்கைகளை அழகுறக் காட்டும் ஓர் அற்புதக் கண்ணாடி போல்வது. இறந்த காலம் என்னும் பரந்த திரையால் மறைந்து போயுள்ள நம்முன்னோர்களுள் எவ்வளவோ புண்ணிய புருடர்களைக் கவிப்படங்கள் நம் கண்முன் கொண்டு வந்து காட்டுகின்றன. உருவப்படத்தினும் கவிப்படம் மிகவும் சிறந்தது. அதில் ஒருவனது உடல் நிலையைமட்டும் குறிப்பாகக் காணலாம். கவிப்படத்திலோ மனிதனுடைய உருவம் பருவம் குணம் செயல் நடை உடை பழக்கம் வழக்கம் பான்மை மேன்மை முதலிய அனைத்தையும் நாம் உடனிருந்தவர்கள் போல் தெளிவாகக் கண்டு உளமிக மகிழ்கின்றோம். புவியில் நேரே காணாதவர்களையும் கவியில் காண்கின்றோம். அதில் யாரைக் காண்கின்றோமோ அவரோடு நெருங்கிய பழக்கமுடையவர்களாய் நாம் ஆகிவிடுகின்றோம். கவி ஒரு வீரனைக் கொண்டுவந்து காட்டுங்கால் நமக்கு வீர உணர்ச்சியை ஊட்டி விடுகின்றது. அதில் ஒரு வள்ளலைக்காணும் பொழுது உள்ளம் உருகி எல்லாருக்கும் உதவி செய்யவேண்டும் என்று தோன்றுகின்றது. கன்னன் குமணன் பாரி ஓரி ஆய் நள்ளி முதலிய வள்ளல்களைக் காட்டி வண்மையுணர்வை விளைத்துப் பிறர்க்கு உதவிசெய்யும் பெற்றியைக் கவிகள் நம் உள்ளங்களில் உரிமையாகவளர்த் தருள்கின்றன.

கவிகளைக் கருத்தூன்றிப் படிக்குங்கால் நம்மை யறியாமலே வியக்கின்றோம்; சிரிக்கின்றோம்; அழுகின்றோம்; அளிபுரிகின்றோம்; களி மிகுகின்றோம்; அருளூறுகின்றோம்; வீராவேசம் கொள்ளுகின்றோம்; அன்பு கனிகின்றோம்; இன்பம் நுகர்கின்றோம்;

இன்னவாறே என்ன என்ன விதமாகவோ நம் உள்ளங்களைத் திருத்தி, உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பி உயிர்களைக் கவிகள் பரவசப் படுத்தி விடுகின்றன. இதனால் கவிகளினுடைய கனிவும் கவினும் வசிகரத்தன்மையும் இன்பநலன்களும் நன்கு புலனும்.

மூல முதல்

மனித வாழ்க்கைக்கு உயிராதாரமாயிருப்பது பாஷை; அந்தப் பாஷைக்கு உயிராதாரமாயுள்ளன நூல்கள்; அந்நூல்களுக்கு உயிராதாரம் கவிகள்; அக்கவிகளுக்கு உயிராதாரமாயுள்ளவர் புலவர்கள். ஆகவே புலவர்கள் இலரேல் கவிகள் உளவாகா; கவிகள் இலவேல் நூல்கள் இலவாம்; நூல்கள் இல்லையேல் பாஷை பாழ்படும். அது பாழாகவே மனித வாழ்வு பாழாம். இவ்வுண்மையை இங்கே ஊன்றி யுணரவேண்டும். இங்ஙனம் மக்கள் வாழ்க்கைக்கு உயிராதாரமா யுள்ள மொழியை வளம்படுத்தி, உணர்வொளி உதவி விழுமிய நிலையில் அருள்புரிந்துவரும் புலவர்களை ஒருநாடு போற்றி வாராதிருப்பின் அது எவ்வளவு நன்றி கெட்ட செயல்? அந்நாடு பீடு பெறுமா? காடாய்க் கழிந்துவிடும் அன்றோ? அருமை அறியாதயர்வது உலகியலுக்கு ஒரு தனி இயல்புபோலும்? கார்மழை பொழிந்து, கதிர் உதித்து, வார்புனல் சுரந்து மாந்தரை வாழ்வித்துவரினும் அவற்றின் மாண்பினை மதியாது மயங்கி வருதல்போல் புலவர் மாண்பையும் உலகமக்கள் புலன் கொள்ளா துள்ளனர்.

“வானும் கதிரும் மதியும் நதியுநேர்
மானும் புலவர் மதி.”

என்றபடியே முதுசீருலகில் புதுசீர்மை பயந்து புலவர்கள் பொதுமை எய்தி யிருக்கின்றார். அருமை தெரிந்து பேணின் அறமாம்.

இதுகாறும் கூறிய வாற்றால் புலவர் உயர்வும், மொழியின் இயல்பும், கவிநிலையும், அதன் அருமை பெருமைகளும், அறிவமைதிகளும் ஒருவாறு அறிய வந்தன.

இத்தகைய கவிகளை இயற்றவல்ல கவிஞரெல்லார்க்கும் தலைவராய்க் கவிச் சக்கரவர்த்தி எனச் சிறந்து நிற்கும் கம்பரது கலைநிலையை இனிமேல் கண்டு மகிழ்வோம்.

இவருடைய சொந்தச் சரித்திரத்தைச் சிறிது தெரிந்துகொண்டு பின்பு இராமசரிதையுட் புகுவோம்.

## கம்பர் சரித்திரம்

கம்பருடைய பிறப்பு இருப்பு வாழ்க்கை வரலாறுகள் முதலி யவற்றை அறிந்துகொள்ள யாவரும் விரும்புவர். இவரது சரிதம் உண்மையாகவும் தெளிவாகவும் இதுவரை யாதும் வெளிவரவில்லை. வராமைக்குக் காரணங்கள் பல உள்ளன. சில தெரிவோம்.

ஒருவனுடைய சரித்திரம் உள்ளது உள்ளபடியே பூரணமாக வெளிவருவதற்கு நான்கு உபகரணங்கள் வேண்டும். அவை எவை? எனின், தன் வாழ்நாளில் நிகழ்ந்த அநுபவங்களைத் தினந்தோறும் அவன் கையால் எழுதிவைத்திருக்கும் நாட் குறிப்பு; அவன் காலத் தில் அவனோடு உடனிருந்தவர் அவனைப்பற்றி எழுதியிருப்பன; வழிமுறையே பரம்பரையாக அவனைக்குறித்து வழங்கி வருபவை; கல் வெட்டுகள் என்பனவாம். இன்ன வகையான சாதனங்கள் ஒருவனுக்கு உரிமையாக அமையின் அவனுடைய சரித்திரம் தெளி வாக எழுத அமையும். அங்ஙனம் தக்க ஆதாரங்கள் அமையா வழிக் கற்பனைகளும் யூகங்களும் கலந்து புனைந்து சரிதத்தைக் கலக்கி நிற்கும். கலப்பான அந்நிலையிலுள்ளனவே சரிதங்கள் எனப் பெரும்பாலும் இங்குக் கலித்து வந்துள்ளன.

நம் நாட்டில் இருந்த முன்னோர்களுக்குத் தம் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் குறித்துவைக்கும் வழக்கம் இல்லை. ஏடும் எழுத் தாணியும் கொண்டு வருந்தி எழுதவேண்டியிருந்தமையான் உலகிற் குப் பெரும்பயனுடையன என்று தெரிந்தவற்றையே அவர் விரும்பி எழுதுவாராயினர். அரும்பயன் ஆய்ந்த அறிவினையுடையார் பெரும் பயன் தோய்ந்தனவே பேசுவராதலால் அப்பெருந்தகையாளர் அவ் வண்ணம் இருந்துவரலாயினர். அவ்வரவு அந்நாளில் நிறைவாக நிற்பினும் இந்நாளில் குறைவாக நேர்ந்தது. நம்முடைய பெரி யோர்களின் சரித்திரங்களை உண்மையாக அறியவேண்டும் என்று உரிமையிருந்து அவாவியுள்ள இக்காலத்தில் ஆதரவான ஆதாரங்கள் காணாமையால் நாம் அலமர நேர்கின்றோம். நேரினும் நம்மவர் கைசோர்ந்து விட்டபாடில்லை. எட்டினமட்டும் பழஞ் சரிதங்களை இளங்கண் கொண்டு நோக்கி உளங்களிகூர்கின்றார். கூர்ந்தும் உறுதி தெரியாமல் மறுகி யுழல்கின்றார். கருதி யலைகின்றார்.

அரிய இராம சரிதத்தை உலகம் உள்ள அளவும் எவரும் இன்புற எழுதியருளிய கம்பர் தமது இனிய சரிதத்தைச் சிறிதே

னும் எழுதி வையாது போயினரே! என்று சிலர் ஏங்கி நிற்கின்றார். இன்ப மயமான அந்த இராமசரிதமே கம்பர் சரிதமாய் உள்ளூறக் கனிந்து நிற்றலை உணர்ந்து கொள்ள நேர்ந்தால் அவர் தம் உள்ளக் கவலை உடனே ஒழிந்து போகநேரும். இவர் கையால் எழுதியது அடையாளத்துக்கு ஓர் எழுத்தும் காணோம்; வாய்மொழி கேளோம்; உடனிருந்தவர் சொன்னது ஒன்றும் தெரிந்திலம். இவ்வாறிருந் தும் இவரை நாம் நேரே கண்டு கொண்டதுபோல் களிப்புறுகின் றோம்; உடனிருந்து பேசுவது போல் உவகைமிகுகின்றோம்; அடுத்த வீட்டுக்காரராய் ஆதரித்து வருகின்றோம்; உறவினரென உரிமை கொண்டாடி உள்ளம் குழைகின்றோம். என்னே இது! இவர் உடல் மறைந்துபோய் ஆயிரம் ஆண்டுகளுக்குமேல் ஆகின்றன. ஆயினும் நம் வாயிலும் கண்ணிலும் எண்ணிலும் இவருடைய பெயர் உரு வங்கள் பெயராது நின்று உயிரின்பம்பயந்து வருகின்றன. இவரைத் தத்தம் சாதியிலும் சமயங்களிலும் வலிந்து இழுத்து வைத்து "எம்மவர், எம்மவர்" என்று உறவுரிமை பாராட்டி எத்தனையோ பேர் இறுமாப்புறுகின்றனர். ஐயர், பிள்ளை முதலாக உள்ள மரபி னர் பலரும் ஒரு முகமாய்ப் புகுந்து தனித்தனியே இவரைத் தம் மவர் என்று துணிந்து ஆதாரமும் கூறி ஆதரம் கூர்கின்றார். இவற் றிற்கெல்லாம் காரணம் என்ன? பெரிய ஆள் என்பதுதான். அரிய பேர் பெற்றுப் பெரிய ஆள் ஆனவுடனே உறவுரிமை கூறி அனை வரும் அருகணைய ஆவலுறுகின்றார். அவரது ஆவல் அவர் கருதிய படி தவறுபடினும் உயர்வற உயர்ந்துள்ள இவரது உன்னத நிலை மையை உறுதியாக உணர்த்தி நிற்கின்றது. மனிதனுக்கு இயல்பா கவே உயர் நிலையில் பிரியம் ஆதலால் அந்நிலையில் உள்ளவனைத் தன் இனத்தான் என்று சொல்லிக்கொள்வதில் ஒவ்வொருவனும் இவ் வாறு ஆசைப்படுகின்றான். புறத்தே அபிமானம் கொண்டாடி அயர்ந்து நில்லாமல் அகத்தே உபிர்மானம்பேணி உயர்ந்து வருதல் நலம். இங்ஙனம் பழம் பெருமைக்குக் கம்பர் வளஞ் செய்து வந்துள்ளார்.

இவர் பிறந்திருந்த நாட்டில் தாம் பிறந்துள்ளதைச் சிலர் பெரும் பேறாக நினைந்து உவந்திருக்கின்றார். ஒரு முறை சோழமன்னன் ஓர் இளம்பெண்ணைக் கண்டான். அவள் திருவழுந்தூரினள். உருவ

நலமுடையவள். அரசன் அவளைப்பார்த்து நீ எந்த வூர்? என்றான். அதற்கு அவள் உடனே,

"கமபன பிறந்தவூர் காவிரி தந்தவூர்
கும்பமுனி சாபம் குலைந்தவூர்—செமபதுமத்
தாதகதது நான்முகனும் தாதையும் காணாத
வேதவிதது வாழும்அழுந் தூர்."

என்று பாட்டிலேயே பதில் சொன்னாள். மன்னன் கேட்டு மகிழ்ச்சி யடைந்தான். "கம்பர் இருந்து வாழ்ந்த மண்வாசிஅல் லவா இந்தப் பெண்ணும்கூட இவ்வண்ணம் கவி பாடினாள்" என்று வியந்து புகழ்ந்து பொருளும் உதவி அவளை அனுப்பினான்.

அழுந்தூர் என்பது இவர் பிறப்பினால் சிறப்படை பெற்றுத் திருவழுந்தூர் என்று வந்தது. அவ்வூர் சோழமண்டலத்தில் மாயூ ரம் எல்லையில் உள்ளது.

இதனால் அந்நாட்டிலுள்ள ஆண் பெண் அடங்கலும் இவரது உரிமையை எவ்வளவு பெருமையாகப் பேணி வந்திருக்கிறார்கள் என்பது நன்கு அறியலாகும்.

இங்ஙனம் ஊரும் நாடும் உலகமும் உறவுகொண்டாடி உரிமை கொள்ளும்படி பேரும் பீடும் பெற்றுப் பெருகியுள்ள இவரது சரித் திரம் இவர் தோற்றம்போலவே ஏற்றவாறு தோன்றாதிருக்கின்றது.

அரசகுலத் தோன்றலாகிய கன்னன் தனது பிறப்பு நிலையைச் சிலகாலம் அறியாதிருந்தான்; பின்பு கண்ணன் வந்து உணர்த்த அவன் கண்டு தெளிந்தான். நமது கம்பர் பிறப்பு நிலையோ இன்ன மும் தெளிவாக எவரும் தெரிந்திலர்.

## கன்னனும் கம்பனும்

"கன்னன் பிறப்பும் பின்னாளில் துலங்கிற்று கம்பன்பிறப்பு
இன்னம் தெரிந்தார்கள் இலையிலலை முக்காலும் இது
மெய்ம்மையே."

என்று முருகதாச சுவாமிகள் தமது புலவர் புராணத்தில் இங் ஙனம் ஆணையிட்டுக் கூறியிருக்கின்றார். இவ்வாறு இவரது சரிதம் தெரிவரிய நிலையில் உள்ளது. ஆயினும் ஒரு முடிபாக அறிஞர் சிலர் ஆராய்ந்து தெரிந்து உறுதிசெய்திருப்பது மேலே வருவது:

கம்பன் என்பான் வீரவர்மன் என்னும் ஒரு குறுநில மன்னனுடைய அருமைத் திருமகன். அம்மன்னன் மாற்றலர் சதியால் மாண்டு போனான். மாளவே அவ்வமயம் பூரண கருப்பிணியாயிருந்த அவனுடைய இனிய மனைவியான அம்பிகா என்பவளும் உடன் மடியத் துணிந்தாள். துணிந்தும் தன் வயிற்றுச் சிசுவை நினைந்து மறுகியெழுந்து இரவிடை பெயர்ந்து ஒரு நாள் நடந்து மறுநாள் ஒரு காளிகோவிலை அடைந்து வயாவும் வருத்தமும் மிகுந்து தனியே அயாவுயிர்த்து ஈன்றாள். அப்பேறு காலம் சோழநாட்டிலே திருவழுந்தூரிலே இரவில் நிகழ்ந்தது. பெற்ற மகவை நோக்கித் தாய் பெருமூச் செறிந்தாள். உற்ற நிலையை எண்ணி எண்ணி உள்ளம் துடித்தாள். பின்பு மெள்ள எழுந்தாள். ஈன்ற குழவியைத் தேவி முன் கிடத்திவிட்டு அயலொதுங்கி அவள் ஆவி போயினாள். சூரியன் உதயமாகவும் அக்கோவில் பூசாரியாகிய ஓச்சன் அங்கே வந்தான். குழந்தையைக் கண்டான்; வியந்தெடுத்துத் தெய்வம் தந்ததென்று விரைந்து சென்று மனைவியிடம் கொடுத்து மகிழ்ந்திருந்தான். அவன் காளி உபாசகன். ஆதித்தன் என்னும் பெயரினன். நல்லகல்விமான். அவனுக்கு முன்னதாகப் பிள்ளை இல்லாமையால் இக்குழந்தையை மிகவும் விழைந்து வளர்த்து வந்தான். உரிய பருவம் வரவும் இயன்றவரையும் கல்வி பயிற்றுவித்தான். வயது பதினாறு அடைந்தது. தாம் பிறந்த இடமாகிய அக்காளி கோவிலுக்கு ஒரு நாள் காலையில் இயல்பாகவே இவர் தனியே போனார். அருமை மகனைக் கண்ட உரிமைத் தாய் போல் காளி தேவி இவர் முன் களிப்போடு பிரசன்னமானாள். இவர் பேதுற்று நின்றார். பின்பு தெளிந்து புதிய வுணர்வுடன் அதிசயமுற்று அவசமீக்கூர்ந்து அருள் வயத்தராய் நேசமிகுந்து தேசுமிகப் பெற்றார். தெய்வ வொளி உள்நின்று இயக்கினமையால் இளமையிலேயே இவர் திவ்விய கவியாய் விளங்கினார். இவரது உள்ளமும் உணர்வும் உயர்நிலையில் ஓங்கி உலகமெலாம் நலமுற ஒளி பெருகி வந்தன.

## சடையப்பரைச் சார்ந்தது

அக்காலத்தில் அவ்வூரயலேயுள்ள திருவெண்ணெய் நல்லூரில், சடையப்ப பிள்ளை என்னும் பேருடைய வேளாண் குலத் தலைவர்

விளங்கியிருந்தார். அவர் பெருஞ் செல்வர்; அரசுவிழை திருவி னர்; கற்றவரிடத்தில் பெருமதிப்பும் பேரன்பும்உடையவர். பெருங் கொடையாளர். பெருந்தகைமை யுடையவர். பிறர்க்கு உதவும் பெற்றியில் தமக்கு நிகரிலராய் அவர் தழைத்திருந்தார். ஆதித்த ஒச்சர் அவரை அடிக்கடி போய்க் கண்டு மகிழ்ந்து வருவர். அங் ஙனம் சென்று வருங்கால் ஒரு நாள் இப்பிள்ளைப் பெருமானையும் உடனழைத்துப் போனார். இளமை தவழ்ந்து எழில்நலம் கனிந் திருந்த இக்குமரனைக் கண்டவுடனே அவ்வள்ளல் பெருமகிழ்ச்சி கொண்டார். உழுவலன்பு உள்ளூற விளைந்தது. பழந்தொடர் புடையவர்போல் ஒருவரை ஒருவர் விழைந்து நோக்கி இருவரும் உளங்கலந்த அன்பில் கிளர்ந்து நின்றார். அன்று முதல் அப்பிள்ளை யினிடமே இப்பிள்ளை பெரும்பாலும் இருந்துவர நேர்ந்தது. இடை யிடையே திருவழுந்தூருக்கும் வருவர்; ஆதித்தனைத் தந்தை என்றே முழுதும் இவர் நம்பியிருந்தமையால் யாதொரு வேற்றுமையுமில் லாமல் சிந்தை மகிழ்ந்து போற்றி வந்தார். ஒச்சன் மகன் என்றே நாடெங்கும் ஒச்சம் ஆயது. ஒச்சர் சாதிக்குக் கம்பர் என்னும் பெயருண்மையால் அப்பெயரானே இவர் அழைக்கப்பட்டு வந்தார். உண்மையில் இவர் முன்னோர்கள் ஆண்டு வந்த நாட்டுக்குக் கம்ப நாடு என்று பெயரிருந்தமையால் ஆதித்தன் இவரைக் கம்ப நாடர் என அன்புடன் அழைத்துவந்தான். மூலமான பட்டப் பெயரும் இடையே நேர்ந்த ஒட்டுப்பெயரும் ஒன்றாக ஒட்டி இக்கவியரசைச் சுட்டும் பாக்கியம் பெற்று ஊழியும் தேயாத உருப்பெற்று நின் றன. வாழிய அந்நிலை. இவரது அறிவாற்றல்களை அறிந்து வரவரச் சடையப்பருக்கு ஆர்வமீதூர்ந்தது. அவர் சோழமன்னன் சபை க்குப் போய்வரும் உரிமையுடையவராதலால் அவ் வளவனோடு இவ் இளவலுக்கும் தொடர்பு நேர்ந்தது. நல்ல நூல்களின் பயிற்சியும் வல்லார்வாய்க் கேள்விகளும் இவர்க்கு வளமுற வாய்த்தன. இவரது மதிநுட்பமும் கலையறிவும் தேவியருளும் செழித்து வளர்ந்தன. அரசவைக்கு வருகின்ற வேறு முதிய புலவர்களும் இப் புதிய புல வரிடம் உரிமை மீக்கூர்ந்து உறவு கொண்டாடினார். இவரது புலமை நிலையை அறிந்து அரசனும் இவரைத் தலைமையாக ஆதரி த்து வந்தான். தந்நிலைமை தெரியாதிருப்பினும் இவரிடம் புலமை வீறுடன் இயல்பாகவே குலவீறும் குடிகொண்டிருந்தது. மன்னன் அவையில் இங்ஙனம் மன்னிவரும் காலத்தே தான் இராமகதையை

இவர் பாட நேர்ந்தார். அந்நூல் செய்யும் பொழுது வயது முப்பத்தொன்பதாம்.

## மனைவியும் மகனும்

இவரது அருமை மனைவி பெயர் தருமவல்லி. மகன் பெயர் அம்பிகாபதி. அவன் நல்ல அழகன். கல்வி யறிவிலும், சொல் வன்மையிலும், கவி இயற்றுவதிலும் வல்லவன். பாவின் சுவை கனிய அவன் ஒரு கோவை பாடியிருக்கிறான். அது அம்பிகாபதிகோவை என வழங்கிவருகிறது. அவனது அழகமைதியையும் கலையறிவையும் கண்டு அரசனும் மகிழ்ந்து அவன்பால் அன்புற்று வந்தான்.

இங்ஙனம் அருமை மகனைப் பெற்று, இனிய மனைவியுடன் இன்புற்று இவர் பெருமையுடன் வாழ்ந்து வந்தார். இவருடைய வாழ்வும் சூழ்வும் இராமசரிதம் பாடவே வளம் பெற்று வந்தன.

புறத்தோற்றத்தில் உடலமைவில் இவர் சரிதம் இவ்வளவு அறிந்தது போதும். அகச் சரிதமாகிய உயிருணர்ச்சிகள் யாவும் தெளிவாக இவர் காவியத்தில் கண்டு மகிழலாம். ஆண்டு விரைந்து

காவியமாகிய அந்தப் போகபூமியுள் புகுமுன் இவரைக் குறித்தும் அந்நூலைப்பற்றியும் சிறப்புப்பாயிரமாக வந்துள்ள சில பாடல்களைப் பார்த்துவிட்டு மேலே செல்வோம்.

## சிறப்புப்பாயிரம்

"ஆதவன் புதல்வன்; முத்தி யறிவினை அளிக்கும் அண்ணல்;
போதவன் இராமகாதை புகன்றருள் புனிதன், மண்மேல்
கோதவம் சிறிதும் இல்லான்; கொண்டல்மால் தனையொப்பான்;
மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்." (1)

அண்ணல், புனிதன், அவம் இலான், மால் ஒப்பான், மாதவன் எனக் கம்பரை உளம் உவந்து கூறி அவர் அடி தொழுது வாழ்வாம் என்று பணிவும் அன்பும் தோன்ற இதில் வரைந்திருக்கும் அமைதியை ஆய்ந்துகொள்க. இதனால் இவரது தெய்வப் பெற்றியும், செய்தவமாட்சியும் திவ்விய நிலைமையும் தெரியலாகும். வளர்ப்புத் தந்தையே இவர் தந்தையாக இதன்கண் வந்துள்ளமை அறிக.

## திருமாலும் கம்பனும்

அம்பிலே சிலையை நாட்டி அமரர்க்கன் றமுதம் ஈந்த
தம்பிரான் என்னத் தானும் தமிழிலே தாலை நாட்டிக்
கம்பநா டுடைய வள்ளல் கவிச்சக்கரவர்த்தி பார்மேல
நம்புபாமாலையாலே நரருக்கின் றமுதம் ஈந்தான். (2)

திருமால் பாற்கடலைக் கடைந்து தேவர்கட்கு அமுதம் வழங்கினார்; கம்பர் தமிழ்க் கடலைக் கடைந்து பாவின் தொகுதியாலாய இராம சரிதமாகிய அமிர்தத்தை மக்களுக்குக் கொடுத்தார் என்பதாம். அது அலை அமுதம்; இது கலை அமுதம். அது உடற்குறுதியாய்ச் சிறிது ஊக்கி நிற்கும்; இது உயிர்க்குறுதி பயந்து என்றும் உயர் பேரின்பம் ஆக்கிவரும் என்க. இதனால் அதனினும் இதற்குள்ள ஏற்றம் இனிது புலனும். அம்பு=நீர். நீர்த்தொகுதியாகிய ஆழியைக் குறித்து இங்கே அது பாற்கடலை உணர்த்தி நின்றது. சிலை=மலை. கடல் கடைந்தபொழுது மந்தரமலையை மத்தாக நாட்டியிருந்தமையால் அது சிலை எனச் சுட்ட நேர்ந்தது. தால்=நா. நம்பு=விருப்பம்; அன்பு கனிந்த ஆர்வம் என்க. "நம்பும் மேவும் நசையாகும்மே" என்றது தொல்காப்பியம். "கம்பநாடு உடைய வள்ளல்" என்றதனல் கம்பரது நாட்டுரிமையும், ஆட்சி நிலையும் அறியநின்றன. அம்பில் சிலைநாட்டி என்றதில் நயம் அறிக.

## நூல் வந்த வழி

நாரணன் விளையாட்டெலலாம் நாரதமுனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தான் அறிந்தவான மீகி என்பான்,
சீரணி சோழநாட்டுத் திருவழுந்தூருள் வாழுவோன்
காரணக் கொடையான் கம்பன தமிழினல் கவி செய்தானே.

கம்பன் காவியத்துக்கு மூலம் கூறியபடி யிது. இவர் இருந்து வாழ்ந்த ஊரும் நாடும் இதில் உரைக்கப்பட்டுள்ளன. சீர் அணி இரண்டிற்கும் தனித்தனி இயையும். பிறர் செய்யும் பொருளுதவி எவ்வளவு பெரிதாயினும் உடலளவில் ஒழிந்துபோம்; இவரது உணர்வுதவி உலகுயிர் உள்ள அளவும் பூரணமாயூடுருவி யருளும் ஆதலால் காரணக் கோடையான் என நின்றார். கார் போலக் கைம்மாறு கருதாத உதவி; தலைமையான ஈகை; புகழுக்குக் காரணமாகிய கொடை எனவும் அப்பதத்திற்குப் பொருள் காணலாகும்.

இம்பர்நாட்டில் செல்வமெல்லாம் எய்தி அரசாண்டிருந்தாலும்,
உம்பர்நாட்டில் கற்பகக்கா ஓங்கு நீழல் இருந்தாலும்,
செம்பொன் மேரு வனையபுயத் திறலசேர் இராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதையிற்போல கற்றோர்க்கு இதயம் களியாதே. (4)

கம்பரது கவிநலங்களை நன்கு நுகர்ந்து களித்துத் திளைத்த பரம ரசிகரான ஒரு கவிஞர் "நான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்" என்ற உயர்ந்த குறிக்கோளுடன் பரவசமாய்ப் பாடிய பாடல் இது. இந்த உலகத்தில் சிறந்த அரச போகமும், அந்த உலகத்தில் உயர்ந்த இந்திர பதவியும் கம்பன் கவியைப் போல் அறிஞர்களுக்கு இன்பம் தரா என்றதனால் இவரது கவிச்சுவையின் உண்மையான உயர் நிலையும், உணர்வுயிர்களுக்கு இயல்பான இன்ப நலங்களும் ஒருங்கே உணரலாகும்.

ஐம்புல இன்பங்களும் ஆர அருளும் அவ்விருவகை அரச போகங்களையும் அவர் அநுபவிக்கும் தோறும் தேய்ந்து தேக பலம் குன்றிக் கிழமா யிழிந்து கரணங்கள் தளர்ந்து கழிந்தொழிய நேர்வர்; அந்நுகர்ச்சிக்குரிய போகப் பொருள்களும் நுகர நுகர உருக் குலைந்து ஒழிந்துபோகும். அறிவினால் நுகரும் கவியின்பமோ "ஆயுந்தொறும் தொறும் இன்பம் தரும் கல்வி" என்றவாறே நுகருந்தோறும் இன்பம் மேலும் மேலும் சுரந்தருளும்; அதனால் உள்ளமும் உணர்வும் உயிரும் ஒளிமிகப் பெற்று உயர்பேரின்பம் அடையும்; அவ்வின்பப் பேற்றுக்கு ஏதுவாய் நின்ற கவியும் யாண்டும் நிலை குலையாது நிறை சுவை யுடையதாய் மீண்டும் மீண்டும் உயிர்களுக்கு வேண்டியவாறே இன்பம் விளைத்துவரும். இங்ஙனம் தானும் வளர்ந்து தன்னை நுகர்ந்தாரையும் உயர்ந்த இன்ப நிலையில் உய்த்து என்றும் உலவாமல் நின்றிலங்கும் கவியோடு, ஒன்றும் நிலையாமல் உருவழிந்தொழிகின்ற அப்புல்லிய போகங்கள் இணை யாக நேரே எதிர்ந்து நில்லா என்க.

அரச பதத்தோடு அமையாமல் அமரர் பதமும் அமிர்தமும் கவிக்கு இணையாகா என்றது உயர்வு நவிற்சி யன்றோ? எனின், அன்று; என்னை? அமிர்தம் நாவில் உண்ட வுடனே உருக்குலைந் தொழியும்; கவி உள்ளங்கொண்டு உணரும் தோறும் உலவா இன் பம் பயந்தருளும்; அது உடலைக் கொழுக்கச்செய்து மயலில்

ஆழ்த்தும்; இது உயிரை வளர்த்து உயர்வில் ஊக்கும்; ஆதலின் அதனினும் இது சிறந்த தென்க. புத்தி தத்துவத்தில் அநுபவிப்ப தாதலால் முத்தி யின்பம் போல் கவி யின்பமும் மூவா முதன்மை யை மேவியிருக்கும் என்பதாம்.

இந் நில வுலக முழுதும் ஒருங்கே ஆளும் அரச பதவியையும், இன்ப நிலையமான பொன்னுலகத்தில் மன்னிவீற்றிருக்கும் இந்திர பதவியையும் கம்பன் கவியோடு நேர் தூக்கி நோக்கி இது போல் அவை இன்பம் பயவாமையை இனிதுணர்ந்து அவ் அனுபவத்தை அன்புரிமையுடன் மிகவும் தெளிவாக ஆர்வம் பெருக இப்பாவலன் இதில் உணர்த்தி யிருக்கும் நயம் எவரும் ஆவலுடன் ஊன்றி உணரத்தக்கது. களிப்பு = பெருமகிழ்ச்சி. இதயம் என்றது கவி யின்பம் விளையும் நிலையம் அறிய.

" தித்திக்கும் தெள்ளமுதாய்த் தெள்ளமுதின் மேலான
முத்திக் கனியே! என் முத்தமிழே!
புந்திக்குள் உண்ணப்படும் தேனே!" (தமிழ்விடுதூது)

என்பதனால் கவிநுகர்ச்சியின் இடம் அறியலாம். புலன் நுகர் விற்கும் கலை நுகர்வுக்கும் உள்ள வேறுபாடு ஈண்டும் புலனும். கற் றோர்க்கு என்றதனால் மற்றோர்க்கு இச் சுவை தெரியாதென்பதாம். ஆகவே இக்கவியின் அருமைப் பொருளையும் உரிமையுடன் அவர் உணரமாட்டாமல் உவகையிழந்து உளத்திமிரோடு ஒதுங்கி யொழி வர் என்பது உணர நின்றது.

இம்பருலகமும் உம்பருலகமும் ஒருங்கே வரினும் நான் வேண் டேன்; கம்பர் கவிதையே எனக்கு வேண்டும் என்றவாறு. கவிகளை ஆய்ந்து நோக்கிச் சுவைகளில் தோய்ந்து தோய்ந்து திளைத்துக் களிப் பூர்ந்து வந்தவர் தம்கருத்தை ஒளிப்பின்றிக் கவியுருவில் இவ்வாறு காட்டியருளினர். இதனைக் கண்ட அறிஞர் அனைவரும் "உண்மை யை ஓர்ந்துரைத்துள்ளார்; ஆர்ந்த அறிவினர்; இரசனை யுணர்வில் மிக வும் கைதேர்ந்தவர்" என ஆர்வத்துடன் அவரைப் போற்றிவருகின் றார். இவ்வளவு உண்மையை ஒளியாதுணர்த்திய இக்கவிராயரது பெயர் தெரியாது போயதே என்று சிலர் பரிதாப முறுகின்றனர். கம்பன் கவியைச் சுவைத்து வருபவர்க்கெல்லாம் மேலானமூல புரு டனாய் இவர் முதன்மை எய்தி நிற்கின்றார். இவர்க்கு முன்னே

நம் கம்பனைக் கண்டு வந்தவர் இவ் இன்பப் பாடலைக் காணாது போயினர். நாம் காணப்பெற்றோம். நம்மில் பலர் இக்கவியைக் கண்டிருந்தும் இதன் உண்மையைக்காண விரும்பாமல் கால் ஒதுங்கி நிற்கின்றார். அதாவது கம்பன் நூலை மேலெழுந்தவாரியாகப் பார்த்து விடுகின்றாரே யன்றி ஆர்த்தியுடன் ஆழ்ந்து தோய்ந்து அறிவின் சுவையை அருந்தாதுள்ளார் என்பதாம்.

நாவின் சுவைகளையே நனிவிழைந்து பாவின் பயனை மனிதன் இழந்துவிடின் அவன் வாழ்வு சுவைகெட்டதாய் நவை பட்டழியும். செல்வமிகப் படைத்து நல்ல சுகியாயிருந்தாலும் கலைச்சுவையிலனாயின் அவனை அரசிகன் என்றே அறிஞர் இகழுவர். பொறிநுகர்ச்சி அவநிலையிலும் அல்லலிலும் ஈர்த்துச்செல்லும்; அறிவு நுகர்ச்சி அறம் புகழ்களில் செலுத்தும் ஆதலால் ஆவதை அறிந்துகோடல் அறிவுடைமக்கட்கு அழகாம். தேகபோகங்களில் ஏகபோகமாய் மண்டி இறுமாந்து கிடக்கின்ற மேல்நாடும் அறிவின்பத்தை வியந்து ஆர்வமீதூர்ந்து போற்றுகின்றது. அந்நாட்டுப்புலவர் ஒருவர் கூறியுள்ள வாக்கியம் ஒன்று அடியில் வருவது.

"In the pursuit of intellectual pleasures lies every virtue; of sensual, every vice" (Goldsmith)

எனவரும் இதனால் உணர்வுநலனை மேல்நாட்டார் உணர்ந்திருக்கும் நிலை உணரலாகும்.

ஹோமர் (Homer) என்னும் கிரேக்க மகாகவியை மேல்நாட்டினர் மிகவும் போற்றுகின்றனர். அக்கவிஞர் இயற்றியுள்ள ஒடிசி (Odyssey) என்னும் காவியத்தைப்பற்றி அளவுகடந்த ஆர்வத்துடன் அன்னார் புகழ்ந்து வருகின்றார். "அதனை ஒருமுறை படித்தால் வேறு ஒன்றும் படிக்கவேண்டாம்; பிறவெல்லாம் சாரமற்றனவாய்த்தோன்றும்; மனிதனுக்குவேண்டிய எல்லா நூல்களின் பயனையும் அதனால் ஒருங்கே பெறலாம்" என்கின்றனர். அவர் கூறுகின்றபடியை அடியில் பார்க்க.

"Read Homer once, and you can read no more;
For all books else appear so mean, so poor,
Verse will seem prose: but still persist to read,
And Homer will be all the books you need."

போப்பு (Pope) என்னும் ஆங்கிலக் கவிஞர் தமது மொழிபெயர்ப்பின் முன்னுரையில் இவ்வாறு எடுத்துக்காட்டியிருக்கிறார். இதனால் அந்நாட்டவர் அந்நூலை எவ்வாறு எண்ணியிருக்கின்றார் என்பது எளிது தெளிவாம். தரம் அறியும் தன்மையில் அவர் தழைத்து நிற்கின்றார்.

அவ்வளவு பெரும் பேர் பெற்றுள்ள அந்த ஹோமர் காவியத்துடன் நமது கம்பர் காவியத்தையும் நேர் வைத்து இருமொழிகளிலும் பழுதற்ற புலமைவாய்ந்த புலவர்நன் மக்களை அவற்றின் தராதரங்களை ஆராய்ந்தறிய நியமித்துத் தம்புலக்கோலால் அவ்விரண்டையும் சீர்தூக்கி நோக்கி நடுவு நிலைமையுடன் முடிவு சொல்லும்படி செய்யின் அப்பொழுது நமது புலவர் பெருமானுடைய தலைமைத்தன்மை உலகமெங்கும் தெரிய ஓங்கி நிற்கும். அதனை என்று காண்பது? கலை நிறைந்த அரசிருந்தாலல்லவோ அந்நிலை தெரிய நேரும். இங்ஙனம் உலகமகா காவியங்கள் எவற்றினும் மேம்பட்டுத் தன்கதா நாயகனை இராமனைப்போலவே தானும் தன்னிகரில்லாத் தலைமையுடையதாய் எந்நிலையிலும் இணையின்றி எழுந்துள்ள கம்பராமாயணத்தை இந்நாடு முழுவதும் நன்கு பயிலும் பாக்கியம் பெறவில்லை. கன்னடம் தெலுங்கு மலையாளம் துளுவம் வங்கம் முதலியவற்றைத் தாய்மொழியாக்கொண்டுள்ளவர் இந்நூலை வாய்மொழியக் கண்டிலர். ஒரு காலத்தில் குமரிமுதல் இமயம்வரை எங்கும் பரவியிருந்த தமிழ் இதுபொழுது அமயமின்றி அடங்கிக் கிடக்கின்றது. தமிழ்வேந்தர் ஆட்சி தலைசாய்ந்து போனமையால் இந்நிலை வந்து நேர்ந்தது. வீட்டுமொழி வேற்றுமொழி யாயது. அடிமைநிலை குடிகொண்டமையால் படிமை குன்றியது. தன்னிலை குலைந்தமையால் நிலமும் தாழ்ந்தது. தமது தாய்மொழியை உரிமையுடன் பேணாமையாலும், உறுவது காணாமையாலும் இங்குள்ளவர் உறுதிநலம் இன்றி உரங்குன்றலாயினர். இடமும் சுருங்கி, எல்லையும் குறைந்து உரிமையாளரும் அருமை தெரியாமல் அயர்ந்து போனமையால் நூல்களும் ஏட்டளவில் இருந்துவரலாயின. பாட்டின் நயம் அறிதலும் சுவை தெரிதலும் நகைக்கேதுவாய் நவையுறநேர்ந்தன. ஞானந் தளர ஊனம் வளர்ந்தது. அவிச்சுவை ஆட்சிபுரிகின்றது; கவிச்சுவை காட்சி கழிகின்றது. மீட்சி வருநாள் என்றோ? அன்றே மாட்சிபெறு நாளாம். உணர்வு வளம் பெறின் உயிரின்பம் ஓங்கிவளரும்.

பண்டைக் காலத்தில் இந்நூலை நன்கு பயின்று நலமிகப் பெற்றுப் பலரும் பாராட்டி வந்துள்ளார். இவ்வுண்மைக்கு மேலே வந்துள்ள பாடல்களே சாலும் கரிகளாம்.

துறக்க இன்பத்தினும் கம்பன் கவிதையின்பம் சிறந்தது என்று இவ்வளவு துணிவாக வெளியே சொல்ல வேண்டுமாயின் அவர் எவ்வளவு சுவையை அதில் நுகர்ந்திருக்க வேண்டும்? அந்த அறிவின்பத்தின் அநுபவங்கள் இந்த நாளில் மந்தமாய் மறைந்து போயுள்ளனவே! எந்த நாள் எழுமோ?

இந்நூலறிவு சால அமைந்து சீலம் முதலியன தாங்கிஞாலம் இன்புறு நாளே நன்னாளாகும். அந்நாள் அறம்பல வளரும்.

## கம்பர் உதித்தது

வாழ்வார் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பன் வாழ்த்துபெறத்,
தாழ்வார் உயரப், புலவோர் அகவிருள் தானகலப்,
போழ்வார் கதிரின் உதித்ததெப் வப்புலமைக் கம்பநாட்
டாழ்வார் பதத்தைச் சிந்திப்பவர்க்கு யாதும் அரியதன்றே. (5)

கதிரும் கம்பனும் நிகரென்ற படியிது.

சூரியன் உதயமானது போல் இவ்வுலகில் கம்பர் உதயம் ஆயினார்; அவரால் பலநலங்கள் விளைந்துள்ளன என்பதாம். இருளை ஒழித்து, ஒளியைப் பரப்பி, உயிர்களைத் தொழிற்படுத்திப் பாருலகெங்கும் சூரியன் உவகை விளைத்து நிற்பன்; கம்பரும் அஞ்ஞானமாகிய இருளை நீக்கி, அறிவொளிபரப்பி, அறம் பல விளக்கி ஆருயிர் இன்புற அருள்புரிந்துள்ளார் ஆதலால் கதிரோடு எதிராய் இங்ஙனம் துதி செய்ய நின்றார். கதிர்=சூரியன்.

தம்மை ஆதரித்த வள்ளலாகிய சடையப்பபிள்ளையை இராமாயணத்தில் பல இடங்களிலும் உள்ளன்புடன் கம்பர் புகழ்ந்து போற்றி யிருக்கிறார் ஆதலால், "சடையப்பன் வாழ்த்துபெற" என்றார். அறிவுநலங்கள் குன்றி இழிந்துபோயுள்ள மக்கள் இவர் உணர்த்தியருளிய உணர்வொழுக்கங்களை நோக்கி உயர்ந்து வருதலால் "தாழ்வார் உயர" என்றார். உள்ள உணர்வுகளில் தாழ்வாயிருப்பவரும் கம்பருடைய பேரையும் கவிகளையும் ஆரவாரமாகச்சொல்லிச் சீரும் சிறப்பும் பெற்று வெளியே பெரிதும் உலாவி வருதலை இன்றும் கண் கூடாக நாம் கண்டு வருகின்றோம்.

நல்ல கல்விமான்களும் இவரது எல்லையில்லாத கல்விப்பெருமையை அறிந்து மகிழ்ந்து ஐயம் திரிபு முதலிய அறியாமைகள் நீங்கி, மயக்கம் தெளிந்து, உள்ளொளிமிகுந்து, செருக்கு முதலிய சிறுமைகளின்றிப் பெருமைபெற்று இருமை யின்புடன் மருவி வருதலால் "புலவோர் அகவிருள் அகல" என்றார்.

இங்ஙனம் கல்லார் கற்றார் முதலிய எல்லார்க்கும் இதம் புரிந்து அறநலங்களை விளக்கி அறிவொளி பரப்பி உலகமெல்லாம் இன்புறக் கம்பர் உதயமாயினர் என்பதாம். இவர் தோற்றத்தால் இந்நாட்டில் தோன்றியுள்ள நலங்கள் பல என்றதனால் இவரது பிறப்பின் மாட்சியும், பெறலருங் காட்சியும், பிறந்துசெய்த அரிய செயல்களும், பேருபகாரங்களும் நேரே தெரியலாகும்.

தேவி யருள்பெற்றுத் தெய்வப் புலமைவாய்ந்து, செய்சவக் குரிசிலாய்ச் சிறந்துள்ள இந்தக் கலை ஞானியை உள்ளன்புடன் நினைந்து வருவார்க்கு எல்லா நலங்களும் எளிதில் கைகூடும் என்பார் "கம்பன் பதத்தைச் சிந்திப்பவர்க்கு யாதும் அரிய தன்றே" என்றார். கருதியன யாவும் உறுதியுடன் அருளி வரத் தரும் பெருமாளாய் இவர் சிறந்திருக்கும் நிலை இதனால் அறிந்து கொள்ளலாம். பதம்=பாதம்; கால்கள்.

சிந்தனைக்குப் பதத்தைக் குறித்திருத்தலால் வையம் இவர் பால் கொண்டுள்ள தெய்வ மகிமையும், வந்தனை வழிபாடுகளின் உயர்வும், உரிமையும் உணர நின்றன.

)ங்ஙனம் உலகம் வாழ்த்த நின்ற இவர் சடையப்பரை வாழ்த்தினர் என்றால் அவரது அருமை பெருமைகளின் அளவு நிலை புலனும். உலகம் உள்ள அளவும் வள்ளல் வள்ளல் என எல்லார் உள்ளங்களிலும் அவர் ஓங்கி யுள்ளார்.

"ஒன்றா உலகத் துயாநத *புகழலலால
பொன்றுது நிற்பதொன் றில" (குறள் 233)

என்ற அருமைத் திருக்குறளுக்கு உரிமைப் பொருளாய் அப் பிள்ளை உள்ளமை இங்கு உள்ள வந்தது.

* புகழ் ஒன்றே என்றும் பொன்றாது நிற்கும் என்பதாம். பொன்றுதல்—அழிதல். அழியும் இயல்பினதாய இவ் உடல் நிலைத்திருக்கும் பொழுதே அழியா நிலையமான புகழை மக்கள் மிக்க ஊக்கத்துடன் ஆக்கிக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

அப்பேருபகாரியின் ஆதரவில் அமர்ந்து திருவெண்ணெய் நல்லூரில் இருந்துகொண்டு தான் இவர் இராம கதையைப் பாடினார். இவ்வுண்மை இவர் வாக்குமூலத்தாலேயே அறிய வந்தது. அடியில் வருவது காண்க.

காவியம் செய்த இடம்

" நடையில் நின்றுயர் நாயகன் தோற்றத்தின்
இடைநிகழ்ந்த இராமாவ தாரப்பேர்த்
தொடை நிரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே."

முன் வந்துள்ள ஐந்துகவிகளும் கம்பரைக் குறித்துப் பிறர் கூறியன. இது இவரே பாடியது. இராமகதை குற்றமற்ற சிறப்பினையுடையது என்பதை "தோம் அறு மா" என்ற விசேடங்களால் விளக்கினார். தோம் = குற்றம். மா = பெருமை. மா என்பது இலக்குமியையும் குறிக்கும் ஆதலால் திருமகளின் அவதாரமாகிய சீதையின் தொடர்பும் தெரிவுற நின்றது. தொடை = செய்யுள். செந்தமிழில் சந்த இன்பம் பொலிந்த இனிய செய்யுள்களால் இந்நூல் நிறைந்துள்ளது என்பதைத் தொடை நிரம்பிய என்றதனால் துலக்கி நின்றார். "விருத்தம் என்னும் ஒண்பாவில் உயர் கம்பன்" என்று புலவர் புகழ உலகில் இவர் உயர்ந்திருக்கும் நிலை இதனால் உணரலாகும்.

கதை நிலை, காவியத்தின் நிலை, கதாநாயகன்பேர், காவியத்தின் பேர், நூல் செய்த இடம், முதலியன இதில் உடனறிய வந்தன. நல்லூர்வயின் தந்தனன் என்னாது தந்ததேஎன்றது தேவி அருள் தந்தது, திருவருள் தந்தது என்று தன்னை மறந்து அருள் வசமாய் நின்று சொன்னபடி யிது. வயின் = இடம்.

யான் எனது என்னும் செருக்கின்றி இக்கவியரசு காரியம் புரிந்துள்ள சீரிய நிலை இதனால் தெரிய நின்றது.

திருமாலின் சிறந்த அவதாரங்கள் பத்தனுள் இராமாவதாரம் ஏழாவது ஆதலால் "அது இடைநிகழ்ந்த" என வந்தது.

கம்பர் தமது நூலுக்கு இராமாவதாரம் என்று பெயர் இட்டிருக்கிறார்; இருந்தும் ஆதிகவியாகிய வான்மீகி வழங்கியபடியே இராமாயணம் என அது விளங்கி வருகின்றது.

# கம்பன் கலை நிலை

கம்பன்
கவி
கம்பநாடன்
கம்பநாடுடைய வள்ளல்
காரணக்கொடையான்
தெய்வப்புலமைக் கம்பநாட்டாழ்வார்

என முன் வந்த கவிகளில் இவர்க்குப் பெயர்கள் குறிக்கப் பட்டுள்ளன. இவற்றுடன் இராமவேழம்சேர் கம்பன், கல்வியிற் பெரிய கம்பன், கம்பர் வீட்டுக்கட்டுத் தறியும் கவிசொல்லும், புவிச்சக்கரவர்த்திகள்போற்றப் போந்தொளிர் கவிச்சக்கரவர்த்தி என இன்னவாறு பல பெயர்களாலும், தொடர்களாலும் இவர் ஏத்தப்படுகின்றார். இவற்றால் உலகம் இவரைக் கண்டிருக்கும் காட்சியும், கருதிவரும் மாட்சியும், இவரது புலமை யுயர்வும், தலைமை யியல்பும், நிலைமையும் பிறவும் நிறைதெரியலாகும்.

இவரது காலம் இற்றைக்கு ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்னராம். கி.பி. 830 முதல் 900 வரையும் இவர் வாழ்ந்திருக் கிறார். இளமையிலேயே இவரிடம் கல்விமணம் கனிந்திருந்தது; ஆயினும், நாற்பது வயதுக்குப் பின்புதான் இவரது கல்விப்பெரு மையை உலகம் அறியநேர்ந்தது. இவர் வாக்கால் பாடல் பெறு வதை மக்கள் ஓர் ஆக்கமாகக் கருதலாயினர். சொல்லியது பலிக்கும் நல்லியல்பு இவர் சொல்லில் அமைந்திருந்தது; அதனால் எல்லாரும் அன்பும் அச்சமும் கொண்டு வியந்து பாராட்டி இவ ரைப் போற்றி வந்தனர். தெய்வப் புலவர் என வையம் புகழ்ந் தது. மூவேந்தரும் இப்பாவேந்தர்பால் அன்பு மீக் கூர்ந்து ஆதரித்துவந்தனர். இவர் செய்து முடித்த இராமாயணம் திருவ ரங்கத்தில் கி. பி. 885ல் அரங்கேற்றப் பெற்றது. அப்பொழுது இவருக்கு வயது 55. அந்த அரங்கேற்றத்தில் நாதமுனிகள் முதலிய மாதவர்களும், மதிமான்களும், பெருநிலக்கிழவர்களும், குறுநிலக்குரிசில்களும், அரசர்களும் குழுமியிருந்தனர். இவரது புலமை நிலையையும் கவியின் இயல்பையும் கண்டு களிபேருவகை கொண்டு வரிசைகள் பல செய்து வாழ்த்தி நின்றனர். அதன் பின் இவர் எங்கும் பல்லக்கில் செல்லும் பவுசும் பாக்கியமும் பெற்றுப் பாமகள் அருளைப் பூமகளும் புவிமகளும் கண்டு புலந்து கொள்ள இவர் உயர்ந்து நின்று ஒளி செய்து விளங்கினர்.

இதுவரை ஆக்கியோன் பெயர், நூலின் பெயர், நூல் வந்த வழி, அரங்கேற்றிய காலம், இடம் முதலியன அறிந்தோம்.

சிறப்புப்பாயிரம் முடிந்தது.

இவ்வா இயற்ற அமைந்த இதிகாசக் கதையைச் சுருக்கமாக முதலில் தெரிந்துகொண்டு மேல் நூலுட் புகுவோம். இராமகதை எளிதாக எவர்க்கும் தெளிவாகத் தெரியுமாயினும் ஒரு வழியே தொகுத்துத் தொடர்பு செய்துகொள்ள இதமாக இங்கு எழுத வந்தது. முழுவதும் காண்க.

# கதைக் குறிப்பு

## 1. பாலகாண்டம்

இந் நில மண்டலத்தின் வடஎல்லையில் கோசல தேசத்தில் உள்ள அயோத்திமா நகரத்தில் இருந்து தசரதன் என்னும் பெயரினையுடைய சக்கரவர்த்தி அரசுபுரிந்து வந்தான். அவன் அருந் திறலினன்; பெருந்தகவினன். அவனுக்குக் கோசலை, கைகேசி, சுமித்திரை என மனைவியர் மூவர். செல்வம் கல்வி ஆண்மை மேன்மை முதலிய எல்லா நலங்களும் எய்தியிருந்தும் பிள்ளைப் பேறில்லாமையால் அம்மன்னன் பெரிதும் வருந்தினன். முடிவில் கலைக்கோட்டு முனிவரை அழைத்துக்கொண்டு வந்து ஒரு வேள்வி செய்தான். அதன் பலனாகப் புத்திரப்பேறு வாய்த்தது. கோசலை வயிற்றில் இராமனும், கைகேசி வயிற்றில் பரதனும், சுமித்திரை வயிற்றில் இலக்குவனும், சத்துருக்கனனும் இன்புடன் பிறந்தனர். மக்களைக் கண்டு மன்னன் மிக்க மகிழ்ச்சியடைந்தான். பிறந்த குழந்தைகள் சிறந்த சீருடன் வளர்ந்து வந்தனர். உரிய பருவம் வரவும் அரிய கலைகள் பயின்று அழகினும் அறிவினும் திறலினும் தேசினும் செழித்து விளங்கினர். குமரர் நால்வரும் அமரர் கணங்கள் போல் இனிதமர்ந்து வருங்கால் அங்கே விசுவாமித்திர முனிவர் வந்தார். அரசனைக் கண்டார். வனத்தில் தாம் செய்யும் யாகத்தை நிறைவு செய்ய இராமனைத் துணைதர வேண்டினார். மன்னன் முதலில் மறுகினன். பின்னர்த் தேறித் தன் இன்னுயிரனைய குலமகனை முனிவரிடம் அடைக்கலமாகக் கொடுத்தான். அந்த இளவீரன் வில் அம்புகள் முதலிய படைக்கலன்களுடன் முனிவர் பின் போனான்.

தம்பி இலக்குவனும் பின் தொடர்ந்து சென்றான். யாகசாலையை அடைந்து முனிவர் வேள்வி புரிந்தார். அரக்கர் திரண்டு விலக்க வந்தார். இக் குலக்குமரர் இருவரும் அவரைக் கொன்று தொலைத்து வென்றி வீரராய் நின்று வேள்வியைக் காத்தார். அது நன்று முடிந்தது. மாதவர் மகிழ்ந்தார். இருவரையும் ஆதரித்துப் போற்றி அழைத்துக்கொண்டு அவ்வழியே மிதிலையை அடைந்தார். சனக மன்னனைக் கண்டார். அவர் இவ்வரசிளங் குமரர்களைக் கண்டு உளங்களிகொண்டு குலமுறையை விசாரித்துத் திருமகள் அமிசமாய்த் தோன்றியுள்ள தமது அருமை மகளான சீதையை இராமனுக்குத் திருமணஞ் செய்ய விழைந்தார். அவ் விழைவினை விநயமாக முனிவரிடம் உரைத்தார். அனைவரும் இசைந்தார். அதன்பின் அங்கே கன்னியா சுல்கமாக வைத்திருந்த திண்ணிய வில்லை வளைத்துத் தனது அரிய வீர நிலையை யாவரும் தெரிய விளக்கித் தேவரும் களிகூர இராமன் சீதையை மணந்தான். அத்திருமணம் உலகமெங்கணும் பெரு மகிழ்ச்சியை விளைத்தது. கோசிகர் ஆசிகூறி அகன்றார். இராமன் தனது அருமை மனைவியுடன் பெரிய பரிவாரங்கள் புடை சூழ மிதிலையிலிருந்தெழுந்து திருவயோத்தியை நோக்கி வந்தான். வருகின்ற வழியில் இடையே பரசுராமர் வந்து மறித்தார். அரசர் குலத்தைக் கருவறுத்து வந்த அப்பரசுபாணியைக் கண்டதும் தசரதர் குலை நடுக்கம் கொண்டார். பலவாறு பணிந்து பரிந்து வேண்டியும் யாதும் கேளாமல் கொடுஞ் சினமிகுந்து அடுந்திறலுடன் அவர் அடர்ந்து விரைந்து இராமன் எதிர்புகுந்து கொடும் போர்க்கு மூண்டார் புது மணம் புரிந்துவந்த இராமன் முதிர் சினம் கொண்டு வந்த அவரைக் கண்டு புன்னகை புரிந்து வலிது என்று மதித்திருந்த அவரது கைவில்லை வாங்கி எளிதாகவளைத்து அம்பு பூட்டி ஆருயிரை வாங்கி விடுவதாக அச்சுறுத்தினான். அவர் அஞ்சிப் பணிந்து அயலே அகன்று போயினார். மைந்தன் வெற்றியைத் தந்தை கண்டு சிந்தை மகிழ்ந்தார். பின்பு யாவரும் மகிழ்ந்தேறி அயோத்தியை யடைந்தார்.

புதுமண வாழ்வின் அதிபோகங்களை அனுபவித்து மதிநலம் புரிந்து இராமன் மாண்போடு வாழ்ந்து வந்தான். அவ் வின்ப நிலையில் ஆண்டுகள் ஒன்பது கழிந்தன. இராமனுக்கு வயது இருபத்தைந்தாயது. உழுவலன்புடைய தம்பிமார்கள் அடிபரவி வா

அவ்வாண்டகை படிபரவ நின்றான். மாண்டவி என்னும் அழகிய கன்னியைப் பரதனும், ஊர்மிளையை இலக்குவனும், சுருதகீர்த்தியைச் சத்துருக்கனும் மணம் புரிந்திருந்தார். பண்பு நிறைந்த தமது அருமை மனைவியருடன் அமர்ந்து இன்பநலங்களை நுகர்ந்து அன்புமிகுந்து அம்மூவரும் முன்னவன் ஏவல்வழி மன்னியிருந்தார். இன்னணம் இருந்து வருங்கால் கைகேசியின் தந்தையாகிய அசுவபதி என்னும் கேகயதேசத் தரசன் பரதனைப் பார்க்க விரும்பினான்; நேரே அழைத்து வரும்படி தன் மகனாகிய யுதாசித்து என்பவனை அயோத்திக்கு அனுப்பினான். அவன் வந்து வேண்டினமையால் தசரதன் இசைந்தனுப்பினான். அனுப்பவே இராமனை வணங்கிச் சத்துருக்கனனையும் உடனழைத்துக் கொண்டு தன் தாய் மாமனோடு பரதன் கேகய தேசம் போயினான். இங்ஙனம் அவன் போக இங்கே இளவலோடு அளவளாவி உழுவலன்புடைய மனைவியுடன் இராமன இன்புற்றிருந்தான்.

## 2. அயோத்தியா காண்டம்

திங்கள் சில கழிந்தன. தசரதன் முதுமையை நினைந்து புதுமையனாயினான். இராமனுக்கு முடி சூட்டி வைத்துவிட்டு அரசாட்சிப் பொறுப்பை அகன்றிருக்க விரும்பினான். அவ்விருப்பத்தை மந்திரிகளிடம் உரைத்து அவர் உடன்பாடும் பெற்றான். அதன்பின் பட்டாபிடேகத்துககுத் தக்க நாள் ஒன்றை வசிட்டரால் நியமித்து வரவு பார்த்திருந்தான். குறித்த நாள் வந்தது; வரவே முடிபுனை கோலம் கடிது நிகழ்ந்தது. அதனைக் கூனி கண்டாள்; பொறாமை மீக்கொண்டாள். கைகேசியிடம் போய்க் கடுஞ் சூழ்ச்சி செய்தாள். முதலில் அவ்வரசி அவளை வெறுத்து இகழ்ந்தாள். மறுத்தும் மறுத்து மந்தரை வற்புறுத்தவே அவளும் கருத்திசைந்தாள்; இராமனை முடிசூடாவகை தடுத்துக் காட்டுக்கு அனுப்பினாள். 'சீதையும் இலக்குவனும் அவனைத் தொடர்ந்து பின் சென்றார். இராமன் வனம் போயினான் என்பதை அறிந்ததும் தசரதர் உயிர் போயினார். வனவாசம் போன இராமன் இடையே குகனை நட்புக்கொண்டு, கங்கையைக் கடந்து, சித்திரகூடம் என்னும் மலையை அடைந்து இலைக்குடிசில் அமைத்து மனைவி தம்பியருடன் தவத்துறையில் இருந்தான். இராமன் அகன்றமையால் கோசல நாடு முழுவ

தும் கொடுந்துயருழந்தது; அயோத்தி நகரம் ஆவிபோன உடல் போல் அலமந்து கிடந்தது. வசிட்டர் எழுதியனுப்பிய ஓலையைக் கண்டு கேகய தேசத்திலிருந்து பரதன் வந்தான்; உற்றதை அறிந்தான்; உள்ளம் துடித்தான்; பெற்ற தாயை வைது பெருஞ் சினங்கொண்டான். பின்பு இராமனை "அழைத்து வந்தாலன்றி நான் பிழைத்திரேன்" என்று பெருந்துயர் மிகுந்து பரிவாரங் களுடன் வனம் புகுந்து வழியறிந்து போய் அண்ணனைக் கண்டு அடிவிழுந்தழுது அலறி நின்றான்; அவ்வண்ணலும் தம்பியை ஆற்றித்தேற்றினான். தேற்றியும் தேறாமல் தேம்பி அழுது நகரம் வந்தருளும்படி பரதன் நயந்து வேண்டினான். இராமன் அவனைக் கண்ணீர் துடைத்து ஆரத்தழுவி ஆறுதல் கூறித் "தம்பி! தந்தை தாயர் சொல்லிய எல்லைமீறலாகாது; பதினான்கு வருடம் கழிந்த வுடன் வந்து சேருவேன்; என் வாய்மொழி தட்டாமல் நீ போ யருள்க" என்று புகன்றருளினான். அதன்பின் வேறு கூற வழி யின்றி இராமனது பாதுகையை வாங்கித் தலையில் வைத்துக் கொண்டு உலைமெழுகுபோல் உருகிப் பரதன் மீண்டு அயோத்தி அருகேயுள்ள நந்தியம்பதியை அடைந்தான். அங்கே அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணனாய் அண்ணனையே எண்ணி அருந் தவ நிலையில் அமர்ந்திருந்தான். இராமன் அங்கிருந்தகன்று தென் திசை வந்தான்.

## 3. ஆரணிய காண்டம்

சித்திரகூடம் விட்டெழுந்த இராமன் அத்திரி முனிவர் ஆச்சிரமத்தை யடைந்தான். அம்மாதவர் ஆதரித்தருள அங்கே ஒரு நாள் தங்கினான். அம்முனிவர் பததினியாகிய அநசூயை சீதையை ஆசீர்வதித்து அணிகள் பல தந்தாள். மறுநாள் அவ ரிடம் விடைபெற்று இராமன் அங்கிருந்தெழுந்து தென் திசை வருங்கால் இடையே இடையூறு புரிந்த விராதனைகொன்று சாப அருள்புரிந்து, சரபங்கரைப் பிரிந்து, சுதீக்கண்ணரைக் கண்டு, பின்பு அகத்தியரையடைந்து, அடிபணிந்து நின்றான். அவர் இராமனை உவந்துபசரித்து அரிய வில் ஒன்று தந்தார். அவரை வாழ்த்தி யகன்று இடையே சடாயுவைக் கண்டு உறவு நிலை தெரிந்து உளமிக மகிழ்ந்து முடிவில் கோதாவரி நதியருகே பஞ்ச வடி என்னும் இடத்தை யடைந்து அங்கே பன்னசாலை அமைத்து மனைவியும் தம்பியும் பணிசெய்து வர இராமன் இனிதமர்ந்திருந்

தான். இங்ஙனம் இருக்குங்கால் இராவணன் தங்கையாகிய சூர்ப்பநகை வந்து இராமனைக் கண்டு காதல் மீக்கொண்டாள். இராமன் வெறுத்துரைத்தும் அவள் விருப்பம் நீங்காமல் நெஞ்சம் துணிந்து வஞ்சம் புரிந்தமையால் இலக்குவன் அவளை அங்க பங்கம் செய்து அகல விடுத்தான். அவள் கொதித்தெழுந்து போய்க் கரனிடம் கோபத்தை மூட்டினாள்; அவன் பெரும் படைகளுடன் வந்து இராமனை வளைந்து அடுஞ்சமர் புரிந்தான். அச்சேனைகளனைத்தையும் ஒருங்கே தொலைத்துக் கரன், தூடணன், திரிசிரா என்னும் தலைவர் மூவரையும் தரையிலுருட்டி விறலுடன் இராமன் வீறுற்றிருந்தான். சூர்ப்பநகை உள்ளம் துடித்தோடி இலங்கை புகுந்து இராவணன் அடியில் விழுந்து அலறிப் புலம்பிக் கரன் அழிவு கூறிச் சீதையின் உருவ எழிலைத் தெரிய வுரைத்தாள். அப் பெண்ணரசியின் பேரழகு நிலையை அவளது உரையால் உணர்ந்து அவன் உள்ளம் உருகினான். உடனே கள்ளம் புரியக் கருதி மாரீசனை அழைத்து மாயம் செய்ய விடுத்தான். அவன் ஒரு பொன் மானுருவொடுபோய்ச் சானகி முன் விளையாடினான். அவ்வுளவறியாமல் அதனைப்பிடித்துத் தரும்படி தனது நாயகனை அவள் நயந்து வேண்டினாள். இராமன் அதைப் பிடிக்கப் போனான்; போகவே இராவணன் வஞ்சவேடம் புனைந்து புகுந்து சீதையைக் கவர்ந்துகொண்டு போனான். மாய மான் பின்போன இராமன் அதன் தீய நிலைதெளிந்து அதனைக் கொன்று வீழ்த்தி விரைந்து மீண்டு சாலையை அடைந்தான்; சீதையைக் காணோம். தம்பியுடன் திசைகளெங்கணும் விசையுடன் ஓடித் தெருமந்து தேடினான். எங்கும் காணாமையால் பொங்கிய துயருடன் தென் திசை வந்தான்; இடைவழியில் சடாயு சிறகழிந்து கிடப்பதைக் கண்டான். நெஞ்சம் துடித்து நேர்ந்ததை வினவினான். இராவணன் செய்து போயுள்ள வஞ்சக நிலையை அவன் உரிமையுடன் உரைத்து உயிர் நீங்கினான். இராமன் பரிபவத்தோடு அவ்வுடலை அடக்கம் செய்துவிட்டு இளையவனுடன் நடந்து கவந்தனைக் கடந்து, காடும் மலையும் கடுத்துயருழந்து, சபரியைக்கண்டு உபசரிக்கப் பெற்று அவள் கூறிய வழியே தென்புலம் படர்ந்து சிறிது தூரம் வந்தான்; இடையே இன்ப நிலையமான அழகிய பம்பைப் பொய்கையை அடைந்தான்.

## 4. கிட்கிந்தா காண்டம்

குளிர்பூஞ் சோலைகள் புடைசூழ இனிய நீர்வளம் நிறைந்து தனியமைந்திருந்த பம்பைத் தடாகத்தில் நீராடிக் கனி காய் கிழங்குகளை யுண்டு அன்றிரவு தங்கிமறுநாள்காலையிலெழுந்துதம்பி யுடன் இராமர் ருசியமூகம் என்னும் மலைச்சாரல் வழியே நடந்து சென்றார். அங்கே சுக்கிரீவன், நீலன், குமுதன் முதலிய வானரர் கள் இவரைக்கண்டு வாலி ஏவலினால் வருகிறார் என வெருவி மறுகி ஓடி ஓர் மலை முழையுள் ஒதுங்கினர். அவர்களை அனுமான் தேற்றி யிருத்திவிட்டுத் தனியே இவர் முன்வந்து வணங்கி நின்றான். அவனைக் கண்டதும் இராமர் "நீ யார்?" என்றார். அவன் இனிமையாகவும் தெளிவாகவும் மிகவும் விநயமாகப் பதில் சொன்னான். வழுவின்றி உழுவலன்புடன் உரைத்த அவனது இனிய மொழிகளைக்கேட்டு இராமர் பெரிதும் வியந்து எல்லாக் கலைகளினும் அவன் வல்லவனா யுள்ளமையை அச் சொல்லால் அறிந்து அவனைச் "சொல்லின் செல்வன்" என்று புகழ்ந்தார். பின்பு அவன் மூலமாகச் சுக்கிரீவன் நட்பாயினன். அவ் வானர மன்னன் வாலியால் துயருற்றிருக்கும் நிலையை உரிமையுடன் அநுமான் உருக்கம் தோன்ற வுரைத்தான். அவ்வுரைகளைக் கேட்டு இராமர் உள்ளம் உருகினர். "தள்ளரிய வலியினனாயினும் அப் பகைவனைவென்று உதவி செய்வல்" என்று உறுதி கூறித், தமது அரிய திறல் நிலையை அவர் ஐயம் தெளிய மராமரங்களை எய்து காட்டி வாலியை வென்று சுக்கிரீவனுக்கு அரசுரிமை நல்கி வானரங்களை இராமர் படைத் துணையாக அமைத்துக் கொண் டார். வானர வீரர்க ளனைவரும் பேரன்புடன் இராமரைப் பேணி நின்றார். கார்காலம் கழித்து நான்கு மாதங்களில் வருவ தாகச்சொன்ன சுக்கிரீவன் அரசபோகங்களில் ஆழ்ந்துமதிமயங்கி யிருந்தான். அதனை நினைந்து இராமர் முதிர் சினங்கொண்டார். இளையவன் போய்த் தேற்ற அவன் எழுந்து வந்து இராமரை வணங்கிப் பிழை பொறுக்க வேண்டினன். பின்பு உழையிருந்த சேனைகளைப் பல இடங்களிலும் போய்ச் சீதையைத் தேடிவரும் படி அனுப்பினன். இரண்டு வெள்ளம் வானரங்களுடன் தென் திசை நோக்கி வந்த அனுமான் எங்கும் தேடியும் காணமல் இரங்கி வருந்தி முடிவில் சம்பாதியிடம் சில குறிப்புகள் தெரிந்து உறுதி மிகுந்து ஊக்கியெழுந்து தென்கடல் எல்லையை அடைந்து

படைகளுடன் இடையாறி யிருந்தான். "இனிக் கடல் கடந்து இலங்கை செல்ல வல்லார் யார்?" என்று அங்கே தலைவர்கள் கூடி ஆராயத் தொடங்கினர். அனுமானைத் தவிர அது செய்ய யாராலும் முடியாது என்று முடிவில் முடிவு செய்தார். அனுமான் இசைந்தான்; இலங்கை செல்லத் துணிந்தான்; கடல் தாவ வேண்டி அடல் மீக்கொண்டு மகேந்திரம் என்னும் மலைமீதேறி உச்சியை யடைந்தான். இராமரை அன்பால் அகத்தெண்ணித் தென்பால் நோக்கி முன்கால் ஊன்றி மூண்டு பாய முனைந்து நின்றான். அந்நிலையினைக் கண்டு அமரரும் வியந்து நின்றார்.

## 5. சுந்தர காண்டம்

மகேந்திர மலையினின்றெழுந்து ஊழிக் காற்றெனப்பாய்ந்து ஆழியைக் கடந்து அனுமான் இலங்கையை அடைந்தான். அந் நகரின் மணி மாடங்களையும், மாளிகைகளையும், அழகமைதிகளை யும், அற்புத நிலைகளையும் நோக்கி அதிசயித்து நின்றான். இரவு வரும் வரை இலங்கையின் வடபாலிருந்த பவளக்குன்றில் தங்கி யிருந்தான். அல் அடையவும் வல் விரைந்து யாரும் அறி யா வகை ஊருள்புகத் துணிந்தான். வடக்குக்கோட்டை வாசல் அருகே வந்தான். வேல், வாள், சூலம் முதலிய கொடிய ஆயு தங்களைக் கையிலேந்திக்கொண்டு காவலர் பலர் மிக்க எச்சரிக்கை யாகப் பக்கம் எங்கும் கடுங்காப்புடன் நிற்பதைக் கண்டான். வாயில் வழியை விட்டொதுங்கிக் கோட்டை மதிலைத்தாண்டி உள்ளே போகவேண்டும் என்னும் குறிக்கோளுடன் மேற்கே இடம் ஆய்ந்து நின்றான். அந் நகர் காவலின் அதிதேவதையாகிய இலங்கா தேவி என்பவள் விரைந்தெதிர்ந்து வேற்றாள் என்று கொதித்துத் தன் கையிலிருந்த சூலத்தால் கடுதெறிந்தாள். அதனை அனுமான் பிடித்து ஒடித்தொழித்தான். அவள் உள்ளம் திகைத்து மேலும் படைகளைவீசி முடிவில் ஒரு வடிவேலால் குத் தினாள். அதனைக்கடிதகற்றி அவளை ஓர் அடியால் வீழ்த்திவிட்டுக் கோட்டையைத் தாவி இவன் உள்ளே புகுந்தான். ஊரின் சீரிய நிலைகளை யெல்லாம் நேரில் நோக்கிப் பேராச்சரியமடைந்து அணு வென நுணுகி எங்கும் தேடினான். யாரும் புகமுடியாத அந்தப் புரங்களிலெல்லாம் புகுந்து ஆராய்ந்து பார்த்தான். சீதையை யாண்டும் காணாமையால் இவ் ஆண்டகை அகம் கலங்கினான். அக்

குலமகளை அரக்கன் கொன்றெழித்தானே? தின்றழித்தானே? என்று தெருமந்து நொந்தான். அருணன் உதிக்கும் சமயம் ஆயது; நகர் அயலே ஒரு குளிர்பூஞ்சோலையைக் கண்டான். அங்கேனும் அமையாதா? என்று ஆவலோடு பாய்ந்தான். அந்த அசோகவனத்தில் சீதையைக் கண்டான். சிந்தை களித்தான். வெயிலிடைவைத்த விளக்கென ஒளியிழந்து உருக்குலைந்துள்ள அப் பதிவிரதையின் பரிபவ நிலையை நோக்கிப் பரிதாப முற்றான். பின்பு கண்ணெதிரே போய் நின்று இராம தூதன் எனத் தான் வந்துள்ள உண்மையை உரைத்து அடையாளமாகக் கணையாழியைக் கையில் கொடுத்தான். அதனைக் கண்டவுடனே அக் கற்பரசி கழி பேருவகைகொண்டு இராமனைக் கண்டதுபோலவே உளமிகவுருகி அளவிலா ஆனந்தமடைந்தாள். நாயகன் விரைந்து வந்து தன்னைச் சிறை மீட்டியருளும்படி உரை பல கூறித் தனது அடையாளமாகச் சூடாமணியை அனுமானிடம் கொடுத்து விடுத்தாள். அவன் தொழுது வாங்கி விடைபெற்றெழுந்து வெளியே வந்து பொழிலை யழித்து அரக்கர் பலரைக்கொன்று அமராற்றி அடல் புரிந்தான். இந்திரசித்து வெகுண்டு வந்து நாகபாசத்தால் இவனைப் பிணித்துக்கொண்டு போய் இராவணன் முன் விட்டான். அவன் சிந்தை கொதித்துச் சீறிப்பார்த்து நீ யார்? என ஆர்த்தான். இவன் யாரும் வியப்ப மாறுபல உரைத்து வீறுடன் நின்றான். "வாலைச்சுட்டு ஊரைச்சுற்றி இவனை அவமானப்படுத்தி விடுக" என அவன் ஆணை கொடுத்தான். அவ்வாறே அரக்கர் பலர் அடர்ந்து பிடித்து அனுமான் வாலில் தீயை வைத்து விட்டார். தன் வாலில் வைத்த தீயை வீடுகளில் வைத்து அவ்வூரைச் சுட்டெரித்துவிட்டுக் கடலைத் தாண்டிமீண்டு வந்து மகேந்திர மலையை யடைந்து அங்கே தனது வரவை எதிர்பார்த்திருந்த வானரங்களைக்கண்டு சானகி நிலையை அவன் சால்புடன் உரைத்தான். அனைவரும் கேட்டு ஆனந்த மடைந்தார். அதன் பின் அனுமான் அவருடன் விரைந்து வந்து இராமரையடைந்து, தான் சீதையைக்கண்டுவந்த நிலையைத் தெளிவாக உரைத்தான். அவ் வள்ளல் உள்ளம் களித்து உவகை மீக்கூர்ந்தார். இலக்குவன் சுக்கிரீவன்முதலிய எல்லாரும் இன்பமீதூர்ந்தார். உடனே இலங்கை மேல் படையெழுச்சி செய்தார்.

எழுபது வெள்ளம் வானரங்களும் தென் திசை நோக்கி நடந்

தன. சேனைத்தலைவர்கள் புடைசூழ இராமரும் இலக்குவரும் தொடர்ந்து வந்தார். பன்னிரண்டு நாள் நடந்து வந்து தென்கடல் அடைந்தார். தமது படைகளை யமர்த்தி அங்கே தங்கியிருந்தார்.

## 6. யுத்த காண்டம்

கடல் கடந்து செல்லும் காரியம் கருதிச் சேனைகளுடன் வீரியமாய் இங்கே இராமர் வடகரையில் வதிந்திருக்க, அங்கே இலங்கையில் இராவணன் மந்திராலோசனை செய்தான். ஒரு குரங்கு வந்து ஊரைச்சுட்டுப்போயதே என்று உள்ளங் கொதித்து மாவியவான், மகோதரன்முதலிய மந்திரி பிரதானிகளுடன் பகை நிலையைப் பற்றி ஆராய்ந்தான். ஒவ்வொருவரும் தத்தமக்குத் தோன்றியதை எடுத்துரைத்தார். வீடணன் நீதிகள் பல கூறிச் சீதையை விட்டருளும்படி வேண்டிநின்றான். கெட்ட மதியுடைய இராவணன் அவன் புத்தியைச் சிறிதும் கேளாமல் பெரிதும் கனன்று அவனை வெளியே போம்படி வெருட்டி விடுத்தான். வீடணன் வெளியேறி இராமரிடம் வந்து அடைக்கலம் புகுந்தான். அவனை ஆதரித்து வைத்து அவன் மூலம் பகை நிலையைத் தொகையாக அறிந்து கொண்டு, வருணனை வழிவேண்டிக் கடலில் அணைகட்டிப் படைகளை நடத்தி இலங்கையை அடைந்து பாசறை அமைத்து வடதிசையமர்ந்து இராமர் அடல் கொண்டிருந்தார். அதன்பின் அமர்நீதி முறைப்படி அங்கதனை இராவணனிடம் தூதனுப்பினார். அவன் சென்று அரசவையுட் புகுந்து இராம தூதனுய்த் தான் வந்துள்ளபடியை உணர்த்தி முடிவில் ''தேவியை விடுகின்றாயா? அல்லது செருவில் வந்து உன் ஆவியை விடுகின்றாயா?'' என்று இராவணனை அறைகூவி யழைத்தான். அவன் கடுங்கோடங்கொண்டு அங்கதனைக்கொன்றுவிடும்படி கொதித்தான். அங்கே நின்றிருந்த அரக்கர்கள் நேரே பாய்ந்தார். பாய்ந்தவரனைவரையும் மாய்ந்து விழ நூறி விரைந்து வந்து இராமரை வணங்கி நிகழ்ந்ததை யுரைத்து அமர் தொடங்கும்படி அவன் ஆர்த்து நின்றான். போர் மூண்டது. இருதிறப் படைகளும் ஒரு திறத்தும் குன்றாமல் ஊக்கிப்பொருதன. படைகள் பல மாண்டன. இறுதியில் இராவணன் இராமனோடு எதிர்த்து முதிர் சினத்துடன் மூண்டு பொருதான். இந்த வீர வில்லி முன் யாதும் நிலைக்கமுடியாமல் அவன் நிலை குலைந்து தலை கவிழ்ந்

தான். அவன் நிலைமையை நோக்கி நெஞ்சிரங்கி நேரே விளித்து "ஐயா! இன்று போய் நாளை வருக" என்று இவ்வீர வள்ளல் பேரருளுடன் அவனைப் போக விடுத்தார். அவன் மானத்தால் புழுங்கி மறுகி மீண்டான். முதல் நாட் போரில் படுதோல்வி யடைந்து பரிந்து சென்ற அவன் மறுநாள் தன் தம்பியாகிய கும்பகருணனைப் போர்க்கேவி விடுத்தான், அவன் பெரும் படைகளோடு வந்து கடும்போர் புரிந்தான். வானரப் படைகள் பல அவனால் மடிந்து போயின. அடுந்திறலுடைய அவனை இராமர் அழித்து ஒழித்தார். அதன் பின் அதிகாயன் வந்தான். அனைத்தையும் இழந்தான்; மூண்டு பொருதான்; முடிவில் மாண்டு விழுந்தான். பின்பு இந்திரசித்து எழுந்தான். எண்ணரிய படைகளுடன் விண்ணவரும் நடுங்க வெகுண்டு வந்தான். அவ னோடு இலக்குவன் எதிர்த்தான். இருவரும் நல்ல வில்லாளிகள் ஆதலால் தம் வல்லாண்மைகள் முழுவதும் வழுவாது காட்டினர். இருநிலையிலும் சேனைகள் பல செத்தொழிந்தன. இலக்குவன் இலக்கொழியாமல் இடையறாது அம்புகளை ஏவி அடலமாடினன். யாண்டும் தோல்வி காணாத இந்திரசித்தும் தன் தோள்வலி குன்றி ஓர் ஆள்வலியால் அவலம் நேர்ந்ததே என்று அகங்கரித்து மூண்டு ஆனவரையும் இம்மானவனோடு மாறாடி வேறு வழி காணாமையால் வானில் சீறிமறைந்து நாகபாசத்தை வீசி வேகமாய்ப் போயி னன். அதனால் அனைவரும் அவசமாய் அயர்ந்து தந்நிலை குலைந்து தரையில் வீழ்ந்தார். தம்பி நிலையறிந்து இராமர் வந்து வெம்பி யழுது வெய்துயிர்த்து நொந்தார். அங்கே கருடன் வந்தருளி னன். பாசநிலை தொலைந்தது. விழுந்தவரெல்லாரும் எழுந்து விரைந்தார். தம்பியைத் தழுவி நம்பி மகிழ்ந்தார். மறுநாள் படைத் தலைவர் வந்து படுபோர் புரிந்தார். பட்டு மாய்ந்தார். அதன்பின் மகரக்கண்ணன் மூண்டான்; மாண்டு போனன். பின்பு இந்திரசித்து வெந்திறற் சேனைகளுடன் விரைந்து வந்து வெம்போராடினன். அப்பொழுதும் இலக்குவன் அவனுடன் அடலாற்றி நின்றான். எங்கும் இளையவன் இளையாது நின்று அடுபோராற்றும் ஆண்மையை யறிந்து அகம் திகைத்து அவன் அயலே மறைந்து அயன்படை ஏவினன். அதனால் வானரரோடு இம்மானவன் மண்வீழ்ந்தான். அவ்வீழ்ச்சியைக்கண்டு இராமர் த் துடித்தார். அனுமான் எழுந்துபோய்ச் சஞ்சீவி கொண்டு

வந்தான். வரவே எல்லாரும் பிழைத்தெழுந்தார். இவர் எழுந்ததை அறிந்து இராவணன் பெருந்துயரடைந்தான். கால நிலையை நோக்கி மூலபலம் என்னும் பெருஞ்சேனையை ஏவினான். எண்ணிடலரிய அப்பெரும் படையினை இராமன் ஒருவனே நின்று மண்ணிடை வீழ்த்தினான். மூன்று முறையும் இந்திரசித்து முனைந்து வந்தான்; மூண்டு பொருதான். முடிவில் மாண்டு விழுந்தான். அவன் இறந்துபடவும் இலங்கை முழுவதும் கலங்கி யழுதது. கலங்காத இராவணனும் புலம்பி யழுதான்; இறுதியில் உறுதி மீக்கொண்டு பகைவரை அடியோடு தொலைத்து விடுவதாகப் புகைந்து பொங்கி விரைந்து தேரேறி வெகுண்டு வந்தான். அவனால் ஆனவரையும் அமராடினான்; யாதும் முடியவில்லை. முடிவில் இராமன் கணையால் மாண்டு படியில் விழுந்தான். அவன் பட்டழியவும் ஆரிய வீரன் தொலைத்தானே என்று அகிலமெங்கும் வியப்பு மீதூர்ந்தது. அமரர் முதல் யாவரும் உவகை மீக்கூர்ந்தார். பகை யறவென்று வெற்றித்திருவுடன் விளங்கி நின்ற இராமர் இலங்கையை வீடணனுக்குப் பட்டம் கட்டி வைத்துச் சீதையைச் சிறை மீட்டிக்கொண்டு துணைவருடன் விமான மூர்ந்து திருவயோத்தியை யடைந்தார். அனைவரும் கண்டு அக மிக மகிழ்ந்தார். பரதனைத் தழுவி இராமர் உறவுரிமை புரிந்தார். அதன்பின் மணிமுடி புனைந்து எல்லா உயிர்களும் இன்புற அன்பு பாராட்டி அறநெறி வழுவாமல் அருளுடன் அரசுபுரிந்து வந்தார்.

இவ்வாறு சரிதம் அமைந்திருக்கிறது.

பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தரகாண்டம், யுத்த காண்டம் என்னும் ஆறின் தொகை வகைகளும் முறையே இதில் வந்துள்ளன அறிக.

இந்நூலின் உட்பிரிவுகளுக்குப் படலங்கள் என்று பெயர் கொடுத்துச் சரயு நதியை முதலில் வைத்து முறையே தொடர்பு செய்திருக்கிறார். அவற்றின் விவரங்கள் அடியில் வருவன காண்க.

## காவிய வுறுப்பு

**ஆறு, நாடு, நகரம், அரசு, திருஅவதாரம், கையடை, தாடகை வதை, வேள்வி, அகலிகை, மிதிலைக்காட்சி, குலமுறை, கார்முகம், எழுச்சி, வரைக்காட்சி, பூக்கொய்தல், நீர்விளையாடல்,**

உண்டாட்டு, எதிர்கோள், உலாவியல், கோலம் காணல், கடிமணம், பரசுராமன்,
என இருபத்திரண்டு படலங்கள் முதற் காண்டத்திலும்,

மந்திரம், மந்தரை சூழ்ச்சி, கைகேசி சூழ்வினை, நகர் நீங்கல், தைலமாட்டல், கங்கை, வனம்புகு, சித்திரகூடம், பள்ளியடை, ஆற்று, குகன், கிளைகண்டு நீங்கல்,
எனப் பன்னிரண்டு படலங்கள் இரண்டாவது காண்டத்திலும்,

விராதன் வதை, சரபங்கர் பிறப்பு நீங்கு, அகத்தியர், சடாயுகாண், சூர்ப்பணகை, கரன் வதை, மாரீசன் வதை, சடாயு உயிர்நீத்தல், அயோமுகி, கவந்தன், சவரிபிறப்பு நீங்கல்,
எனப் பதினொரு படலங்கள் மூன்றாவது காண்டத்திலும்,

பம்பா நதி, அனுமன், நட்புக்கோள், மராமரம், துந்துபி, கலன்காண், வாலிவதை, அரசியல், கார்காலம், கிட்கிந்தை, தானைகாண், நாடவிட்ட, பிலம் நீங்கு, ஆறுசெல், சம்பாதி, மகேந்திரம்
எனப்பதினாறு படலங்கள் நான்காவது காண்டத்திலும்,

கடல் தாவு, ஊர்தேடு, காட்சி, நிந்தனை, உருக்காட்டு, சூளாமணி, பொழிலிறுத்தல், கிங்கரர்வதை, சம்புமாலி வதை, பஞ்சசேனாபதிகள்வதை, அட்சகுமாரன் வதை, பாசம், பிணிவீட்டு, இலங்கை எரியூட்டு, திருவடி தொழுதல்,
எனப் பதினைந்து படலங்கள் ஐந்தாவது காண்டத்திலும்,

கடல்காண், மந்திரம், இரணியன் வதை, விபீடணன் அடைக்கலம், இலங்கை கேள்வி, வருணனை வழிவேண்டல், சேதுபந்தனம், ஒற்றுக் கேள்வி, இலங்கை காண், இராவணன் தானைகாண், மகுடபங்கம், அணிவகுப்பு, அங்கதன் தூது, முதற் போர், கும்பகருணன் வதை, மாயா சனகன், அதிகாயன் வதை, நாக பாசம், படைத்தலைவர் வதை, மகரக்கண்ணன்வதை, பிரமாத்திரம், பிராட்டி களம்காண், மருத்துமலை, களியாட்டு, மாயாசீதை, நிகும்பலை, இந்திரசித்துவதை, இராவணன்சோகம், படைக்காட்சி, மூலபலவதை, வேலேற்றல், வானரர் களம் காணல், இராவணன் களம் காணல், தேரேறு, இராவணன்வதை, மீட்சி, திருமுடிசூட்டு, விடை கொடுத்தல்,

என முப்பத்தெட்டுப் படலங்கள் ஆறாவது காண்டத்திலும் அமைந்திருக்கின்றன. இவ்வாறு நூற்றுப்பதினான்கு சிறு பிரிவுகளும், ஆறு பெரும் பிரிவுகளுக்குள் அடங்கிப் பதினாயிரத்து ஐந்நூற்று அறுபது (10560) கவிகள் நிறைந்து அவி அமுதமெனச் சுவைகள் சுரந்து இந்நூல் இனிது விளைந்திருக்கின்றது. இக்காவிய விளைவால் இப் பூவியல் தேவியலாயது.

இங்ஙனம் ஆறு காண்டங்களாக இராமசரிதத்தைவகுத்துக் கொண்டு கம்பர் தமது பாரகாவியத்தைப் பாடி யிருக்கிறார். மேலே மிகவும் சுருக்கமாகத் தொகுத்துக் காட்டியுள்ள கதைக் குறிப்புக்களைக் கருத்தில் வைத்துக்கொண்டால் இவரது காவிய உலகத்தில் ஆவிகொண்டு உலாவுகின்ற அற்புத உருவங்களின் விற்பன நிலைகளையும், வியத்தகு செயல்களையும் தெளிவாகப் பார்த்து மகிழ்தற்கு மிகவும் இதமாயிருக்கும்.

பழமையும், எளிமையும், அருமையும், புதுமையுமுடைய இந்த இனிய கதை கம்பருடைய கவிகளில் வரும்பொழுது எல்லாருடைய உள்ளங்களையும் கவர்ந்து உணர்வொளிவீசி உயர் பேரமிர்தமாய் இன்பம் புரிந்தருள்கின்றது. அந்த இன்ப விளைவுகளை இனிமேல் காவியத்துள் காண்போம்.

இது வரை வந்துள்ளன இந்நூலுக்குப் பதிகம் ஆகிய ஒரு முன்னுரை யாகும். இனிமேல் வருவது நூல்.

# முதல் அதிகாரம்

## கடவுள் வாழ்த்து

காவியம் பாடப் புகுந்த கம்பர் முதலில் கடவுளை நினைந்து துதித்திருக்கின்றார். இந்த நாட்டு இலக்கியங்கள் எல்லாம் தெய்வ சிந்தனையைத் தலைப்பெய்தே வந்திருக்கின்றன. நூலறிவுக்குப் பயன் வாலறிவனைத் தொழுவதே என்பது மேலோர் துணிபு. பல்வேறு வகைப்பட்ட நூல்களை யெல்லாம் ஒருங்கே பயின்று அருங்கேள்விகள் வாய்ந்து பெரும்புலமை யடைந்திருந்தாலும் "கற்றது கைம்மண் அளவு; கல்லாது உலகு அளவு" என்றபடி சிலவே தெரியும் சிற்றறிவையே எவரும் பெற்றிருக்கமுடியும்; ஆதலால் இயல்பாகவே எல்லாம் அறிந்து, எங்கும் நிறைந்து, என்றுமுள்ள முற்றறிவுடைய பரம்பொருளைத் தாம் கற்ற அறிவு பயன்படும்படி யாண்டும் அவர் கருதித் துதிப்பாராயினர்.

வேறு நாட்டு நூல்களின் முகப்பில் இவ்வாறு பெரும்பாலும் தெய்வத்துதி செய்யப்பெறவில்லை; இந்நாட்டு நூல்கள்

தாம் வழுவாது செய்து வந்துள்ளன. இவ்வரவும் பண்டைக் காலத்தில் மிகவும் அருகியே யிருந்தது; பிற்காலத்தே தான் பெருகி வரலாயது.

இதனல் இந் நிலத்தவர் தமக்கு மேலாக ஒரு தலைமைப் பொருள் உண்டு என்பதைப் பலவிதத்திலும் பண்டிருந்தே கண்டு தெளிந்து நாவிலும் பாவிலும் நயந்து கொண்டு பின்பு பணிந்து வந்துள்ளமை புலனும். கண்ணுக்குத் தெரியாத ஒன்றை இருப்பதாக நினைந்துகொண்டு அடிமை மனப்பான் மையுடன் அதனை ஏன் உயர்வாக வணங்கி வரவேண்டும்? என்று இக்காலத்தில் சிலர் பிணங்கி வருகின்றார். அவரது பிணக்கு குணக்கேடுடையதாய்க் கொடும் பழிதூற்றிக் குருடுபட்டுழல்கின றது. கண்ணுக்கு நேரே தெரியாத எதையும் நம்பக்கூடாது என்பது அறிவுடைமையாகாது. கண் உருவப் பொருளை மட்டும் காணும்; அருவநிலையில் உள்ளதை அறிய மாட்டாது. காற்று கண்ணுக்குப் புலப்படுவ தில்லை; ஆயினும் மரம் கொடி செடி முதலியன அசைவன கண்டு காற்று ஒன்று உண்டு என்று கருது கின்றோம். புகையால் நெருப்பு இருத்தலையும், மணத்தால் மலர் உள்ளதையும் நம் உள்ளத்தே குறிப்பாக யூகித்துக்கொள்ளுகின் றோம். அவ்வாறே உலக நிகழ்ச்சிகளைக்கண்டு இவற்றிற்கெல்லாம் ஒரு தலைமைப் பொருள் உரிமையாக உண்டு என்று உணர்வுடை மாந்தர் உறுதி செய்திருக்கின்றார்.

"உடலின் தொழிலால் உயிருண்மை யுணர்வாய்,
நாற்றம நுகர்ந்து நறுமலர் காணபாய்,
ஆற்றும அசைவால் காற்றினை அறிவாய்,
பொஙகுதீ யுணமை புகையால தெரிவாய்,
பிள்ளையைக் கண்டு பெறறோர் உண்டென
உள்ளம் துணிநதே உறுதிமீக கொள்வாய்,
கண்ட மட்கலம காணுக குலாலனை
உண்டெனக் காட்ட, உணர்வுகொண் டுறுவாய்,

அதுபோல்

உலக இயக்கம் ஒருமுதல உண்மையை
நலனுற வுணர்த்தும நயம்நீ தெளிந்து
பலபல பிதற்றும் பழிநிலை யொழிநது
நெறிமுறை ஒழுகி நிலைபே றடைக."

எனவரும் இதனல் இறைநிலைமையை இனிது நினைவுறலாகும்.

உலகில் காணப்படும் பொருள்களெல்லாம் பிறத்தலும் இருத்தலும் அழிதலும் ஆகிய நிலைகளில் யாண்டும் நிலைத்து வருகின்றன. இந்நிலைகளுக்கெல்லாம் நிலையமான ஒரு மூலமுதல் காலநிலை கடந்து, வாலறிவமைந்து சால்புடன் நிலவி நிற்கவேண்டும் அன்றோ? அந்நிலைமையைப் பலவகையிலும் ஆராய்ந்துதலைமையறிவாளர்கள் பழமையாகவே பதிவு செய்துள்ளார்.

அப்பழமையின் கிழமை தழுவி உணர்வொளி திகழக் கம்பர் உளமலி யன்புடன் கடவுள் வாழ்த்துச் செய்திருக்கின்றார். அவர் செய்யுள்வடிவில் செய்துள்ளபடியை அடியில் காண்க.

## கடவுள் வாழ்த்து

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசர ணாங்களே. (1)

சிவன் திருமால் பிரமம் என ஒரு பெயரையும் குறியாது உலகநிலையை முன்னிட்டுக் கடவுள் நிலையைக் கம்பர் இவ்வாறு காட்டியிருக்கிறார். உலகில் காணப்படுகின்ற எல்லாப் பொருள்களும் புதிதாகத் தோன்றுதலும், சில காலம் இருத்தலும், பின்பு அறவே அழிதலும் ஆகிய இம்மூன்று நிலைகளிலேயே யாண்டும் என்றும் அமர்ந்து வருகின்றன. முறைப்பட்டு வருகின்ற இத்தொழில்கள் தாமாகவே தனித்து இயங்கமாட்டா ஆதலால் இவற்றை இயக்குதற்கு ஒரு முதல்வன் உண்டு என்று கண்டு அத்தலைமைப் பொருளின் நிலைமை தோன்ற வாழ்த்திய படியிது.

நிலைபெறுத்தல் = பாதுகாத்தல். ஆக்கல், நிலைபெறுத்தல், நீக்கல் என்பன படைத்தல் காத்தல் அழித்தல் எனவரும். இவற்றை வடமொழியாளர் சிருட்டி திதி சங்காரம் என்பர். இம்முத்தொழில்களும் ஒருதலைவனாலேயே செய்யப்படுகின்றன. ஆயினும் வினைநிலையில் வெவ்வேறு பெயர் பெறுகின்றான். படைக்கும் பான்மையில் பிரமன் எனவும், காக்கும்பொழுது திருமால் எனவும், அழிக்கும் அமைதியில் அரன் எனவும் வரன் முறையே பெயர்கள் வருகின்றன, இம்மூவரையும் மும்மூர்த்திகள் என்

பர். தொழில் அளவில் இவ்வாறு பிளவுபட்டிருப்பினும் இவர்க்கெல்லாம் மூலமுதல் ஒன்றே ஆகும்.

"மூன்று கவடாய் முளைத்தெழுந்த மூலமோ?"
(கவந்தப்படலம் 42)

என்று ஆதிமூல நிலையைச் சாலவும் வியந்து கவந்தன் ஆர்வம் கனிந்து குறித்துள்ளமையால் இக்கருத்து நன்கு தெளிவாம். மூன்றுகிளைகளையுடைய ஒரு கனிமரம் போலப் பரம்பொருள் மும்மூர்த்திகளாய்க் கிளைத்து மூலமுதலா யுள்ளது என்பதாம்.

உலகு உயிர்களின் தோற்ற ஒடுக்கங்கள் அளவில்லாதனவாய் யாண்டும் நிலையாய்த் தொடர்ந்துவருதலாலும், அவற்றை எளிதாகவும் வினோதமாகவும் இறைவன் இயக்கி நிற்றலாலும் "நீங்கலா, அலகிலா விளையாட்டு உடையார்" என்றார். அலகு = அளவு, எல்லை. விளையாட்டு என்றது யாதொன்றையும் வருந்திச் செய்யாமல் உல்லாசமான பொழுதுபோக்காக எல்லாவற்றையும் எளிது புரிந்துவரும் அவரது பேராற்றலும் பெருமிதமும் ஒருங்கு உணர நின்றது. "*வீயாத பெருமாயை விளையாட்டும் வேண்டுமோ?" என்று மீண்டும், விராதன் வாக்கில் வைத்து நூலின் உள்ளேயும் விளையாட்டை இவர் கையாண்டிருக்கிறார்.

இந்நில வுலகம் போல் அண்டங்கள் பலவுள்ளன ஆதலால் "உலகம் யாவையும்" என்றார். சகல சீவகோடிகளையும் அண்டகோடிகளையும் தமக்கு உடைமையாகக்கொண்டு என்றும் உரிமையுடன் அவற்றை இனிது பேணிவருபவர் எவரோ அவரே தலைவர்; அன்னவர்க்கே நாங்கள் அடைக்கலம் என்பதாம்.

கட்புலனாயுள்ள உலகுயிர்களோடு தொடர்புபடுத்திக் கடவுள் உண்மையைத் திட்பமுறவிளக்கிக் கம்பர் இதில் உணர்த்தியிருக்கும் நுட்பம் நுனித்து நோக்கத் தக்கது. வைய நிகழ்ச்சிகளைக்கொண்டு தெய்வநிச்சயம் செய்து அதனோடு தமக்குள்ள உரிமை நலங்களைக் காட்டி உயிர்கள் உய்ய உரைத்தபடியிது.

உலகம் ஆதிபகவனை முதலாக வுடையது என்ற வள்ளுவப் பெருந்தகை வாக்கும் இங்கு உள்ளத்தக்கது.

* ஆரணியகாண்டம், விராதன்வதைப்படலம், 54.

"என்று நீ, அன்று நான்" என்றபடி ஆதி தொடங்கியே உலகுயிர்கள் விலகாமல் தொழிற்பட்டு நிலையாய் வருதலால் அவ் வர வுண்மையையும், அதன் வரம்பின்மையையும் உணர்த்தி விளையாட்டு நிலையை அடை மொழிகள் தெளிவாக விளக்கிநின்றன. நீக்கல், நீங்கலா என்பதில் சொல் நயம் காண்க.

உலகுயிர்கட்கும் பரமனுக்கும் உள்ள நெருங்கிய பழந் தொடர்பும், நிலையுரிமையும் இதனால் ஒருங்கு உணரலாகும்.

உலக முதன்மையும், பரத்துவ நிலைமையும், உயிரின் உரிமையும் துலக்கி யாவும் உடையது என அத்தேவின் இயல்பை யாவரும் அறிய இப்பாவில் இவ்வாறு உரைத்தருளினர்.

" ஆக்கம் அளவிறுதி இல்லாய்! அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்!"

(திருவாசகம்)

என இறைவனைக் குறித்து மாணிக்கவாசகர் அருளியுள்ளதும் இங்கு அறியத்தக்கது. இல்லாய், தருவாய்! என்னும் இம்மணிவாசகத்தில் அமைந்துள்ளபொருளமைதியை நுணுகியுணர்ந்துகொள்க.

ஆக்கல் நீக்கல் என இதில் குறித்திருப்பதைப் பின்பற்றி வில்லியாழ்வாரும் கடவுள் வாழ்த்துச் சொல்லியிருக்கிறார்.

" ஆக்கு மாறயனாமுதல் ஆக்கிய உலகம
காக்கு மாறுசெங் கண்ணிறை கருணையங் கடலாம்
வீக்கு மாறரனாமவை வீந்தநாள் மீளப
பூக்கு மாமுதல எவன அவன் பொன்னடி போற்றி"

(வில்லிபாரதம)

என்னும் இது நம் கம்பர் வாக்கை நோக்கி வந்துள்ளமை நன்கு புலனும். ஒரு முதலே மூன்று கிளையாய் நீண்டு நிற்கின்ற தென்பதை நூல்களில் யாண்டும் ஆன்றோர் ஆண்டு வந்திருக்கின்றார்.

உலகம் என்று தொடங்கியது அது மங்கலச் சொல்லாதல் கருதி. ஒரு நூல் செய்யப் புகுந்த கவிஞன் முதலில் மங்கல மொழியை அமைத்துப் பாடவேண்டும் என்பது மரபு. இவ் வழக்கம் சங்க காலம் தொடங்கியே வழங்கி வருகின்றது. "உலகம் உவப்ப" எனத் திருமுருகாற்றுப்படையில் நக்கீரரும்,

"உலகம் திரியா ஓங்குயர் விழுச்சீர்" என்று மணிமேகலையில் சாத்தனாரும் முதலில் தொடங்கியிருக்கின்றார். "உலகை மூன்றும்" என்று வளையாபதியிலும் வந்துள்ளமை காண்க.

மங்கல மொழியை முதலில் அமைத்து இவ்வாறு பாடும் வழக்கம் கம்பர் காலத்திற்கு முன்பே யிருந்துள்ளமை இவற்றால் நன்கு புலனாம்.

இங்ஙனம் சோபனமுறையில் சொல்லமைந்திருப்பதை மங்கலப் பொருத்தம் என்பர். அச்சொற்கள் இன்னவை என்பன அடியில்வரும் வெண்பாவால் அறியலாகும்.

மங்கலப் பொருத்தம்

"சீரெழுத்துப் பொன்பூ திருமணிநீர் திங்கள் சொல
கார்பரிதி யானை கடலஉலகம—தேர்மலைமா
கங்கை நிலம்பிறவும் காண்டகைய முனமொழிக்கு
மங்களமாம் சொலலின வகை." (பாட்டியல, 3)

எனவரும் இதனால் மங்கலச் சொற்களின் தொகையும் வகையும் தெரியலாகும். இவ்வெல்லாவற்றினுள்ளும் உலகம் என்னும் சொல் தலைமையாகப் போற்றப்பட்டு வந்துள்ளது. இவ்வுண்மை பழைய நூல்களானும் இப் பெருங் காவியம் அதனைத் தலைக் கொண்டெழுந்துள்ளமையானும் இனிது புலனாம். "உலகெலாம்" என்று சேக்கிழார் தொடங்கி யுள்ளதையும் நினைந்து கொள்க.

எதையும் எதிர்பாராமல் யாதும் தடைப்படாமல் கார்மேகம் போல் கம்பர் கவிமழை சொரிந்திருப்பினும், தொன்மையான இலக்கண அமைதிகளைச் செம்மையாக எதிர்நோக்கியே அரிய தொரு பேரிலக்கியமாகத் தமது காவியத்தை ஓவியப் புலவன் போல் உயிரொளி திகழ அவர்

ஒரு பெரிய காவியம் இன்ன நலங்களுடன் இன்னவகையில் அமைந்திருக்கவேண்டும் என முன்னோர் முடிவு செய்திருக்கின்றார். சில இயல்புகள் குறைந்தால் அதனைச் சிறு காவியம் என்பர். உரியன யாவும் உறுதியுடன் ஒருங்கே அமைந்திருந்தால் அது பெருங்காவியமாம். அதன் இலக்கணம் அடியில் வரும் சூத்திரத்தில் அறியலாகும்.

பெருங்காப்பியம்

"பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றினொன்று
ஏற்புடைத் தாகி முன்வர வியன்று
நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்
தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்
மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து,
நன்மணம் புணர்தல், பொன்முடி கவித்தல்,
பூம்பொழில் நுகர்தல், புனல்விளை யாடல்,
தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்,
புலவியிற் புலத்தல், கலவியிற் களித்தல், என்று
இன்னன புனைந்த நன்னடைத் தாகி
மந்திரம் தூது செலவிகல் வென்றி
சந்தியிற் றொடர்ந்து சருக்கம் இலம்பகம்
பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றிய தென்ப."

(தண்டியலங்காரம்)

எனவரும் இதனால் காவிய அமைதி காணலாகும்.

இருசுடர்த் தோற்றம் என்றது சூரிய சந்திரர்களுடைய உதய அத்தமன வருணனைகளை. இதில் குறித்துள்ளன யாவும் ஒருங்கே அமைந்து மேலும் பல நலங்கள் மிகுந்து பெருங்காப்பிய நிலைக்கு ஓர் பேரிலக்கியமாகக் கம்பராமாயணம் விளைந்து வந்துள்ளமையை அதில் இடங்கள் தோறும் உணர்ந்துகொள்ளலாம்.

எத்துணை நலங்களும் அழகுகளும் அமைந்திருக்கவேண்டுமோ அத்தனையும் பெற்று உத்தம காவியமாய் ஒளிசெய்துள்ள தம் நூலுக்குக் கம்பர் அன்புடன் கடவுள் வணக்கம் செய்து பின்பு அவையடக்கம் கூறியிருக்கின்றார்.

அவையடக்கம் ஆவது பிறபுலவர்கள் குறைகண்டு குற்றம் கூறாமல் தன்பால் அன்புசெய்து அருள் புரியுமாறு நூல்செய்யும் புலவன் பணிவுடைமை தோன்ற அவர்க்கு இதமொழிகூறுதல். அவை என்பது அறிஞர்கள் கூடியிருக்கும் இடம் ஆதலால் அவர்முன் தன்னடக்கம் காட்டி நூலாசிரியன் அவரை நயமாக அடக்கி ...லால் இது அவையடக்கம் எனவந்தது.

"அவை யடக்கியலே அரில்தபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்று
எல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே."
(தொல்காப்பியம்)

என்று ஆசிரியர் தொல்காப்பியனார் அவையடக்கத்தின் இயலை விதித்துள்ளார். இதில் எல்லாக் கவிஞர்க்கும் என்னது மாந்தர்க்கு என்றது அவையிலும் அவனியிலும் உள்ள மாந்தரனைவரையும் ஒருங்கே ஓர்ந்து கொள்ள என்க.

வல்லா என்றது வல்லமை யில்லாதன என்றவாறு. கருதியதைத் தெளிவுறச் சொல்லமாட்டாமல் சொல்லினும் பொருளிலும் மெல்லியனாய்ப் புல்லியன கூறினும் அவற்றையும் அளிபுரிந்து கேட்டு மேலோர் அமைதிகொள்ளுமாறு நூலோன் வழிபாடு செய்து பணிமொழி கூறுவதே அவையடக்கமாம்என்பது "வல்லா கூறினும், வழிமொழிந்தன்றே" என்பதனால் அறிய நின்றது.

உலகில் பல்வேறிடங்களில் பரவியுள்ள அறிஞர்களும் கவிஞர்களும் ஓரிடத்தே ஒருங்கே குழுமி நேர்முகமாய் இருப்பதாக நினைந்துகொண்டு நூல் செய்யும் புலவோர் தம் நூல் முகப்பில் அவையடக்கம் சொல்வது மரபாய் வந்தது.

அம் முறையில் கம்பர் இங்கே அவையடக்கம் கூறியிருக்கின்றார். அவரது அடக்க நிலையின் அமைதியை அடியில் பார்க்க.

## அவையடக்கம்

ஓசை பெற்றுயர் பாற்கடல் உற்றொரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென
ஆசை பற்றி அறையலுற் றேனமற் றிக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ. (1)

என்று நூலோடு தமக்குள்ள வாசியை விளக்கி அறிஞர்களிடம் முதலில் நேசமுடன் இங்ஙனம் ஆசிதர வேண்டுகின்றார்.

பாற்கடல் இராம கதைக்கும், பூனை கம்பருக்கும் இதில் ஒப்பாய் வந்தன. அளவிடலரிய பெருமை இனிமை மகிமை புனிதம் முதலிய உயர் நலங்களெல்லாம் இயல்பாக அமைந்து எவர்க்கும் இன்ப நிலையமா யிருத்தலால் இராம சரிதத்தைப் பாற்கடல் என்று குறித்தார். இதனால் அவரது நூற்கடல் நிலைமை புலனும்.

இராமனது அறிவு சீலம் ஆண்மை வீரம் முதலிய குண கணங்களும், அவன் ஆற்றியுள்ள அரியபெரிய செயல் நலங்களும் எவராலும் அளவு காண முடியாதபடி அகன்று பரந்து தனித் தனியே சிறந்து உயர்வோங்கி யுள்ளமையால் இங்ஙனம் உவமை கூற நேர்ந்தார். இராமனுடைய மகிமைகளைப் பிரமாவும் அளந் தறிய முடியாது என்பதை, * "ஆய்ந்தேற உணர் ஐய. அயற் கேயும் அறிவரிய" என்று சனக மன்னனிடம் விசுவாமித்திரர் உரைத்துள்ளமையானும் உணரலாகும்.

இராமன் புகழை அன்று முதல் இன்று வரை எங்கும் எல்லாரும் ஆசையுடன் ஆரவாரமாய்ப் புகழ்ந்து போற்றி வரு கின்றார்கள் ஆதலால் ஓசை பெற்று என்றார்.

உயர் என்றது மேலும் மேலும் கிளர்ந்து வளர்தலை. சில ருடைய புகழ் அவர் உள்ளபொழுது தோன்றி, அவர் ஒழிய அதுவும் உடனொழியும். சிலருடையது சிறிது நின்று பின்பு உருவற அழியும். இன்னும் சிலருடையது ஒருவாறு நீண்டு நிற்பினும் எல்லாரும் உரிமையுடன் உவந்து காணாமையால் அருகி மறைந்து அயலே அயர்ந்துபடும்.

இராமன் புகழோ உலகம் எங்கணும் நாளும் நாளும் ஓங்கி வருகின்றது. எங்கேயோ ஆயிரம் மைல்களுக்கு அப்பால் வட நாட்டில் பிறந்திருந்த இராமனை இந்நாடு முழுவதும் உடனமர்ந்து மகிழ்வதாக உரிமை கொண்டாடுகின்றது. அவன் திருமேனி மறைந்துபோய்ப் பல்லாயிரம் ஆண்டுகள் ஆகின்றன; ஆகியும் எல்லாருள்ளங்களிலும் இன்றும் அவனது புகழுருவம் இடம் பெற்று இனிதமர்ந்துள்ளது. மறுபுலங்கள் எங்கணும் அவனது பெருமகிமை உரிமையோடு பேசப்படுகின்றது. குமரி முதல் இமயம் வரையுமுள்ள மக்கட் பரப்பினர் அவன் பெயரைத் தத்தம் மக்களுக்கு உழுவலன்புடன் உவந்திட்டு வழி வழியே காணியாட்சியாகப் பேணி வருகின்றார். அதனைப் புனித மந்திர மாக முனிவர்களும் புகல்கின்றார். அது, கருதியனவெல்லாம் கை தருவதாக மறு புலங்களும் உறுதி செய்து வருகின்றன.

* பாலகாண்டம், குலமுறை கிளத்து படலம் 28.

இராமநாம மகிமை

"நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே,
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே,
இம்மையே ராம என்றிரண் டெழுத்தினால்."

என்று அவன் பெயரினை இங்ஙனம் எழுத்தெண்ணி வழுத்தி உளவு காண அளவு செய்து உளமலி யன்புடன் அனைவரும் உவந்து போற்றுகின்றார். தாரகமந்திரம் எனப் பாரகம் எங்கும் அது பாராட்டப் பெறுகின்றது. ஆரியம் தமிழ் தெலுங்கு கன்னடம் ஹிந்தி முதலிய எல்லா மொழிகளிலும் இராம கதையை வரைந்து கொண்டு விழைந்து வியந்து கொண்டாடுகின்றார்.

"வடகலை தென்கலை வடுகு கன்னடம்
இடமுள பாடை யாதொன்றி னாயினும்
திடமுள ரகுகுலத் திராமன் தன்கதை
அடைவுடன் கேட்பவர் அமரர் ஆவரே."

என்று பலசுருதியும் கூறி ஒருசேர உலக முழுவதையும் இராம சரிதையை ஓதி யுயரச் செய்கின்றார்.

"கற்பார் இராமபிரானை யல்லால் மற்றும் கற்பரோ ?"

(திருவாய்மொழி 7-5)

எனப் பற்றற்ற பரம தத்துவ ஞானியான நம்மாழ்வாரே பெரும் பற்றுடன் இவ்வாறு இராம சீர்த்தியைப் பாடியுள்ளார் என்றால் அப்பெருமானின் திருநாம மகிமையை ஒரு வாயால் எவர் அளந்து சொல்ல வல்லார் ?

கற்ற பேரறிவிற்கு உற்ற பேரமிர்தமாய் இராம கதை ஒன்றே உரிமை எய்தியுள்ளது என்பது இதனால் உணர நின்றது.

"மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பி யொடும் கான்போந்து
சோவரணும் போர் மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே ?
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே ?"

(சிலப்பதிகாரம்)

என்று இளங்கோவடிகள் உளங்கனிந்து இராமனை இதில் உரைத்திருக்கும் உறுதியை ஊன்றிப் பார்க்க. கண்பெற்ற பயன் இராம கதையைக் கருதிப் படிப்பது; காதுபெற்ற பயன் அவன் புகழை விழைந்து கேட்பது; என்பன மேற்குறித்த இருவர் கருத்தாலும் அறிய வந்தன. கல்வி கேள்விகளுக்கு இனிய அனுபவப் பொருளாய் இராமன் தனியமைந்துள்ளான் என அனைவரும் இவ்வாறே ஒரு முகமாய் உவந்து கூறியிருக்கின்றார்.

"கேள்வியால் சேவிகள் முற்றும், தோட்டவர் உணர்வின் உண்ணும் அமுதத்தின் சுவையாய் நின்றான்." (ஆரணிய, சவரி 7) எனக் கம்பர் அன்பு கனிந்து இராமரைக் குறித்திருக்கும் இவ் இன்ப வாசகத்தின் நுண்பொருளை ஈண்டு நுனித்து நோக்க வேண்டும். தோட்டல் = துளைத்தல்.

இவ் வெல்லாவற்றாலும் இராம கீர்த்தனத்தின் உயர்நிலையும், உறுதி நலனும் இனிது புலனும்.

புற வுலகில் ஓர் இடத்தில் அமர்ந்து அருகே சென்று கேட்பவர்க்கு மட்டும் சிற்றொலி காட்டிக் கடல் ஒரு படியாய் ஒடுங்கிக் கிடக்கும். இராமசரிதம் வானும் வையமும் பரந்து, மானமும் வீரமும் சுரந்து, ஞானநலங்கள் நிறைந்து, அரும்புகழ் அலைகளைப் பெருந்திரளாக வீசி, என்றும் ஓயாது முழங்கி, எங்கும் பேராரவாரமாய்ப் பெருகி நிமிர்ந்து நாளும் கிளர்ந்து வளர்ந்து வருகின்றமையால் "ஓசைபெற்று உயர் பாற்கடல்" என அது ஓத நின்றது.

இத்தகைய அரிய பெரிய கடலை ஒரு எளிய சிறிய பூனை முழுவதும் நக்கிவிட வேண்டும் என்று புக்கதுபோல நான் இராம கதையைப் பாடப்புகுந்தேன் என்று காரியத்தின் வீரியநிலையைப் பணிவுடன் இங்ஙனம் கம்பர் புலப்படுத்தி யிருக்கின்றார்.

ஒரு ஈன்றதில் தனிமையோடு புதுமையும் தோன்றும். யாரும் செய்ய முடியாத அரியதொன்றைத் தனியே துணிவுடன் செய்யப்புகுந்த ஓர் அதிசயப் பிராணி என அதனை இகழ்வோடு துதி செய்த படியிது. சிரிப்புக் குரியதென்பது குறிப்பு.

## பூனை நிலை.

சிங்கம் யானை புலி முதலிய விலங்கினங்கள் எவற்றினும் பூனைக்குத்தான் பாலில் அதிகப் பிரியம்; அது போல் அரசர் முனிவர் முதலிய மனிதர் எவரினும் இராம கதையில் கம்பருக்கு மிகவும் ஆசை என்பதை ஓசை படாமல் அதி விநயமாக உள்ளுற இதில் வைத்திருக்கும் நயத்தை உய்த்துணர்ந்து கொள்க. பூனை பாலைக் கண்டவுடனே வேறொன்றையும் காணு மல் விரைந்து புகுந்து கண்ணை மூடிக்கொண்டு விலா வெடிப் பதும் தெரியாமல் முழுதும் குடித்துவிட்டுச் சட்டியில் ஒரு துளியும் ஒட்டியிருக்க வொட்டாமல் முற்றவும் நக்கி விடும் ஆத லால் அதன் இயல்பும் செயலும் தெரிய நக்க என்றார். நக்குபு= நக்க. செய என்னும் எச்சம் செய்பு என்னும் வாய்பாட்டில் வந்தது. நக்கமுன், நக்குற, நக்கிட என ஏதாவது ஒன்று கூறினும் பாட்டு நன்கு இசைந்து விடும். அங்ஙனம் யாதும் கூருது நக்குபு என்றது என்னை ? எனின், செய்பு என்னும் அவ் வினை யெச்சம் இறந்தகாலம் குறித்துவரும் ஆதலால் விரைந்து தொழில் செய்ய நின்ற அதன் நிலைமையை அவ்வாய்பாட்டால் இவ்வண்ணம் செவ்வி தெரிய உணர்த்தினார் என்க.

நக்கி மகிழ நயந்து புகுந்த தென்பதாம். இவர் வாய் வைத்த பின்னர் இராம சரிதையில் வேறு எவரும் வாய் வைக்க இடமில்லை என்பதும் திடமாக இதனுடனுணர நின்றது.

பூனை என இந்நாளில் வழங்கி வருவதுபோல் பண்டைக் காலத்தில் இப்பேர் வழக்கத்தில் இல்லை என்று தெரிகின்றது. யாண்டும் பூசை என்றே பயின்று வந்துள்ளது. விலங்கினங் களுக்குப் பெயர் குறித்துள்ள பழைய பிங்கலந்தை நிகண்டினும் பூனைப்பேர் காணும்.

" வெருகு மண்டலி இறபுலி விலாளம்
பவனம் ஓதி மார்ச்சாலம பாக்கன்
பூசை அலவன் விடருகம பூஞை." (பிங்கலந்தை)

என வந்துள்ள இப் பன்னிரண்டு பெயரினும் பூனை மொழி இல்லை. ஆகவே பிற்காலத்தே தான் பூனை என்னும் சொல் வழங்க நேர்ந்ததென்பது புலனும். பூஞை என்னும் சொல் பெருவழக்காயிருந்துள்ளமை இச் சூத்திரத்தால் அறிய நின்றது.

இங்கே பூசை என்று கம்பர் குறித்தது ஆண் பூனையை.

"குரங்கின் ஏற்றினைக் கடுவன் என்றலும்,
மரம்பயில் கூகையைக் கோட்டான் என்றலும்,
செவ்வாய்க் கிளியைத் தத்தை என்றலும்,
வெவ்வாய் வெருகினைப் பூசை என்றலும்"

(தொல்காப்பியம், மரபியல்)

எனவரும் தொல்காப்பியச் சூத்திரத்தால் பூசை நிலைமை புலனும். அரியது செய்ய நேர்ந்த ஆண்மை தோன்றப் பூசை இங்கு மேன்மையோடு மேவி வர நேர்ந்தது. கம்பர் இங்கே பூசை என்று உவமை நிலையில் அடக்கமாக உரைத்துநின்றது பின்பு அவர்க்கே பெருமையாக அது குறிக்க வந்தது.

பூனை இல்லாத இடத்தே கிளிகள் ஆரவாரமாய்ப் பேசும்; அதுவரின் அவையாவும் வாயடங்கிவிடும். அதுபோல் கம்பரைக் காணுத பொழுது தான் மற்றவர்கள் பாவலர், நாவலர், பண்டிதர் எனப் பெருமை பாராட்டிக் கண்டபடி கரைந்து நிமிர்வர்; அவரைக் காணின் யாவரும் நாணி வாயடங்கி ஒடுங்கி நிற்பரென அக்காலத்தில் இவரைப்பற்றித் தக்கார் பேச லாயினர்.

"காணுமல வேணதெலலாம் கத்தலாம்; கற்றோர்முன்
கோணுமல வாய்திறக்க கூடாதே—நாணுமல
பேச்சுபபேச் சென்றும பெரும்பூனை வந்தககால
கீச்சுக் கீச் சென்றும் கிளி."

என்னும் ஔவை வாக்காலும் மேற்குறித்த உண்மை அறிய லாகும். தமக்கு இராம கதைமேல் உள்ள ஆவல் பாலோடு பூனைக்கு உள்ள படி என்று படியெடுத்துக் காட்டித் தம் உள்ள நிலையை உள்ளபடி யுணர்த்தி உரை நயங்களை இவ்வாறு கம்பர் விநயமாக உய்த்துணர வைத்திருக்கின்றார்.

அன்பு என்னுது ஆசை பற்றி என்றது முன்பு குறித்த பேராசை நிலையைப் பாருல கெல்லாம் நேரே தெரிய என்க.

இராம கதையின் பெருமை எங்கே! எனது மதி சிறுமை எங்கே! என்று சீர்தூக்கி ஒரு சிறிதும் கவனியாமல் வெகு துரிதமாய்ப் புகுந்ததற்குக் காரணம் பேராசையே யாம்;

ஆகவே "ஆசை வெட்கம் அறியாது" என்றபடி பக்கம் ஒன்றும் பாராமல் படு துணிவோடு பாடப் புக்கேன் என்பதாம். யாதும் யோசனையின்றி ஆசை வயத்தனாய்ச் செய்த இதில் மதிமான்கள் மாசுகாணலாகாதென்று நேசமொழி கூறிக் கம்பர் இங்ஙனம் அவையடக்கம் செய்தார் என்க.

ஆசை மீறி என்னுது பற்றி என்றது தனக்குப் பெரும் பற்றுக் கோடாய்க் காரியசித்திக்குக் கைந்தந்து நின்ற அதன் உறவுறுதியை உரிமையுடன் உள்ளூற உணர்ந்து என்க.

கொற்றத்து இராமன் என்றது அவனது வீரமேன்மையை யும் வெற்றி நிலையையும் வியந்து. காசு இல் என்றது அவ் வீர மூர்த்தியின் மாசற்ற மாட்சியை நினைந்து. காசு=குற்றம். சில ருடைய வெற்றி மாசுடையதாயிருக்கும்; இவனுடையது எவ் வகையிலும் எங்கும் குற்றமற்றுள்ள தென்பதாம்.

வஞ்சம் புரிந்து வன்பகை வெல்லாமல் யாண்டு நேர்மை யுடனின்று இவ் ஆண்டகை அமராடியுள்ளார்; தனக்குக் கொடிய பகைவனயிருந்தும் முதல் நாள் போரில் இராவணன் சேனை முழுவதையும் இழந்து தியங்கி நின்றபொழுது *"ஆளையா, இன்று போய் நாளை வா!" என்று இரங்கி விட்ட அப் பெருந் தன்மையைப் பாரெங்கும் எவரும் இன்றும் வியந்து போற்றி வருகின்றுர். போராண்மையுடைய இராமனது அவ் வூராண் மையை உள்ளி உணருங்கால் எவர் உள்ளந்தான் உருகி உவ கையுறுதிருக்கும்? உத்தமமான சுத்த வீரர்கள் எல்லாரும் வீர தேவதை என்று பேரன்புடன் விழைந்து நாளும் மகிழ்ந்து போற்ற அவ்வீரமூர்த்தி யாண்டும் விளங்கி நிற்கின்றுர் ஆதலால் "காசில் கொற்றத்து இராமன்" என்றுர்.

அறிவு திரு அழகு முதலிய நலங்களுள் வேறென்றையும் குறித்துக்கூருமல் இராமனை வீரத்தால் விசேடித்தது என்னை? எனின், அவ் வீரமே கம்பர் பாரகாவியம் பாட மூலகாரண மாயுள்ளமையைச் சாலவும் நினைந்தென்க. என்னே மூலம்? எனின், பின்னே காண்க.

* உயுத்தகாண்டம், முதற்போர்ப் படலம் 256.

சத்திய சீலனாய்த் தருமகுண சரிதனாய் அருள்நலம் கனிந்திருந்தாலும் போரில் யாரும் நேரில்லா உயர்குல வீரனாய் இராமன் ஒளிபெற் றுள்ளான். அப்பேறே வீரராமன், விசயராகவன், கோதண்டபாணி, கொற்றகுரிசில், வெற்றிவேந்தன் என இன்னவகை வீரப்பேருடன் அத்திரனை நேரே விளக்கி நிற்கின்றது. அவ்வீர நிலைமையினையே தலைமையாக இந் நூல் வியந்து பாராட்டியுள்ளது. அவ் வுண்மையை உள்ளூற எங்கும் உணரலாகும். அவ் வீரமே இப் பார காவியத்திற்கு ஆருயிராகும்.

கொடை சீலம் நியாயம் முதலிய குணகணங்கள் பலவற்றுள்ளும் வீரமே இராமனை விண்ணும் மண்ணும் தெரியக், கண்ணும் கருத்துமாய், எண்ணிலும் எழுத்திலும் விளக்கி யுள்ளது.

ஏதிலன் கவர்ந்துபோன சீதையைச் சிறை மீட்டி இராமனது குலமானத்தையும் குடிப்பிறப்பையும் அவதாரத்தையும் நவமாகப் பாதுகாத்தருளியது அவனது வில் வீரம் ஒன்றேயாம். என்னை ? சிறைப்பட்டிருந்த சீதையை அவன் குலம் புகுந்து மீட்டிவரவில்லை; அழகு வந்து அழைத்துப் போகவில்லை ; குணம் போய்க் கொண்டு வரவில்லை; செல்வம் சென்று மீட்கவில்லை; கல்வி போய்க் கவரவில்லை; கொடைமுகந்து கொணரவில்லை; அன்பு அடக்கம் அருள் அமைதி முறை நிறை வாய்மை தூய்மை முதலிய வேறு எதுவும் அந்த மீட்சியைச் செய்யவில்லை ; வீரமே அதைச் செய்து மேன்மை மிகத் தந்தது என்க.

அந்த அரிய போர் வீரம் இராமனிடம் இல்லையாயின் இராவணனை வெல்ல முடியாது; அது முடியாவழிச் சீதை மீளாள்; அவள் மீளாளாயின், மனைவியை யிழந்து மறுகி யழிந்தான் எனப் பழி பல பட்டு இராமன் இளிவுற நேரும்; அவ்வாறு யாதும் இழிவுறாவகை பாதுகாத்துத் தீது தீர்த்து ஊழியும் தேயாத உயர் புகழாளனாக இராமனை ஒளிசெய்து வைத்தது வீரமேயாம். ஆகவே அதுவே தம் பாரகாவியத்திற்குப் பேராதரவாயுள்ளமையான் அதனை நன்றியறிவுடன் நயந்து கொண்டு காசில் கொற்றம் என்று முந்துற வீரவணக்கம் புரிந்து, காசினி இன்புற இங்ஙனம் கம்பர் காவியம் செய்தருளினர் என்க.

அரியதைச் சிறியேன் ஆசையால் செய்கின்றேன் பெரியோர் பொறுத்தருளவேண்டும் என்றதனால் இது அவையடக்கம் ஆயது. இத்துடன் அமையாமல் மேலும் சில சொல்லுகின்றார்.

நொய்தின் நொய்ய சொல் நூறகலுறறேன எனை
வைத வைவின் மராமரம ஏழ்துளை
எய்த எய்தவற்கு எய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொலநினற தேயத்தே. (2)

வையம் என்னை இகழவும் மாசெனக்கு
எய்தவும் இதியமபுவ தியா தெனின்
பொயயில் கேள்விப புலமையி னோரபுகல
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே. (3)

துறை யடுத்த விருத்தத் தொகைக் கவிககு
உறை யடுத்த செவிகளுககு ஓதில, யாழ
நறை யடுத்த அசுணநன மாச்செவிப
பறை யடித்தது போலும் என்பாவரோ ! (4)

முத்தமிழ்த் துறை யின்முறை போகிய
உத்த மககவி கட்கொன றுணர்த்துவன்
பிததர் சொன்னவும, பேதையர் சொன்னவும,
பத்தர் சொன்னவும், பனனப் பெறுபவோ ? (5)

அறையும ஆடரஙகும மடப பிள்ளைகள்
தறையில கீறிடில் தச்சரும் காய்வரோ ?
இறையும ஞானம் இலாத என் புனகவி
முறையின் நூலுணர்ந் தாரும முனிவரோ ? (6)

இந்த ஆறுபாடல்களையும் அவையடக்கமாகக் கூறியிருக்கின்றார். இக்கவிகளைக் கவனமாக மனனஞ்செய்துகொண்டு கம்பருடைய மனநிலைகளை நினைவுற வேண்டும். ஒரே பாணத்தால் ஏழு மராமரங்களும் ஒருங்கே துளை எய்தும்படி எய்த மகா வீரனான இராமனுக்கு உரிய கதையை அரியமாதவரான வான்மீகி முனிவர் முன்னரே பாடியிருக்கிறார்; இருந்தும் நானும் பாடப்புகுந்தேன்; இது என்னையே நான்வைதுகொண்டது போலாம். ஏன் என்றால், எனது பாடலின் சிறுமையைப் பார்த்துவிட்டு "அரிய முனிவரர் தாம் அருமையாகப் பாடியிருக்கிறாரே! இந்தக் கம்பன் ஏன் வம்பாக இடையேவந்து இப்படி உளறியிருக்கிறான்?" என்று உலகம் என்னை வையத்தான் செய்யும் என்று முன்னுறக் குறித்தார்.

அவ்வாறு உலகம் வையும் என்று உமக்கு நன்றாகத் தெரிந்திருந்தும், நீர் ஏன் நாவடங்கி நில்லாமல் இது செய்யப்புகுந்தீர்! இது உமக்கு மாசு அல்லவா? என்று எதிரே நின்று சிலர் கேட்க அதற்கு விடைகூறுவதுபோல் அடுத்த கவியைச் செய்திருக்கிறார்.

விலைவரம்பில்லாத ஆணிமுத்துக்களின் எதிரே புலையான நீர் முத்துக்களை நேர்வைத்தால் தலைமையான அவற்றின் இனிய நிலைமைதனியே மிகவும் துலங்கித் தோன்றுதல்போல் எனது புல்லிய கவிகளால் நல்லோருடைய கவிகளின் பெருமை எல்லோருடைய கண்களுக்கும் நன்கு புலனாம் ஆதலால் அவற்றைப்புலப்படுத்தி உலகத்தை நலப்படுத்தவே எனக்குவரும் பழியிழிவுகளையும் பொருட்படுத்தாமல் இதில் தலைப்பட்டேன் என்பதாம்.

பிறர்மாட்சி தெளிவாகத் தெரியவே காட்சிக் கழிப்புக்குக் கால் வைத்தது போல் நான் நூல்வைத்தேன் என இவர் மேல் வைத்துள்ள நுட்பம் நுனித்து நோக்குக.

தான் இழிதுயர் உறினும் பிறர் உயர் இன்பம் அடைய வேண்டும் என்னும் உயர்ந்த குறிக்கோள் இப்பெருந்தகையிடம் உறைந்துள்ளமை இதனால் உணர்ந்து கொள்ளலாம்.

தம் கவியால் பிறர்கவிகளின் மாட்சி தெளிவாக வெளியாம் என்று இவர் அளியோடு அடக்கமாக உரைத்திருப்பினும் எவர்க்கும் ஒளியான ஓர் உண்மை இதில் ஒளியாது அடங்கியுள்ளமை யுணரலாகும். இவரது அரங்க மொழி உரங்கிளர் கின்றது.

அடுத்த நான்காவது பாடலில் எனது கவி நல்லோர் செவிக்கு இன்பம் பயவாதே என்று இரங்குகின்றார்.

இதுவரை அருமைக்கவிகளைக் கேட்டுமகிழ்ந்துள்ள அறிஞர் செவிகளில் என் சிறுமைப்பாடல்கள் படின் மிகவும் அவமாயிருக்குமே என்று ஓர் உவமையோடு உரைக்கின்றார்.

ிய யாழ் இசையைக் கேட்டுமகிழ்ந்த அசுணமா கொடிய ிையைக் கேட்டவுடன் எப்படி உயிர்துடித்தயருமோ அப்படியிருக்கும் ரசிகர்களுக்கு என்பாட்டு என இப்படிக்கூறியிருக்கின்றார்! தமது கவிகளைச்சுவைத்து மகிழ்கின்ற நுண்மாண் நுழைபுலமுடைய மதிமான்கள் இக்கவியைக்கண்டு எதிர்மறையாகப்

பொருள் கொண்டு நகைத்து வருவரே என்பதைக் கம்பர் அவர் காலத்திலேயே கண்டிருப்பார் ஆயினும் காணாதன காணும்படி அவையடக்கமாக இவ்வாறு காட்டியிருக்கின்றார்.

அசுணமா என்பது ஓர் அற்புதப் பிராணி. இக்காலத்தில் அதனை யாண்டும் காண்டல் அரிது. பண்டைக்காலத்தில் இந்நாட்டில் இருந்துள்ளது. புகைபோன்ற உருவநலம் வாய்ந்தது. சிறிது செம்மை கலந்த வெண்மை நிறமுடையது. அது விலங்கினத்தைச் சார்ந்ததா? பறவையினத்தைச் சேர்ந்ததா? என்பது இன்னும் தெளிவாகத் தெரியவில்லை. பிங்கலமுனிவர்மட்டும் அதனைப் பறவை என்று குறித்திருக்கின்றார்.

"அசுணமா இசையறி பறவை கேகயப்புள்" (பிங்கலந்தை)

கேகயப்புள் என்று அதற்கு ஒரு பெயருண்டு என்பது இதனால் தெரிய வருகின்றது. விலங்கு போலக் குட்டி ஈனும் இயல்பும், பறவைபோல் தாவிப் பறக்கும் தன்மையும் அதற்குஉண்டுஎன்பர். சிறிய கலைமானளவு பருமனுடையது. அறிவறிந்த மக்கட்பிறவியினும் மிக்க ஓர் சிறப்பு அவ்விலங்குப்பிறவியின்கண் இயல்பாக அமைந்துள்ளது. இசையினை உணர்வதில் அது மிகவும் தலை சிறந்தது. கீதைச் சுவை எவரையும் எவற்றையும் எளிதாக வசப்படுத்து மாயினும் இதனை மிகவும் பரவசப் படுத்தி யுள்ளது.

இத்தகைய இசையுணர் விலங்கு வேறு எந்த நாட்டிலும் இருக்கிறதாகவோ, அல்லது இருந்ததாகவோ,மறு புல நூல்களில் இது வரையும் தெரியக் காணோம். இந்த நாட்டில் மட்டும் முந்தையில் இருந்துள்ள இதனிடம் இசையுணர் விந்தை தனியே இசைந்திருந்தமையால் இது இசையறிமா என வந்தது குறிஞ்சி நிலத்துக்கு உரியதாய் மலைகளில் மட்டும் இது வதிந்திருக்கும். "குன்றுறை யசுணம்" எனத் தொல்காப்பியத்தில் வந்துள்ளமை அறிக. மெல்லிய இனிய ஓசையைக் கேட்டு உள்ளம் உருகும் இயல்பினையுடைய இது வல்லோசையைக் கேட்கப்பொறாது. இடியொலி முரசொலி முதலியன தனியே நிகழின் செவி கொடாது தலைகவிழ்ந்து இது வெறுத்திருக்கும். இனிய இசையைக் கேட்[...]ம் சமையம் ஏககாலத்தில் வல்லோசை வந்து[...]ன் உடனே மாண்டுபோம். என்னே வியப்பு! எவ்வளவோ

என ஓசைகளையும் இழி மொழிகளையும் கேட்டு மானமின்றி மனிதர் பலர் தலை நிமிர்ந்து திரிகின்றாரே! இதன் நிலையினை அறியும் பொழுது அவர் நிலை வந்து நெஞ்சை வருத்துகின்றது. சுவை நலம் கனிந்த இது, சுவைகெட்ட மனிதனைவிட எவ்வளவு உயர்ந்துள்ளது! வண்டுகள் முரலினும் செவிகுளிர்ந்து இது கண்டு மகிழும். பண்டை நூல்கள் பலவும் இதன் இயல்பினைப் பரிந்து கூறி யுள்ளன. சில இங்கே தெரிந்து கொள்வோம்.

"இன்னளிக்குரல கேட்ட அசுணமா" (சீவகசிந்தாமணி)

"இசைகொள் சீறியாள் இன்னிசை கேட்ட
அசுண நன்மா அந்நிலைக் கண்ணே
பறையொலி கேட்டுத்தன் படிமறந் ததுபோல"
(பெருங்கதை)

"இசைகேட்ட அசுணமாத் தாழச்சிபோல்"
(மேருமந்தர புராணம்)

"மாதர் வண்டின் நயமவரும் தீங்குரல
மணநாறு சிலமபின் அசுணம் ஓர்க்கும."
(நற்றிணை)

"யாழசெத், திருங்கல் விடரளை அசுணம் ஓர்க்கும" (அகம்)

"குலவுகாற் கோவலர் கொனறைத் தீங்குழல
உலவுநீள் அசுணமா உறங்கும என்பவே" (சூளாமணி)

"திவவியாழ அரமகளிா தடவநத ஒலி
கேளாச் செமமாந்துள்ள
நவையினமணிக குடுமிதொறும் அசுணமுறை
புடபகமாம ஈனிவான்குன்றும" (இலிங்க புராணம)

"முரசொலி கேட்ட அசுணமென்புள்ளின்
மூச்சவிந் தொருவழி தேறி." (கூர்மபுராணம்)

"ஏறறதோர் இசையினாலே இறக்குமால் அசுணம்."
(பாகவதம்)

"ஏழிசைக்குளம உருகிமெய் புளகெழ
இறைகொளும அசுணங்கள்
தாழுறசுடர் சுடச்சுட வெடிதமெழு
சடுல ஓசையின் மாய்ந்த." (வில்லிபாரதம்)

" பேரிகை முழக்கிய பிறங்கும் ஓசையால
ஆரிட ருழந்துவீழ அசுண மாவென" (விநாயகபுராணம்)

" வசைபடு மன்னவன் வாய்மை யாலறை
விசிமுழ வொலி செவி வெதும்பக கேட்டலும்
இசைபடு மன்னவற் கிரங்கி னுரெலாம்
அசுணமேன்புள்ளென அலமந்தேங்கினர்." (நைடதம்)

" குழலிசைகேட் டருகணையும் அசுணம் என "
(காஞ்சிப்புராணம)

" மறையிறறன் யாழ்கேட்ட மானை அருளாது
அறைகொன்று மறறதன் ஆருயிர் எஞ்சப்
பறையறைந் தாங்கொருவன் நீத்தான " (கலிததொகை)

" பறைபட வாழா அசுணமா " (நான்மணிககடிகை)

அசுணமாவின் இயல்பினைக் குறித்துவந்துள்ள இவற்றால் அதன் நிலைமையும் நீர்மையும் நேரே தெரியலாகும். மேலே வந்துள்ள கவிகளை இனம் கண்டு இடங்கள் தோறும் தொடர்ந்து பொருளறிந்து கொள்க. அவை யாவும் அசுணத்தின் சுவை யுணர்வினை ஒருமுகமாயுணர்த்தியுள்ளமையால் அதன் உயிரியல்பு உணர நின்றது. கம்பர் பாயிரத்தில் கூறியதோடு நூலினுள்ளும் அசுணத்தைப்பற்றி மேலும் சில கூறியிருக்கிறார். அடியில் வருவன காண்க.

" நினைந்த போதினும் அமிர்தொக்கும் நேரிழை! நிறைதேன்
வனைந்த வேங்கையில கோங்கினில வயின்றொறும தொடுததுக
குனிந்த ஊசலில கொடிச்சியா ரடுத்தவின குறிஞ்சிக
கனிந்த பாடலகேட்டு அசுணமா வருவன காணாய்!"
(சித்திரகூடம 24)

இராமர் சித்திரகூட மலை வளத்தைக் காட்டி வரும்பொழுது கூறியது. நேரிழை! என்று வாய் குளிர நேரே அழைத்து அங்குள்ள நிகழ்ச்சிகளைத் தமது அருமை மனைவிக்கு இவர் உரிமையுடன் விளக்கியிருக்கும் இக்காட்சியை இக்காலத்தில் குற்றாலம் கொடைக்கானல் நீலகிரிகளில் கோடைக்கு ஒதுங்கிக் குளிர் நுகர்ந்துவரும் காதலர் காதலிகளிடம் ஆதரவோடு போதனை கனிந்து ஏதாவது காணமுடியுமா? காணாத இன்ப நலங்களையெல்லாம் அன்பு நலங்கனியக் கம்பன் கலை நிலை மகிழ்கின்றோம்.

அமிர்தம் உண்ண இனிக்கும், சீதை எண்ண இனிக்கின்றாள் என்னும் அவ் அநுபவம் " நினைந்த போதினும் அமிர்தொக்கும்" என்று அவர் வாக்கில் கனிந்து வந்தது. உண்டவுடன், கண்டவுடன் இன்பம் தருவதினும், உண்ணாமல் காணாமல் எண்ணிய அளவிலேயே இன்பம் தரும் பொருள் பெரிதும் சிறந்தது ஆதலால் உம்மை அச்சிறப்புணர்த்தி நின்றது.

வேங்கை கோங்கு என்னும் ஓங்கிய மரங்களில் தூங்கிய ஊஞ்சல்களில் பாங்கியர் புடைசூழக் குறக்குல மடந்தையர் சிறப்புற அமர்ந்து ஆடுவர்; அங்ஙனம் ஆடுங்கால் அவர் குறிஞ்சி என்னும் பண்ணில் தாம் விரும்பிய பாடல்களைப் பாடுவர்; இனிமையான அக்குறிஞ்சிப் பாடலின் கீதச் சுவையில் ஈடுபட்டு விரைந்தெழுந்து அசுணமாக்கள் விழைந்துவரும்; அவ்வாறு வருவதை வனவாசியாய் வந்துள்ள இராமர் சித்திரகூட மலையில் விசித்திரமாகக் கண்டு சித்தம் மகிழ்ந்து தமது உத்தம பத்தினியிடம் இவ்வாறு உரிமையுடன் உரைத்தார் என இக் கவி உணர்த்தியிருக்கும் அருமையை ஆய்ந்து பார்க்க.

" வாம மேகலை வானர மங்கையர்
காமப் பூசற் களியிசைக் கள்ளினால
தூம மேனி அசுணம் துயிலவுறும்
ஏமகூடம எனுமலை எயதுவீர்." (கிட்கிந்,நாட, 14)

அசுணமா புகைபோன்ற மேனியுடையது; ஏமகூட மலை மிகவும் இருப்பது; அங்கே அரம்பையர்கள் தம் காதலர்களோடு களித்தமர்வர்; காதல் நலம் கனிந்த அவரது இனிய பாடல்களால் அசுணம் மகிழ்நது அயர்ந்து உறங்கும் என்பன இதனால் ...ிய நின்றன. இசைக்கள் என்றது களிப்பூட்டல் கருதி

வசிப்பது; இசையில் காதல் மிக வுடையது என்றதனால் அசுணத்தின் இருப்பும் விருப்பும் இனிது புலனும். இசை நுகர்வின் இதன் இயல்பையும், வல்லொலி பொறா நிலையையும் கொலை வேடர் தெரிந்து கின்னரம் என்னும் கருவிகொண்டு மறைவில் நின்று இன்னிசை காட்டி இதனைவஞ்சித்துக் கவர்ந்து இசை நுகர்ந்து பரவசமாயிருக்கும் சமயம் பார்த்துப் படபட என்று பறையினை அடிப்பர்; உடனே இது பதைத்து விழும்; விழவே அப்பழியர் விரைந்து பாய்ந்து கொன்று கொண்டு போய்த் தின்று

தீர்ப்பர். பாவம்! தம் ஊனைப்பெருக்குதற்குப் பிறிதின் ஊனை உண்பவர்களிடம் அருள் நலங்கள் எங்ஙனம் உண்டாகும்? தனது இனிய சுபாவமே கொடிய மரணத்திற்கு இதனிடம் முடிவாய் நின்றது. மயிர் நீப்பின் வாழாக் கவரிமாவும், பறைபடவாழா அசுணமாவும் ஒரு நிலையில் இங்கே உணர நின்றன.

இசையுணர்வுடைமையால் அசுணம் கலையுணர்வுடையரோடு உடன் எண்ண வந்தது. நன்மா என்றது சுவை நுகர்வின் அதன் உயர் நலம் கருதி.

யாழ் இசை இன் கவிக்கும், பறையொலி வன்கவிக்கும் ஒப்பாம். பலநாளும் பழுதறப் பயின்று கவனமான செயல் நிலையில் முன்னது கனிந்து விளையும்; பின்னது கருத்தொன்றுமின்றிக் கண்மூடித்தனமாக் கையடிப்பதால் கடுத்து எழும் ஆதலால் அருமை எளிமைகளுக்கும், இனிமை கொடுமைகளுக்கும் யாழும் பறையும் முறையே உரிமை ஆயின.

யாழிசை அனைய அரிய இனிய கவிகளைக் கேட்டு மகிழ்ந்துள்ள அறிஞர் செவிகளுக்குப் பறை ஓசை போன்ற எனது எளிய வலிய புன்கவிகள் இன்னாதன வாகவே யிருக்கும் ஆயினும் என்னை மன்னித்தருளவேண்டும் என்பதாம்.

அவ்வாறு ஏன் உம்மை மன்னிக்க வேண்டும்? எங்கள் செவிகளுக்குத் துன்பமாய் நாங்கள் உயிர்துடித்து அயரும்படி நீர் ஏன் கவிகளைப் பாடுகின்றீர்? பேசாது வாயடங்கி இரும்; இல்லாவிடில் உம்மை எளிதாக வெளியே வாய் திறக்க விடோம் என்று அவர் எதிர் வாதாட அதற்கு மாறுகூறுவதுபோல் இவர் மேலும் ஒன்று கூறலானார்.

பித்தர் பத்தர் பேதையர் என்னும் இவர்களுடைய சொற்களை அறிவுடையவரெவரேனும் ஒரு பொருளாக மதிப்பரோ? அவ்வாறே எனது பாடல்களையும் உயர் கவிஞர்கள் எண்ணி நோக்காமல் பராமுகமாய் இகழ்ந்து விடவேண்டும் என்கின்றார்.

"முத்தமிழ்த் துறையின் முறைபோகிய, உத்தமக்கவிகள்" என உள்ளன்புடன் வாய்குளிர இவர் அழைத்திருக்கும் அழகும் அருமையும் உணருந்தோறும் உளமகிழ்வு செய்கின்றன.

இயல் இசை நாடகம் என்னும் சிறந்து, கல்வித் துறைகள் பலவற்றிலும் கைதேர்ந்த புலமை யுடையார் என அவரது தலைமை நிலை தெரியக் குறித்தார்.

துறை போகிய என்றது எதிலும் யாதொரு வழுவுமின்றி முழுவதும் தெளிவாக அறிந்துள்ள நிபுணர்கள் என்றவாறு. கல்வியின் எல்லை எவ்வளவுண்டோ அவ்வளவும் சென்று கண்ட தெளிவுடையார் என்பது போகிய என்றதனால் அறிய நின்றது.

"சிலைகளும் பிறகளும் துறைபோய், ஊனம் ஒன்றில்லார் உயர்குடிப் பிறந்தார்" (சிந்தாமணி, 2158) எனவரும் இதில் துறை போதல் குறித்து நிற்றலறிக.

> "கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
> பெற்றுக் கொடுத்த தலைமகனைப்போல—முற்றத்
> துறந்தார்க்கு மெய்யுணர்வில் தோன்றுவதே இன்பம்
> இறந்தவெலாம் துன்பமலா தில." (நீதிநெறி விளக்கம்)

இது நம் கம்பர் வாக்கைக் கருதி வந்துள்ளமை அறிய லாகும். உயர்பேரின்பமே கருதும் துறவியரோடு துறைபோய நர் உடனெண்ண வந்ததனால் அவரது உயர்நிலை புலனும்.

துறை, கலைப் பரப்பைக் குறித்தது. முறை, அப்பரப்பு முழுவதும் குருகுல முறையே நெறியே சென்ற நிலை தெரிய வந்தது. முறை வழுவாத நிறைவுடையார் என்பதாம்.

துறை போய உத்தமக்கவிகள் என்றதனால் மற்றைப் பண்டி தர்களை ஒரு பொருளாக இவர் மதிக்கவில்லை என்று தெரிகின்றது. கவிகள்=கவிஞர்கள். புலவர் என்னாது கவிகள் என்றது பல வகை நூல்களையும் பயின்று புலமை நிரம்பி யிருந்தாலும் கவி பாடும் தன்மை யிலராயின், கவிநயங்களைக் கண்டுகளிக்கும் காட்சி யை அவர் இழந்திருப்பர் ஆதலால் அந்த இழவை நோக்கி அவரை இங்கே இவ்வாறு கை யொதுக்கினர்.

முத்தமிழ்ப் புலமையும் வித்தகக் கவித்திறமும் ஒருங்கே வாய்ந்து, உத்தம குணங்களும் நிறைந்து, சித்த சுத்தியுடன் சிறந் திருப்பவர்களையே உத்தமக்கவிகள் எனக் கம்பர் இங்கே விதந்து குறித்துள்ளார். தம் காவியத்தின் மாற்றறிந்து மாட்சி தெரிந்து

மதிக்க வல்லவர் இவரே என்று இங்கே குறித்திருக்கும் அழகு இவருடைய பெரிய எடுப்பு நிலை எவர்க்கும் இனிது புலனும்.

அத்தகைய உத்தமர்களுக்கும் ஒன்று உணர்த்துவன் என்ற தனல் இவரது உணர்வுறுதியும், உள்ளத்தின் உயர்வும் உணர நின்றன. ஒன்று என்றது உணர்த்தும் குறிப்பின் சுருக்கம் தெரிய. தலைமை யறிவாளர்கள் ஆதலால் அவர்முன் பல பல கூறவேண்டாம் என்பதாம்.

தம்முடைய கவிகளில் குண தோடங்களை ஆராய்ந்து பெரியோர் பெரிதும் கவனம் செலுத்தார்; பொறுதி செய்தே அருளுவர் என்று உறுதி செய்து அதற்கு உதாரணமாக உலக நிகழ்ச்சிகளில் உள்ள மூன்று அநுபவங்களை எதிரெடுத்துக் காட்டுகின்றார். முத்தமிழ்த் துறை என்றதற் கேற்பப் பித்தர் முதலிய முத்திறத்தாரையும் ஒத்துணரக் குறித்தார்.

பித்தர், அறிவு நிலை குலைந்து சித்தபேத முடையராய் வாய்க்கு வந்தபடி பிதற்றித் திரிவர் ஆதலால் அப்பிதற்றல்களை ஒரு பொருளாக எவரும் எண்ணி நோக்கார்.

பேதையர், அறிவு நலம் குன்றி முழுமூடமாய் ஒரு நெறியுமின்றி முறை பிறழ்ந்து வறிதே மொழிவர் ஆதலால் அவர் மொழிகளையும் யாரும் மதியார்.

பத்தர், உலகநிலை கடந்து பரன் அருளை நினைந்து யாரையும் எதிர்பாராமல் யாண்டும் பரவசராய்த் தாம் கருதியதையே எங்கும் உறுதியுடன் கழறி நிற்பர் ஆதலால் அவர் உரைகளையும் பொதுமக்கள் புரை கூறுது போற்றி விடுவர் என்க.

பித்தர், பேதையர், பத்தர் மொழிகளை உலகினர் எவ்வாறு பொருள் செய்யாது பொறுத்துக் கொள்வரோ அவ்வாறே எனது கவிகளையும் உத்தமக் கவிகள் உளம்பொறுத்து உவந்து கொள்ளுவார் என்பதாம்.

முன்னையர் இருவரும் பொருளொடு பொருந்தாத மருள் நிலையினர்; பின்னவர் அருளொடு மருவிய தெருள் நிலையினர். குறித்த மூவருள் எவராகவேனும் தன்னை எண்ணிக் கொண்டால் பின்பு அவர் கண் தவறு காண நேராது என்பது கருத்து.

பித்தரை முதலில் குறித்தது நகைச் சுவைக்கு ஏதுவாய் அவர் தனியமைந்திருத்தலை நினைந்து. "பித்தா! பிறைசூடி!" (தேவாரம்) என இறைவனுக்கும் ஒரு பெயராக அது முதன்மை பெற்றுள்ளமை காண்க.

சிவபெருமானாய் வந்த தவமறையோனை நோக்கிச் சுந்தரமூர்த்தி நாயனார் சினக் குறிப்புடன் "நீ என்ன பித்தனோ?" என்ற போது அதற்கு அவர்,

ரும் ஆகப், பின்னும் பேயனுமாக நீ இன்று
எத்தனை தீங்கு சொன்னால் யாதும் மற்றவற்றால் நாணேன்"
(பெரிய புராணம்)

என்றதனால் பித்தின் இயல்பும், அதன் இனமும் தெரியலாகும்.

இராம கதை மேலுள்ள பேராசையால் பித்துக் கொண்டு, வேறொன்றையும் கருதாது சித்தம் திமிர்ந்து, பத்திப்பரவசராய்க் கம்பர் காவியம் செய்யப் புகுந்துள்ளார் என்பது இங்குக் குறித்த ஒப்புவமைகளால் உள்ளுற உய்த்துணர நின்றது.

பத்தியை மட்டும் தனியே கூறின் தற்புகழ்ச்சியாம் என்று கருதிப் பித்து பேதைமைகளை முன்வைத்து மறைத்தார். அரங்க அடக்கமாக இங்ஙனம் மறைத்திருப்பினும் இவரது அந்தரங்க பத்திநிலை எங்கும் தெளிவாக வெளியா யிருக்கின்றது. "அன்பு எனும் நறவம் மாந்தி, யான் மொழியலுற்றேன்" என நாட்டுப் படலத்தின் முதல் பாட்டிலேயே இவர் உள்ள நிலையை ஒளியாது வெளியிட்டுள்ளார். நறவம்=கள். நறவம் மாந்தி என்றதனால் இவர் தன்னை மறந்து யாண்டும் பத்தி நிலையில் ஆழ்ந்து பாடியுள்ளமை புலனாம்.

கவிகளில் வேண்டுமாயின் குண தோடங்களைக் காணாது விடுகின்றோம்; நூலின் புறத் தோற்றத்தில் காவியத்தின் கட்டுக் கோப்பு ஆவது நன்றாக அமைந்திருக்கின்றதா? என்பார்க்கு றிப் பாடல்

ஓர் இடத்தில் சிறு பிள்ளைகள் அறைகளும் ஆடரங்குகளும் அமைத்து விளையாடிக் கொண்டிருந்தனர். அவ்வழியே சிற்பி ஒருவன் வந்தான். அவற்றைக் கண்டான்; அவை சிற்ப நூல்

முறைப்படி அமைய வில்லையே என்று அவரைச் சீறி வெறுப் பனோ? குழந்தைகள் செயலை நோக்கிச் சிரித்துப் போவனே அன்றி மறுத்தொன்றும் செய்யான்; அது போல் எனது நூலமைப்பு நூன்முறைப்படி அமையவில்லை என்று மேலோர் மாறு கூறார்; மகிழ்ந்தே செல்வர் என்பதாம்.

மடப்பிள்ளைகள் என்பதில் இருபொருள்கள் மருவியுள்ளன. மடம், இளமையையும் அறியாமையையும் குறிக்கும் ஆதலால் சிறு பிள்ளைகள் எனவும், அறியாமை யுடையவர் எனவும் பொருள் பயந்து நின்றது. காய்வரோ? முனிவரோ? என்றது காயார், முனியார் என்பதாம்.

இறை = அணு. கடுகு, தினை என்பன போலச் சிற்றளவுக்கு அது ஓர் உவமையாய் வந்தது. உள்ளம் கையில் உள்ள சிறு கோடுகளுக்கும் இறை என்று பெயர்.

இறையளவேனும் ஞானம் இல்லாத எனது புல்லிய கவியை முறையான நூலுணர்வுடையார் முனியார் என்ற இதில் ஓர் தொனிப்பொருள் உள்ளது.

சிறிதும் அறிவு நலம் கனியாத வறிய நிலையி லெழுந்த எனது மென் கவிகள் பெரிதும் அறிவு நிறைந்தவர்க்கும் பேரு வகை தரும் என்பதாம். கண்ணூன்றி நோக்காமல் பாராமுக மாய்ப் பாடிய கவிகளே அறிஞர்களுக்கு அவ்வாறு பேரின்பம் செய்யுமாயின் கருத்தூன்றிக் கவனித்துச்செய்த இன்கவிகள் அவனிக்கு எவ்வாறு இன்பம் தரும்? என்பது குறிப்பு.

இறையும் என்பதில் உம்மை இழிவு சிறப்பு. ஞான சூனிய னை நான் வான சூரியன் போன்ற ஒரு மான வீரன் கதையைப் பாடப் புகுந்தேனே! இது எவ்வளவு மடமை? காரிய மூலமே இப்படி நகைக்கு இடமா யுள்ளபொழுது அதன் விளைவினை ஆராய நுழைவது பெரிதும் பிழையாவதோடு பெருஞ் சிரிப்பும் ஆகும் ஆதலால் உணர்வுடையார் இதனை உணர்ந்து ஒதுங்கிக் கொள்வார் என்பதாம். உணர்வு = கலை நிறைந்த பேரறிவு.

" இறைநிலம் எழுதுமுன் இளைய பாலகன்
முறைவரை வேனென முயல்வ தொக்குமால
அறுமுக முடையவோர் அமலன் மாக்கதை
சிறியதோர் அறிவினேன் செபப நின்றதே."
(கந்த புராணம்)

என்ற கச்சியப்பர் அவையடக்கமும் இங்கே காணத்தக்கது. இறையும், முறையும் இதில் வந்துள்ளன அறிக.

பாற்கடல், பூனை, அசுணம், மராமரம், கவிஞர், பித்தர், பேதையர், பத்தர், பிள்ளைகள், சிற்பியர் முதலிய பேர்களை இந்த அவையடக்கத்தில் கம்பர் சுவைபெறக் குறித்திருக்கின்றார். கருத்துக்களை அமைதியாக மீண்டும் ஆராய்ந்து அறிந்து கொள்க. மேலும் விரிப்பின் ஈண்டு இடம் பெருகும். நம் கண்ணும் கருத்தும் காவியக் காட்சியில் கவிந்து உள்ளது ஆதலால் ஆண்டு விரைந்து போவோம்.

அவையடக்கம் முற்றிற்று.

## ரண்டாவது அதிகாரம்

### நதி நிலை

புனிதமான இந்த இனிய கதைக்குத் தனி இராமன் உவந்து வந்து அவதரித்தற்குத் தகுந்த இடமாய் அமைந்திருந்தது கோசலம் என்னும் தேசம். அது கங்கையின் வடகரையிலிருந்து இமயச்சாரல் வரையும் கிழ மேலாகப் பரந்து விரிந்துள்ளது. நிறைந்த நீர்வள முடையது. உயர்ந்த நலங்கள் பல இயல்பாக அமைந்தது. தமது காவிய நாயகன் பிறந்து வளர்ந்து அரசு புரிந்திருந்த பெருமை யுடையது ஆதலால் அவ் வுரிமையை நினைந்து கம்பர் முதலில் அதன் நிலைமையை உவந்து பாடத் துணிந்தார். துணிந்தவர், அந் நாட்டிற்கு உயிராதாரமா யுள்ள சரயு நதியைக் குறித்து இருபது கவிகள் பாடி அதற்கு ஆற்றுப்படலம் என்று பெயரிட்டிருக்கிறார். ஓர் உடலுக்கு முகம் போல் அப்படலமே இக்காவியத்திற்கு முன்னுற அமைந்துள்ளது. அதன் முதல் பாடலை முதலில் பார்ப்போம்.

தேசநலம்

ஆசலம்புரி ஐம்பொறி வாளியும்,
காச லம்பு முலையவர் கண்ணெனும்
பூச லம்பும், நெறியின் புறஞ்செலாக்
கோசலம் புனை ஆற்றணி கூறுவாம.

(இராமா, பால-ஆற்றுப்படலம் 1)

இராமன் அவதரித்திருந்த நாட்டின் நிலையைக் காட்டி நிற்கும் இப் பாட்டின் உட்பொருளை ஊன்றி நோக்கவேண்டும்.

ஈசன் என எல்லாரும் ஏத்த நின்ற இராமன் இந் நிலவுலகத்தில் அவதரிக்க நேர்ந்தபொழுது வேறு தேசங்கள் பலவற்றையும் விட்டுக் கோசலத்தில் தோன்றியதற்குக் காரணம் யாது? எங்கும் பூரண உரிமையுடைய அவன் அங்கு மட்டும் ஆர்வம் புரிந்து போய் அமர நேர்ந்தது ஏன்? அந் நாட்டிற்கு அத்துணை ஏற்றம் என்ன? அரிய நலங்கள் பல மலிந்து தரும நிலையமாய் என்றேனும் அது மருவி யுள்ளதா? அல்லது அன்றேனும் நன்றூற்றி அவ்வாறு அமைந்து இருந்ததா? என்று இன்ன வகையான எண்ணங்கள் பலர்க்கும் முன்னுற எழும் ஆதலால் அவற்றிற்கு விடை கூற வந்ததுபோல் இக்கவி இங்கே விளைந்து வந்துள்ளது. அவ்விளைவு நலங்களின் உளவு அளவுகளையும், உள்ளுறை நயங்களையும் உரிமையுடன் உணர்ந்து கொள்வோம்.

இந் நில வுலகம் பலகோடி பொருள்களால் நிறைந்திருப்பினும், மக்கள் வகுப்பினுலே தான் சிறந்து விளங்கி நிற்கின்றது. அம் மக்களும் ஆண்பால் பெண்பால் என இருவகை நிலையில் மருவி நிற்கின்றூர். அவ் விருபாலாரும் கோசல நாட்டில் அன்று அமர்ந்திருந்த நிலைமையைக் கவிநாயகர் இப் பாட்டில் அழகாக விளக்கி யிருக்கின்றூர்.

அந்நாட்டினர் நெறிமுறை வழுவாமல், யாண்டும் நீதி ஒழுக்கங்களில் நிலைத்து, ஏதம் யாதும் மருவாது இனிது வாழ்ந்து வந்தார் என்பது இதன் திரண்ட பொருளாம்.

ஆடவர்களுடைய ஐம்பொறிகளும் பெண்களது கண்களும் என்றும் நல்வழியிலேயே ஒழுகி வந்தன; அல்வழியில் யாதும் சென்றில; என்றமையால் அவர்தம் நல்லொழுக்க நிலையும்,

நாட்டு நலனும் நன்கு புலனும். உடையவர் இயல்பு உடைமை மேல் ஏற்றிக் கூறப்பட்டது.

தன்னிடத்தில் வாழும் மக்களது நிலைமையைப் பொறுத்தே ஒரு நாடு தலைமையாய் நிலவி நிற்கும். மக்கள் நல்லவரேல் அது நல்லதாம்; அவர் தீயரேல், அது தீயநாடா யிழிக்கப்படும்.

> " எவ்வழி நல்லவர் ஆடவர்
> அவ்வழி நலலை வாழிய நிலனே " (புறம் 187)

எனவரும் இதனால் நில நலனுக்கு மக்களது மன நலம் மூலமா யுள்ளமை புலனும்.

> " நிலம்தீ நீர்வளி விசும்போடைந்தும்
> கலந்த மயக்கம் உலகம் " (தொல்காப்பியம்)

என ஆசிரியர் தொல்காப்பியனார் குறித்தபடியே உலகமானது நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என்னும் ஐவகைப் பூதங்களின் கலவையாய் அமைந்துள்ளது. அதனால் இது பஞ்சபூத பௌதிகம் என நின்றது. அவ்வாறே ஐம்பூதங்களின் கூறுய்ச் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்புலன்களும் உயிர்களுக்கு இன்ப நலன்களா அமைந்துள்ளன; ஆதலால் அப்புலன்களுக்கு வழிகளாயுள்ள ஐம்பொறிகளும் அறநிலை வழுவாமல் உலகில் ஒழுகி நின்ற நிலை இங்கே உரிமையோடு உரைக்க வந்தது.

பொறி என்றது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து இந்திரியங்களை. புலன்நுகரும் கருவியாய் மனனுணர்வோடு மருவி யிருத்தலால் பொறி என நின்றது. ஐந்து என்னும் எண் ஈற்றுயிர் மெய் கெட்டு வருமொழிக்கு இனமாத் திரிந்து ஐம்பொறி என வந்தது. ஐம்பால் என்பது போல.

> " ஐந்தனெற் றடைவதும் இனமும் கேடும் " (நன்னூல்)

என்னும் இயல்விதியுள் இனம் என்றதற்கு இது இனமாம. ஆசு=விரைவு, குற்றம், பற்று. அலம்=அலைவு, சுழற்சி. அலம் புரி என்றது விடயங்களில் விரைந்து சுழல்கின்ற என்றவாறு. புரிகின்ற பொறி என்க. பெயரெச்சம் எண்ணுப் பெயர் தாவி இயற்பெயரை மேவிப் பொறியின் சலனம் புலனுற நின்றது.

புலனுகர்வில் வெறிகொண்டு விரைந்தலைந்து விழுந்துழல் கின்ற அதன் இயல்பினை விளக்கியபடி யிது. ஆசு புரிதலும், அலம் புரிதலும் பொறியின் இயல்பாகலான் அதற்கு அவை அடை யாக வந்தன. ஆசு வேகத்தையும், அலம் அலைவையும் குறிக்கும். பூத்தொறும் அவாவியோடும் பொறிவரி வண்டு போலப் புலன் தோறும் அவாவி அலையும் பொறியின் இயல்பை இவ்வாறு புலப்

பொறியை வாளி ஆக உருவகஞ் செய்தது அதன் கடுமை யும், கொடுமையும் கருதி.

"ஐம்புல வேடர்" (சிவஞான போதம்), "ஐவரென்ற புல வேடர்" (தாயுமானவர்) எனவும், வருவன காண்க. வழிப்பறி பறிக்கும் கள்ளர் போல, உள்ள உணர்வுகளைக் கொள்ளை கொண்டு போதலால் புலன்கள் வேடர் என நின்றன. உயிர்கள் அறத் தாறு செல்லுங்கால் இடையே ஆறலைக்குங் கள்வர் போல் நேரலைத்துச் சீரழிக்கும் பொல்லாப் புலக்கொடுமையின் நிலை எல்லார்க்கும் புலப்படப் புலவேடர் என்றார். உயிர்க்கு நலம் நாடுவார் இப்புலவேடர் வசப்படாமல் புகழ் அறங்களோடு நிலவி நிற்பர்; பட்டார் எல்லாம் கெட்டு இழிந்து போவர் என்க.

"அறிவிலை பெரிய நீரார் அருவினை கழிய நின்ற
நெறியினைக் குறுகி இன்ப நிறைகடல் அகத்து நின்றார்;
பொறியெனும் பெயர ஐவாய்ப் பொங்கழல் அரவின் கண்ணே
வெறிபுலம் கன்றி நின்றார் வேதனைக் கடலுள் நின்றார்."
(சீவக சிந்தாமணி).

இக்கவியை வெளியே கேட்கும்படி வாய்விட்டுத் தெளிவாகப் பாடிவருக. பொருளைக் கருத்தூன்றி நோக்கிப் புலக்கொடுமையை ஓர்ந்து போதம் பெறுக. புலநிலையில் புலையாடாமல் உமது உயிர் நிலை இதுபொழுது எந்நிலையில் உள்ளது என்பதை இக்கவிக் கருத்தோடு ஒத்துவைத்து உய்த்துணர்ந்து கொள்க.

அறிவுடையார் நெறியே நடந்து நிறைசுகம் பெறுவர்; அறி விலிகள் நெறிகடந்துபோய் நெடுந்துயர் அடைவர் என உணர்த்தி நிற்கும் இதனை உள்ளங்கொண்டு உறுதிகண்டு நெறி தவறாமல் உயர்நலம் பேணி நாளும் ஒழுகிவரவேண்டும்.

ஐம்பொறிகளையும் ஐந்தலை நாகத்தின் வாய்களாக இதில் குறித்திருத்தல் காண்க. அரவின் ஐவாய் என்றதும், ஐவாளி என்றதும் பொறியின் அடலும் ஆற்றலும் அளவும் முறையே தெரிய நின்றன. ஐம்பொறிகள் அமைந்த உடம்பை, ஐந்துதலை களையுடைய பாம்பாக இதில் உருவகம் செய்திருத்தலால் அதன் நச்சுத் தன்மை நன்கு புலனும். ஆகவே நாம் இச்சை கொண்டுழலும் கொச்சைத் தன்மையும் கொடு நிலைமையும் நடுநிலைமையோடு நாடி நோக்கின் நம் கெடுநிலை யுடனே தெரியவரும்.

காசு என்றது பொன்மாலைகளையும், இரத்தின மாலைகளையும், முத்து மாலைகளையும் சுட்டி நின்றன. அலம்பும் = புரளுகின்ற. மாலைகள் தவழ்கின்ற மார்புஎன்க. பூசல்=போர்; ஆரவாரம். கண்ணேக்கின் இயற்கைவீறு தோன்றவந்தது. கண் அம்பு மகளிருடையது என்றதனுல், பொறிவாளி ஆடவருடைய தென்ப தாயிற்று. ஐந்தையும் குறித்தமையால் முந்துற வந்தது.

கைவிடு படை, கைவிடாப் படை எனப் போர்க் கருவிகள் இருவகையன. முன்னது அத்திரம் எனவும், பின்னது சத்திரம் எனவும் கூறப்படும். இங்கே குறித்தது முன்வகையில் சேர்ந்தது. வாளி, அம்பு, பாணம், பகழி, என்பன ஒரு பொருட் சொற்கள். நின்ற இடம் பெயர்ந்து தூரத்தே பாய்ந்து தொழிலாற்றிவரும் இயல்பினவாதலால் வாளியும், அம்பும் பொறிகள் என வந்தன.

ஆடவர்களுக்குக் கண், வாய் முதலிய ஐந்தையும் வரைந்து குறித்தார்; பெண்களுக்குக் கண்ணை மட்டும் எண்ணி வைத்தார்; என்னே இது? கண் ஒன்று தவிர மற்றவெல்லாம் இவர்க்குப் புறம் செல்லுமோ? என்று ஐயம் தோன்று மாறன்றோ இது அமைந்து நிற்கின்றது? எனின், அவ்வாறு ஆயின் செவ்விய ஒழுக்கம் திறம்பித் திவ்விய நிலை சிதைந்து படும் ஆதலால் அவ்வகை அமையாதென்க. பின்னர்க் கண்ணைமாத்திரம் எண்ணியதற்கு என்னே காரணம்? எனின், உண்மையை உய்த்துணரவேண்டும்.

ஆண் நெறிகடந்து பெண்ணைக் கெடுத்தலும், பெண் நெறி கடந்து ஆணைக்கெடுத்தலும், இருவரும் ஒருமுகமாய் நெறி கடந்து எளிதாகத் தம்மைத் தாமே கெடுத்துக்கொள்ளலும் என உலகத்தில் கேடுகள் மூவகையில் கோவையாக நிகழ்ந்துவரும்.

ஒரு வகுப்பு மட்டும் நெறியுடையதென்றால், அங்கே ஒழுக்கமும் யோக்கியமும் இழுக்கின்றி என்றும் நிலைத்து நில்லா; இருவகையும் நெறியிசைந்து நின்றபோதுதான் பூரண யோக்கியம் யாண்டும் பொங்கி நிற்கும் என்க.

கோசல தேசத்தில் ஆடவர்கள் அறிவோடமைந்த ஐம்பொறி யடக்க முடையவர்கள்; அவ்வாறே மகளிரும் என்று கூற வேண்டியவர், அங்ஙனம் கூறாது அவரது கண்ணை மட்டும் விதந்து கூறியது அதன் எண்ணரிய ஆற்றலை எதிரறிந் தென்க.

மற்றை இந்திரியங்களை விடக் கண்ணுக்கு ஒரு விசேட வன்மையுண்டு; பிறவெல்லாம் நின்ற இடத்தில் நின்று கொண்டே தம்பால் வந்ததை மட்டும் வளைந்து பற்றும்; கண்ணோ வெகு தூரத்தில் உள்ளவற்றையும் விரைந்து போய்ச் சென்றுபற்றும்; ஆதலால் விழையாதவர்க்கும் விழைவுமூட்டி அது இழவு கூட்டிவிடும் என்க. "ஆண்கள் கல்லடிக்குத் தப்பினும் பெண்கள் கண்ணடிக்குத் தப்பார்" என்ற பழமொழியால் அதன் உளவறியலாகும். "கண் எனும் அம்பு பட்டுக் கருத்தழிந்து உடைந்தேன் அந்தோ!" என்றதனால் அதன் ஆற்றலும் வேகமும் அடுந்திறலும் புலனும்.

ஆடவர்களுடைய உள்ளங்களையும் உயிர்களையும் கவர்ந்து தம்பால் அவசமாய்க் கிடக்கும்படி பெண்களுக்குக் கண்கள் தொழில்புரிந்து எழில்மிகுந்து நிற்றலால் காவியக்கவிகள் யாவரும் அவற்றின் செயல் இயல்களை விழைந்து பாடலாயினர்.

கண்களின் இயல்பு.

"வேல்என விளங்கும்; சேலஎன மிளிரும்;
மால்என நிமிரும்; காலனைக் கடுக்கும்;
குழைமேல் எறியும்; குமிழ்மேல் மறியும;
மலரும், குவியும், கடைசெல வளரும்,
சுழலும், நிற்கும், சொல்வன போலும்,
கழுநீர் பொருவிச் செழுநீர்க் கயல்போல
மதர்க்கும், தவிர்க்கும், சுருக்கும், பெருக்கும்,
இவைமுதல் இனியன அவிநயப் பல்குறி
நவையற இருகண் சுவையொடு தோன்ற."

(பெருங்கதை, 4-12)

எனவரும் இது கோங்கு வேளிர் என்னும் கவிஞர் பாடியது. இதில் மானனீகை என்னும் அரச கன்னிகையின் கண்களைக் குறித்து அவர் உரைத்திருக்கும் அழகை ஊன்றிப் பார்க்க.

"குமிழுமிசை மறிந்து, குழையெதிர்நடந்து,
 கொலைதொழில மறலியைப பயிற்றி,
அமிழ்தினின விளர்ந்துள் நஞ்சினிறகாடி
 ஐயரி சிதறிடை தோயந்து
கமலமென் மலரை வனம்பு நத்தியவோ
 கண்ணிணை மான்மருள்நோககம
தமதெனக் கவர்நது கொண்டவோ? மடமான
 தடங்கணின் செயலகவர்ந்தனவோ.?"

(நைடதம்.)

தமயந்தியின் கண்ணழகைக் கழறிய படியிது.

இவ்வண்ணம் கண்ணின் கவினைக்குறித்து எண்ணரிய வருணனைகளைக் கவிகள் எண்ணியிருத்தலால் பெண்ணீர்மைக்கு உண்ணீர்மை பயந்து அது உதவி வரும் திறம் உணரலாகும்.

கையால் தொடுதலும், மூக்கால் முகர்தலும், வாயால் பேசுதலும், காதால் கேட்டலும் எதிரி கிட்ட நெருங்கியபோது தான் கிடைக்கப்பெறும்; அவன் எவ்வளவு எட்ட நின்றாலும் கண் வெட்டி யிழுத்துவிடும் ஆதலால் பிறபொறிகளினும் இதற்குள்ள தனிமகிமை இனிது புலனும்.

இத்தகைய பேராற்றல் அதனிடம் பெருகியிருத்தலினாலே தான் பூசல் அம்பு என்று தனியே விசேடித்து அது பேசநின்றது.

உலக சிருட்டியில் பொதுநிலையில் இங்ஙனம் அமைந்துள்ள கண்கள் கோசலதேசத்துப் பெண்களிடமட்டும் வஞ்சமும் சூதும் யாதும் பயிலாமல் வரம்புடனமைந்து யாண்டும் நெறிதிறம்பாமல் நீதிநிலையில் நிலைத்து நின்றன என்பதாம்.

வாளியும் அம்பும் நெறியிற் பொருந்திய என்னாது "புறஞ்செலா" என்று எதிர்மறையில் ஏற்றிக் கூறியது அவை எங்கும் புறமே செல்லும் இயல்புடையன; அங்கு மட்டும் தான் அவ்வாறு நெறியமைந்திருந்தன என்று அவற்றின் அருமையும் பெருமையும் அறிந்து அங்குநில நலம் தெரிந்து அதிசயமுடன் ஆர்வமுற என்க.

கோசலம் என்னும் பெயரில்அமைந்துள்ள ஓசைக்கு இசைய எதுகை எடுத்து இக்கவி தொடுத்திருத்தலை உய்த்துணர்ந்து கொள்க. திரிபு என்னும் சொல்லணியும், உருவகம் என்னும் பொருளணியும் இதில் மருவியுள்ளன.

விலை வரம்பில்லா மணிமாலைகள் புரளும் முலையவர் என்றதனால் அவர்தம் திருவும் அழகும் உருவும் பிறவும் உணரலாகும். இன்பச் சுவை ததும்ப, அன்பு நலம் கனிய, அழகொளி தவழ, திருவும் தேசும் திகழ, அறிவும் ஆசையும் பெருகக் காசலம்பு கொங்கையர் எனக் கோசல தேசத்து மங்கையரை இதில் குறித்திருக்கும் நிலையைக் கூர்ந்து பார்க்க.

நெறி=வழி. நீதிநெறி, நன்னெறி என்க. வடநூலார் இதனைச் சன்மார்க்கம் என்பர். ஓர் ஊருக்கு அமைந்துள்ள நேர்வழி போல இன்ப நிலையமான முத்தி நகருக்கு அறநெறி வாய்ந்துள்ளது ஆதலால் அந்நெறியே செல்வோர் இறுதியில் முடிவின்பத்தை அடைவர்; நெறி விலகிப் புறம்போனால் அறம் புகழ்கள் இழந்து அவமே திரிந்து அல்லலுறுவர் என்க.

ஆண் பெண் இருபாலாரும் ஐம்பொறிகளை நெறிவழுவாமல் நேர் வழியில் செலுத்தி ஒரு தேசத்தில் ஒழுகி வருவார்கள் ஆயின் அத்தேசம் எவ்வளவு சீர்மை யுடையதாய்ச் சிறந்து திகழும்! அத்தகைய உத்தமர்களையுடைய புத்தொளி நாடு எக்காலத்திலேனும், யாண்டாவது, இருந்ததுண்டா? இருக்க முடியுமா? அல்லது அப்படி இருக்க வேண்டும் என்று கம்பர் கற்பனை செய்திருக்கிறாரா? என இவ்வாறெல்லாம் கருதி ஆராயுமாறு இக்கவியின் பொருள் அற்புத நிலையில் அமைந்திருக்கின்றது.

ஒரு நில மண்டலம் முழுவதும் இவ்வளவு சீர்மையும் நீர்மையுமுடைய குலமக்கள் நிலைபெற்றுத் தலைமையுடன் வாழ்ந்து வந்தார் என்றால் அவ்வாழ்க்கை நிலை எவ்வளவு அதிசய முடையது? அவர் எத்துணை உயர் நிலையினர்? உய்த்துணர்க.

இந்நாளில் எந்த நாட்டிலும் நம் அனுபவத்தில் கண்டுள்ள மக்கள் நிலைமைக்கும், கம்பர் காட்டும் கோசலக் காட்சிக்கும் உள்ள வாசியை உள்ளத்துள் ஊன்றி நோக்கவேண்டும்.

கவியில் எளிதாகவும் தெளிவாகவும் அறிவுறுத்தியிருக்கும் இந்த அரிய அற்புதக் கருத்து வேறு எந்த நூல்களிலேனும், எந்த மகாகவிகளிடத்தேனும் முந்துற வந்திருக்கிறதா?

இந்தக் கவிச்சக்கரவர்த்தியின் சிந்தையில் தனியே ஊறி இனிதெழுந்துள்ள இப்புனித வுணர்வு மனித சமூகத்திற்கு அரிய அமிர்தமாய் அமைந்து நிற்றலை நுணுகி ஆராய்ந்து கொள்க.

கண்டபடியே மனம் போன போக்கெல்லாம் போய்த் திரிவது மிருகங்களின் இயல்பாம்; அறிவறிந்த மக்கள் அங்ஙனம் திரியலாகாது ; நெறியமர்ந்து நீதியுடன் ஒழுகிவரவேண்டும் என்னும் விழுமிய உறுதியை இனிமையாகவும், விநயமாகவும் உரிமையுடன் இவ்வாறு இதில் உணர்த்தி யிருக்கிறார்.

ஊரும் உறவும் நாடும் அறிய நயந்து மணந்துகொண்ட மனைவியருடன் அமர்ந்து இன்பங்களை அனுபவிப்பரே யன்றிக் கோசல தேசத்து ஆடவர் வேறு மறுமுகம் பாரார்; பெண்டிரும் தம்மை மணம் புரிந்து கொண்ட கணவரையே மனமுவந்து கொண்டு இன்பம் நுகர்ந்து இனிதமர்ந்திருப்பரே யல்லாமல் அயலே யாதும் மயலியல் காணார் என்பது இதன் திரண்ட கருத்தாம். ஆகவே ஒழுக்கமும் கற்பும் விழுப்பமுடன் விளைந்து தீது யாதும் சேராத புண்ணிய பூமியாய் அது பொலிந்திருந்தமை புலனாம்.

பெண்ணும் ஆணும் அந்நாட்டில் இந்நிலையில் இருந்தனர் என முன்னுறச் சுட்டியது அத் தேசாதிபதியாய்த் தேசுடன் வருகின்ற இராமபிரானது திவ்விய நிலைமையை நினைந்தென்க. என்னே நினைவு? எனின், பின்னே காண்க.

அவ் வீரமூர்த்தி ஏகதார விரதனாய் இனிதமர்ந்திருந்ததும், அம் மூர்த்தியின் அருமை மனைவியாகிய சீதை தருமபத்தினியாய்க் கற்புக்கரசி என நின்றதும் கருத்துட்கொண்டு அவரது நாட்டு மக்கள் யாவருமே அவ்வாறே ஒழுகி வந்தனர் என்று அச் செவ்விய ஒழுக்கத்தின் மூலகாரணத்தை உய்த்துணர இவ் வண்ணம் உணர்த்தி யருளினார்.

"மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி" என்றபடி அரசன் இயல்வழியே குடிசனங்களின் செயல்கள் விளையும் எனப் படிமுறை காட்டி ஒரு நாட்டின் கொடிவழி நாட்டியபடி யிது.

அறமனை காத்தொழுகும் ஆண்மையும், பிறர்மனை நோக்காத பேராண்மையும் மனித சமூகத்திற்குப் புனித மிகச் செய்து புகழ் அறங்களை வளர்த்துப் புண்ணியங்களை விளைத்து எண்ணிய இன்ப நலங்கள் யாவும் எளிதில் நல்கும் எனத் தெளிவு கொள்ளும்படி இதமாக இதில் சுட்டியிருத்தலை உய்த்துணர்ந்து கொள்க.

"மறு மங்கையருக்கும் மறு மன்னவருக்கும்
மார்பும் முதுகும் கோடாதவன்."

என இராமன் மருவியிருந்த மாட்சியும், அதனால் இருமையும் அடைந்த சீர்த்தியும், எவரும் அறிய நின்றன. அறிந்திருந்தும் அவ்விருவகை நிலையிலும் இதுவரை மக்கள் எவ்வளவு முன்னேறியிருக்கிறார்கள் என்பதைத் தம் நெஞ்சில் கைவைத்து அவரவரே உணர்ந்து கொள்ளவேண்டும். அங்ஙனம் உணரா நேரின் தமது இழுக்கும் இழிவும் எவர்க்கும் வெளிப்பட்டு விளங்கும். வெளியாகியும் என்? அவ்விழுமிய வீர ஒழுக்கங்களில் வீறு கொண்டெழுவார் எத் துணையர்? விரல் விட்டெண்ணவும் விறல் உண்டாகுமா ?

மார்பு கொடாமை சீலம் ஆம்; முதுகு கொடாமை வீரம் என்க. சீலவான், வீரவான் எனப் பேரெடுத்து இராமன் சீர் பெற்று நின்றதுபோல் பார்பெற்ற மக்களுள் யார் பெற்று நின்றுள்ளார்? பெற்றார் பெறலரும் பேறு பெற்றவரே யாவர்.

வீரத்தினும் சீலத்தை முன்னுற வைத்தது அதன் அருமை கருதி. பல்லாயிரம் படை வீரர்களையும் ஏககாலத்தில் தனியே நின்று ஒருங்கே வெல்ல வல்ல பெருவீரனும் பிறர்மனைவியைக் கண்டவுடன் உள்ளம் தளர்ந்து பல்லிளித்து இழிகின்றான். அவ்வாறு இழிந்து போன வீரர்கள் எத்துணையர்? முந்துற இந்திரனைச் சிந்தனை செய்க. தலைமையாக இராவணனையே மீண்டு எண்ணிக் கொள்ளலாம். கீசகனையும் நினைக்கலாம்.

நேர் ஆண்மை, போர் ஆண்மைகளினும் சீலம் பேராண்மை எனப்பெற்று, மிகவும் மேன்மையுடையதாய் மேவி நிற்கின்றது. பிறர்மனைவியரை விழைந்து நோக்காதவரே பேராண்மையாளர்; அவரே சான்றோர் என்பது ஆன்றோர் கருத்து.

“பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு.” (குறள் 148.)

என்ற வள்ளுவப் பெருந்தகையின் அமிர்தவாக்கு ஈண்டு உள்ளம் கொள்ளத் தக்கது. சேராத, தீண்டாத என வேறு யாதும் கூறாது நோக்காத என்ற அடிகள் வாக்கியத்தின் நோக்கினை நுனித்துணர்ந்து கொள்க.

அறநீதிகளும் ஆண்மை வீரங்களும் ஒருங்கே நிறைந்துள்ள குல வீரனை இராமனது சரிதையை உரைக்கவந்த இந்நூல், நெறியின் புறஞ்செலாத ஒழுக்க நெறியையே முதலில் தலைமையாக உரைத்திருத்தலால், தருமநலங்களை யுணர்த்தி உயிர்களை உயர் நிலையில் உய்க்கும் உறுதி நோக்கையே இது பெரிதும் உடையதென்பது உணரநின்றது.

குணநலங்கள் அமைந்த அழகிய மனைவியரை மணந்து இனிய போகங்களை நுகர்ந்து அறநலங்கள் புரிந்து யாவரும் அந்தமில் இன்பம் பெறுதலையே கருதி இச்செந்தமிழ்க்காவியம் வந்துள்ளதென்பதை நம்சிந்தையுள் உய்த்துணர்ந்து கொள்ளும்படி கவி முந்துற இங்ஙனம் உணர்த்தி யருளினர்.

மணம் கலந்த இன்பநலம் முதலிலேயே தலைதழுவி வந்திருத்தலால் இந்நூலின் மங்கல மாண்பு நன்கு புலனும். வாளியும் அம்பும் என இக்கவியில் வந்துள்ளமையால் இது வீர காவியம் என விளங்கி நின்றது.

கம்பர் வீரசரிதம் பாடவந்தமையால் வாளியும் அம்பும் கூட வந்தன. முடிவில் வெற்றி பெற்றுள்ள இராமவாளி முதலிலேயே கவியின் வாக்கில் இங்ஙனம் கலந்து வந்துள்ளதென்று இங்கே நினைந்து கொள்ள நேர்கின்றது. என்னை நினைவு? எனின், பின்னை காண்க.

இராவணனும் இராமபாணமும்

“முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய பெருந்தவமும்
முதலவன் முன்னாள்
எக்கோடி யாராலும் வெலப்படாய் எனக்கொடுத்த
வரமும் ஏனைத்
திக்கோடும் உலகனைத்தும செருக்கடந்த புயவலியும்
தின்று மார்பில்
புக்கோடி உயிர்பருகிப் புறம்போயிற் றிராகவன்றன்
புனித வாளி.” (யுத்தகாண்டம், இராவணன்வதை. 198)

இராமகதைக்கு வாழி தந்துள்ள வாளி இதில் வந்துள்ளமை காண்க. இப்புனித வாளியே கவிநினைவிலெழுந்து முதலில் வந்து தோன்றித் தனது முதன்மை தோன்ற நின்றது. இவ்வாறு வீரக் குறிப்பும், காவியக் குறிப்பும் இம்முதற் கவியில் குறிப்பாகக் கிளைத்து நிற்கின்றன.

புறம் செலாத கண்களுடைய கோசல தேசத்துப் பெண் களுக்கெல்லாம் குலநாயகியாய் அவதரித்துள்ள சீதையை நிலை தெரியாமல் அவாவியதனாலேதான் இராவணன் நிலையழிய நேர்ந் தான். புறம்செல்லும் கண்ணுடையாரைக் காதலித்திருந்தால் அவன் எண்ணம் நிறைவேறி யிருக்கும்.

அவ்வண்ணம் நிறைவேறாமல் அக்கண்ணே அம்பாய் அவனை அழித்து நின்றது. அது அவனது வாக்குமூலத்தாலும் அறிய வந்துள்ளது. அதனை இங்கு நோக்கின் விரியும்.

காதலனுக்கு இனிய அன்பாய் இன்புறுத்தி ஆதரித்து வந்த சீதை கண்கள் ஏதிலனுக்குக் கொடிய அம்பாய்த் துன்புறுத்தி அவனைக் கொன்று தொலைத்ததென்க.

அம்பு வாளிகளால் ஆனவென்றியே இத்தூய காவியத்துக்கு நேயமாயதென்பதாம். ஆகவே இது வீரகாவியம் என்க.

இந்தக் கவியுடன் சிந்தாமணிக் கவி ஒன்று இங்கே உடன் காண வருகின்றது.

நகர் வளம்

" கண்வலைக் காமுகர் என்னு மாப்படுத்து
ஒண்ணிதித் தசைதழீஇ உடலம் விட்டிடும்
பெண்வலைப் படாதவர் பீடின் ஓங்கிய
அண்ணலங் கடிநகர் அமைதி செப்புவாம்."

(சீவக சிந்தாமணி-நாமகள், 49)

இது, ஏமாங்கத நாட்டிலுள்ள இராசமாபுரத்தின் சிறப்புக் கூறி யது. கண் ஆகிய வலையை வீசி ஆடவரை வசப்படுத்திப் பொ ருளைக் கவர்ந்துகொண்டு, பின்பு வெற்றுடம்பாரா அவரை விட் டொழிக்கின்ற பெண்களின் மாயவலையிலே அகப்படாத தூய வர்கள் பெருமை போல் நலம் பலமிகுந்து அந்நகர் உயர்ந்திருந் தது என்பதாம். மா=மிருகம். பீடு=தவமாட்சி.

பெண்கள் கண் புறம் செலாக் கோசலம் என்றது அது. இது, பெண்கள் கண் வலைப்படாதவர் பீடு என ஓங்கிய நகரம் என்றது. அது நாடு கூறியது. இது நகரம் கூறியது. இதனை இயற்றினவர் திருத்தக்க தேவா என்பவர். அவர் சிறந்த தவ வொழுக்கமுடையவர். துறவி. கம்பருக்கு ஏறக்குறைய எழு நூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்தவர். கடைச் சங்க காலத்தி னர். விருத்தப் பாவில் முதல் முதல் காவியம் செய்தவர் அவரே. அதற்குச் சீவக சிந்தாமணி என்று பெயர். அருமையான அச் செந்தமிழ்க் காவியத்தைக் கம்பர் நன்கு பயின்றிருக்கிறார். அதன் கருத்துக்கள் பல இவர் கருத்தில் கலந்திருக்கின்றன. இருவர் நூல்களையும் மருங்குவைத்து ஒருங்கு நோக்கின் இவ் வுண்மை புலனும். இதில் வந்துள்ள பெண்ணும்கண்ணும் வலை யும் கம்பர் எண்ணத்தில் படிந்து மூலையவர் கண் என வேறொரு நிலையில் அதில் வந்திருக்கின்றன. ஆயினும் புதுமை இனிமை நீதி ஒழுக்கம் முதலிய நலங்கள் சுரந்து நூலின் நிலைமையை விளக்கி அது தனியே தலைமை பெற்றுள்ளது. இவற்றால் நூலா சிரியர் இருவர் மனநிலைகளும் அநுபவங்களும் அறிய நின்றன. தேவர், உலக போகங்களை வெறுத்த துறவியர் ஆதலால் பெண் உறவு பிழை என எண்ணி அதனை ஒருவி நின்றவரின் பெருமை பேசினர். கம்பர், இல்லற இன்பங்களை நல்லறங்களாக நயந் துள்ளவர் ஆதலால் அதன் நலங்களை நன்கு ஆதரித்து இங்ஙனம் நவிலலாயினர். உள்ள நிலைகள் உரைகளால் உணர வந்தன.

இவ்வாறு இம்மேதாவிகள் இருவருடைய கவி நிலைகளும், கருத்தமைதிகளும், உணர்வொருமைகளும் இனங்கண்டு இடை யிடையே தொடர்பாக இனி இதில் ஆராயவரும்.

கோசலத்தின் நிலைமை கூறும் இயல்பிலிருந்து இக்காவியத் தின் தலைமையான நிலைமைகள் சில இதுவரை ஆராய வந்தன.

கோசலம் என்னும் பெயர்க்குப் பொருள் மகிழ்ச்சி தருவது, பரிசுத்தமானது என்பதாம்.

இந்த இனிய நாட்டை வளப்படுத்திச் செழிப்புறச்செய்து பலவகையிலும் அலங்கரித்திருத்தலால் "கோசலம் புனை ஆற் றணி கூறுவாம்" என்று தோற்றுவாய் செய்துகொண்டார். இது

கவிக்கூற்று. இங்கே ஆறு என்றது சரயு நதியை. நில நலம் கூற வந்தவர் அதற்கு மூலமாயுள்ள நீர்வளம் கூற நேர்ந்தார்.

அணி என்றதனால் அந்நதிநிலை, நீர்ப்பெருக்கு, பலன், நலன் முதலிய அழகியல்புகளெல்லாம் மொழியவரும் என்பது அறிய

## சரயு நதி.

சரயு என்பது இமயமலையிலுள்ள மானச சரசின் தொடர்பாய் வருகின்றது. அதனால் அது சரயுநதி எனப் பேர் பெற்று வந்தது. நிறைந்த நீர்ப்பெருக்குடையது. அது மேல் திசையிலிருந்து நேரே வந்து, அயோத்தி நகருக்கு அருகே வடபுறமாய் வளைந்து, கிழக்குமுகமாய்ப் படர்ந்து, அதன் பின் தென்திசை நோக்கித் திரும்பி, பின்பு தென்கிழ்த் திசையில் போய்க் கங்கையோடு கலந்து போகின்றது. அச் சங்கமத் துறை அக்காலத்தில் மிகவும் புண்ணிய நிலையமா எண்ணப்பட்டிருந்தது. அந் நதி என்றும் குறையாத நீர்வளமுடையதாய் நிலவியிருந்தமையால் சீவநதி என யாவராலும் புகழ்ந்து பாராட்டப்பெற்றது. அதற்கு இராமகங்கை என்று ஒரு பெயரும் உண்டு. கோசல நாட்டிற்கு உயிராதாரமாய் உறவுகொண்டுள்ளமையால் கம்பர் உரிமை கொண்டு முதலில் அந்நதி நலனைப் பாட நேர்ந்தார்.

கடவுள் வாழ்த்துப்போல் வான் சிறப்புக் கூறலும் மங்கல வழக்கான நூல்மரபாதலால் அவ் வான் வழி வந்த நீர்ச்சிறப்பு இக் காவியத்துக்கு வாய்ப்புற வந்தது. இந்த ஆற்றுப் படலத்தில் முதலிலுள்ள கவிதான் முன்னர்க் குறித்தது. இன்னும் சில காண்போம். வெண்ணிற நீறுபுனைந்த சிவபெருமான்போல் மேகங்கள்விண்ணில்படர்ந்துபோய் எண்ணிலடங்காக் கடல்நீரை மொண்டு திருமால் எனக் கருமை எய்தி மீண்டு பெருவானம் எழுந்து பாருலகின்புற மேருமலைமேல் மழைபெய்தது என அயல் இரு கவிகளில் உரைத்து அப்பெயலின் காட்சியை ஓர் உவமையோடு பொருத்தி அடுத்து உணர்த்துகின்றார்.

### மழை பெய்த மாட்சி.

புள்ளி மால்வரை பொன்னெனல் நோக்கிவான்
வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள்
உள்ளி யுள்ளவெல் லாமுவந் தீயுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே. (ஆற்றுப்படலம் 4)

இமய மலைமேல் மேகம் நீரைச் சொரிந்த நிலையை வருணித்த படியிது. புள்ளி என்பது இமயமலைக்குப் பெயர். "மேருவும் புள்ளியும் விளம்புவர் அதற்கே" என்றது (பிங்கலந்தை). இப் பேருண்மை தெரியாமல் புள்ளி என்னும் சொல்லுக்கு வேறு வேறு பொருள் கூறினாரும் உளர். தாரை=நீரொழுக்கு. மேலிருந்து இடையறாது ஒழுகுகின்ற வெண்ணிறமுடைய நீர்ச் சொரிவுகள் வெள்ளிக் கம்பிகள்போல் இருந்தன என்பதாம். வீழ் = விழுது. ஆலமரத்தின் கிளைகளிலிருந்து வளர்ந்து நேரே நிலம்பாய்ந்து ஊன்றி நிற்கின்ற கொடிகளை வீழ் எனவும் விழுது எனவும் வழங்கி வருதல் காண்க. கீழ்நோக்கி வீழ்வது என்னும் ஏதுவான் வீழ் என்னும் பெயர் விளைந்து வந்தது. நல்ல நீர் வெள்ளை நிறமுடையதாய் நேரே கொடிகள்போல் நீண்டு நிலம் தோய்ந்து நின்றமையால் வெள்ளி வீழ் என்றார். பொன்னும் வெள்ளியும் உலோக வகையில் நெருங்கிய சம்பந்தம் உடையன ஆதலால் அந்த இன முறையில் இரண்டும் ஒன்றாய் மருவிநிற்கும் படி வானம் உரிமைசெய்து வைத்தது என்பார், "வரை பொன் எனல் நோக்கி, வான் வெள்ளி வீழ்" வீழ்த்தியதென்றார். பொன் னிற முள்ள இமயமலைமேல் வெள்ளிய நீர்த்தாரைகள் வீழ்ந்த தோற்றம் பொற்றகட்டில் வெள்ளிக் கம்பிகளை நீளமாக நாட்டி வைத்தது போல் நிலவி நின்றதென்பதாம். தாரையின் உருவக் காட்சியும், கவியின் உள்ளக் காட்சியும் இதில் ஒருங்கே மருவி யுள்ளன. இமயம் அருகே நின்று பெயல் இயல் கண்டபடி இது.

மேகம், வள்ளியோரின் தாரைகள் வழங்கின என்று கூட்டிக் காண்க. கைம்மாறு கருதாமல், உள்ளதை ஒளியாமல் எல்லாவற் றையும் ஒருங்கே கொடுக்கும் இயல்பு நோக்கி வள்ளல்கள் இங்கே உள்ள நின்றார். வழங்கல் = அள்ளி வீசுதல்.

மேகம் போல் கொடுத்தான் என எங்கும் முன் மாதிரியாய் உவமை நிலையில் உயர்ந்து வருகின்ற அது, இங்கே அந்நிலை குறைந்து உவமிக்க நின்றது.

மழை பெய்தல் இயற்கை நிகழ்ச்சி; உள்ளி உதவும் உயி ருணர்ச்சி அதற்கு இல்லை; ஆதலின் அவ்வுணர்ச்சியுடைய வள்ளி யோரின் உயர்ச்சியைக் கவி இங்ஙனம் உய்த்துணர வைத்தார்.

மேகம் வெண்மாரி பெய்யும்; வள்ளல்கள் பொன்மாரி பொழி வர்; அது பயிர்களை வளர்க்கும்; இவர் உயிர்களை வளர்ப்பர். அது இடி முதலிய கொடுமைகளுடன் கூடியிருக்கும்; இவர் நகை இன்சொல் முதலிய நலம் பலகனிந்து எங்கும் இனிய நீர ராய் இதம்புரிந்து நிற்பர்; அது, பெயல்மாறும்; இவர் யாண்டும் செயல் மாறார்; ஆதலால் அதனினும் இவர் உயர்வான அருள் நலமுடையர் என்னும் அமைதி தெரிய உவமையில் வந்தனர்.

உள்ளி என்றது நிலையாமை முதலியவற்றை நினைந்து என்றவாறு. "இளமையும் நில்லா, யாக்கையும் நில்லா, வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா, புத்தேள் உலகம் புதல்வரும் தாரார், மிக்கஅறமே விழுத்துணையாவது" என மேலோர் உரைத் துள்ள உறுதிமொழிகளை உள்ளி என்க.

உள்ளல்=உள்ளத்தே ஊன்றி நினைத்தல். உள்ளலும், உவத் தலும் ஈதலுக்கு இதில் அடைகளாய் வந்துள்ளஅருமை ஆராயத் தக்கது. உத்தம வள்ளல்களின் உள்ளப் பண்புகள் உள்ளுற இங்கே உணர நின்றன.

நிலையில்லாத செல்வம் தம் கையில் நிலைத்துள்ள பொழுதே நிலையான புகழ் புண்ணியங்களை அடைந்துகொள்ள வேண்டும் என்று நினைந்து விரைந்து ஈதலைச் செய்க என நினைவூட்டி அறி வூட்டி நெறிகாட்டிய படியிது.

"அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்" (குறள் 333)

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு" (குறள் 231)

என்ற வள்ளுவப் பெருந்தகையின் வாய்மொழிகளை உள்ளி யீயும் வள்ளியோர் என்பதுமாம். அல்கல் = நிலைத்தல்.

ஒத்த பிறப்பினையுடைய மக்களுள் தம்மைப் பொருளுடைய ராக இறைவன் அருள்புரிந்து வைத்த நன்றியை நினைந்து பிறர்க்கு இரங்கி உதவும் பெற்றியாளர் என்றவாறுமாம்.

"செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே" (புறம் 189)

என்னும் உண்மை யுணர்வு ஈதலுக்கு ஏதுவாகும் ஆதலால் "உள்ளி ஈயும்" என்ருர்.

"வழங்கலும துய்த்தலும் தேற்ருதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செலவம்—தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப! அதுவன்றே
நாய் பெற்ற தெங்கம் பழம்." (பழமொழி)

என ஈயாத செல்வன் நாயாக இழிக்கப்படுதலையும், ஈவான் தேவன் என ஏத்தப் பெறுதலையும் ஒருவன் எண்ணப் பெறுவனுயின் அவன் உள்ளம் திருந்தி உதவ நேர்வன் ஆதலால் உள்ளல் ஈகைக்கு உரிமையாய் வந்தது.

வள்ளல்கள் அருள்நலம் கனிந்த உள்ளமுடையவர்கள் ஆதலால் பிறர்க்கு உதவி அவரது முகமலர்ச்சியைக் கண்டு இவர் அக மகிழ்ச்சியடைவர். ஈகையில் ஓர் பேரின்பம் உள்ளூர இனிதமைந் துள்ளமையால் "உவந்து ஈயும்" என்ருர்.

"ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்" (குறள் 228)

என ஈகையின் இன்ப நிலையை நினைந்து, அந்நலனை அநியாய மாயிழந்திருக்கும் உலோபிகளுடைய உள்ளக் கொடுமையையும், மடமையையும் தேவர் இதில் இகழ்ந்திருத்தலறிக.

ஈகையால் விளையும் பெருநலங்களை எதிரறிந்துள்ளமையானும், இம்மை மறுமை என்னும் இருமையினும் பெருமை மிகப் பெறுதலானும் ஈதலுடையார்க்கு இயல்பாக உவகை விளையும் என்க. அது உண்மையான ஆன்ம இன்பமாய் ஓங்கிவிளங்கும்.

யாதும் இல்லை என்று சொல்லாமல் தம்மிடம் உள்ள எல்லாவற்றையும் உள்ளமகிழ்ந்து வள்ளல்கள் ஒருங்கே உதவி விடுவாரதலால் "உள்ளவெல்லாம் உவந்து ஈயும்" என்ருர். உடல் பொருள் ஆவி முழுவதையும் ஒழியாது உதவி அழியாப் புகழ்கொண்ட அருங்கொடையாளர் போல் பெரும் பேறுடையார் பிறர் இலர் என்க. அவ் வள்ளியோர் என்ற சுட்டு உலகப்பிரசித்தமான அவரது உயர்நிலை தோன்ற நின்றது.

உலகம் நலமுற நீரை உதவி மேகம் வானில் உயர்ந்து நிற்றல் போல் உயிர்கள் இன்புற உதவியருள்பவர் சிறந்த பதவியை யடைந்து மேல் உயர்ந்து போவர் என்பது குறிப்பு.

மழைவளம் கூற வந்தவர் வள்ளல்களையும் இடைமருவி நம் உள்ளம் கொள்ளவைத்தார். இங்ஙனம் வைத்த இவர்க்கு முன் வைப்பாக இருந்ததையும் இங்கே அறிந்துகொள்ள வருகின்றோம். அடியில் வருவன காண்க.

மழைபெய்தல்

"தேனிரைத்துயர் மொய்வரைச் சென்னியின்
மேனிரைத்து விசும்புற வெள்ளிவெண்
கோல்நிரைத்தன போற் கொழுந்தாரைகள்
வானிரைத்து மணந்து சொரிந்தவே."

(சிந்தாமணி, நாம, 4)

வெள்ளம் பரவல்.

"வள்ளற் கைத்தல மாந்தரின் மால்வரைக்
கொள்ளை கொண்ட கொழுநிதிக் குப்பையை
உள்ளம் இலலவர்க் கூர்தொறும உய்த்துராய்
வெள்ளம் நாடு மடுத்து விரைந்ததே." (சிந்தாமணி,நாம, 7)

புள்ளிமால்வரை, வெள்ளிவீழ், வள்ளியோர், தாரைகள் எனக் கம்பர் வாக்கில் வந்துள்ள இவை சிந்தாமணியிலிருந்து வந்தனவாம் என்பது மேற்குறித்த இரண்டு கவிகளின்றும் கண்டு கொள்ளலாம். ஆயினும் அவற்றை மெருகு கொடுத்து, அழகு படுத்தி, மதுரமாக்கித், தெளிவுறுத்தி, இனிமை கனிய, இன்னோசைபொலிய இவர் இசைத்திருக்கும் திறம் ஓதி நோக்கி உய்த்துணரவுள்ளது. எளிமை தெளிவு மென்மை தண்மை அழகு பெருமை நயம் நளினம் முதலிய நலங்கள் பலவும் இவர் கவியில் கலந்து ஒளிசெய்து நிற்கின்றன. உணர்ந்து உணர்ந்து உள்ளூற உவந்துகொள்ளும்படி இவரது கவிகள்உருவாகியுள்ளன.

உளளல உவததல வளளல் ஈகை என்னும் ப
பதிந்துள்ள நயங்கள் விழைந்து வியந்துகொள்ளும் நிலையில் விளை ந்து வந்துள்ளமை காண்க. நயம் தெரியின் பயன் பெரிதாம்.

இங்கே கூறியதை நினைவில் வைத்துக்கொண்டு கிட்கிந்தா காண்டத்தில், கார்காலப்படலத்தில் இதற்கு இனமாக ஒன்றை இசைத்திருக்கிறார். ஏறக்குறைய 4360 பாடல்களுக்கு அப்பாலுள்ள அக்கவியை இங்கே கவர்ந்து பார்ப்போம்.

“ மள்கலில் பெருங்கொடை மருவி மன்னுளோர்
உள்கிய பொருளெலாம் உதவி அறறபோது
எள்கலில் இரவலர்க்கு ஈவது இன்மையால
வெள்கிய மாநதரின் வெளுத்த மேகமே.”

(கார்காலபபடலம் 104)

கார்காலம் கழிந்து குளிர்காலம் வந்தவுடன் மழைபெயல் ஒழிந்து வெண்ணிறமாய் மேகங்கள் வான்படர்ந்து நிற்கும் ஆதலால் அந்நிலையினை வருணித்த படி யிது. மள்கல்=குன்றல்.

உள்ள பொருளெல்லாம் பிறர்க்கு உதவிவிட்டுக் கையில் ஒன்றும் இல்லாதிருக்கும்பொழுது தம்பால் வந்து கேட்பவர்க்குக் கொடுக்க முடியாமையால் உள்ளம் நாணி வள்ளல்கள் முகம் ... மேகங்கள் வெளுத்திருந்தன என்பதாம்.

நாணமும் கவலையும் மனத்தில் புகுந்தால் மானமுள்ள மனிதன் உடல் நிறமாறிப் படரடைய நேரும் ஆதலால் “வெள்கிய மாந்தரின் வெளுத்த” என்றார். அகநிலையால் புறநிலை புலப்பட்டுள்ள இதில் மானச தத்துவம் காண்க.

கார்மேகங்கள் வள்ளல்கள் என வழங்கி வந்தன; வழங்க இல்லாத பொழுது அவர் உள்ளம் நாணி உரு மாறியது போல் அவை நிறமாறி வெளுத்துப்போயின என்பதாம்.

பிறர்க்குப் பயன்படும் அளவே மனிதன் பெருமையடைந்து பேரொளி பெறுகின்றான்; பயனற்ற பொழுது நயனற்று அவன் ... படுகின்றான் என்பது இதில் உ...

மழை பெய்த நிலையினை வள்ளல்களுடன் வைத்து இவ்வாறு நம் உள்ளம் உவந்துகொள்ள உரைத்தார்; அதன்பின் அம்மழையாலான வெள்ளத்தின் பெருமையை விளக்குகின்றார்.

வெள்ளம் பெருகிய காட்சி.

மானம் நேர்ந்தறம் நோக்கி மனுநெறி
போன தண்குடை வேந்தன் புகழெனa,
ஞான முன்னிய நான்மறை யாளர்கைத்
தானம் என்னத், தழைத்தது நீத்தமே. (ஆற்றுப்படலம் 5)

சரயு நதியில் வெள்ளம்பெருகி ஓடிய நிலையினைவருணித்தபடியிது. நீத்தம் = வெள்ளம். நீந்தப்படுவது என்னும் ஏதுவான் வந்தது. தழைத்தல் = கிளைத்துப் பெருகல்.

மழை பெய்தவுடன் பல துள்ளி பெரு வெள்ளம் என்றபடி நீர்மிகப் பெருகி நதிகளில் நிமிர்ந்து ஓடும் ஆதலால் அவ் இயல் பினை உரைக்க வந்த இதில் கம்பர் உயிர்க்கு உறுதியான சில உயர்நலங்களையும் உடன் உணர்த்தி யிருக்கின்றார்.

நீர்ப்பெருக்கு அளவிட முடியாதபடி மிகவும் அதிகமாயி ருந்த தென்பதை இரண்டு உவமைகளால் விளக்குகின்றார். புகழ் எனத், தானம் என நீத்தம் தழைத்தது என்றது அத்தழைவு விளைவுகளின் நிலை தெரிய நின்றது.

மானம் ஆவது யாண்டும் நிலைதாழாது நிற்றல். மனம் மழுங் காது நிற்கும் நிலைமையது ஆதலால் மானம் என வந்தது. இழி வழிகளில் யாதும் இறங்காமல், பழிபாவங்களை நாணி, என்றும் விழுமிதாய் உயர்நிலையில் உறுதிசெய்து நிற்கும் நிலையே மானம் என்க. இதனால் அதன் மாட்சி புலனும்.

மானமும் அறமும் பேணி மனு நீதி முறையே அரசுபுரிந் தொழுகும் மன்னவனுடைய புகழ்போல் வெள்ளம் விரிந்தெழுந் தது என முன்னிரண்டடிகளில் குறித்தார்.

பரம்பரையாகச் சிறந்து வருகின்ற உயர்ந்த குடிப்பிறப்பில் மானம் அடிப்படையாய் அமைந்திருக்கும் ஆதலால் "மானம் என்றார். நேர்தல் = இயல்பாக எதிர்ப்படல்.

செல்வ நிலையில் சிறந்து எல்லாரையும் ஆளுகின்றோம் என்ற செருக்கினால் மனம்போனபடியே ஒருவன் போவானாகில் அவன் மானம் அழிந்து, அறம் இழந்து, புகழ் ஒழிந்து, பழிதுயரங்க ளில் அழுந்துவான் என்பது எதிர்மறையா இதில் உணர்ந்து கொள்ள நின்றது. அரசுக்கு அறிவுறுத்தி யுள்ள அமைதி அறிக.

புகழோடு வெள்ளத்தை ஒப்புற வைத்தது வெண்மை, தண்மை, எவரும் வியந்து நயந்து நோக்கும் தன்மை முதலிய நன்மைகளான் என்க. வானம் தழுவி வந்து வளம்பட எழுந்த வெள்ளம், மானம் தழுவி அறம் பதிந்து வந்த புகழுடன் இனம் படிந்து நின்றது.

மான நலம் வாய்ந்து தருமகுண சீலனாய் ஒருவன் நெறியமர்ந்தொழுகுவானாயின், அவன் புகழ் மிகப்பெற்று உயர்நலம் அடைவான் என்பது இதில் உணர்ந்துகொளலாகும்.

புகழும் மானமும் உயர்ந்தன ஆதலால் உயரிய அரசர் யாண்டும் அவற்றை உரிமையுடன் போற்றி வரவேண்டும் என்று இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

எந்நாட்டிலும் எககாலத்திலும் இப்புகழ் மானங்கள் குல மக்கள் எல்லாராலும் விழைந்து பாராட்டப்பட்டுள்ளன.

ஆங்கிலப் பெருங்கவிஞராகிய ஷேக்கிஸ்பியர் (Shakespeare) குறித்துள்ளதும் ஈண்டு இனமாக அறியத்தக்கது.

> "The purest treasure mortal times afford
> Is spotless reputation; that away,
> Men are but gilded loam or painted clay.
> Mine honour is my life; both grow in one;
> Take honour from me, and my life is done:
> In that I live and for that will I die."
>
> (King Richard The Second I. 1.)

"குறுகிய வாழ்நாளுள் அடையத்தக்க அரிய செல்வம் மாசற்ற புகழே; அது இல்லாவிடின் மனிதர் வெறும் மண் பாவைகளே; மானமே எனது உயிர்; பெயரளவில் வேறாயினும் அவ்விரண்டும் ஒன்றே. மானம் என்னிடமிருந்து நீங்கநேரின் அக்கணமே நான் இறந்துபட்டேன்; மானத்தில் இருக்கின்றேன்; அதற்காக என்னுடைய உயிரையும் விடுவேன்." என்பது மேற்குறித்துள்ள ஆங்கில வாக்கியத்தின் பொருள். மோபிரோ (Mowbray) என்னும் ஒரு குறுநில மன்னன் வாக்கில் வைத்துப் புகழ் மானங்களின் பெருமையை அக்கவிஞர் இவ்வாறு உணர்த்,

மானம் நேர்ந்து, அறம் நோக்கி, மனு நெறியே அரசன் ஒழுகிவரவேண்டும் என்று நம் கவிஞர்பிரான் உணர்த்தியுள்ள படியே இதுவும் உணர்வுதவி நிற்றலால் ஈண்டு உடன் எண்ண வந்தது. கருத்தமைதிகளைக் கருதிக் கொள்க.

ஞான நலம் வாய்ந்த நல்ல வேதியர் கையில் ஈந்த தானம் போலவும் வெள்ளம் பெருகியது என்றது அப்பெருக்கின் நிலை தெரிய நின்றது. உதவிய பொருள் சிறிதே ஆயினும் அதனை ஏற்றுக்கொண்ட பாத்திரத்தின் மகிமையால் பலன் பெரிதாதல் போல் பலவாகச் சிதறி விழுந்த சிறு துளிகள் ஒருமுகமாய் நதியில் வந்து கூடியபொழுது நீர்ப்பெருக்கு நெடிது நிமிர்ந்து பொங்கிய தென்பதாம்.

மறை = வேதம். வேதங்கள் முழுவதையும் வழுவற யுணர்ந்தாலும் ஞானம் படியாது ஈனம் படிந்துழல்வாரும் உளர் ஆதலால் அவரை விலக்குதற்கு "ஞான முன்னிய நான் மறையாளர்" என்றார். உன்னுதல் = நினைத்தல். உள்ளத்துள் அழுந்தி யிருத்தல். சித்த சுத்தியும், தத்துவ ஞானமும், அவாவின்மையும், ஆத்மானுபவமும் உடைய முத்தர்களே உத்தமமான தான யோக்கியராக இங்குக் குறிக்க நின்றனர்.

இத்தகைய ஞான சீலர்களுக்கு உதவிய தானம் சிறிதே ஆயினும் அது சிப்பியுள் வீழ்ந்த நீர்த்துளி முத்தாதல் போல் அவர் சால்பினால் சாலவும் பெரியதாய் அதன் பலன் மேலோங்கி நிற்கும் என்பது கருத்து.

"உதவி வரைத்தன் றுதவி உதவி
செயப்பட்டார் சாலபின் வரைதது" (குறள் 105)

உறக்கும் துணையதோர் ஆலம்வித் தீண்டி
இறபப நிழற்பயந்தாங்கு—அறப்பயனும
தான்சிறி தாயினும் தக்கார்கைப் பட்டக்கால
வான்சிறிதாப் போர்த்து விடும். (நாலடியார்)

இவை ஈண்டு எண்ணற் குரியன. இக்கவிகள் கம்பர் கருத்தில் ஊறியிருந்து பின்பு இவ்வாறு பீறிவந்துள்ளமை தேறலாகும்.

உயர்ந்தவர்க்கு உதவிய தானத்தின் பலன் மிகவும் ஓங்கி வளரும் என்பதை மாவலி மன்னன் வாமனருக்குத் தானம்

வழங்கியபொழுது அவர் வானுற வளர்ந்ததை இணைத்துக்காட்டி நூலுள்ளும் இவர் அழகாக உணர்த்தியிருக்கிறார். அடியில் வருவது காண்க.

உதவிநிலை.

" கயந்தரு நறுமபுனல கையில தீண்டலுாா
பயந்தவர்களும் இகழ குறளென பாா் தநெடுநி
வியந்தவர் வெருகமகாள விசும்பின் ஓங்கினான
உயர்ந்தவாககு உதவிய உதவி ஒப்பவே."

(வேள்விப்படலம் 35)

பெற்றுக்கொண்டவர் பெருமை அளவே உதவியின் பலன் பெருகும் என்ற வள்ளுவ தேவரின் சொல்லும் பொருளும் பிணைந்து மேற்குறித்த திருக்குறளுக்கு ஓர் உதாரணமான விளக்க வுரை போல் இது விளங்கி நிற்றல் அறிக. பயந்தவர்கள் என்றது பெற்றோர்களை. தாய் தந்தையர் என்க. எத்துணை இழிவாயிருந்தாலும் தாம் பெற்ற பிள்ளையை எவரும் இகழார். அத்துணை அன்புரிமையுடைய பெற்றோரும் இகழும்படி அக்குறளன் இருந்தான் என அவனது உருவின் குறுமை சிறுமைகளை இவ்வாறு உணர்த்தியருளினார். குறளன் இரண்டடி உயரமுடையவன். குறளோடு இக்குறளன் உவமையாய் வந்துள்ளமையை வள்ளுவமாலையில் கண்டுகொள்க. குறளன் என்றது வாமனரை. திருமால் வாமனராய் மாவலியிடம் வந்து மூன்றடி மண் கேட்டு அவன் உவந்து தானமாகக் கையில் நீர் வார்த்தபோது அவர் வானுற வளர்ந்து நின்றார். அவ்வளர்நிலை உயர்ந்தவர்க்கு உதவிய உதவிபோன்று மிகவும் ஓங்கியிருந்த தென்பதாம்.

வெள்ளம் பெருகி விரிந்த விதத்தை உரைக்க வந்தவர், நம் உள்ளம் பெருகி விரியும்படி உதவியின் பெருமையை இங்ஙனம் உணர்த்தி உயிர்களை ஊக்கி யிருக்கின்றார்.

இவரைப் பின்பற்றிப் பரஞ்சோதிமுனிவரும் தானநிலையை ...டன் வைத்து வழங்கி வந்திருக்கின்றார்.

உத்தம தானம்

" இழிந்த மாந்தர்கைப் பொருள்களும் இகபரந் தாமை
கழிந்த யோகியர் கைப்படில தூயவாய்க் களங்கம்
ஒழிந்தவாறுபோல் உவரியுண்டு உவர்கெடுத்து எழில்
பொழிந்த நீர்அமுதாயின புவிக்கும் வானவர்க்கும்."

(திருவிளையாடல், நாட்டு, 10)

கட்டுக்கிடையாய் உப்புக் கச்சிக்கிடக்கின்ற கடல்நீர் மேகத்தின் வாய்ப்பட்டவுடன் உவர் நீங்கி எவர்க்கும் இனிய நீராதல் போல் இழிந்த உலோபியரிடம் வீணேகுவிந்துகிடக்கும்பொருள் உயர்ந்த ஞானியர்கைப்பட்டபொழுது புனிதமாய் எல்லார்க்கும் இனிமை பயந்தருளும் என இது உணர்த்தி நிற்றல் காண்க. ஞானியர் கைத்தானம் என வெள்ளம் விரிந்த தென்பதை அடியொற்றி வேறொருபடியில் உருமாறி இதுவந்துள்ளமையை உய்த்துணர்ந்து கொள்க. இன்னும் ஒன்று காண்போம்.

" கள்ளம் கொலைகட புலைகாமமளன றைந்தும அற்றூர்கரு
உளளம் தெளிந்தோர் தருமஉத்தம தானம் என்னப
பள்ளம் திடர்மால வரைகானகப பககம எங்கும்
வெள்ளம பெருகிப பரந்தோடி விரைந்த தன்றே. "
(அரிச்சந்திரபுராணம், நாட்டு, 6)

தானம் என்னத் தழைத்தது நீத்தமே என்ற அடியினையே படி எடுத்து இதுவும் வந்திருத்தல் அறிக. இது பாடியவர் ஆசு கவிராஜர் என்பவர். நமது கவிஞர்பிரான் கவிகளைக் கருத்தில் வாங்கிக்கொண்டு மற்றைக் கவிராயர்கள் விருத்தியடைந்து வந்திருக்கும் விதம் இவற்றால் அறியலாகும்.

நீர் நிலைமையைச் சொல்லவந்த இதில் நல்ல நீர்மைகள் பல துள்ளி விளங்குதல் காண்க.

ஒருவன் வருந்தி யீட்டிய பொருளை அறிவு நலம் கனிந்த மேலோர்க்கு உவந்து உதவின் அதனால் அவன் சிறந்த பலனடைந்து உயர்ந்து விளங்குவான் என்பது கருத்து.

மானம் பேணுக; அறம்புரிக; மனுநெறி ஒழுகுக; புகழொடு தோன்றுக; தானம் செய்க; என இவ்வெள்ளக் கவியில் சில உறுதி நலங்களை நம் உள்ளம் பதியுமாறு கம்பர் உணர்த்தியிருக்கும் திறனை உய்த்துணர்ந்து உயர் பயன் கொள்க.

இவ்வாறு பெருகிய வெள்ளத்தின் நிலையை, விலைமாதர், வணிகர், வானவில், வானரர், கட்குடியரோடு சிலேடையில் ஒப்பவைத்துச் செப்பமாக வருணித்திருக்கின்றார். அவ்வருணனைகள் நுட்ப வுணர்வை நுவன்று நிற்கின்றன. பல சரித வரலாறுகளையும் குறிப்பாக விளக்கியுள்ளன. அதன் பின்பு நதியில் வெள்ளம் வரம்பமைந்து ஒரு நெறியே ஒழுகிய நிலையைஉரைக்கலானார்.

சரயு நதியின் தன்மை

*இரவி தன்குலத் தெண்ணிலபல வேந்தர்தம்*
*பரவு நலலொழுக் கினபடி பூண்டது*
*சரயு என்பது தாய்முலை அன்னதிவ்*
*வுரவு நீரநிலத தோங்கும உயிர்கெலாம்.*

(ஆற்றுப்படலம் 12)

சூரிய குலத்து அரசரது நல்லொழுக்கம் போல் சரயுநதியில் நீர் என்றும் மாறாது ஒழுகி வந்தது என்பதாம். இரவி = சூரியன். மனு, மாந்தாதா, முசுகுந்தன், அரிச்சந்திரன், பகீரதன், திலீபன், சிபி, ககு, ரகு, அசன் முதலிய திசைமெச்சிய மன்னர் பலர் அக்குலத்தில் தோன்றி இசைவளர்த்து வந்துள்ளமையால் "எண்ணில் பல் வேந்தர்" என்றார்.

அக் குல மன்னர் ஒழுக்கம் யாண்டும் புனிதமாய், எவ்வுயிர்க்கும் இனிமைபயந்து, செவ்விய நீர்மையோடு சீர்மை எய்தியுள்ளமையால் நீர் ஒழுக்குக்கு நேர் உவமையாய் நின்றது.

இராமனைப் பெற்ற பெருநலமுடையதாதலால் அக்குலநலம் இங்கே உரிமையாய் வந்தது. கோசல தேசத்துக்குச் சீவாதாரமான சீவநதியை, அத்தேசாதிபதிகளின் திவ்விய ஒழுக்கத்தோடு செவ்விபெற நேர்வைத்து இவ்வாறு உணர்த்தி யருளினார்.

இதனால் அந்நாட்டின் நீதி நிலையும், நெறிமுறையும், அறநலமும், குலமரபும், நிலவிளைவும், நீர்வளமும், பிறநலங்களும் தெரியலாகும். நதியின் பெயர் சரயு என்பது இக்கவியால் அறியவந்தது. என்பது என்றது உலகம் புகழநின்ற அதன் உயர்வு தோன்ற நின்றது.

நல்ல நீரினை உதவி எல்லா உயிர்களையும் இனிது வளர்த்து வருதலால் பால் உதவி மக்களைப் பேணிவரும் தாய்முலையோடு சரயு நேர் எண்ண நேர்ந்தது. "மணற்கிளைக்க நீர் ஊறும்; மைந்தர்கள் வாய்வைத்து, உணச்சுரக்கும் தாய்முலை ஒண்பால்" (திருவள்ளுவமாலை 31) என்றதில் நீர் ஊற்றும் பால் ஊற்றும் நேர் வந்துள்ளமை காண்க. உலகுயிர் ஓம்பிவரும் உரிமை அறிக.

என்றும் குன்றாமல் யாண்டும் வற்றாமல் இனிய நீர்மை யோடு ஒழுகிய நிலைமையில் குலமன்னர் ஒழுக்கத்தையும், உயிர்களைப் புரந்து வருவதில் தாய்முலையையும் நதிநிலை தழுவி நின்றதென்பதாம். உருவ அமைதியும், அரிய செயலும், இனிய பயனும் கூறியபடியிது.

தாய்முலை, பெற்ற பிள்ளையை மட்டும் பேணும்; நதி நீர் உலகத்தில் உற்ற பலவகை யுயிர்களுக்கும் உதவும் ஆதலால் "சரயு, உயிர்க்கெலாம் தாய் முலை அன்னது" என்றார். ஒவ்வோர் உயிர்க்கும் தனித்தனியே தாய்முலைபோல் அந்நதி இனித்திருந்த தென்பதாம். இதனால் அதன் பான்மையும் மேன்மையும் பயனும் நயனும் இனிது புலனும்.

"புனிறுதீர் குழவிக்கு இலிற்று முலைபோலச்
சுரந்த காவிரி மரங்கொல மலிநீர்." (புறம் 68)

என்பது கோவூர்கிழார் பாடியது. காவிரிநதிக்குத் தாய் முலையை இதில் அவர் ஒப்புரைத்திருத்த லறிக. புனிறு = ஈன்றுள்ள இளமை. இலிற்றல் = சுரத்தல்.

"பிள்ளை தைவரப் பெருகுபால் சொரிமுலைத் தாய்போல்
மள்ளர் வேனிலின் மணற்றிடர் பிசைந்துகை வருட
வெள்ளநீரிரு மருங்குகால் வழிமிதந் தேறிப்
பள்ள நீள்வயற் பருமடை யுடைப்பது பாலி"
(பெரியபுராணம், திருக்குறிப்பு-22)

பாலி நதியை முலைத்தாய் என இதில் குறித்துள்ளமை காண்க.

உரவு நீர் = கடல். நீர் நிறைந்த கடலிருந்தும் அதனால் யாதும் பயன் இல்லை; இந் நதியால் உயர் பயன் உண்டு என விநயமாக நயம் காண வைத்தார். கடல் சூழ்ந்த உலகில் உடல் சூழ்ந்த உயிர்க்கெல்லாம் சரயுநதி உயிராதாரமாய் உதவி வந்த தென்பதாம்.

அந்நீர்ப் பெருக்கு நிலப்பரப்பிலிருந்த பலவகைப் பொருள்களையும் கவர்ந்தெழுந்து, எதிர்ப்பட்ட எல்லாவற்றையும் ஈர்த்துக் கொண்டு ஆற்றில் அடர்ந்து சென்ற நிலையை ஆறு கவிகளால் வருணித்தார்; பின்பு ஏரிகுளம் கால்வாய்கள் யாவும் நிறைத்து முடிவில் அது கடலோடு கலந்த படியைக் கூறுகின்றார்.

வெள்ளம் கடல்கலந்த காட்சி

கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையில் மறைக ளாலும் இயம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையின் ஒன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சி
பல பெருஞ் சமயம் சொல்லும் பொருளும்போல்பரந்ததன்றே.

(ஆற்றுப்படலம் 19)

நீத்தம், பரம்பொருள்போல் பரந்தது என்று கூட்டிநோக்குக. பொருளும் என்றதில் உம்மை அதன் உயர்வும் அருமையும் உணர நின்றது. சேனை, யானை, கண்ணன், வினைகளோடு முன்னம் ஒப்புரைத்துள்ளதை உடன்கருதின் இறந்து தழுவியஎச்சவும்மையாம்.

கல் என்றது மலையை. வெள்ளம் இமயமலையில் தோன்றிச் சரயு நதியில் பாய்ந்து, நீர்த்துறைகள் எங்கும் நிரம்பி நின்று இறுதியில் கடலோடு கலந்தது என்பதாம்.

இதில் நாம் அறிய வேண்டிய ஓர் உறுதி நலனை விநயமாக விளக்குகிறார்.

கடவுள் ஒன்றே. அப்பரம்பொருளை இடங்கள்தோறும் பிரிந்து பரந்திருக்கின்ற மானிடங்கள் தத்தம் இடம், கலை, காலம் முதலியவற்றிற்கு ஏற்ப வேறு வேறு பெயரால் வழங்கிக் கொண்டு மதம் பல மீறி மாறுபட்டு நிற்கின்றார். அந் நிலையை நீர்நிலையோடு நேர் வைத்துக் கவி இதில் நேரே காட்டுகின்றார்.

மலையில் தோன்றிய வெள்ளம் அதில் திரண்டு விழுங்கால் அருவி என வருகின்றது; நதியில் பாயுங்கால் ஆற்றுநீர் என்று ஆகின்றது; கால்வாயில் செல்லுங்கால் வாய்க்கால் என மருவுகின்றது. அவ்வாறே ஏரி, குளம் முதலிய நீர்நிலைகளில் எல்லாம் அவ்வப்பேரோடு நிலவி நிற்கின்றது. கடலில் கலந்தபொழுது ஆழி என அமர்கின்றது; மேகம் வாய்ப்படின் மழை என எழுகின்றது; இங்ஙனம் ஒரே நீர்ப்பெருக்கு இடபேதத்தால் வேறு வேறு பெயர் பெற்று விளங்கி நிற்றல்போல், ஒரே கடவுள்மனுடபேதத்தால் பலவாய் நிலவிப் பலனுதவி வருகின்றதென்பதாம். இந்நிலையினை அறியாதார் தத்தம்கடவுளே தலைமையுடையதென மதப்பித்தேறிச் சழக்குரையாடிச்சமயப்பூசல் புரிவர்என்றவாறு.

தொல்லை என்றது ஆதிமூல நிலையை. துறை என்றது வாவி, ஓடை, கூவம் முதலிய நீர் நிலைகளை. பள்ளம் கண்ட இடத்தில்

வெள்ளம் தங்குதல்போல் அறிவுடைய மக்கட் பரப்பு உள்ள இடத்தெல்லாம் தெய்வக் காட்சி அவரவரது இயலளவு இசைந்து நிற்கும் என்பதாயிற்று.

பரம்பொருளின் பரிபூரண நிலையை அறிந்துகொண்டவர் வரம்புகண்டு வாதாட மாட்டார்; அறியாதவரோ, தாம் கண்டதையே பெரிதாகக் கருதிக்கொண்டு வறிதே வாதாடி நிற்பர். அந்நிலையினரை நீர்நிலைகளை யறியாமல் நெடிது கத்தும் கிணற்றுத் தவளைகள் என இளித்துரைத்து அறிஞர் சிரித்துப்போவர் என்க.

நீர்ப்பரப்போடு கடவுட் பரப்பை ஒப்ப வைத்துக் கம்பர் இதில் ஒரு தத்துவக் காட்சியை விளக்கி யிருக்கிறார். நேர்ந்த நீர் நிலைகளில் ஆர்ந்த நீரினை ஆருயிர்கள் அருந்தி ஆர்தல்போல் தாம் சார்ந்த சமயங்களில் தேர்ந்த தெய்வம் பேணி மக்கள் சீர் பெற வேண்டுமே யன்றி உயர்வு தாழ்வுகூறி அயலிகழ்ந்து அவம் போக லாகாதென்பது குறிப்பு.

பாரிலுள்ள நீர்நிலைகளையெல்லாம் நேரே நிரப்பி அவற்றுள் அடங்காமல் நெடுங்கடலாய் நீத்தம் நிமிர்ந்துள்ளதுபோல், தோன்றிய சமயங்களி லெல்லாம் தோய்ந்து அவற்றுள் அமையாமல் சமயாதீதமாய்ப் பரம்பொருள் பொங்கிப் பரந்து எங்கும் பூரணமாய் விரிந்து நிறைந்துள்ளதென்பது இதனால் உணர நின்றது.

சமயம் சொல்லும் என்றது சமயத்தவர் சொல்லுகின்ற பொருள் போல் என்றவாறு. ஒரே பொருளை வைணவர் திருமால் எனவும், சைவர் சிவம் எனவும், கௌமாரர் குமரன் எனவும் கூறுவதுபோல் வேறு வேறு கூறினும் மூலமுதல் ஒன்றே என்பதாம். நீர் ஒன்றே ஏரி குளம் முதலாக வேறு வேறு பெயர் பெற்று விளங்கி நின்றது என்பதை விளக்கவந்தவர் பரம்பொருள் நிலையையும் நாம் உளங்கொண்டுணரும்படி இவ்வாறு விளக்கி அருளினர். இவ்விளக்கம் இருள் நீக்கித் தெருள் ஆக்குவதாகும்.

இவரது கருத்தைக் கருத்தில் வைத்துக்கொண்டு பரஞ்சோதி முனிவர் தம் நூலில் சமயச் சார்புடன் வேறு வகையில் இந்நீர் நிலைமையை உரைத்திருக்கின்றார். அடியில் வரு காண்க.

நீர்ப்பெருக்கின் நிலை

"ஈறிலாதவள் ஒருத்தியே ஐந்தொழில் இயற்ற
வேறு வேறுபேர் பெற்றென வேலைநீர் ஒன்றே
ஆறு கால்குளம் கூவல்குண் டகழ்கிடங் கெனப்பேர்
மாறி ஈறிலவான் பயிரெலாம் வளர்ப்பது மாதோ."
(திருவிளையாடல், நாட்டுப்படலம் 17)

ஈறு இலாதவள் என்றது மூலசத்தியை. ஒரே சத்தியே பஞ்சகிருத்தியங்களைச் செய்தற்குப் பராசத்தி, ஆதிசத்தி, இச்சா சத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி எனப் பேர் பெற்று நிற்றல்போல் வாரிநீர் ஒன்றே ஆறு, கால், குளம் முதலாக வேறு பல பேரோடு விரிந்துநின்றதென்பதாம். கம்பர் வாக்கை இது அடியொற்றி வந்துள்ளமை யாரும் அறியலாகும்.

நீர் நிலைகள் எங்கணும் வெள்ளம் பெருகிய நிலையினை இங்ஙனம் உணர்த்தினார்; அதன்பின் விளைபுலங்களிலும், வேறு பல இடங்களிலும் அது பரவி யுதவிய பான்மையைக் கூறுகின்றார்.

நீர் பரவிய விதம்

தாதுகு சோலைதோறும், சண்பகக் காவுதோறும்,
போதவிழ் பொய்கை தோறும், புதுமணற் றடங்கள் தோறும்,
மாதவி வேலிப் பூக வனந்தொறும், வயல்கள் தோறும்
ஓதிய உடம்பு தோறும் உயிரென உலாய தன்றே.
(ஆற்றுப்படலம் 20)

மேல், நீர்நிலையைக் கடவுளோடு நேர் கூறினார்; இதில் உயிரோடு அதனை ஒப்புரைக்கின்றார். தாது = மலர்களிலிருந்து உதிர்கின்ற மகரந்தப்பொடி. மாதவி = குருக்கத்திப் புதர்கள். பூகவனம் என்றது கமுகஞ் சோலைகளை. இனிய மருத நில வளங்கள் இதில் மருவி யுள்ள நிலைகளை நுணுகி அறிந்துகொள்க.

குளிர்பூஞ் சோலைகள், இளமரக் காவுகள், பசுங்கொடிப் புதர்கள், பனிமலர்ப் பொய்கைகள், புதிய மணற் கேணிகள், கமுகந்தோட்டங்கள், கதலி வனங்கள், வயல்வெளிகள் முதலிய அயலிடங்களெங்கும் வெள்ள நீர் புகுந்து பரவிய இயல்பிற்கு உயிர் இதில் உவமையாய் வந்துள்ளது.

உயிர் அடைந்த பொழுதுதான் உடல்கள் வலிபெற்று இயங்கும்; அது அடையாவழி வெறும் சடங்களாய் அவை இழிந்து ஒழியும்; அதுபோல், நீர் புகுந்தபோதுதான் வயல் சோலை முதலிய நிலங்கள் வளம்பெற்று விளங்கும்; அது புகாவழி யாதொரு பயனுமின்றி அவை யாவும் பாழ்பட்டழியும் ஆதலால் நீர்க்கு உயிர் இங்கு உவமையாய் வந்தது. இந்த உயிர்த்தன்மை நீரிடத்தே அமைந்திருத்தலினலேதான் உலகிற்கு அது உயிராதாரமாய்ப் போற்றப்பட்டுள்ளது. "நீர் இன்று அமையாது உலகியல்" என்றது பொய்யாமொழி. இவ்வாறு சீவர்களுக்கு ஆதாரமாய் நீர் இருந்து வருதலால் அதற்குச் சீவனீயம் என ஒரு பெயரும் வந்தது.

ரிய எனறது மக்கள விலங்கு பறவை முதலாகச் லப்பட்ட என்றவாறு. இங்ஙனம் பல் வகை உடம்புகளே யது சோலை முதலாகப் பல் வேறு இடங்கள் அங்கு நண்ணியுள்ள மையான் என்க.

உலாயது என்றது நீர் ஓட்டத்தின் நிலை தெரிய நின்றது. இடங்கள் தோறும் வளைந்து நுழைந்து மெல்லச் செல்லும் அதன் செல்லச் செலவை நம் உள்ளம் ஓர்ந்துணர உலாயது என்னும் சொல்லால் உணர்த்தியருளினர். இச் சொல்லழகின் சுவையைச் சுவைத்துப் பார்க்க. நீரின் செலவைக் குறித்துக் கச்சியப்பர் கூறியுள்ளதும் இங்கு நினைவிற்கு வருகின்றது.

"பாம்பு அளை புகுவதேபோல் பாய்தரு பாவைத் தெண்ணீர்" (கந்த புராணம், ஆற்றுப்படலம் 33) எனவரும் இதையும், உயிர் என உலாயதையும், ஒத்து நோக்கி உவமை நயம் உணர்க.

செழுமையான விழுமிய நிலவளங்களையும், பொழில் நலங்களையும் இப்படலத்தின் இறுதியில் காட்டியது அடுத்துவரும் நாட்டுப் படலத்திற்குத் தொற்றுவாயாக என்க.

கோசல நாட்டிற்கு அழகும் வளமும் அருளி என்றும் நீர்மை குன்றாது சீர்மையோடு நிலவியுள்ள இனிய சரயு நதியைக் கூறுமுகத்தால் அரிய பல உறுதி நலங்களைக் கம்பர் இதில்

ஈகை, இரக்கம், ஒழுக்கம், மானம், ஞானம், தானம், தவம் நீதி, வீரம் முதலிய உயிர்ப்பண்புகளும், தெய்வத்தெளிவும், எவர்க்கும் உய்வைத் தரும்படி இதன்கண் பெய்து வைத்துள்ளார். உண்மையை உய்த்துணர்ந்து உயர்வு பெற வேண்டும்.

நதி நிலை முற்றிற்று.

# மூன்றாவது அதிகாரம்

## நாட்டு நிலை



புராண காவியங்கள் இயற்றப்புகுந்த கவிஞர்கள் முதலில் நாடு நகரங்களை வருணிப்பதில் தங்கள் கவனங்களை மிகவும் செலுத்தியிருக்கிறார்கள். பண்டைக் காலத்துச் சங்கநூல்களில் நாட்டு வளம் ஆங்காங்குக் கூறப்பட்டிருப்பினும் அது இயற்கை நலம் கனிந்து இனிதமைந்துள்ளது. பிற்காலத்தில் அவ்வியல்பு திரிந்து உயர்வு நவிற்சியும், கற்பனைகளும் ஓங்கி யிருக்கின்றன. அவ் வருணனைகள் காவியங்களுக்கு ஓர் சிறந்த அங்கமாகக் கருதப் பட்டு மேலும் மேலும் வளர்ந்து வரலாயின. நாடுகளையும் நகரங்களையும் வருணனை செய்வதைக் கவிஞர்கள் ஒரு கடமையாகக் கருதிப் பெரிதும் உழைத்திருக்கின்றார். நாளடைவில் ஒருவரினும் ஒருவர் முந்துற விழைந்து தம் சிந்தனைசத்தியைப் பல வகையிலும் விரித்துப் பாடி வந்துள்ளார். ஒன்றை ஒன்று நோக்கி உருக்கொண்டிருத்தலால் பல பாடல்கள் போலிகளாய்ப் பிடிமூந்துள்ளன. அதனால் தற்கால அறிவியல் ஆராய்ச்சி யாளர்கள் புரான வருணனைகளை உயர்வாக மதியாமையோடு இகழ்வாகவும் எண்ண நேர்ந்தனர். உண்மையை ஊன்றி நோக்கின் தம் எண்ணம் பிழைபாடு உடையதென்பதை அவர் எண்ணித் தேர்வர். கருத்தையும் குறிக்கோளையும் கவனிக்க வேண்டும்; கண்ணூன்றி நோக்காமல் மேலெழுந்த வாரியாக எதனையும் தீர்மானித்து இகழ்ந்துவிடலாகாது. கவி அமைதி நுணுகிய நிலையது.

கதை வரலாறுகளைத் தொடர்ந்து பாடுவதைக் காட்டிலும் இயற்கை நிலைகளை விளக்கிச் செல்வதில் கவிஞனுக்கு அறிவும் ஆற்றலும் உலக அனுபவமும் அதிகம் வேண்டும். வருணனை என்றால் வெறும் கற்பனை அன்று; விற்பன நலங்கள் பல அதில் விளைந்திருக்கின்றன. நாட்டின் இயல்புகளைக் காட்டும் பாட்டுக்களில் நில மாட்சியோடு பல்வகைக் காட்சிகளும் பாவலன் ஆட்சிகளும் ஒருங்கே காணப்படுகின்றன.

செழிப்பான ஒரு நாடு நீர் வளமும் நிலவளமும் உடையதாய் நிலவியிருக்கும் ஆதலால் அதன் நிலைமையைத் தலைமை

யாகப் பாவலர்கள் ஆவலுடன் கூறுகின்றனர். அங்ஙனம் கூறும் பொழுது யாரும் வியந்து நயந்து விழைந்து காணும்படி அக் காட்சிகளை விழுமிய நிலையில் அறிவு நலம் கனிய அமைத்திருக்கின்றார். நம் அனுபவத்தில் கண்டவற்றோடு காணாதவற்றையும் கவிகள் கொண்டு வந்து காட்டுகின்றன. அக்காட்சியால் அந் நிலத்தின் மாட்சிகளை நினைந்து மகிழ்கின்றோம்.

கோசல நாட்டின் நிலவளங்களைக் குறித்துக் கம்பர் அறுபது பாடல்கள் பாடியிருக்கிறார். அவற்றுட் சிலவற்றை இங்கே வரைந்து காட்டுகின்றேன். அப்பாட்டுக்களின் பொருள் வளங்களை மனக்கண்ணால் காணலாம்; சொல்வளங்களை வாய்விட்டுப் பாடிச் செவியால் அறியவேண்டும்.

### வயல்களின் இயல்கள்

*வரம்பெலாம் முத்தம்; தத்தும் மடையெலாம் பணிலம்; மாநீர்க்*
*குரம்பெலாம் செம்பொன்; மேதிக்குழியெலாம் கழுநீர்க் கொள்ளை;*
*பரம்பெலாம் பவளம், சாலிப்பரப்பெலாம் அன்னம்; பாங்கர்க்*
*கரம்பெலாம் செநதேன்; சந்தக் காவெலாம் களிவண் டீட்டம்.* (1)

### வளமலிந்த பலவகை ஒலிகள்

*ஆறுபாய் அரவம், மள்ளர் ஆலைபாய் அமலை; ஆலைச்*
*சாறுபாய் ஓசை; வேலைச்சங்கின்வாய் பொங்கும் ஓதை:*
*ஏறுபாய் தமரம்; நீரில் எருமைபாய் துழனி; இன்ன*
*மாறுமாறாகித் தம்மில் மயங்குமாம் மருத வேலி.* (2)

### மருதநிலக் காட்சி

*தண்டலை மயில்கள் ஆடத், தாமரை விளக்கந் தாங்கக்,*
*கொண்டல்கள் முழவின் ஏங்கக், குவளைகண் விழித்து நோக்கத்,*
*தெண்டிரை எழினி காட்டத், தேம்பிழி மகர யாழின்*
*வண்டுகள் இனிதுபாட, மருதம் வீற்றிருக்கும் மாதோ.* (3)

### சங்கு முதலியன தங்கியுள்ள நிலை

*நீரிடை யுறங்கும் சங்கம்; நிழலிடை யுறங்கும் மேதி;*
*தாரிடை யுறங்கும் வண்டு; தாமரை யுறங்கும் செய்யாள்,*
*தூரிடை யுறங்கும் ஆமை; துறையிடை யுறங்கும் இப்பி*
*போரிடை யுறங்கும் அன்னம்; பொழிலிடை யுறங்கும் தோகை.* (4)

புலங்களில் விளங்கியன

படையுழ எழுந்த பொன்னும், பணிலங்கள் உயிர்த்த முத்தும்,
இடறிய பரம்பிற் காந்தும் இனமணித் தொகையும், நெல்லும்,
மிடை பசுங் கதிரும், மீனும், மென்றழைக் கரும்பும், வண்டும்,
கடைசியர் முகமும், போதும், கண்மலர்ந் தொளிரும் மாதோ. (5)

அன்னக் குஞ்சுகள் தாமரையில் துஞ்சிய நிலை

சேலுண்ட ஒண்கணாரில் திரிகின்ற செங்கால் அன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்றுமேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத் தேரைதாலாட்டும் பண்ணை. (6)

இந்தக் கவிகளைச் செவிகுளிரச் சந்தத்தோடு பாடிக் காண்க.

இனிமையும் வளமையும் மலிந்து எங்கும் செழுமையும் குளுமையும் பொலிந்து விழுமிய நிலையில் விளங்கியிருந்த கோசல தேசத்து நிலநலங்களை இவை விளக்கியுள்ளன.

நாம் வசிக்கும் நிலப்பரப்பு ஐந்து வகையான தரங்களையுடையது. மலை, கடல், நாடு, காடு, வனம் என அவை மருவியுள்ளன. மலைகள் சார்ந்துள்ள நிலம் குறிஞ்சி; கடல் சார்ந்துள்ளது நெய்தல்; நாடுசார்ந்துள்ளது மருதம்; காடு சார்ந்தது முல்லை; வனம் சார்ந்தது பாலை என மேலோரும் நூலோரும் அவற்றை வரம்பு செய்துள்ளார். இவற்றுள் மருதம் நல்ல நாட்டுப்பாங்காய் நீர்வளம் நில வளங்கள் நிறைந்து, விளைபுலங்கள் செறிந்து யாண்டும் செழுமையோடு சிறந்திருக்கும் ஆதலால் அந்நில வளங்களைத் தம் புலமை நலம் தோன்றக் கவிகள் தலைமையாக உவந்து பாடியிருக்கின்றார். நாட்டு வளம் பாட்டு வளத்துடன் பதிந்து வரலாயது.

அவ் வரன் முறையில் நம் கவிநாயகரும் இங்கே வந்திருக்கின்றார். நாட்டு நிலையைக் குறித்து இவர் கூறியுள்ளவற்றுள் இந்த ஆறு பாடல்கள் முன்னுற இங்கே மாதிரிக்காகக் காட்ட நேர்ந்தன. குறித்த கவிகளைக் கொஞ்சம் கூர்ந்து பார்ப்போம்.

1. வயல் வரப்புகளில் யாண்டும் நல்ல முத்துக்கள் பிதிர்ந்து கிடக்கின்றன; நீர் தத்திவிழும் மடைப்பக்கங்கள் எங்கணும் சங்கினங்கள் தவழ்ந்து திரிகின்றன; செய்கரைகளில்செம்பொற்

பொடிகள் திகழ்ந்துள்ளன ; எருமைகள் மிதித்துச் சென்ற கால டிகளில் கழுநீர் மலர்கள் சிதைந்திருக்கின்றன ; பரம்படித்த வயலின் சமவெளிகளில் பவளங்கள் ஒளிர்கின்றன ; நெற் பயிர் விளையும் பழனங்களில் அன்னங்கள் ஆர்ந்துள்ளன ; அயலிடங் களில் செவ்விய தேன் கூடுகள் செறிந்துள்ளன ; அழகிய சோலை களில் வண்டினங்கள் மண்டியிருக்கின்றன என்னும் இம் முதல் பாடலால் அந்நில வளங்களின் தலைமைக்காட்சியும், கம்பரது புல மைக் காட்சியும் ஒருங்கே புலனாகின்றன.

வரம்பு = வரப்பு. நீர்நிலைத்து விளைவுக்கு இதமாக, வயல் களை அளவுபடுத்தி இருத்தலால் வரம்பு என வந்தது. குரம்பு = செய்கரை. பரம்பு = பண்படுத்திய புலம். கரம்பு = வயலுக்கு அயலே சாகுபடி செய்யாத வெளி நிலம். மேதி = எருமை.

இப்பாட்டில் முற்றுச் சொல் கொடுத்து ஒரு முடிவும் செய் யாமல் ஈட்டம் என மேலெழுச்சி தோன்ற எச்சமாக இசைத்து அந்நிலவளன் முடிவுகூறமுடியாதென்பது தெரியஎன்க.

2. அடுத்த பாட்டில் "ஆறுபாய் அரவம்" என்று தொட ர்ப பலவகை ஒலிகளை விளக்கி இருக்கிறார். அரவம், அமலை, ஓசை, ஓதை, தமரம், துழனி என்பன ஓசையை ஒருபடியே உணர்த்திவருமாயினும் தனித்தனியே ஒலிக் கூறுகளை நுனித்து ணர நுவன்றுள்ளார்.

ஆறுகளில் நீர்பாய்ந்துபோகும் முழக்கங்களும், உழவர்கள் கரும்புகளை ஆலையில் இட்டு ஆட்டும் சத்தங்களும், அந்தக் கரும் பின் சாறுகள் ஊறிப்பாயும் ஓசைகளும், சங்குகள் முழங்கும் ஒலிகளும், காளை மாடுகளும் எருமைகளும் நீர் நிலைகளில் பாய் ந்து நீந்தும் நிலைமைகளும் இன்னவாறாக எங்கே பார்த்தாலும் செழிப்பான இன்னோசைகளே அந்நாட்டில் மலிந்திருந்தன என் பதை இப்பாட்டில் அறிகின்றோம். வேலி = நிலம்.

3. அடுத்த கவியில் ஒரு நடனக் காட்சியை உருவகித் திருக்கிறார். மருத நிலமாகிய அரசி ஓர் அழகிய நாடக சாலையில் அமர்ந்து சிறந்த நாட்டியத்தை உவந்து கண்டு உல்லாசமாக வீற் என்றவாறு. தண்டலை = குளிர்பூஞ்சோலை.

தாமரை மலர்கள் சுடர்விளக்குகள்போல் சொலித்து நிற்க, மேகங்கள் மிருதங்கங்கள்போல் முழங்க, குவளை மலர்கள் உவளக மகளிர்போல் அயலெங்கும் விழிபரப்பி நோக்க, தண்ணீர்த் திரைகள் அழகிய திரைச்சேலைகள் போல் அசைந்து திகழ, மகரயாழ்போல் வண்டுகள் பாட, நாட்டியப் பெண்கள் போல் மயில்கள் தம் தோகையை விரித்து ஒகையுடன் ஆட, அந்த இனிய காட்சியை மருதநிலத் தரசி மகிழ்ந்து நோக்கி அமர்ந்திருந்தாள் என்பதாம். இதில் அமைந்திருக்கும் நாடக அமைதியை நயந்து காண்க. பிறவும் இவ்வாறே கருதி அறிக.

சங்கம், மேதி, வண்டு, செய்யாள், ஆமை, இப்பி, அன்னம், தோகை, பொன், முத்து, மணி, நெல், கதிர், மீன், கரும்பு, தேன், முகம், பூ முதலிய வளமலி பொருள்களை உளமிக மகிழ்வுற அயலிரு கவிகளிலும் இயலுற விரித்துள்ளார். இறுதியில் ஒரு இனிய குடும்பக் காட்சியைக் குறித்திருக்கிறார்.

6. அன்னங்கள் தம் இளங் குஞ்சுகளைத் தாமரைப் புதர்களில் கிடத்திவிட்டு அயலே தடாகக் கரைகளிலும், வயல் வெளிகளிலும் உலாவித் திரிகின்றன; அவ்வமயம் அந்நீர் நிலைகளில் எருமைகள் வந்து படிந்துள்ளன; நெடுநேரம் ஆனமையால் ஊரிலுள்ள தம் கன்றுகளை நினைக்கின்றன; அந்த நினைவு வரவே நெஞ்சுருகிக் கனைக்கின்றன; கனைக்கவே நிறைந்து சுரந்திருந்த பால் முலைகளிலிருந்து வெளியே பீறிட்டுச் சொரிகின்றது; அப் பாலை அருகேயுள்ள அன்னக் குஞ்சுகள் பருகி மகிழ்ந்து வயிறு நிரம்பியமையால் துயில நேர்கின்றன; நேருங்கால் அயலே தவளைகள் கத்துகின்றன; அக் கத்தல்களைக் கேட்டு மெத்த மகிழ்வோடு அவை மெய்ம்மறந்து உறங்குகின்றன. இந்த நிலையில் எங்கும் நீர் வள மலிந்து அந்த நிலமண்டலம் நிலைத்திருந்த தென்பதாம். உறக்கத்திற்கு இதம்புரிந்தமையால் தவளைக் கத்து இங்கே தாலாட்டு என வந்தது. “கண்ணே! உறங்கு, உறங்கு; கற்பகமே! நித்திரை போ!” என்று இன்னவாறே ஏதேனும் பாடிக் கொண்டு தொட்டிலையாட்டி இளங் குழந்தைகளைக் கண் துயிலச் செய்யும் வழக்கம் இந்நாட்டில் பண்டுதொட்டே யிருந்து வந்துள்ள தென்பதை இதனால் அறிந்துகொள்ளலாம். திருவாய்மொழியில் தாலாட்டுப் பதிகம் அமைந்திருத்தலாலும், பிள்ளைத்

தமிழில் அது ஓர் உறுப்பாக இடம் பெற்றிருத்தலாலும் அதன் பெருவரவு புலனும்.

ஈன்ற தாய், செவிலித் தாய், பாலூட்டும் தாய், தாலாட்டும் தாய் எனவரும் தாய்மார்கள் இதில் எண்ண நின்றனர்.

நளினப்பள்ளி, மழலைப்பிள்ளை என்பவற்றிலுள்ள சொல்ல ழகுகளை எண்ணி மகிழ்க. நளினம் = தாமரை. தாய் அயலே பிரிந்திருந்தமையாலும், பசிமிகுந்துள்ளமையாலும், அது மெல் லென மிழற்றியிருக்கும் ஆதலால் மழலைப்பிள்ளை என்றார். பற வைக்குஞ்சைப் பிள்ளை என்றது அது இங்கே பால் பருகும் பாக்கியம் பெற்றிருத்தலின் பொருத்தம் தெரியவந்தது.

அன்னம் மேலெல்லாம் வெண்ணிறம் உடையதாய்க் கால் சிவந்திருக்கும் ஆதலால் "செங்கால் அன்னம்" என வந்தது. காலைக் குறித்தது நடையழகின் நயம் நோக்கி.

கண்ணாரின் திரிகின்ற கால் அன்னம் என்பதில் நயம் காண்க. கண்ணார் என்றது பெண்களை. சேல்—கெண்டை மீன். உருட்சி யும் பிறழ்ச்சியுமுடையதாய் ஒரு நிலையில் அமராமல்உலாவிவரும் இயல்பினதாதலால் கண்ணோடு அது எண்ண நின்றது. "சேலும் கயலும் திளைக்கும் கண்ணார்" (திருப்பல்லாண்டு)எனச் சேந்தனார் கூறியுள்ளதும் காண்க. உண்ட என்றதனால் சேலை வென்று விளங்கியிருக்கும் அதன் வியனிலை புலனும். கண்ணின் வண் ணமும் வடிவழகும் கூறியபடி யிது.

தன் இருப்பிடமான நீர் நிலையிலுள்ள சேல் ஒத்த கண்ணா ரது கால் ஒத்த நடையினைத் தான் அடைய விரும்பி அன்னம் அங்கும் இங்கும் அலைந்து திரிந்து நடை பழகி வந்தது என்பது திரிகின்ற என்றதனால் தெரிகின்றது.

ஆடவர் நடைக்குக் கம்பீரமான யானை நடையையும், பெண் கள் நடைக்கு அன்ன நடையையும் உவமை கூறுவது நூல் மர பாய் வந்துள்ளது. "மென்னடை அன்னம்" என்றதனால் அதன் இன்னடை புலனும்.

ஒய்யாரமாக ஒல்கி ஒசிந்து மெல்ல நடக்கும் இயல்பினது ஆதலால் அன்னம் நடைக்கு முன்னம் வந்தது. நடை அழகில் இயல்பாகவே சிறந்து எங்கும் மங்கையர் நடைக்கு உவமையாய்

வந்துள்ள அன்னம் கோசல தேசத்துப் பெண்களைப்போல் நடந்து பழகியது என்றதனால் அந்நாட்டு நங்கையரின் நடையமைதியும், விழிநிலையும், எழில்நலனும் எளிது தெளிவாம்.

"அன்னநடையும், அன்னமிலா ஐயர்நடையும் தளர்வெய்தக்
கன்னி நடக்குமநடை கற்ருள; கரும்புகசக்கும் மொழி பெற்ருள்"
(பிரபுலிங்கலீலை)

என மாயையின் நடையினைச் சிவப்பிரகாசசுவாமிகள் இதில் விளக்கியிருக்கும் அழகைப் பார்க்க. அன்னம் இலா ஐயர் என்றது உண்ணுது நோற்கும் தவசிகளை. அவரது நடை ஒழுக்கம் என்க. நடை யழகில் உயர்வுடைய அன்னம் இங்கே இடைதளர நேர்ந்தது மாயையின் நடை நிலையைக் கண்டு நாணியதால். இதில் வந்துள்ள சொல்லழகையும் பொருளழகையும் சுவை ஓர்ந்துகொள்க. மொழிக்கு மொழி தித்தித்துக் கவிகள் பழுத்து வருகின்றன. சுவை தெரியின் உயர்சுகிகளாய் ஒளிமிகப்பெறுவர்.

நடை உவமைக்கு அன்னத்தை இந்நாட்டுக் கவிகள் எல்லாரும் நயந்து கூறியிருத்தலால் அந்த அழகிய நீர்ப் பறவைகள் பண்டைக் காலத்தில் இங்கே மிகவும் பரவியிருந்துள்ளமை தெளிவா

பஞ்சவடி அருகே பன்னசாலை அமைத்து இராமர் அமர்ந்திருந்த பொழுது ஒரு நாள் மாலையில் சீதையோடு கோதாவரி நதியருகே உலாவி நின்ருர். அவ்வமயம் அவ் இருவருடைய நடை எழில்களை ஒருவரின் ஒருவர் மருமமாய்க் கண்டு உள்ளங் களித்துள்ள படியை உலகிலுள்ள எல்லாரும் காணும்படி கம்பர் வெளியே தெளிவாகக் காட்டியிருக்கிருர். காவியச் சுவை கனிய அவர் பாவில் தீட்டியுள்ள தீவிய ஓவியம் அடியில் வருவது.

"ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன் உழையள் ஆகும்
சீதைதன் நடையை நோக்கிச் சிறியதோா முறுவல் செய்தான்;
மாதவள் தானும் ஆண்டு வந்துநீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப் புதியதோர் முறுவல் பூத்தாள்)."
(ஆரணியகாண்டம், சூர்ப்ப, 5)

சதிபதிகள் இருவரும் தம் நடை எழிலை நிரலே நேரில் கண்டு அயல் அறியாமல் உளமகிழ்கூர்ந்து இளநகை புரிந்துள்ள நிலையை இதில் அறிவுக் கண்ணுல் அறிந்து மகிழலாமே யன்றி

முழுவதும் எழுதியோ, அல்லது சொல்லியோ வெளியே தெளிவாக அறிவிக்க இயலாது. ஆயினும் விழைவு கொண்டு சிறிது எழுதுகின்றேன்.

தன்னுடன் சீதை உல்லாசமாய் உலாவி வருங் காலத்தில் நதி அருகே நடமாடிநின்ற பெடை அன்னங்கள் இடையேசிறிது அஞ்சி அயலே அகன்றுபோயின; அதனை இராமன்கவனித்தான்; "ஏன் இப்படி இடைந்து போகின்றன?" என்று எண்ணி ஆராய்ந்தான்; உடனே தன் பக்கத்தே வருகின்ற சானகியின் நடை கண்ணில்பட்டது. படவே "ஆ! இந்த அழகிய நடையைக் கண்டல்லவா நாணம் கொண்டு அவ்வாறு அவை ஒதுங்கி ஒளிகின்றன" எனத் தெளிந்துகொண்டான்; கொள்ளவே தன் மனைவியின் உயர்வையும், அவ் அன்னங்களின் இயல்பையும் நினைந்து மகிழ்ந்து புன்னகை புரிந்தான் ஆதலால் "சிறியதோர் முறுவல் செய்தான்" என்றார்.

இவன் நிலை இவ்வாறாக அதே சமயம் இளமையான அழகிய ஆண் யானை ஒன்று அந்நதியில் வந்து நீர் உண்டு மீண்டது; மீளுங்கால் அதன் கம்பீரமான பெருமித நடையைச் சீதை கண்டாள்; உடனே தனது மருங்கில் வருகின்ற நாயகன் நடையை நயந்து நோக்கினாள்; வியந் தெரிந்தாள்; அருகணுகாமல் ஒரு கையை வீசி அகன்று போகின்ற அது, சாந்தணி தோளும் ஏந்திய மார்பும் காந்தொளி பரவ இருகையை வீசிப் பெருமிதமாய் வருகின்ற இராமனோடு எதிர்நடவாமல்இழிந்துபோயது என எண்ணி மகிழ்ந்தாள். உண்ணிறைந்த அம்மகிழ்ச்சியால் தன்னுள்ளேயே மெல்லச் சிரித்துக்கொண்டாள் ஆதலால் "புதியது ஓர் முறுவல் பூத்தாள்" என்றார்.

புதிய முறுவல் என்றதனால் அந்நகையின் அருமையும் அதிசயமும் அறியவந்தன. இதற்குமுன் நாயகனோடு வேறு பல விநோதச் சிரிப்புகளைச் சீதை சிரித்திருப்பினும் அன்று கண்ட காட்சியில் தன்னை மறந்து அவள் ஓர் அற்புதமான புன்னகை புரிந்திருக்கின்றாள் என்பது புலனாகிறது. என்ன நகையோ? அது!

ஒருவர் செய்தது ஒருவருக்குத் தெரியாமல் இருவர் நகையும் மருமமாய் எழுந்ததென்க. அந்த அதி இரகசியத்தை முதுநீர் உலகம் முழுவதும் காண நம் கவிநாதர் வெளியே வீசியிருக்கிறார்

அன்பு நலனும் அறிவின் கனிவும் இன்பச்சுவையும் ஒருங்கே சுரந்து உவகை நிலையாய் இக் கவி உருவாகி யுள்ளது. இதன் சுவையை இரசிகர்கள் அவியின் சுவையா ஆர்ந்து மகிழ்வர்.

இராமனை உத்தமன் என்றது பிறர்மனை நயவாப் பெற்றியை நினைந்து புருடோத்தமன் என உலகம் போற்ற அவன் உயர்ந்து நிற்கும் உண்மை தெரிக. செய்தான், பூத்தாள்; என்றதனால் அம்முறுவல் இரண்டனுள் முன்னதினும் பின்னது வெளி அரும் பாமல் அதிசய முடையதாய் அமைதி யுற்றிருந்தமை அறிய நின்றது. நகையில் நங்கையரின் உயர் நிலை இதனால் உணரலாகும்.

இருபாலார் நடைக்கும் உரிமையான உவமைப் பொருள் களை அருகே நிறுத்திக் காதல் நலம் கனிந்த இனிய மனோபாவங் களை அழகுற விளக்கியிருக்கும் கவியின் அற்புத ஆற்றல் இதில் வியந்து போற்றத்தக்கது.

மடம் = அன்னப்பேடை. போதகம்.

மதிநலங் கனிந்த சிறந்த காதலர்களிடைத் தனியே நிகழ்ந்த ஓர் அரிய சம்பவம் இவ்வாறு உலகம் தெரியவந்தது.

காவிய சித்திரமாகிய இப்பாவின் காட்சியை ஓவிய சித்திரத் தால் இவ்வளவு நயமாக உணர்த்த முடியுமா? சித்திரம் வல்லார் நோக்க. எத்திறத்தும் புத்தமிர்தமா யிது பொலிவுற்றுள்ளது.

தம் மனைவி நடையைக் கண்டு அன்னம் நாணிப்போயது என்னும் இன்ன சம்பவத்தை இன்னம் ஓர் இடத்தில் இன்னல் நிலையில் இராமர் பின்னும் எண்ணியிருக்கிறார். அன்னங்களோடு அவர் பேசியுள்ள படியை அடியில் பார்க்க.

இராமன் பரிவுரைகள்.

"அடையீர் எனினும் ஒருமாற்றம் அறிந்த துறையீர்! அன்னத்தின்
பெடையீர்! ஒன்றும் பேசிரோ? பிழையாதாற்குப் பிழைத்தீரோ!
நடைநீர் அழியச் செய்தாரே நடுவிலாதார் நனியவரோடு
உடையீர் பகைதான் உமைநோக்கி உவக்கின்றேனை முனிவீரோ?"

(கிட்கிந்தா, பம்பாநதிப் படலம் 28)

இராமர் சீதையைப் பிரிந்து திரிந்து இடையே பம்பைப் பொய்கையை அடைந்தார். அங்கே அன்னங்களைக் கண்டார்.

கடையில் இனம் ஆதலால் அவற்றோடு தம் மனைவியைக் குறித்து வினவி மறுகிப் புலம்புகின்றார். அந்நிலையை இப்பாடல் விளம்பு

"காணாமல் போன எனது மனைவி இந்த வழியே வந்தாளா? ஏதேனும் நீங்கள் கண்டதுண்டா? பண்டிருந்தே நடைமுறையில் நீவிர் இருவரும் பழகினவர்கள் அல்லவா? அவ்வுறவுரிமை கருதி யாவது உள்ளதை ஒளியாமல் சொல்லுங்கள்" என இன்னவாறு அன்னங்களை நோக்கி இராமர் பன்னிக் கேட்டார்; பறவை இயல்பின்படி அவை யாதும் பேசாதிருந்தன; இருக்கவே இவர் வருத்தம் மிக்கூர்ந்து மேலும் இரக்கம் தோன்ற உரைக்கின்றார்.

அடையீர்! எனினும் என்றது என் அருகே அன்புடன் வராமல் அயலே ஒதுங்கி நிற்பினும் என்றவாறு. அன்னங்கள் கைக்கு எட்டாமல் உள்ள நிலையைச் சுட்டிய படியிது. மனிதர் அருகே பறவைகள் நெருங்கி வாராமைக்குக் காரணம் தம்மை அவர் வெம்மையாகப் பிடித்துக்கொள்வர் என்னும் அச்சத்தால் என்க.

அந்த இயற்கையை இதற்குமுன் இவர் அறிந்திருந்தாலும் பிரிவால் நேர்ந்த வருத்தத்தால் மனம் கலங்கி யுள்ளமையால் அதனை மறந்து போய் இங்ஙனம் மயங்கிக் கூறினர்.

இன்னலுழந்து தம் இருப்பிடத்தே வலியவந்து அடைந்த வனை என்ன காரியம்? என்று விரைந்து எதிர்வந்து இரங்கிக் கேளாமல் இன்னவாறு பராமுகமாய்த் தூரத்தே நிற்பது மிகவும் அநீதி என்பது அடையீர்! என்றதில் குறிப்பு. பிரியமுடன் அருகடைந்து பரிவாற்றி யிருக்கவேண்டும்; அது புரியாது தவறினீர்! அது போகட்டும்; ஆறுதலாக ஒருவார்த்தையாவது சொல்லும் என்பார் "ஒரு மாற்றம் உரையீர்!" என்றார். ஒரு என்றது அதிகம் கூடப் பேசவேண்டாம்; கொஞ்சம் சொன்னாலே போதும் என அவை நெஞ்சிரங்கக் கூறிய தென்க. அதற்கும் யாதும் பதில் இல்லாமையால், "பெடையீர்! ஒன்றும் பேசிரோ?" என்று இரக்கமும் வருத்தமும் தோன்ற எதிர்த்துக் கேட்டார். இங்கே பெடை என்றது, "என்போன்ற ஆடவர் ஆயின் இவ்வாறு பேசாதிரார்; மடமையும் நாணமுமுடைமையால்

வந்தவரை உபசரிக்கும் மரியாதை தெரியாமல் இப்படி மௌனம் சாதிக்கிறீர்!'' என்று பேதையரின் எடை தெரியவந்தது.

இங்ஙனம் பேசாதிருத்தற்கு என்பால் ஏதேனும் பிழை உண்டோ? யாதொன்றும் இல்லையே; உங்களுக்கு ஒரு தவறும் செய்யாத என்னிடத்தே இவ்வண்ணம் நீவிர் பெருந்தவறு செய்கின்றீரே! என்பார் "பிழையாதாற்குப் பிழைத்தீரே!'' என்றார்.

பிழையாதான் என்றதில் சீதையின் பிரிவாற்றாமையால் இனி "இவர்பிழைப்பரோ? பிழைக்கமாட்டாரோ?''என்றுஉலகம் உருகி ஐயுறும்படி உயிர் சுமந்து நிற்கும் அந்நிலைமையும் உடன் காண வந்தது. தன்மையிடம் படர்க்கை தழுவி வந்துள்ளமை யால் இது வழுவமைதியாம். பிழையாதேற்கு எனத் தன்மை யில் சுட்டிக்கூறாமல் பொதுவாகப் படர்க்கையில் உரைத்தது தன் முனைப்பின்மைநோக்கி எளிதாக அது அளிபுரிய என்க. இருந்த இடத்தைவிட்டு எழுந்துவராமல் அடைகாத்திருப்பவர்போல் அமர்ந்திருக்கிறீரே என்ற இகழ்ச்சிக் குறிப்பும் அடையீா! என்ப தில் அமைந்திருக்கின்றது. பறவைகள் முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தற்கு அடைகாத்திருக்கும் ஆதலால் அந்தப் பெட்டைத் தன்மையைச் சுட்டிக் கூறிய படியுமாம்.

ஆதியிலிருந்தே நடையழகில் உயர்வெய்தி வந்துள்ள நீங்கள் எனது மனைவியாகிய சீதையின் நடையால் இடையே அவமானம் அடைந்தீர்; அதனால் இடையில்லாத அவளோடு பெரிதும் பகைமையுடையீர்; ஒரு பகையும் இல்லாத என்னோடு யாதும் பேசாமல் இவ்வாறு வேறுபட்டிருப்பது என்னே? என்று பின் இரண்டடிகளை இராமர் பரிவோடு பகர்ந்திருக்கிறார். அவளுடன் பகைத்திருப்பது சரி; என்னோடு என்ன வந்தது? என் மனைவி நடையை நினைந்து உம்மை நோக்கி உவந்து விரும்புகின்ற என்னை நீர் வெம்மையாக வெறுத்து வெகுளலாமா? என்பார் "உவக்கின்றேனை முனிவீரோ?'' என்றார். "நீர் நடை அழியச் செய்தார்; நடுவு இலாதார்;'' என்றுவெளியே குறைவு தோன்றச் சீதையைக் குறித்தது, பராமுகமாய் வாயசையாதிருக்கின்றஅவற் றைத் தம்பக்கம் வசப்படுத்த என்க. இதிலுள்ள மனோபாவங் களை நுணுகி யறிக. நடுவு நிலைமையுடையவர் நல்ல நடையினை அழியச் செய்யார்; இல்லாதவரே அதைத் துணிந்து செய்வர்

என்று வேறு ஒரு பொருளும் தொனிக்கும்படி இவ்வாக்கியங்களை அமைத்துள்ளமை காண்க. அன்னங்களோடு இன்னவாறு இராமர் பன்னிப்பேசியது தமது மனைவியின் நடையமைதி அவற்றிடம் இயல்பாக அமைந்திருத்தலால் அந்த இனமுறையில் உறவுரிமை கொண்டாடி மனமுருகி இங்ஙனம் உரையாடலானார் என்க. இதனால் அவரது காதலும் நோதலும் காணலாகும்.

நடு இலாதார் என்றது இடை இல்லாதவர் என்றவாறு. நடு = இடை பெண்களுக்கு இடை சுருங்கியிருப்பது ஓர் அழகு ஆதலால் அந்த அழகமைதி சீதையிடம் தலை சிறந்திருந்தது; அதாவது பிடியுள் அடங்கும்படி இடை மிகவும் நுணுகி எழில் மிகுந்திருந்தமையான் அவ்வுறுப்பின் சிறப்பை இங்ஙனம் உள்ளி உரைத்தார்.

இந்த இடை வனப்பைப் பலஇடங்களிலும், பலவகையிலும், பலர் வாயிலாகவும் காவியத்துள் கம்பர் குறித்திருக்கிறார். இங்கே மாதிரிக்குச் சில தெரிந்துகொள்வோம்.

சீதையின் இடை எழில்

"பல்வியல் நெறியிற் பார்க்கும் பரம்பொருள் என்ன யார்க்கும்
இல்லை உண் டென்ன நின்ற இடையினுக்கு இறுக்கண் செய்தா."
(பால, கோலங்காண் படலம் 12)

இது கவியின் கூற்று. சீதையின் இடையைப் பரம்பொருளோடு இதில் ஒப்புரைத்திருத்தல் அறிக. கடவுளை யாரும் நேரே காணமுடியாமையால் இல்லை என்றும், உலக நிலையைக் கண்டு இதற்கு ஒரு தலைமையான பொருள் இருக்கும் என்று அனுமான அளவையால் யூகமாய் உறுதிசெய்து கொள்ளுதலால் உண்டு என்றும் கடவுளைக்குறித்து உலகினர் உரையாடி வருதல் போல், சீதையின் இடையும் எவர் கண்ணுக்கும் தெரியாமையால் இல்லை எனவும், மேலும் கீழும் உள்ள உறுப்புக்களின் தொடர்பினால் நடுவே இடை ஒன்று இருக்கும் என்று ஊகித்துக் கொள்ளுதலால் உண்டு எனவும் உரையாடும்படி மிகவும் அருமையாய் அது உரு அமைந்திருந்ததென்பதாம்.

இங்ஙனம் நுண்ணிய இடையுடைய சீதைக்கு மணியணிகள் பல பூட்டி, மலர்மாலைகள் சூட்டித் தாதியர் மணக்கோலம் செய்த

## 3. நாட்டு நிலை

மையால் அப்பாரம் பொறுக்கமாட்டாமல் அது [illegible] துவண்டு ஒல்கிய தென்பார் "இடையிறுக்கு இடுக்[illegible] தார்" என்றார். இடுக்கண்=துன்பம்.

ஒப்பு அற்ற ஒரு தலைமைப் பொருளுடன் இடை [illegible] வைத்து ஏதுக்களை விளக்கி உணர்வொளி [illegible] இதில் உரைத்திருக்கும் அழகை ஊன்றிப் பார்க்க.

முழுமுதலை இடைக்கு எதிர்வைத்ததனால் ஆதி [illegible] கடைக்கண் நோக்காலேயே சத்தன் அகிலமும் [illegible] ளாடல் புரிகின்றான் என்னும் தத்துவ அதிசயமும் இதில் [illegible] துணர நின்றது.

யார்க்கும் அறிவரிய இடை என்றதனால் இராமனும் [illegible] தெளிவாக அதனை எளிதில் காணமுடியா தென்பது [illegible] இந்த உண்மையை அந்த மூர்த்தியின் சொந்த வார்த்தையால் [illegible] உறுதிப் படுத்திக் கம்பர் நமக்கு நன்கு காட்டியிருக்கிறார். [illegible] யும் காண்போம்.

சீதையைக்குறித்து இராமர் உரைத்தது.

"சட்டகம் தன்னைநோக்கி யாரையும் சமைக்கத் [illegible]
இட்டிடை இருக்கும் தன்மை இயம்பக்கேட் [illegible]
கட்டுரைத்து உவமைகாட்டக் கட்பொறி கதுவா; [illegible]
தொட்டளறகுஉணரலாம;மற் றுனை [illegible]
(கிட்கிந்[illegible])

சீதையைத் தேடிவரும்படி அடையாளம் சொல்லியர [illegible] அனுமானிடம் இராமர் கூறியபடி யிது. கண் முகம் [illegible] மற்றை அவயவங்களுக் கெல்லாம் உவமை கூறிவந்தவர் இடை [illegible] ஒப்புரைக்க இயலாதென்று இவ்வாறு இயம்பி யிருக்கின்றார்.

கண்ணால் நேரே காணத்தக்க பொருளாயின் அது [illegible] வாறிருக்கும் என அதனை ஒத்த வேறொரு பொருளை [illegible] காட்டி உரைக்கலாகும்; காட்சிக்கே புலப்படாத [illegible] யெடுத்துக்காட்டி அயல் அறிய உரைப்பது அரிது. [illegible] "உவமை காட்டக் கட்பொறி கதுவா" என்றார். [illegible] கவர்ந்து கொள்ளல். கண்ணுக்கே புலனாகா தென்பதாம்.

கையால் தொட்டுப் பழகிய எனக்கு மட்டும் சீதைக்கு இடை உண்டு என்று பரிச வுணர்ச்சியால் உணரலாமே யன்றிப் பிறரெவரும் அதனைக்கண்டு கொள்ளமுடியாதென்பதாம். "உண்டு என்ன நின்ற இடை" என்று முன்னம் கம்பர் சொல்லியுள்ளதை உண்டு எனும் சொல்லும் இல்லை என்று இராமர் வாக்கால் இங்கே மறுத்துரைத்திருக்கும் குறிப்பினைக் கூர்ந்து நோககுக.

கல்வியறிவால் பிறர் கூறுவதினும் அனுபவித்துணர்ந்துள்ள ஒருவன் சொல்வது மிகவும் உறுதியுடையது ஆதலால் அனுபவியான இராமன வாயால் சானகியின் இடைநிலையை இவ்வாறு அறுதியிட்டு முடிவு செய்து வைத்தார்.

உலகில் தோன்றிய எந்த அழகிய மகளிர்களுக்கும் வடிவழகில் சீதை முன்மாதிரியாய் முடிவமைந்து நின்றுள்ளாள் என்பது முதலடியால் அறிய நின்றது. சட்டகம்=வடிவம். இனி, சீதையின் இடையைக் குறித்துச் சூர்ப்பநகை சொல்லியுள்ளதை மட்டும் பார்த்துவிட்டு மேலே போவோம்.

## சூர்ப்பநகை சூழுரை

"பெருந்திரு உறுதற்கேற்க ஒருநாள் வேண்டுருப் பிடிப்பேன்
அன்றேல்
அருந்தவம் புரிந்திருந்தான் என்னினும் எங்கிளையவன்றன் அரிந்தநாசி
பொருந்தில் இவளோடும் உறைவேனே என்பானேல் இறைவனொன்றும்
மருந்தில தவளோடன்றே நீ நெடுங்காலம் வாழ்ந்ததென்பாய்."

(ஆரணிய, சூர்ப்பணகை—141).

அடங்கா ஆர்வத்துடன் சூர்ப்பநகை இராமனைக் காதலித்தாள். அவன் மறுத்து வெறுத்தும் அவள் யாதும் அமையாமல் மேலும் மேலும் மதத்து நெருங்கினாள். அதனால் அவளை மூக்கை அறுத்து இளக்குவன் அங்கபங்கம் செய்தான். அங்ஙனம் பங்கப்பட்டும் மீண்டும் ஆசைவயத்தளாய் இராமனை வேண்டினாள். யாதும் முடியாதென்று முடிவு தெரிந்தபின் இளையவனோடாவது என்னைச் சேர்த்துவையும்; நீங்கள் வனவாசம் முடிந்து திருவயோத்திக்குப் போகும்பொழுது அழகான உருவத்தை அடைந்துகொள்வேன்; வேண்டிய இடத்தில் விரும்பிய வடிவத்தை எடுத்துக்கொள்ளும் மந்திரசத்தி எனக்கு உண்டு; அந்த நாள் வரும்வரையும் இந்த

மூக்கு இல்லாத இவளோடு எப்படி மனம்பொருந்தி வாழ்வேன் என்று உங்கள் தம்பி சொன்னால் நீங்கள் அதற்கு, "இடை சிறிதும் இல்லாதவளோடு நெடுங்காலமாக நான் கூடி வாழ வில்லையா?" என்று ஆறுதல் கூறி அவர் மனத்தைத் தேற்றி யருளுங்கள் என இராமனிடம் சூர்ப்பநகை நயந்து வேண்டியுள்ள நிலையை மேற்குறித்த கவியில் அறிந்துகொள்ளலாம்.

காதல் வசப்பட்டவர்கள் யாதொரு அவமானத்தையும் எதிர்பாராமல் தாம் கருதிய காரியத்தை உறுதியுடன் முடித்துக் கொள்ள உள்ளமும் உயிரும் ஊன்றி நிற்பர் என்பது இதனால் உணர நின்றது. இது ஒரு காதல் நாடகம்.

சூர்ப்பநகையாய் நின்று நகைச்சுவை ததும்பக் கம்பர் இதில் நடித்திருக்கும் அழகை நயந்து நோக்குக.

சீதையின் இடை தன் கண்ணுக்குப் புலப்படாமையால் "ஒன்றும் மருங்கிலா இவள்" என்று தான் அறிந்தபடி உரைத்தாள் மருங்கு = இடை. இந்தச் சொற்போக்கில் அமைந்துள்ள தொனி நுட்பத்தையும் உய்த்துணர்ந்து கொள்க.

தான் மூக்குப்போன மூளியாயிருத்தலினால் தன்னைப்போலவே அயலையும் ஏதாவது ஒரு குறையுடன் நோக்கித் தன்னோடு இனமாக்கித் தன் நிலைமையை ஆதரித்து இவ்வாறு உரையாடலானாள். ஊனம் ஊனமே காணும் என்பது இதில் உணர

இவளுடைய மனநிலைகள், பேச்சுத் திறங்கள், உணர்வுறுதிகள், சாதுரியசாகசங்கள் மிகவும் ஆச்சரியகரமானவை. அவற்றை ஆரணிய காண்டத்தில் கண்டு மகிழலாம்.

நடுவிலாதார் என்று சீதையின் இடையமைதியைக் குறித்து இராமர் உரைத்துள்ளதற்கு இனமான இனிய சில வுரைகள் இதுவரை ஆராய வந்தன.

காவியங்களில் அன்றி வேறு நூல்களிலும் பெண்களின் இடை நுட்பத்தைப் பற்றி நயமாகக் கவிகள் பேசியிருக்கின்றார்.

"ஈயா மாக்கள் தீமொழி கவாநத
சிற்றிடை படைத்த பேரமர்க் கண்ணியர்."

(பண்டார மும்மணிக் கோவை 5)

ஈயாமாக்கள் = உலோபிகள். அவரது தீ மொழி இல்லை என்பது. இல்லை என்னும் அச்சொல்லைக் கவர்ந்த சிற்றிடை என்க. அதாவது இடை இல்லை என்னும்படி உள்ளதென்பதாம்.

உலோபியர் ஒன்றும் கொடாமல் யாருக்கும் இல்லை என்றே சொல்லிவிடுவர் ஆதலால் அந்தச் சொல்லைப் பெற்றுள்ளது என இடையின் நுண்மையைப்பற்றி நளினமாக நுவன்றிருக்கும் இதன் நுட்பம் நுனித்து நோக்கத்தக்கது.

ஒன்றும் கொடாத உலோபியர்களிடத்தும் இடை ஒன்றைக் கவர்ந்து கொண்டது; அதிலேயும் பொருள் கைவரவில்லை; ஆகவே பொருளை எவ்வழியும் அவர் ஈயார் ஆதலால் சொல்லையாவது கொள்ளை கொள்வோம் என்று முடிவாக அது துணிந்து கொண்டுள்ளபடியை நம் உள்ளம் உவப்ப இது உணர்த்தி நிற்றலறிக.

மக்கள் என்னாது மாக்கள் என்றது அவரது ஈன நிலை தெரிய.

"... உடம்பு அழிக்கும் பழியூன் உணவினர்
தவமெனத் தேய்ந்தது துடிஎனும் நுசுப்பே."

(கல்லாடம் 1)

புலால் உண்டவரது புண்ணியம்போல் ஒரு பெண்ணின் இடை தேய்ந்திருந்தது என்னும் இதை இங்கே ஆய்ந்து கொள்க. துடி = உடுக்கு. நுசுப்பு = இடை. உடுக்கு இடையே சுருங்கி இருபுறமும் விரிந்திருத்தலால் மேலும், கீழும் உறுப்புகள் பெருத்து நடுவே நுணுகி யிருக்கும் அரிவையர் இடைக்கு அது உவமையாய் வந்தது. இங்ஙனம் இடைக்கு ஒப்புப் பொருளாய் உரிமை பெற்றுள்ள துடியைக் குறித்து ஒரு கவி விநோதரசமாக நொடிசொல்லியுள்ளதை அடியில் காண்க.

"துடியை இடையெனவே சொல்லுவேன் ஆனாலோ
அடியும் பிடியுமதற் காமெனின் நான் என்செய்வேன்?"

உடுக்கை இடைக்கு நான் ஒப்புச்சொன்னால், "அந்த உவமை பொருந்தாது; தவறு சொல்லிவிட்டான்; ஆதலால் இவனை அடியுங்கள், பிடியுங்கள், கட்டுங்கள்" என்று இலக்கணப் புலவர்கள் ஆர்த்து வந்து விடுவர்; அதற்காக அஞ்சி அதனைச் சொல்லாது ஒதுங்குகின்றேன் என இடை நிலையைக் குறித்து உல்லாச சாதுரியத்துடன் இக்கவி சொல்லாடி யிருத்தல் அறிக.

குறிசொல்லுவோர் உடுக்கினை இடது கையில் பிடித்துக் கொண்டு வலது கையால் அடித்துக் குறிசொல்வது வழக்கம் ஆதலால் அந்த அடியும் பிடியும் சிலேடையில் தொனிக்க இதில் குறித்திருக்கிறார். துடியை இடை என்றால், "துடிக்கு அடியுண்டு; பிடியுண்டு; இடைக்கு அவை உண்டா?" என்று எதிர்த்துக் கேட்டால் அதற்கு நான் என்செய்வேன் என்பதாம்.

சாதாரணமான இடையை எடுத்துக்கொண்டு தம் மனங்களையும், உணர்வுறுதிகளையும், உலக அனுபவங்களையும், சுவை சுரந்து திகழக் கவிஞர் உரைத்திருக்கும் திறங்கள் இவற்றால் சிறிது உணரலாகும். இன்னவாறு இன்னும் பல உள. அந்நயங்களையெல்லாம் எழுத நேரின் இங்கே இடம் பெருகும்.

ர இடை நுட்பத்தைக் கூற நேர அயலும் சில ஓர நோந்தது. அன்ன நடையுடன் இன்ன இடையியல்பும் எண்ணி அறிந்தோம். இனி நிலவளனை நோக்கி நேரே போவோம்.

வயலின் பலவகை நிலைகளையும் இயலுற விளக்கி அதன் பின் களை பறித்தலைப் பற்றிக் கூறுகின்றார்.

## களை பறித்த காட்சி.

"பண்கள்வாய் மிழற்றும இன்சொற் கடைசியர் பரந்து நீண்ட
கணைகைகால் முகம்வாய் ஒக்கும களையலால் களையிலாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர் களைகலா துலாவி நிறபார்
பெண்கள்பால வைத்த நேயம பிழைப்பரோ சிறியோர் பெற்
(நாட்டுப்படலம் 10) றல்."

உழவர்கள் களைபறிக்கச் சென்றனர். அவர்கள் எல்லாரும் நல்ல வாலிபர்கள். வயல்களில் புகுந்து களை களையத்தொடங்கிய பொழுது உளமிக மாறினர்; விளை பயிர்களுக்கு இடையே களைகளாய் நிற்பன யாண்டும் மலர்களாகவே யுள்ளன. அவையும் இழிந்த காட்டுப்பூக்கள் அல்ல; உயர்ந்த நீர்ப்பூக்கள். குவளை தாமரை குமுதம் அல்லி முதலியனவே எங்கும் புல்லியிருந்தன. அவை யாவும் தங்கள் காதலிகளுடைய அவயவங்கள் போலவே காணப்பட்டன. குவளை மலர்களை நோக்கிக் கண்கள் போல் உள்ளனவே என்று களையாது விடுவர்; தாமரைகளைக் கண்டபொழுது முகங்களை நினைந்து அகம் குழைந்து அகல்வர்; குமுத

மலர்களைப் பார்த்து வாய் இதழ்கள் என்று நோய் செய்யாமல் ஒதுக்கிப்போவர்; இவ்வாறே கண்ட களைகள் யாவும் தம் காதலி களுடைய கண் முகம் வாய்களைப்போன்ற மலர்களாகவேதோன்றி னமையால் யாதொரு களையும் களைந்தெடாமல் வளர்ந்து வந்தார் என்பதாம். கடைசியர் = மருதநிலப் பெண்கள்.

அந்நாட்டில் உழவு தொழில்புரியும் இழிகுல மகளிரும் எழில் மிகுந்திருந்தார் என்ற இதனால் உயர்குல மங்கையரின் வியனிலை விளங்கும்.

முதல் மூன்றடிகளில் குறித்த மள்ளரது உள்ள நிகழ்ச்சிக்கு ஓர் ஏதுவை வலியுறுத்தி அனுபவ ரசமான இனிய உலக நிகழ்ச்சி ஒன்றை இறுதியடியில் இணைத்து உறுதிபெற உணர்த்தியிருக் கிறார்.

இங்ஙனம் இசைப்பதை அலங்கார சாத்திரத்தில் வேற்றுப் பொருள் வைப்பு என்னும் அணி என்பர். அந்த அணி இலக் கணம் அடியில் வருவது காண்க.

" முனஒன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பினஒரு பொருளை உலகறி பெற்றி
ஏற்றிவைத துரைப்பது வேறறுப்பொருள் வைபபே."
(தண்டியலங்காரம் 46)

ஓர் இடத்தில் அறிந்த ஒரு சிறப்புப் பொருளை உலகம் அறிந்த அனுபவமான பொதுப்பொருளோடு பொருத்தி விளக்கு வதே வேற்றுப்பொருள்வைப்பு என்னும் அலங்காரம் என்பது இதனால் அறிந்துகொள்ளலாம். வடநூலார் இதனை அர்த்தாந்தர நியாசம் என்பர். பாவையர்க்கு அணிபோல் பாவினை அலங் கரித்து நிற்றலால் இதனை அணி எனவும், அலங்காரம் எனவும் நூலோர் வழங்கலாயினர்.

இவ்வாறான அணி நலங்கள் பல புனைந்து எழில்மிகுந்து இன்பநலங்கனிந்து கம்பர் பாடல்கள் பண்பமைந்துள்ளன. அவ் வமைதியை ஆங்காங்கு ஆய்ந்துணரின் அறிவின்பம் பெருகும்.

கோசல தேசத்து மள்ளர் காதல் வசத்தராய்க்களைபறியாது உலாவி நின்றார் என்றதற்கு உரிமையாகச் " சிறியோர் பெண்கள் பால் வைத்த நேயம் பிழைப்பரோ ?" என்பதை

காட்டி அவரது நிலைமையை உலகம் அறியும் வகையில் தலைமை யாக இங்ஙனம் உணர்த்தியருளினர்.

சிறியோர் என்றது காளைப்பருவத்தினரை. செயல் இழந்து மயல் உழந்து அயல் அலைந்து நின்ற அவர்தம் சிறுமை தொனிக் கச் சிறியோர் என்றார். நேயம் = நேசம்; உள்ளம் கவர்ந்த அன்பு. பிழைப்பரோ? என்றது தவறார் என்றவாறு. புது மணம் அமைந்த இளங்காளையர் தம் காதலிகளிடம் பேராவ லுடையராய்ப் பெருகி நிற்பர் ஆதலால் அம்மங்கையரின் மனம் நோகாணும்படி மறந்தும் அவர் மீறி நடவார் என்பதாம்.

களை பறிக்கப்போன மள்ளர்கூட உள்ளம் பறிபோய் உல வாக்காதலுடன் இங்ஙனம் உலாவி நின்றார் என்ற இதனால் மங்கையர்பால் மன்பதை மயங்கிக்கிடக்கும் மையல் நிலை புலனும்.

களை எடுப்பைப் பற்றி வந்துள்ள இந்தப்பாடலோடு சிந்தா மணியில் சொல்லியுள்ளதையும் இங்கே சேர்த்துப்பார்ப்போம். கம்பன் கலைநிலையை விடுத்து வேறிடம் போகின்றாரே என்று யாரும் என்னை மாறு கூறார் என நான் நினைக்கின்றேன். ஒத்த பகுதியை உய்த்து நோக்கின் உணர்வுக்கோர் ஒளியுண்டாகும். எந்த ஊற்றிலிருந்து கம்பன் கருத்து இந்தவாறு பெருகிவந்துள்ள தென அதன் மூலத் தொடர்பு அறிதல் சாலவும் நன்றாம். பொறுமையுடனும் உரிமையுடனும் உண்மையை ஊன்றி நோக்க வேண்டும். அங்ஙனம் ஆயின் காவியக் கவிகளின் அருமை பல தெரியும்; அறிவுநலம் பெருகும். அடியில் வருவது காண்க.

உழவர் நிலை

கண்ணெனக் குவளையும் கட்டல் ஓம்பினர்;
வண்ணவாண் முகமென மரையின் உட்புகார்;
பண்ணெழுத் தியலபடப் பரப்பி யிட்டனர்
தண்வயல் உழவர்தம் தன்மை இன்னதே.

(சீவக சிந்தாமணி 51).

களை பறிக்கப் போன உழவர் குவளை மலரைப் பார்த்துத் தம் காதலிகளின் கண்கள் என்று களையாது விட்டனர்; தாமரையை முகம் என நினைந்து அயல் அகன்றுபோனர்; அங்ஙனமே அல்லி முதலியன யாதும் பறியாமல் காதல் பாடல்களைப் பாடிக் கொண்டு காலம் கடத்தி அவர் மால் மிகுந்து மறுகி அலைந்தார்; என இளங்காளையர் உளநிலையை இது உரைத்து நிற்றல் அறிக.

உழவர் தன்மை இன்னதே என்றது அவர் வயலை நோக்கிச் சென்றதும், அங்கே மயலுழந்து நின்றதும், அயலசைந்து திரிந்ததும் நினைந்து புன்னகைபுரிந்து வியந்து சொன்னவாறும்.

இந்தக் கவியில் வந்துள்ள சொல்லையும் பொருளையும் கவர்ந்து கொண்டு ஓர் அணியினை அணிந்து மிகவும் அலங்கரித்து யாரும் இன்புற முன்பு குறித்த கவியைக் கம்பர் நமக்குத் தந்திருக்கிறார் என்பது இங்கே நன்கு புலனும்.

தேவர் வாக்கை எவ்வளவு ஆவலோடு நம் பாவலர் கவனம் செய்துள்ளார் என்பதை இவர் வாக்குகள் யாண்டும் விளக்கியுள்ளன. சிந்தாமணி இவர்க்கு ஓர் சிந்தாமணியாயிருந்துள்ளது.

மேலே காட்டியுள்ள இரண்டு கவிகளையும் ஒருங்கே படித்துப் பொருள் நயங்களையும், பழமை புதுமைகளின் வளமை இனிமைகளையும் உளமுற ஊன்றி உணர்ந்துகொள்க.

இந்த இருவரையும் பின்பற்றிக் களைபறிப்பு வகையில் பரஞ்சோதி முனிவர் வந்துள்ள வரவையும் பாருங்கள்.

"கடைசியர் முகமும் காலும் கைகளும கமலம் எனறார்,
படைவிழி குவளை என்றார்; பவளவாய் குமுதம எனறார்;
அடையவும களை எதார மள்ளர் பகைஞராய் அடுத்தளலலை
உடையவன்ஆணையாறறல ஒறுப்பவர்க்கு உறவுணடாமோ?"
(திருவிளையாடல், நாட்டுப்படலம் 23).

உழவர்கள் வயல்களில் புகுந்து பயிர்க்கு இடையே கிளைத்திருந்த கமலம் குவளை முதலிய மலர்களைப் பறித்தெறிந்தார். அவை தம் காதலிகளுடைய கண் முகம் வாய் முதலிய அவயவங்களைப்போல் அமைந்திருந்தும் யாதும் கண்ணேடாமல் அவ்வாறு அகழ்ந்தொதுக்கினர். ஆகவே ஓர் அரசனது ஆணையைப் பெற்றுப் போர்க்களத்தில் புகுந்த வீரர்கள் எதிர்த்த படையில் உறவினரிருந்தாலும் உரிமை பாராமல் உடன்று கொன்றே தீர்ப்பர் என்பதை அவ்வுழவர் நிலை உணர்த்தி நின்றது என இதில் நாம் உணர்ந்து நிற்கின்றோம். இது முழுவதும் கம்பரை அடியொற்றி வந்துள்ளமை அறிக. கடைசியர், மள்ளர், கண், கை, கால், முகம், வாய், கமலம், குவளை முதலிய மொழிகள் யாவும் அவருடையன என்பது முன்பு வந்துள்ள கவியால் நன்கு உணர்ந்து கொள்ளலாம். அவரது கருத்தை இதமாகக் கவர்ந்துகொண்டு, அவர் குறித்த வேற்றுப்பொருள்வைப்பு என்னும் அணியையே

வேறொரு வகையில் மாற்றி அமைத்து முனிவர் இங்கே ஆற்றி யிருக்கும் ஆற்றலை ஆய்ந்து பார்க்க.

நேர்ந்த நிகழ்ச்சிக்குத் தேர்ந்த ஓர் அனுபவத்தை இயலணி யாக்கி அயலிணைத்து அவர் கூறியவாறே இவரும் கூறியிருக்கின் றார்; ஆயினும் வேறுபாடுள்ளது. அவர், களை பறியாமல் உழு வர் நின்றனர் என்றார்; இவர், பறித்தார் என்றார்; பறியாது நின்றது அதிசயம்; பறித்தது உலக இயற்கை. அவ் அதிசய அமைதியை அகத்துறையில் அதிநயமாக அவர் விளக்கினார்; வழக்கமானதைப் புறத்திணையில் இவர் பொருத்தி யுரைத்தார். அது, காதல் நிலையில் கனிந்தது; இது, வீரநிலையில் விளைந்தது. ல், அன்பு நலம் கனிந்த இன்ப வுணர்ச்சி துள்ளுகின்றது: ல், ஆற்றல்படிந்த அமருணர்ச்சி யெழுகின்றது. மங்கை யரை மருவிச் சிருங்கார ரசமாய் அது சிறந்து நிற்கின்றது; இது, வீறமைந்து வீரப் பண்பாய் விரிந்திருக்கின்றது என்க.

"பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ?" என்ற தும், "ஒறுப்பவர்க்கு உறவுண்டாமோ?" என்றதும் உலகறிந்த அனுபவங்களாய்த் தலைமை எய்தி நின்று இங்கே வந்துள்ள உழவர் நிலைமைகளை நிரவல் செய்து உறவமைந்துள்ளன.

அணிகளை அமைப்பதிலும், உவமைகளைச் சமைப்பதிலும் கவிஞர்களுடைய கலை நிலைகளும் அனுபவங்களும் கலந்து விளங்கும். அவற்றால் காலக்காட்சிகள் காணலாகும்.

திருத்தக்கதேவர் காட்டிய சித்திரத்தைக் கம்பர் கவினுறத் தீட்டினார்; கம்பரது அந்த அலங்கார ஓவியத்தைப் பரஞ்சோதி முனிவர் பார்த்தார்; எல்லாம் பூரணமாயமைந்துள்ளது; அதன் மேல் யாதும் செய்யமுடியாமையால் வேறொரு வகையில் கால் மாறி நின்று அதில் இவ்வாறு அவர் கைவைத்திருக்கின்றார்.

சீவக சிந்தாமணியைக் கம்பர் எவ்வாறு ஆழ்ந்து படித்திருக் கின்றாரோ அவ்வாறே கம்பராமாயணத்தைப் பரஞ்சோதியாரும் கருத்தூன்றிப் பயின்று உரஞ்செய்திருக்கின்றார் என்பது அவ ரது பாடல்களால் நன்கு புலனாகின்றது.

திருத்தக்க தேவரைத் தொடர்ந்து கம்பரும், கம்பரைப் பின்பற்றி முனிவரும் அன்பாற்றி வந்துள்ளமை இதனால் அறிய லாகும். கவியுள்ளம் கவிச்சுவையே நுகர்ந்து கனிந்து வளரும்.

நீர்ப்பாய்ச்சல், நிலவிளைவு, களைகளைவு, முதலிய பயிர்வள நிலைகளை உ... முழுதும்பட உயர்நிலையில் உரைத்துள்ளதை இது வரை அறிந்தோம்; பலங்கள் பலன்கள் உதவிய படியையும், பல வகையான அந்த விளைபொருள்களை உழவர்கள் பருவம் பார்த்துத் தொகுத்து வந்த நிலையையும் சிறிது தெரிவோம்.

## விளைவின் வகைகள்.

... உள்ள ; கடிகமழ் பொழிலின் உள்ள ;
... தின உள்ள ; முதிரைகள் புறவின உள்ள ;
... கொடியின உள்ள ; படுவளர் குழியின் உள்ள ;
... கொண்டு வந்தென மள்ளர் கொள்வார
(நாட்டுப் படலம் 22)

வயல்கள் முதலிய பல இடங்களிலுமிருந்து விளைந்த பொருள்களை உழவர்கள் கொண்டுவந்து ஒன்று சேர்த்த நிலையினை உரைத்த படி இது. தனித்தனி குறித்தது நாற்றிசை விளைவுகளின் வேற்றுமை விளங்க. பதி படு = பாத்தியில் பதிக்கப்பட்ட. படி = பூமி.

உள்ள என்றது விளைந்துள்ளன என்றவாறு. வயல்களில் உள்ளன—நெல், கரும்பு, வாழை முதலியன. பொழிலின் உள்ளன—எலுமிச்சை, நாரத்தை, கிச்சிலி, மாதுளை, மிளகு, பாக்கு, ஏலம், கிராம்பு, சாதிக்காய் முதலியன. பொழில் = சோலை, பூந்தோட்டம். மரத்தின் உள்ளன—மாங்கனி, பலாப்பழம், தேங்காய் முதலியன. புறவின் உள்ளன—புல்லு, சோளம், வரகு, சாமை, தினை முதலியன. கொடியின் உள்ளன—பீர்க்கு, பாகல், புடலை, அவரை, வெற்றிலை முதலியன. குழியின் உள்ளன—சிறுகிழங்கு, சேனை, சேப்பு, கருணை, மஞ்சள், இஞ்சி முதலியன. புறவு = காட்டுப்பாங்கான புஞ்சை நிலங்கள். முதிரை = பயறு. வயலை முதலில் குறித்தது மக்களுடைய உணவுக்கு அவசியமானதும், தலைமையானதுமான நெல்லை உதவிவரும் அதன் நிலைமை தெரிய. நல்ல விளைவுடையது நன்செய்; புல்லியது புன்செய் என்க. நஞ்சை, புஞ்சை என இக் காலம் இவை வழங்கப்படுகின்றன. முதல் உணவு, துணை உணவு என உணவு இருவகையாம். முன்னது அன்னம் கூழாகவும், பின்னது குழம்பு, கூட்டாகவும் கொள்ளப்படும். ஒவ்வொன்றிலும் எட்டு வகையுள்ளன. இந்தப் பதினறு வகைத் தானியங்களையும் பதினெண் கூலம் என்பர். அடியில் வருவன காண்க.

உயர் தானியம்

" நெல்லுப புல்லு வரகுதினை சாமை
இறுங்கு தோரை இராகிஎன் கூலம் " (கூத்தம்) (1)

உபதானியம்

" எள்ளுக் கொள்ளுப் பயறுழுந் தவரை
கடலை துவரை மொச்சை என்றாங்கு
உடனிவை முதிரைக் கூலத்துணவே. " (2)

எனவரும் இவற்றை ஈண்டு எண்ணிக்கொள்க. தோரை=ஒரு வகை நெல். இது மலைச்சரிவுகளில் விளையும். இறுங்கு=சோளம். இராகி=கேப்பை. இன்னவாறான பலவகைத் தானியங்களையும், கனிகள், காய்கள், கிழங்குகள் முதலிய பல்வேறு வகைப்பட்ட வளங்கெழு பண்டங்களையும், உழவர்கள் அளவறிந்து ஆய்ந்தெடுத்து வளமாக ஒருங்கே தொகுத்து வைத்தார் என்பதாம்.

மலரில் மதுக்கொள்ளும் வண்டு என மள்ளர் கொள்வார் என்றதனால் அந்த உழவர்களின் உழைப்பின் பயன் உலகம் இன்புற இருந்தமை உணர நின்றது.

பல மலர்களிலும் பறந்து பாய்ந்து தேனைக் கவர்ந்துவரும் வண்டின் காட்சியைப் பல புலங்களிலும் பரந்து சென்று விளை பொருள்களைக் கொண்டுவரும் உழவர்களிடம் கண்டு இங்கே நாம் உளமிக மகிழ்கின்றோம்.

வனம் கோசல தேசத்திற்கும், அவ்வனத்திலுள்ள மலர்கள் அந்நாட்டின் நிலங்களுக்கும், அம்மலர்களிலுள்ள தேன் அந்நிலங்களில் விளையும் பொருள்களுக்கும், அத்தேனைக் கொள்ளும் வண்டுகள் மள்ளர்களுக்கும் ஒப்பாக் கொள்க.

தாம் வருந்திச் சேர்த்த தேனைப் பிறர் அருந்தக் கொடுத்து மீண்டும் அலைந்து திரிந்து மதுவை யீட்டும் வண்டுகள் போல முன்னம் தொகுத்து வந்த பண்டங்களை எல்லாரும் உண்டு மகிழ உதவி விட்டுப் பின்னும் உள்ளம் உவந்து மள்ளர்கள் உழைத்து உதவுவர் என்பதாம். ஆகவே தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் அவ் வுழைப்பாளிகள் உரிமையுடன் உலகிற்கு உதவி நின்ற நிலைமையும், உழவின் பெருமையும் இனிது உணரலாகும்.

[illegible] மலரும் மதுவும் என வந்தமையால் முறை யே அவற்றின் ஒலியும் இனிமையும் நன்கு புலனும். இவ் வண்ணம் இனிய நல்ல பொருள்கள் நிறைந்து எல்லா வுயிர்களும் இன் புற்றுவாழ அந்நாடு [illegible]பற்றிருந்த தென்பதாம்.

விளைபொருள்கள் அளவுக்கு மீறி யிருந்தமையால் அயல் நாடுகளுக்கும் கடல்கள் வழியாக அத்தேசச் சரக்குகள் அனுப் பப்பட்டன. அப் பண்டங்களைக் கொண்டு போதற்குரிய மரக் கலங்களைக் குறித்துக் கம்பர் உரைத்திருக்கிறார். அவர் கவியைக் காணுமுன்னமே வெறும் கப்பலைப் பற்றிக் கற்பனையாக நமக்குள் நாமே சிந்தித்துப்பார்த்து அந்தச் சிந்தனையில் ஏதேனும் வந்து நிற்கின்றதா? என்று ஆராயவேண்டும். அங்ஙனம் ஆய்ந்து நோக்கின், கம்பரது கற்பனைசக்தியின் அற்புத ஆற்றலின் அமைதி நிலை தெரிந்து உளமிக மகிழ்வோம். அவ்வளவு தூரம் சிரமப்பட்டுச் சிந்திப்பானேன்; கம்பர் கவியையே விரைந்து பார்த்துவிடுவோமே என்றால், அதுவும் சரி; கண்டுமகிழ்வோம்.

## மரக்கலக் காட்சி.

[illegible] நீக்கி புனல்வழி புணர்ந்து வெய்தும்
[illegible] துயிக்க நல்கும் இசைகெழு வேந்தன் காக்கப்
[illegible] செல்வப் பூசலம் தன்னிற் பொன்னின்
[illegible] சொரிந்த வங்கம் நெடுமுதுகாற்றும் நெய்தல்.
(நாட்டுப்படலம் 20)

சரக்குகள் ஏற்றாமல் நீர்த்துறைகளில் வெறுமையாய் நின்ற மரக்கலங்களைக் குறித்து உரைத்தபடியிது.

கோசல தேசத்திலிருந்து பலவகைப் பண்டங்களையும் கடல் வழியே கொண்டுபோய் மறுபுலங்களில் செலுத்திவிட்டு அவற் றிற்கு ஈடாக அங்கிருந்து பொருளையும் பொன்னையும் அடைந்து மீண்டு வந்து அந்நாட்டுத் துறைமுகங்களில் அவற்றை இறக்கி வைத்துவிட்டுத் தம்மிடம் யாதொரு சுமையுமின்றி மரக்கலங்கள் அலைவாய்க் கரைகளில் அமர்ந்திருந்தன ஆதலால் "வங்கம் பொன்னின் பாரம் சொரிந்து நெய்தல் முதுகு ஆற்றும்" என்றார். நெய்தல் என்றது கடல் ஓரமுள்ள கரைநிலைகளில் என்றவாறு.

வங்கம்=பாய்க்கப்பல். மரத்தால் செய்யப்படுதலால் அது மரக்கலம் என வந்தது. இக்காலத்தில் காணப்படுகின்ற புகைக் கப்பலுக்கும் அதற்கும் வேறுபாடு உண்டு. பண்டைக்காலத்தில் கடல் மார்க்கமாக வியாபாரங்கள் பெருவாரியாய் மறுபுலங்க ளெங்கணும் இங்கிருந்து நடந்துவந்தன ஆதலால் பலவகையான நீர்மிதவைகள் இந்நாட்டில் நன்கு செய்யப்பட்டிருந்தன.

வங்கம், புணை, தோணி, பாரதி, மதலை, பாதை, பஃறி, அம்பி, போதம், யானம், பகடு, நௌ, நாவாய், பாறு, தொள்ளை, ஓடம், எனப் பலதிறப்பட்ட நீர்க்கலங்கள் இந்நாட்டில் நிலவி யிருந்தன. இவற்றைச் செய்வதில் கைதேர்ந்தவர் பலர் இருந் தனர். அவர்க்குக் கலஞ்செய் கம்மியர் என்று பெயர். கடலில் ஓடுகின்ற கப்பல் திசை தப்பாமல் தம்பால் வந்து சேரும்படி நீண்ட விளக்குத் தம்பங்கள் கரைகளில் நின்று மிளிர்ந்தன. அவற்றிற்குக் கலங்கரை விளக்கம் என்று பெயர். கலத்தைக் கரைக்கு அழைக்கும் விளக்கு என்பது அதற்குப் பொருள். கரைதல்=அழைத்தல். இக்காலத்தில் (Light house) என ஆங்கிலத்தில் வழங்குவது போல் கலங்கரை விளக்கம் அக் காலத்து வழக்கத்தில் இங்கே மிகவும் துலங்கி யிருந்தது.

"இலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்,
விலங்குவலைப் பரதவர் மீன்திமில் விளக்கமும்,
கழிபெரும் பண்டங் காவலர் விளக்கமும்,
எண்ணுவரம் பறியா இயைந்தொருங் கீண்டிக்
கண்டுவேலி நெய்தலங் கானல்
நிரை நிரை யெடுத்த புரைதீர் காட்சி
மலைப்பஃறாரமும் கடற்பஃறாரமும்
வளந்தலை மயங்கிய துளங்கு கல விருக்கை."

(சிலப்பதிகாரம், கடலாடுகாதை)

காவிரிப்பூம்பட்டினத்துத் துறைமுகத்தைப்பற்றி இது கூறி யிருக்கிறது. மலைபடு திரவியமும், கடல்படு பொருளும் தலை மயங்கி நிறையக் கலங்கள் அலை மயங்கி நின்றன என அக்காலத் தில் கடற்கரைகள் இருந்த நிலைகளை இது காட்டி நிற்றல் காண்க. பல்தாரம் பஃறாரம் என்றாயது. தாரம்=பண்டம்.

"கொடும்புணரி விலங்கு போழக்
கடுங்காலொடு கரை சேர
நெடுங்கொடிமிசை இதை எடுத்து
இன்னிசைய முரசமுழங்கப்
பொன்மலிந்த விழுப்பண்டம்
நாடார நன்கிழிதரும்
ஆடியற் பெருநாவாய்
மழைமுற்றிய மலைபுரையத்
துறைமுற்றிய துளங்கிருக்கை." (மதுரைக்காஞ்சி.)

இது பாண்டி நாட்டுத் துறைமுக நிலையைக் குறித்துள்ளது. கருமேகம் சூழ்ந்த மலைபோலக் கடல் அருகே கப்பல் நின்றது என இதில் காட்டியிருக்கும் காட்சியைக் கருத்தூன்றி நோக்குக. இதை = பாய். இங்குக் குறித்த இவற்றால் கடல் வழியே கலங்கள் சென்று வந்த வகையும், இத்தேசத்தில் வளங்கள் பல மருவியிருந்த நிலையும், பழம்பெருமையும் பிறவும் அறியலாகும்.

"நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்,
காலின் வந்த கருங்கறி மூடையும்,
வடமலைப் பிறந்த மணியும், பொன்னும்,
குடமலைப் பிறந்த ஆரமும், அகிலும்,
தென்கடல் முத்தும், குணகடல் துகிரும்,
கங்கை வாரியும், காவிரிப் பயனும்,
ஈழத்துணவும், காழகத்து ஆக்கமும்,
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகின்
நீர்நாப்பண்ணும் நிலத்தின் மேலும்
ஏமாப்ப இனிது துஞ்சி." (பட்டினப்பாலை)

புகார் நகரின் கடல்வள நிலையை உரைத்தபடி யிது. பண்டைக்காலத்தில் இந்நாடிருந்த நிலையும், மணி பொன் முத்து பவளம்முதலிய அரும்பெரும்பொருள்கள் பல கப்பல்களில் வந்து இறங்கிய இயல்பும், அயல்நாடுகளுக்கு இங்கிருந்து பண்டங்கள் ஏற்றுமதியான விதமும், துறைமுகங்களிலும் நகரங்களிலும் அளவிடலரியபடி பொருள்கள் குவிந்திருந்த வகையும் தொகையாக இதன்கண் அறிந்துகொள்ளலாம். கறிமூடை = மிளகுப்பொதி.

ஈழம் = இலங்கைத்தீவு. காழகம் = பர்மா தேசம்.

கடல் வழியே கலங்களையூர்ந்து மறுபுலங்களை யடைந்து பெருவளங்களுடன்மீண்டு இந்நாட்டவர் சீரும் சிறப்பும்பெற்று யாரும் போற்ற அன்று இருந்தனர். இவ்வுண்மையைப் பழைய இலக்கிய நூல்களிலும் உலக சரிதங்களிலும் பரக்கக் காணலாம்.

அந்தக் கப்பல் செல்வங்களெல்லாம் எப்படி இந்நாட்டை விட்டு அடியோடு மறைந்துபோயின ? இனி எப்பொழுது அவற்றை நாம் மீண்டும் பெறுவோம்? இப்படி ஒரு எண்ணமாவது நம்மவர் உள்ளத்தில் எழுவதுண்டா? பழமை தெரிந்தாலன்றோ கிழமைபுரிந்து கிளர்ந்தெழுவர் ? தெரியாமையினால் நேர்ந்ததே பெரிதா நினைந்து நிறைவுற்றிருக்கின்றோம்.

அந்நாள் நிலைமையை அறிவுக் கண்ணால் கண்டவர், இந்நாள் நிலைமைக்கு இரங்கி வருந்துகின்றார்.

தாய் நாட்டின் தளர் நிலை.

" குமரிமுதல் இமயமொடு குடவரையும் குணகடலும்
குலவி யோங்க,

அமருலகம் எனஎவரும் ஆர்வமுடன் ஆர்ந்துவர,
அயல்நா டெங்கும்

தமதுவினை பொருளுதவித் தனிக்குடிகள் தழைத்திருக்கத்,
தரும நாடென்று

இமையவரும் வியந்தேத்த இனிதிருந்தாய்! துனிமிகுந்தின்
றிருப்ப தென்னே !''

என்று முற்கால உயர்வையும் தற்கால இயல்பையும் எண்ணித் தம் தாய் நாட்டை நோக்கி அறிஞர் பலர் இவ்வாறு ஆற்றாமையோடு புலம்பி வருகின்றார். ஏற்றம் பெறுவதென்றோ ? இறையருளைத்தான் போற்றிவரவேண்டும். கோசல நாட்டு வளங்களையும் மரக்கலங்களையும் காவியத்தில் கண்டபொழுது இந்நாட்டு வளங்களின் பழைய நினைவுகள் இங்ஙனம் ஈட்டமுற்று வந்தன.

சங்கநூல்களில் இங்கே கண்ட வங்க நிலையைக் கருத்தில் வைத்துக்கொண்டு கம்பன் காட்டும் காட்சியையும் இனிக் கண்ணூன்றிக் காண்போம்.

அதிக தூரம் அலைந்து வந்தவன் இளைப்பாறும் பொருட்டுச் சிறிது அமர்ந்திருந்து காலாற்றுதல்போல் பெருஞ்சுமை யெடுத்

துப் பெரிதும் அலைந்து திரிந்த கப்பல் இடையே கொஞ்சம் ஆறுதலடைந்து நிற்றலால், "வங்கம் முதுகு ஆற்றும்" என்றார். முதுகு என்றது மூட்டை சுமக்கும் அதன் முதுமை தெரிய. நெடுமென்னும் உடை வடிவின் நீளமும் அகலமும் அறியவந்தது.

பாரம் யாதொன்றும் இன்றி நீரில் வங்கம் நின்ற நிலைமைக்கு நிலம் இதில் உவமையாய் வந்துள்ளது. அதன் இடப்பரப்பு, பாரம் தாங்கி நிற்கும் அமைப்பு, பண்டங்களை உயிர்கட்கு உதவி வரும் உரிமை முதலியன பூதலம் என்றதனால் அறிய வந்தன. சுமையின்றி அமைதியுற்றிருக்கும் சமையநிலைமையை உவமை இங்கே உணர்த்தியுள்ளது.

நெறிவழுவாத அரசன் முறை செய்து காக்க அவனது நிலமண்டலம் இனிதாய் ஆறுதலடைந்திருத்தல் போல் வங்கம் பொறையாறி இருந்ததென்பதாம்.

உயிர்த்தல் = பெருமூச்சுவிட்டு நிற்றல். கடுஞ்சுமை எடுத்து வந்தவன் அதனை இறக்கி வைத்த பொழுது நெடுமூச்சு விட்டு நிலையாறி நிற்பன் ஆதலால், "பொறை தவிர்ந்து உயிர்க்கும்" என்றார். அரசன் முறை தவறாது காப்பின் நிலம் பொறை தவிர்ந்திருக்கும் என்பதனால் அரசின் செயலும், அவனியின் இயல்பும், அவ்விரண்டின் உரிமையும் அறிய நின்றன.

முறை அறிதல், அவாவை நீக்கல், முனிவுழி முனிதல், இறை அறிந்து கொள்ளல், உயிர்கட்கு நல்கல் என்னும் இவ்இயல்புகள் அரசனிடம் உறுதியாயமைந்திருக்கவேண்டும்; அவ்வாறு அமையின் அவனது புகழ் திசைதொறும் பரவும்; அவன் ஆளுகின்ற இம்மண்ணுலகம் விண்ணுலகம் போல் எல்லா நலங்களும் எய்தி இன்ப நிலையமாய் விளங்கிநிற்கும் என்பது இசைகெழுவேந்தன், தேட்பூதலம் என்ற இனிய மொழிகளால் தெளிவுற நின்றது.

இறை = அரசுக்குரிய திறைப்பொருள். குடிகளிடம் வரி வாங்குதல் உயிர்களை இனிது பேணவே என்றதனால் படியாளும் அரசனது படிமுறை பலனும். நல்கல் = நயந்து கொடுத்தல்.

செங்கோல் மன்னன் ஆட்சியில் உலகம் சுமை யொன்றுமின்றிச் சுகமாயிருக்கும் என்றது என்னை? எனின், நீதி நலமுடைய அவனது பாதுகாப்பில தீது யாதும் சேராது; ஆகவே

நோதல் ஒன்றுமின்றி யாண்டும் இன்பநலங்கள் சுரந்து புண்ணிய உலகமாய்ச் சிறந்து இது பொலிவெய்தி யிருக்கும் ஆதலால் "பொறை தவிர்ந்து உயிர்க்கும் தெய்வப் பூதலம்" என வந்தது. பொறை = பாரம். பூமிக்குப் பாரம் ஆவது பாவம்.

"நீபாரத மடமைல யாவரையும் நேராக்கிப்
பூபாரம் தீர்க்கப் புரிந்தாய் புயல்வண்ணா!"
(பாரதம்—கிருட்டிணன் 34).

என்று கண்ணனை நோக்கிச் சகாதேவன் உரைத்திருக்கும் இதில் பூபாரம் இன்னதென்பது புலனும்.

நீதிநெறி தவறி அரசன் சரியாகப் பாதுகாவானாயின் எங்கும் தீயவர் செழித்து வளர்வர்; வளரின் களையடர்ந்த பயிர் போல் உயிர்கள் துயரடைய நேரும்; நேரவே பார்மகள் சகியாது பதைத்து நைவள் ஆதலால் பாவிகள் பூமிக்குச் சுமைகளாய்ச் சுழிக்க நின்றார் என்க. இப்பாவச்சுமை செங்கோலால் தேயும் என்றதனால் கொடுங்கோலால் அது நெடிது வளரும் என்பதாயிற்று. ஆகவே அக்கோலும் கொடுஞ் சுமையாம்.

"கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோல்; அது வல்ல
தில்லை நிலக்குப் பொறை." (குறள் 570)

என்னும் இதில் பூமிக்குப் பெரும்பாரம் குறித்துள்ளமைகாண்க.

மலை கடல் முதலிய அரிய பெரிய பாரங்களை யெல்லாம் இயல்பாகவே தாங்கியிருக்கிற பூமிக்குத் தீமையாளர்கள் எவ்வாறு பாரமாவர்? எனின், பூமிதேவி தரும உருவினள் ஆதலால் பாவ வுருவங்களைத் தாங்கமாட்டாமல் தயங்குவள் என்க.

பெரும்பாரத்தை நெடுங்காலமாகச் சுமந்து நின்றவர் அதை இடையே ஒருவன் வந்து இறக்கி வைத்தபொழுது அக மிக மகிழ்ந்து ஆறுதலடைந்திருத்தல்போல் நல்ல அரசுவரின் ஞாலம் எல்லாப் பொறுப்பும் நீங்கி இன்புற்றிருக்கும் என்பது பெற்றாம். இதனால் உலகிற்கும் அரசனுக்குமுள்ள உறவுரிமை தெளிவாம்.

இவ்வாறு எல்லாப் பொறுப்பையும் தாம் ஏற்றுக்கொண்டு உயிர்களை நல்லாற்றுப்படுத்தி உலகைப் போற்றி வருதலால் அரசர் பூபாலர் என நின்றார். வையம் உய்யக் காத்தலின் அவரைத் தெய்வம் என்றார். உடற்கு உயிர்போல் உலகுக்கு அரசு உறுதிசெய்துள்ளது. தான் உலகம் தாங்கி வந்த நிலையைக்குறித்துத் தசரதன் கூறியுள்ளதொன்று அடியில் வருவது காண்க.

அரச பாரம்.

"விரும்பிய சூழ்பெறும் விதி கண்ட யான்
இருப்பிடை அனந்தனும், இசைந்த யானையும்,
பொருப்பிடைச் சிகரமும், பெயரத் தாங்கிய
அரும்பொறை இனிச்சிறிது ஆற்றல் ஆற்றலேன்."
(அயோத்தி, மந்திரப்படலம் 16)

ஆதிசேடனும், திக்குயானைகளும், எட்டுமலைகளும் பொறை பாறி நிற்க யான் இதுவரை அரசாற்றி வந்தேன்; இனி என்னால் அது செய்ய இயலாது; எனது அருமை மகன் இராமனிடம் அரசபாரத்தை ஒப்பிவித்துவிட்டு நான் ஆறுதலடைந்திருக்க வேண்டும் என்று அமைச்சரிடம் தசரதன் இவ்வாறு உரைத்திருக்கிறான். இரும்=பெரிய. பியல்=பிடர். அரும்பொறை என்றது அரச பாரத்தை. உலகை ஆளுவதிலுள்ள பொறுப்பும் உண்மையான அரசனிலைமையும் இதனால் உணரலாகும்.

அட்டகுல பருவதங்கள் முதலியன உலகிற்கு ஆதாரமா யுள்ளன என்பது நூல் மரபாதலால் அவை இவ்வாறு நுவல வந்தன. சுமை நீக்கி அவை யாவும் சும்மா நிற்க இம்மாநிலம் முழுவதும் இன்புற நான் தாங்கி வந்தேன் என்பதாம்.

இசைகெழு வேந்தன் காப்பில் பூதலம் பொறை யுயிர்த் திருந்தது என்றும் முன்னம் இசைத்ததைத் தசரதன் வாக்கில் வைத்துக் கம்பர் உறுதி செய்திருக்கும் திறத்தை இதில் ஊன்றிப் பார்க்க. இவரது உரைத்திறம் எங்கும் உய்த்துணர் வுடையது.

முறையறிதல் முதலிய இறைமைக் குணங்கள் யாவும் தசரதனிடம் இனிதமைந்திருந்தன என்பதும் இதனால் உணரவந்தது.

சரக்குகள் ஏற்றுமதி துறைமுகங்களில் நின்ற மரக்கலங் களைப் பார்த்தோம்; இனி நகர்ப் புறங்களில் நடந்த சேவல் சண்டையைச் சிறிது பார்ப்போம்.

சேவல் போர்.

கருப்புறு [illegible]றையும் கண்ணிற் சிவப்புறு சூட்டும் காட்டி
உருப்புறு பகைமை [illegible] ஊக்கி உறுபகை யின்றிச் சீறி
செருப்பயில் களிப்பின் வெம்போர் மதுகைய வீரவாழ்க்கை
மருப்புடை ஆவி போறு வாரணம் பொருத்து வாரும்.
மதுகை = மனவலிமை. (நாட்டுப்படலம் 16)

கோழிச் சேவல்களை ஒன்றோடு ஒன்று போர் மூட்டிவிட்டுச் சூழ நின்று ஆடவர் வேடிக்கை பார்க்கும் நிலையை இது விளக்கியுள்ளது. போரில் வெறுப்பு இல; களிப்பு உள என்றதனால் அதன் இயற்கையான வீர வேட்கை வெளிப்பட்டு நின்றது.

சேவலின் கண்ணும் உச்சிக் கொண்டையும் செந்நிறமாயிருக்கும் ஆதலால் சிவப்பு எண்ண வந்தது. கறுப்பு என்றது கோபத்தை. மனம் கறுப்பு, கண்ணும் தலையும் சிவப்பு என முரண் தொடையில் உல்லாசமாகச் சொல்லாடிச் சேவல் உள்ள நிலையைப் பாவில் இவ்வாறு உணர வைத்தார்.

கால்களின் பின்புறம் சேவல்களுக்குக் கூர்மையான நகங்கள் நீண்டிருக்கும்; அவற்றிற்கு முள் என்று பெயர். அதனால் எதிரியை எட்டி மிதித்து வெட்டிகுத்திவிடும். அதில் சிறிய கத்தியையும் கட்டிப் போருக்கு விடுவர். மூக்கால் கொத்தியும், சிறகுகளால் சீறி அடித்தும், கால் முள்ளால் மேமேலேறி உதைத்தும் ஒன்றோடு ஒன்று போரில் மூண்டு தாம் மாண்டு விழ நேரினும் சிறிதும் மீண்டு படாமல் உயிரொழியும் வரையும் ஊக்கம் அழியாமல் சேவல்கள் உறுதியுடன் பொருது நிற்கும்; அப்போராட்ட நிலை யாரும் வியந்து பாராட்டுமாறு வீரம் சிறந்து திகழும்; ஆதலால் அவ்வீரக்காட்சியை வீரமரபில்வந்த தீரர்கள் விநோதமாகக் கண்டு களிக்கலாயினர்.

மக்கள்போல் புறப்படைவேண்டாது தம் உறுப்பே படையாகப் பிறப்பிலேயே உற்றுவந்துள்ளமையால் "உறுப்புறுபடை" எனச் சிறப்பித் துரைத்தார். தன் காலிலேயே ஆயுதம் அமைந்திருத்தலால் காலாயுதம் என்று சேவலுக்கு ஒரு பெயரும் வந்தது. வடமொழியாளர் அதனைச் சரணாயுதம் என்பர்.

சேவலின் உருவநிலையும், உள்ளத்திண்மையும், பொருதிறனும், வெருவா விறலும் இதில் அறிய நின்றன. "வீர வாழ்க்கை மறுப்பட ஆவிபேணு மதுகைய" என்று வீறு தோன்றக் குறித்திருக்கும் அழகைக் கூர்ந்து பார்க்க.

புறமுதுகிடுதல், அடிபட்டோடுதல், அஞ்சி ஒதுங்குதல் முதலிய புன்செயல்களையுடைய கொச்சை மாக்கள் கோழியின் இவ்வீரவாழ்க்கையைக் கண்டு இலச்சைகொண்டு அச்சமகன்று ஆண்மையுறுவரா? அல்லது வாளும் வேலும் வைத்த இடம் தெரி

"கோட்டிளந் தகர்களும் கொய்ம்மலர்த் தோன்றிபோல்
சூட்டுடைய சேவலும் தோணிக் கோழி யாதியா
வேட்டவற்றின் ஊறுளார் ; வெருளி மாந்தர் போர்க்கொளீஇக்
காட்டியார்க்கும் கௌவையும் கடியும் கௌவை கௌவையே"

(சிந்தாமணி, நாமகள், 44)

தகர்=செம்மறியாட்டுக் கிடாய். கௌவை=ஒலி, ஆரவாரம். வெருளி மாந்தர் என்றது செல்வச்செருக்கால் திமிர்கொண்ட மக்களை. அருளிலராய் அவ்வாறு பிராணிகளை அடலாற்றுகின்றார் எனத் தேவர் இரங்கியுள்ளார் என்பது ஊறு உளார் என்றதனால் உணர நின்றது. வேறு ஆட்டங்களைக் குறியாமல் அப்போராட்டங்களை விதந்து குறித்தது அமராடலில் அந்நாட்டவர் கொண்டிருக்கும் ஆர்வம் தெரிய. தோன்றி=செங்காந்தள்.

யானைப்போர், எருமைக்கடா எதிர்ப்பு, ஆட்டுக்கிடாய்ப் பாய்ச்சல், சேவல் போர் என்னும் இந்நான்குபோராட்டங்களும் இந்நாட்டு மக்களால் பண்டுதொட்டே நயந்து பாராட்டப்பட்டு வந்துள்ளன ; பின்னது மட்டும் இந்நாள் வரையும் இருந்து வருகின்றது. யானைச் சண்டை காண்டல் பண்டிருந்ததென்பது "குன்றேறி யானைப்போர் கண்டற்று" (குறள் 758) என்ற வள்ளுவப் பெருந்தகை வாக்கானும் அறிந்துகொள்ளலாம். அத்தகைய அரிய போர்க்காட்சிகள் இழந்துபோனமையால் இக்காலத்துச் சிறிய நீர்மையும், தேசநிலைமையும் தெரியலாகும்.

கோழிப் போருடன் தகர் ஏறுகளின் அமராடல்களையும் தம் காவியத்தில் கம்பர் கவினுறக் குறித்திருக்கிறார். அக்காட்சிகள் வீரம் சுரந்துள்ளன. இவரைப் பின்பற்றி அதிவீரராம பாண்டியனும், பரஞ்சோதிமுனிவரும், நைடதத்திலும் திருவிளையாடலிலும் இப்போராடல்களை உவந்து பாடியிருக்கின்றார்.

வேறு விளையாடல்களை உரையாமல் வீறுடைய இவ்விளையாடல்களைக் குறித்ததனால் அக்காலத்து மக்கள் வீரத்திறங்களை விரும்பியிருந்தமையை அறிந்துகொள்ளலாகும்.

அரசுரிமை தனியமைந்திருந்தமையால் அயல் எதிர்ப்பும், தற்பாதுகாப்பும், அமராற்றும் பொறுப்பும் ஒவ்வொரு ஆண்மகனுக்கும் உறுதியாக வேண்டப்பட்டிருந்தன. ஆதலால் ஆண்ட

கைமைகள் யாண்டும் அந்நாளில் அடலமர்ந்து நின்றன. அதனால் வில் வாள் வேல் முதலிய படைக்கலப் பயிற்சிகள் எவரிடமும் உயர்ச்சியுற்று வந்தன. ஆடவரே யன்றிப் பெண்டிரும் வீரம் பேணி விறல் விளைத்து நின்றார். வித்தும் நிலமும் நலமுறின் விளைவும் வளமுடையதாய் விளங்கிநிற்கும்; அதுபோல் தாயரும் தந்தையரும் தறுகண்மையுடையராய்த் தழைத்திருந்தமையால் அவர் வயிற்றுச் சேயர்களனைவரும் திடதைரியமுடைய தீரர்களாய்ச் செழித்து விளங்கினர்.

தாய் ஒருத்தி வாயுரைத்தது.

"ஈன்று புறந்தருதல் எனதலைக் கடனே;
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே;
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்,
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே" (புறம் 312)

என வரும் இது ஒரு முதுமகள் குறித்தது. இக்குறிப்பால் அந்நாளின் ஆண்மை நிலைமைகளும் பெண்மையின் உள்ளப் பான்மையும் உறுதித் திறங்களும் ஒருங்கே உணரலாகும்.

பிள்ளையைப் பெற்று வளர்த்து விடுதல் எனது கடமை; ஆன்ற கல்வி உதவி அவனைச் சான்றோனாக்கி உயர்த்துதல் தந்தையின் கடமை; அவன் வீரியம் பெற்று விளங்கக் கூரிய வேலைச் செய்து கொடுத்தல் கொல்லன் கடமை; நல்ல வாழ்க்கையை நல்கி ஆள் வினையிலும் வாள் வினையிலும் அவனை வல்லவனாக்கி வைத்தல் அரசனின் கடமை; அங்ஙனம் வைத்த மன்னனுக்கு உற்ற துணையாய்ப் போர்க்களம் புகுந்து பகைவரைத் தொலைத்து யானைகளை அழித்து வெற்றிபெற்றுமீளுதல் அம்மைந்தன்கடமை; என்னும் இந்த அருமைப் பாட்டு இற்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றியது.

அக்காலத்தில் இந்நாடிருந்த நிலைமையும், நாட்டு மக்களின் கட்டுறவும், அரசாட்சியின் ஆதரவும், ஆண்மைத் திறங்களும், அமராடல்களும், பெண்மக்களின் உள்ளக்கிளர்ச்சிகளும், உறுதி நலங்களும் பிறவும் இதனால் அறிந்துகொள்ளலாம்.

வேறு ஒன்றையும் குறியாமல் களிறு எறிதல் என்றதனால் அவனது உன்னத ஊக்க நிலை யுணர்கின்றது. களிறு = ஆண்யானை.

தன் தங்கக் கட்டி வயிற்றிற் பிறந்த சிங்கக்குட்டி என அக்காளையைச் சுட்டியபடியிது. வீரத்திறலைப் பெண்களும் இங்ஙனம் விழைந்து போற்றிவந்தார் என்றால் போர்புரிதலில் அந்நாள் ஆடவர் கொண்டிருந்த ஆர்வம் என்ன நிலையில் இருந்திருக்கும் என்பதை ஈண்டு எண்ணி நோக்கவேண்டும்.

" ஈனில மதனின் உண்டு போர்என நவிலின் அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையர்."
(சுந்தர காண்டம், கிங்கரர்-4)

எனக் கம்பர் வாக்கிலிருந்து வந்துள்ள இந்த வீர மொழிகள் எந்த நாட்டவர் சிந்தை நிலையை எண்ணி வந்ததோ? தம்சொந்த அனுபவத்தில் கண்ட முந்தையோர் நிலைமையையே இங்ஙனம் உணர்ச்சி ததும்ப உள்ளங்களிக்க உரைத்திருக்கிறார். இப்போர்க் களிப்பை இந்நாளில் யார்க்கு அளிப்பது? நமது நாட்டின் தற்கால நிலையைக் குறித்து அறிஞர் பலர் பரிந்து பேசுகின்றார்; கவிஞர் சிலர் கனிந்து பாடுகின்றார். பாட்டே வேண்டாம்; வசனந்தான் வேண்டும் என்று கோட்டிகொண்டு நிற்கும் இக்காலத்தில் கோட்டித்தனமாய்ப் பாட்டுகளும் குதித்து வருகின்றன. நாட்டுப்பாட்டாதலால் கொஞ்சம் கேட்டுக்கொள்வோம்.

பண்டிருந்த வீரம்.

" போர்என்று வேறொன்றை வழிப்போக்கர் புகன்றாலும்
புயங்கள் வீங்கி
நேரொன்ற வருகின்ற நேரலர் யார்? என விரைந்து
நெடுவேலை வாங்கித்
தாரொன்று போர்வீரர் தழைத்திருந்த இந்நாட்டில்
சமருக் கான
பேரெங்கே எனத் தேடும் பிழைபெருகி யுள்ளதே
பிழை என்னே!" (1)

இன்றுள்ள இயல்பு.

" வில்லாலும் சொல்லாலும் உலகையெல்லாம் வெல்லவல்ல
வீர ரான
நல்லார்கள் பலர்தோன்றி நண்ணிநின்ற நின் வயிற்றில
நாங்கள் தோன்றிப்
பல்லாலே இதழதுக்கிப் பயத்தாலே உடல்நடுங்கிப்
பதுங்கு கின்றோம
பொல்லாத நிலைமையிது போய்த் தொலையும் காலமென்றோ
புகல்வாயம்மா?" (இந்தியத்தாய்நிலை) (2)

என்று பாரதமாதாவை நோக்கிப் பரிவோடு கூறியுள்ளமையால் வீரமக்களைப் பெற்றுப் பண்டு அவள் விளங்கியிருந்த தலைமையும், இன்றுள்ள நிலைமையும் நன்கு விளக்கும்.

இவ்வாறு வீரத்திறம், வினையாண்மை, விளைவு வளம் வணிக முறை முதலியன நாட்டுக்கணிகலமாய் நலஞ்செய்திருந்தமையை இது வரை அறிந்தோம்; இனி அங்கே பந்துகள் பயின்ற பான்மையும், கலைகள் ஆய்ந்த மேன்மையும் காண்போம்.

பந்தும் கலையும் பயிலுதல்.

"பந்தினை இளையவர் பயிலிடம், மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகம்
சந்தன வனமல சண்பக வனமாம்
நந்தன வனமல நறைவிரி புறவம்." (நாட்டுப்படலம் 49)

சந்தனச் சோலைகளிலும் சண்பகக் காவுகளிலும் மடந்தையர் பந்துகள் பயின்றனர்; மலர்மணங் கமழ்கின்ற நந்தன வனங்களிலும் சுந்தரப் பொழில்களிலும் குமாரர்கள் கலைகள் தெளிந்தனர் என்பதாம். இங்கே இளையவர் என்றது தருண மங்கையரை.

"தொளைபடு குழலொடு யாழுக்குத் தோற்றன
இளையவர் அமுதினும் இனிய சொற்களே." (அ. க. ர். 181)

எனவரும் இதில் இளையவர் வந்துள்ளமை காண்க.

பந்து ஆடல் என்னாது பயில் என்றது பெரிதும் முயன்று பயின்று அரிதில் தேர்ந்துவரும் அதன் அருமை தெரிய.

இக்காலத்தில் ஆடவர்கள் அடித்துவரும் பந்தடிபோல்வதன்று அக்காலத்துப் பெண்களின் பந்தாட்டம். இது வெறும் மட்டையடி. காலைக் காலையுதைவது. அது கைத்திறமிக்கது; அருமைப் பாடு பெரிதுமுடையது. அதன் முறையைத் தெரிய வேண்டும். மூன்று, ஐந்து, அல்லது ஏழு பந்துகளை இரண்டு கைகளிலேந்தி மாறி மாறி மேலெறிந்து யாதும் கீழே விழாதபடி ஆயிரம் தடவை தொடர்ந்து ஒரே முறையில் அடித்துவிடுவளாயின் அவள் ஆட்டத்தில் செயித்தவள் ஆவள். அந்த ஆடல்கள் அதிசய நிலையில் அருமையாக ஆடப்பெறும்.

ஒருமுறை வச்சநாட்டு அரசனுடைய அரண்மனை முன்றிலில் அரசிகள் தலைமையில் பந்தாட்ட விழா நடைபெற்றது.

பந்தாடலில் கைதேர்ந்த சுந்தரிகள் பலர் அங்கே வந்திருந்தனர். மூன்று பந்துகள் எடுத்து முதல் ஒருத்தி ஆடினாள். ஐந்து கொண்டு அடுத்தவள் ஆடினாள். அதன் பின் இராசனை என்பவள் ஏழு பந்துகளை எடுத்து இன்புற ஆடினாள். அப்பந்துகளின் இயல்பும் அவள் ஆடிய திறமும் அடியில் வருவன காண்க.

இராசனையின் பந்தாட்டம்

"வெண்மையும் செம்மையும் கருமையும் உடையன ;
துணைவளி எறியினும் தாமெழுந் தாடுவ ;
கண்கவர் அழகொடு நெஞ்சகலாதன ;
ஒண்பந் தோரேழ் கொண்டன ளாகி,
ஒன்றன் றெற்றி உயரச் சென்றது
பின்பின் பந்தொடு வந்துதலை சிறப்பக்
கண்ணிமையாமல் எண்ணுமின் ! என்று
வளரா மேகலை வளையொடு சிலம்ப
பாடகக் கான்மிசைப் பரந்தவை விடுத்தும்,
நடக முன்கையிற் சுழன்றுமா றடித்தும்,
அடித்த பந்துகள் அங்கையின் அடக்கியும்,
மறித்துத் தட்டியும் தனித்தனி போக்கியும்,
பாயிரமின்றிப் பலகலன் ஒலிப்ப
ஆயிரம் கைநனி அடித்தவள் அகல." (பெருங்கதை, 4-12)

இதில் இராசனை பந்தாடியிருக்கும் திறம் அறியலாகும். இவ்வாறே தத்தம் கைத்திறங்காட்டி அரசிளங்குமரிகள் பலரும் ஆடல்புரிந்தனர். இறுதியில் கோசல தேசத்து அரசன் மகளாகிய வாசவதத்தை என்பவள் இருபத்தொரு பந்துக்களை எடுத்து மேல்வீசி யாவரும் விம்மித மெய்தி வியந்து நிற்ப அற்புதமாக ஆடலாயினள். அவள் ஆடிய விசித்திரம் அதிசயமிக்கது.

வாசவதத்தை பந்தாடல்.

"உகைத்தெழு பந்தின் உடனெழுவன போல
எழுந்தன தாமம் ; தாழ்ந்தது கூந்தல் ;
அழன்றது மேனி ; அவிழ்ந்தது மேகலை ;
எழுந்தது துகிலியல் ; இழிந்தது சாந்தம் ;
ஓடின தடங்கண் ; கூடின புருவம் ;
அங்கையின் ஏற்றும் புறங்கையின் ஓட்டியும்,
தங்குற வளைத்துத் தானபுரிந் தடித்தும்,

இடையிடை இருகால் தெரிதர யடித்தும்,
அரவணி அல்குற் றுகிலொறி திருத்தியும்,
வித்தகக் துறவியர் பத்தியிற் றுடைத்தும்,
உருவிய கந்துகம் சுற்றுமுறை புரைத்தும்,
தொடையமை கண்ணியும் முறைமுறை இயற்றியும்,
அம்புதர் முடிவரை இழைபல திருத்தியும்,
படிந்த வளையெழுப்பியும், கிடந்தபக்தெண்ணியும்,
தேமலர்த் தொடையல் திறத்திறம் பிணைத்தும்,
பந்துவரல் நோக்கியும், பாணிவர நொடித்தும்,
சிறுவிரித் தடித்தும், கம்பிதம் பாடியும்,
ஆழியென உருட்டியும் தோழியொடு பேசியும்,
சாரிகை ஓட்டியும் வாழியென வாழ்த்தியும்,
கொடித்தொடி மாதர் பற்பல வகையால்
எண்ணாயிரங்கை ஏற்றினள்.'' (பெருங்கதை)

வாசவதத்தை பந்தாடியுள்ள திறங்களை இது உணர்த்தியுள்ளமை காண்க. அவள் ஆடியபொழுது நிகழ்ந்திருக்கும் மெய்ப்பாடுகளையும் நிலைகளையும் உய்த்துணர்ந்துகொள்க. இருபத்தொரு பந்துகளை இடைவிடாதெறிந்து எண்ணாயிரம் முறை வழுவாதாடிய அவளது அதிசய நிலையை வியந்து அரசன் முதல் அனைவரும் அவளைத் துதிசெய்து நின்றார். பந்தாட்டத்தில் கோசல தேசத்து மங்கையர்க்கு எந்த நாட்டவரும் இணையாகார் என்னும் உயர்ந்த கீர்த்தியை அன்று அவள் ஓங்கச் செய்தாள்.

இவ்வாறு மிகவும் அருமையான அற்புத நிலையில் அந்நாட்டு இளங்குமரிகள் இளமையிலேயே பந்தாடல்கள் பயின்று வருதலால் "பந்தினை இளையவர் பயிலிடம்" என அவரது செயலும் நிலையும் இயலும் தெரிய உரைத்தார். அப்பயிற்சி பரிமளங் கமழ்கின்ற இனிய பூஞ்சோலைகளில் நடைபெறும் என்பது சந்தனவனம், சண்பக வனம் என்றதனல் அறிய வந்தது.

இளங்குமரிகள் நிலையை இவ்வாறு இசைத்தார்; பின்னர்க் குமரர் இயல்பினைக் குறித்தார். கழகம் = நூல்பயிலும் இடம். கலை என்றது இயல் இசை காவிய முதலிய அறிவு நலங்கனிந்த உயர்தனிக்கலைகளை. வில் வேல் வாள் முதலிய போர்க்கலைகளையும் சேர்த்துக்கொள்க. கலைபயில் குமரரைக் கந்தனை அனையவர் என்றது இளமை, எழில், இனிமைப்பண்பு, இன்பச்செவ்வி, வீரம்

முதலிய உயர்நலங்களை யெய்தி அவர் ஒளிமிக்குள்ளமை கருதி. அறிவும் வீரமும் ஒரு சேர அமைவது மிகவும் அருமை; அருமையான அவ்விரு வகை நிலையிலும் எவரும் தனக்கு நிகரில்லாத வாறு தனிமுதல்வனுய் அந்த மூர்த்தி தழைத்திருத்தலால் எந்த அரசிளங்குமாரும் கந்தனை அனையவர் என்னும் காட்சியைப் பெற்று நூல்களில் மாட்சிமை யுறுகின்றார். இராவணனுடைய தலைமைப் புதல்வனும் மகாவீரனுமான இந்திரசித்தைக் கண்ட பொழுது "கணிச்சியான் மகனோ?" என்று அனுமான் கருதிய தாகக் கம்பர் குறித்திருக்கிறார்.

"வெஞ்சூர் தடிந்த அஞ்சுவரு சிறறத்து
முருகவேள் அன்ன உருவுகொள் தோற்றத்து
உதையன குமரன்." (பெருங்கதை, 1-42)

"சூருடைமர்க்குன் றம கொன்றோன் அன்னநின
முருகச் செவவி முகந்துதன் கண்ணால
பருகாளாயின" (மணிமேகலை 5)

"முருகற சீற்றதது உருகெழு குருசில" (புறம் 16)

"முருகினன்ன சீறறத்துக் கடுந்திறல
எநதை" (அகம் 158)

"சூருடை முழுமுதல தடிநத பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர நதாங்கு"
(பதிற்றுப்பத்து 11)

"வள்ளல்மாத தடிநதான்அன்ன மாளபிறன்."
(சிந்தாமணி 1029)

உதையணன் சீவகன் முதலிய அரசகுமாரர்களனைவருக்கும் முருகனை உவமைகூறியிருத்தலை இவற்றுள் காண்க. முற்காலத்துக் கவிகள் போலவே பிற்காலத்தவரும் அழகு அறிவு ஆண்மைகளுடையாரைக் குறிக்கும்போதெல்லாம் கந்தனையே எடுத்துக்காட்டியிருக்கின்றார். இங்கே கம்பர் காட்டியது கலைத் தலைமை தெரிய.

பலகலைகளிலும் தலைமையான புலமை வாய்ந்துபோறிவுடன் நிலவி யிருத்தலால் முருகனுக்கு ஞானபண்டிதன் என்று ஒரு பெயரும் உண்டு. தமிழ்ப் புலமையில் முதன்மை பெற்றுள்ள

அகத்திய முனிவரும் இவரது அடிபணிந்து அருளுபதேசம் பெற்றிருக்கின்றார்.

“ [illegible] தெரிபக
[illegible].” (திருப்புகழ் 47)

என்றதனால் சிவபெருமானுக்கும் இவர் தமிழை அறிவுறுத்தியுள்ளமை தெளிவாம். கவிபுனைவினும் சுவைநுகர்வினும் உயர்நிலையரா யிருத்தலால் புலவர் பலரும் முதலில் இவரது புகழை உவந்து பாடுவாராயினர். மனங்கனிந்து இவரைப்பாடினவர் உடனே பதிலங் கனிந்து அதிசயமடைந்துள்ளார். பாடினோர் பீடுபெற்று வருவதால் “பாட்டுவந்து பரிசளிக்கும் பரமன்” என நின்றார். “முத்தமிழை ஆயும் வரிசைக்கார!” (திருப்புகழ் 630) என்று அருணகிரியார் இவரைக் குறித்திருத்தலால் இவர் தமிழை ஆய்ந்து தேர்க்கும் தகைமை தெளிவாம்.

உலகில் நிலவுகின்ற எல்லா மொழிகளுக்கும் இவர் தலைவர் ஆயினும் தமிழ் மொழியில் இவரது ஆர்வம் மிகவும் பெருகியுள்ளது. தமிழ்ப் பாட்டிலும் பாவலர்களிடத்திலும் இவர் ஆவல் கொண்டுள்ளமையை விளக்குதற்குப் பலசான்றுகள் உள்ளன. அவற்றுள் சுவையான கதை ஒன்று அடியில் வருகின்றது.

இற்றைக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்ப் பொய்யாமொழிப் புலவர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் உயர்ந்த கவிஞர். சிறந்த சீலமுள்ளவர் நல்ல சிவபத்தர். நாளும் சிவபெருமானைக் குறித்துப் பாடிவருவது அவரது வழக்கம். ஒரு நாள் அவர் கனவில் முருகன் தோன்றி “என் மீது ஒரு பாட்டுப் பாடுக” என்றார். அவர் விழித்தெழுந்தார். எதிரே ஒருவரும் காணோம். ஆறுமுகன் அருளை வியந்து உளமிக உருகிக் “கோழிக் கும்பாடிக் குஞ்சிக்கும் பாடவா?” என்று உல்லாசமாகச் செல்ல மொழி பகர்ந்தார். தினங்கள் சில கழிந்தன. ஒரு நாள் அயலூருக்குப் போய்விட்டுக் காட்டு வழியே தனியாக அவர் வந்து கொண்டிருந்தார். முருகன் ஒரு வேடனைப் போல் வடிவங் கொண்டு வேலும் கையுமாய் அவர் எதிரே போனார். இடையில் தொங்குகின்ற கொடுவாளையும் கையிலுள்ள நெடுவேலையும் கண்டு அவர் நெஞ்சம் கலங்கி அஞ்சி நின்றார். இவர் அருகே நெருங்கி “நீர் யார்?” என்றார். “ஐயா! நான் ஒரு புலவன்; என் பேர் பொய்யாமொழி” என்று அவர் மெய் பதறி மொழிந்தார்.

முருகன்: உம்முடைய மடியில் என்ன இருக்கிறது எடும்.

பொய்யாமொழி: ஒன்றும் இல்லையே.

முருகன்: பேர் பொய்யாமொழி என்றீர்; நேரே பொய்மொழி புகல்கின்றீர்!

பொய்யாமொழி: மெய்யாகவே என் கையில் இப்பொழுது ஒன்றுமே கிடையாது.

முருகன்: சரி; போகட்டும். புலவர் என்றீரே உமக்குக் கவி பாடவருமா?

பொய்யாமொழி: சிறிது வரும்.

முருகன்: என் பேரில் ஒரு பாட்டுப் பாடும்.

பொய்யாமொழி: உங்கள் பெயர் என்ன?

முருகன்: என் பெயர் * முட்டை. இந்தப் பேரை இடையில் வைத்து அகப்பொருள் துறையில் நற்றாய் இரங்கலாக நேரிசைவெண்பாவில் ஒரு கவி சொல்லும்பார்ப்போம்.

இதனைக் கேட்டவுடனே புலவர் கொஞ்சம் அச்சம் நீங்கினார். "கல்வியருமை தெரிந்தவன்போலிருக்கிறது; இனிமேல் ஒன்றும் செய்யான்" என்று நெஞ்சம் துணிந்து, குறித்தபடியே கருத்தமைத்து உடனே பாடினார்.

பொய்யாமொழி புகன்றது.

"பெண்ணைபோ லும்மகள்ளிப் பொறிபறக்கும் கானலிலே
என்பேதை செல்லற் கிசைந்தனளே—மின்னைபோலும்
மானவேல் முட்டைக்கு மாறாய தெவ்வர்போம்
கானவேல் முட்டைக்கும் காடு."

இந்தப் பாடலைக் கேட்டவுடனே, "இதில் பிழை இருக்கிறது. வெயில் வெப்பத்தால் கள்ளிமுள்ளும் கரிந்து நெருப்படியாய்க்கிடக்கும் கொடிய பாலை வனத்திலே வேலமுள் எப்படி உருப்படியாய்க் கிடந்து காலில் தைக்கும்; சொல்லைஇசைத்திருக்கிறீரே தவிர பொருள் பொருந்தவில்லை; இதே துறையில் நான் உம்மீது ஒரு கவி பாடுகிறேன் பாரும்" என்று இவர் பாடலானார்.

---

* குஞ்சிக்கும் பாடவா என்று முன்னர் அவர் சொன்னதை நெஞ்சில் வைத்து நினைவுறச் சொல்லியிருக்கும் இதன் நுட்பம் நோக்குக.

முருகவேள் பாடியது.

" வீழ்ந்தக்கால் அந்தரத்தே வேயென்றும் ; வீழின்
எழுந்து சுடர்சுடுமென் றேங்கிச்—செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்தே பெய்வளையும் போயினளே
பொய்யா மொழிப்பகைஞர் போல்."

தம்பேரைப் பொதிந்து சீருடன் வந்திருக்கும் இக்கவியைக் கேட்டதும் புலவர் பெருவியப்படைந்து "ஐயா! தாங்கள் எந்த ஊர்"? என்றார். "என் ஊர் தோகைமலை; "கோழிக்குப் பாடுவதே யன்றிக் குஞ்சுக்குப் பாடாத நீர் இன்று முட்டைக்குப் பாடினீர்! செய்யேன் என்று முன்னம் சொன்ன மொழி தவறிப் பொய்யானமையால் பொய்யாமொழி என்னும் பேர் உமக்கு மிகவும் பொருந்தும் போம்"என்று புகன்றுவிட்டு இவர்விரைந்து மறைந்துபோனார். புலவர் பெருந் திகிலடைந்து தெளிந்து முருகவேளின் அருளை நினைந்து உருகி யழுதார். அதன்பின் அவசமுடன் ஆர்வமீதூர்ந்து ஊர் வந்து சேர்ந்தார்.

இந்தக் கதை எவ்வாறாயினும் தமிழில் குமரநாதன் கொண்டுள்ள பிரியநிலையைத் தெளிவுறுத்துகின்றது. இவ்வரலாற்றைக் குறித்து அருணகிரிநாதரும் தம் நூலில் உரைத்திருக்கிறார்.

" மூடப்பட்ட நாட்டுப் புலவனை
முட்டைப் பெயரா செப்பிக கவிபெறு பெருமாளே."
(திருப்புகழ் 953)

" வெருட்டி ஒரு,
வெறுவறிய ஓர் புலவன வெண்பாவைக் கைக்கொண்டு
கோடு திரியுந் துறச்செட்டி " (திருத்தணிகையுலா)

" கைபா டிரண்டிடைக் காளைதன் வாயிற் கவிதைகொண்ட
பொய்யாமொழி. " (படிக்காசுப் புலவர்)

மேற்குறித்த சம்பவம் இந்நாட்டில் நிகழ்ந்துள்ளதும், அதனைப் புலவர்கள் பாராட்டியிருப்பதும் இவற்றால் அறியலாம்.

தமிழ்ப் புலமையைத் தம் அடியவர்க்கு அருளுவதோடு தாமும் கவிபாடி மகிழ்தலால் "நாலுகவித் தியாகா!" என இவர் ஞாலம் துதிசெய்ப நின்றார். நூலறிவுடையார் பலரும் வாலறிவுடைய இவரை வழுத்திக் கவிபாடும் வரம்பெற்றுப் புவிபோற்ற நின்றுள்ளார். இவர் கலையருள்புரியும் கருணை நிலையினர்.

" ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமும் சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையும்—ஓசை
எழுத்துமுத லாமைந் திலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்து " (கந்தர் கலிவெண்பா.)

என்று குமரகுருபர சுவாமிகள் இக்குருபரனிடம் புலமையை வேண்டியிருக்கும் நிலைமையை யறிக. இவ்வாறு கலைகளிலும் கவிகளிலும் தலைமைபெற்று ஞானநாயகனாய் இவர் நிலவி நிற்றலால் புலவர் கோமான் எனப் புலமையுலகம் இவரை உரிமையுடன் உவந்து போற்றி வருகின்றது.

புலமையின் நிலைமையைக் குறித்து இந்திர சபையில் ஒரு முறை உரையாட நேர்ந்தபொழுது சரவண வேள் ஒருவரே யாண்டும் தனி முதல் புலவர் எனக் கலைமகளும் உறுதிசெய்திருக்கிறாள். புலவன் என்னும் பெயரைத் தமக்கு உரிமையாக முருகக் கடவுளே உவந்து வைத்துக்கொண்டார் என்றால் அந்நாமம் எவ்வளவு மகிமையுடையதென்பதை எண்ணி ஆராய வேண்டும். புலவர் சிங்கம் என உலகம் புகழவந்த நக்கீரரும் இம்முதல்வனைப் புலமைப்பேர் புனைந்தே தலைமையாகத் துதித்திருக்கின்றார். அவர் துதித்துள்ள படியை அடியில் பார்க்க.

" மாலைமார்ப, நூலறி புலவ,
செருவில ஒருவ, பெருவிறல் மள்ள,
பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே,
அரும்பெறல் மரபிற் பெரும்பெயர் முருக,
நசையுநர்க்கு ஆர்த்தும் இசைபேராளா!"
(திருமுருகாற்றுப்படை)

எனவரும் இதனால் இவரது புலமை வீரம் முதலிய நிலைமைகள் புலனாம். தமிழ்ச் சுவையை மாந்தித் தகவு புரிந்து வருதலால் செந்தமிழ்த் தெய்வம் என முந்தையோர் இவரை வந்தித்திருக்கின்றார். நக்கீரர் பாடலை இவர் நயந்து கேட்டுள்ள நிலையைப் புலவர் பலரும் வியந்து பாராட்டியுள்ளார்.

## கந்தன் தமிழ் கேட்ட காட்சி.

" பொன்னவிர் சுணங்குபூத்த புணர்முலைக் கருங்கண் வள்ளி
கன்னலும் அமுதும் தேனும் கைக்குமின் தீஞ்சொல மாறறித்
தன்னிகர் புலவன் கூறும் தமிழ்செவி தாழ்த்துக் கேளா
அந்நிலை மனங்களிப்புற்று அறுமுகம் படைத்த கோமான்."
(சிகாளத்திப் புராணம்)

இதில் புலவன் என்றது நக்கீரரை. அவர் மனமுருகிப் பாடிய திருமுருகாற்றுப்படை என்னும் தமிழ்ப் பாட்டை முருகன் விழைந்து கேட்டு மகிழ்ந்துள்ளபடியை இதன் கண் விளக்கியிருத்தல் காண்க. இளமை எழில்களோடு கலையுணர்நிலையிலும் சுவைநுகர்விலும் இங்ஙனம் உயர்நலமடைந்துள்ளமையால் கலை தெரிகின்ற கோசலநாட்டுக் குமரர்களுக்குக் கந்தனை உவமை கூறினார். "கந்தனை அனையவர்" என்றதனால் அம்மைந்தர்களுடைய அழகு அறிவு ஆண்மை முதலிய பலவகை மேன்மைகளும் ஒருங்கே உணர வந்தன.

பயில் என்றதனால் மகளிருடைய பந்தாடலின் அரிய பயிற்சி நிலையும், கந்தன் என்ற குறிப்பால் மைந்தரது இனிய மாண்புகளும் வெளியே இங்ஙனம் விளங்க வைத்துள்ள அருமை நுணுகி நோக்கி மகிழ்ந்து கொள்ளத்தக்கது.

உல்லாசமான பொழுது போக்குகள், வீரக்காட்சிகள், கல்வி ஆராய்ச்சிகள், சொல்லாடல்கள், சல்லாபங்கள் முதலியன எவரிடமும் உவமைநிலையமாய் ஓங்கியிருந்தன என்பது இதுகாறும் உரைத்து வந்தவாற்றால் உணரலாகும்.

செல்வங்களையும், இயற்கை நிலைகளையும், செயற்கை நலங்களையும் இவ்வாறு நேரே நயமாக விளக்கிவந்த கம்பர் இடையே வேறொரு வகையில் மாறித் தமது சொல்லாடலை எல்லாரும் அறிந்து இன்புறுமாறு உல்லாசமாகவிளையாடியிருக்கிறார். என்னே அந்த விளையாட்டு' எனின், பின்னே காட்டுதும்; காணுங்கள்.

பலவளங்களும் நிறைந்திருந்தாலும் கோசல நாட்டில் சில குறைகளும் உண்டு என்கின்றார்: "அங்கே கொடையாளிகள் இல்லை; சத்தியம் கிடையாது; வீரமோ யாரிடமும் காணமுடியாது" என்று இவ்வாறு கூறியிருக்கிறார். இதைப் பார்த்தவுடனே பலர் திகைப்பர்; சிலர் நகைப்பர்; சிலர்க்கு நமதுநாட்டு நிலைமை நினைவுக்கு வந்து நமக்கு அது ஒரு கூட்டாளிபோலும் என்று குறிக்கத் தோன்றும். ஆனால் அவரது பாட்டை நோக்கின் ஐயம் தீர்ந்து மெய்ம்மை தெளிந்து அகமிக மகிழ்வோம். அதி விநயமுடைய நவினமான அக் கவி அடியில் வருகின்றது.

இல்லாத உண்மைகள்.

“வண்மை யில்லை, ஓர் வறுமை இன்மையால்;
திண்மை யில்லை, நேர் செறுநர் இன்மையால்;
உண்மை யில்லை, பொய் யுரையிலாமையால்;
வெண்மை யில்லை, பல் கேள்வி மேவலால்.”

(நாட்டுப்படலம் 53)

கோசல நாட்டில் வண்மை முதலியன இல்லை என மேற் போக்காக எண்ணி அயரும்படி முன்னுற இசைத்துப், பின்னர் ஏதுவாசகங்களை இணைத்து வியப்பும் நயப்பும் தோன்ற அவற்றின் உண்மையை விளக்கி உரைத்திருக்கும் நுண்மையை இதில் ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்க.

ஓர் என்பது ஒரு சிறிதும் என்றவாறு. வறுமை என்று ஒன்று உண்டு என்பதை அத்தேசத்தவர் யாதும் அறியார் என்பதாம். தரித்திரத்தின் பேரும் தெரியாதென்றதனால் அதன் சீரும் சிறப்பும் திருவும் தெரியகின்றது.

கோசல தேசத்தில் உள்ளவர்களெல்லாரும் நல்ல செல்வர்கள்; யாதொரு குறைவுமில்லாதவர்கள்; ஒருவரிடம் போய் ஒன்று வாங்கவேண்டிய அவசியம் அவர்களுக்குக் கிடையாது; ஏதேனும் ஏற்பவர் இருந்தால் அல்லவா ஈகைக்கு இடம் உண்டு? எள்ளலான இரப்பு அங்கு எங்கும் இல்லாமையால் வள்ளலாகும் சிறப்பை அந்நாட்டவர் அடையமுடியாமல் மறுகியிருந்தார் என்பார் “வறுமை இன்மையால், வண்மை இல்லை” என்றார். எவரும் எவ்வகையான குறைவுமில்லாமல் எல்லோரும் நிறை பெருஞ்செல்வராய் நிலவியிருந்தார் என்பதை இவ் வகையாக உரை செய்திருக்கிறார்.

உடல்வலி மனவலி ஆண்மைத் திறன் போராற்றல் முதலிய போராற்றல்கள் அமைந்து வீரர் பலர் அங்கு வீறுற்றிருந்தார்; இருந்தும் பகைவராய் எதிர்வார் எவரும் இல்லாமையால் அவரது வீரத்திறல் வெளியே தெளிவாய் விளங்கித் தோன்றாமல் ஒளி மழுங்கி மறைந்து கிடந்தது ஆதலால், “செறுநர் இன்மையால் திண்மை இல்லை” என்றார். செறுநர் = பகைவர்.

பொய் பேசுபவர் பலரிருந்து அவரிடையே வாய்மையுடையார் சிலர் இருப்பின், இவர் மெய்யர் என்று வையம் அவரைச்

சுட்டிச் சொல்லும்; உள்ளவரெல்லாருமே மெய்யே பேசுபவர்; மறந்தும் பொய் புகலாதவர் ஆயின், மெய்யுடையார் இவர் என்று அங்கே எவரையும் விதந்து கூறமுடியாது ஆதலால் "பொய் உரையிலாமையால், உண்மை இல்லை" என்றார். பொய் என்றால் இன்னதென்றே தெரியாமல் மெய் ஒன்றே பேசும் செவ்விய நாவினரையே அத்திவ்விய தேசம் சேர்ந்திருந்த தென்பதாம். அந்தச் செவ்விய இருப்பை இவ்விதம் உரைத்தார்.

கண்ணை மயக்கி, நயப்பை இயக்கி, வியப்பை யுண்டாக்கும் கைத்திறக்காரன் செய்கையைச் செப்படிவித்தை என்பர். கம்பர் இங்கே அப்படிச் செய்திருக்கிறார். உண்டும் என்பதை இல்லை என்று சொல்லி, எல்லாருள்ளங்களிலும் திகைப்பையும் அதிசயத்தையும் சேர விளைத்து, இந்திரசால சாதுரியத்துடன் அந்த உண்மையை உறுதி செய்து இந்தப் பாட்டில் அவர் காட்டியிருக்கும் காட்சி கண்டுகளிக்க வுள்ளது. செப்பை வைத்துக்கொண்டு விநோதம் செய்தலால் அது செப்படிவித்தை என வந்தது. செப்பு என்பது சொல்லுக்கும் பேர் ஆதலால் தமது அற்புதச் செப்பாடலைப் பொற்புடன் புரிந்துள்ள இவரது விற்பனத் திறமும் செப்படி வித்தை என்று ஈண்டுச் செப்பிட நேர்ந்தது.

இக்கவியில் முதல் மூன்றடிகளும் ஒரே நிலையில் அமைந்தன. இறுதி அடிமட்டும் வேறுபட்டுள்ளது. வண்மை, திண்மை, உண்மைகள் விரும்பத்தக்கன; வெண்மை வெறுக்கப்படுவது. வெண்மை = அறியாமை. இனமில்லாத அதனை இங்கு மருவியது ஏன்?

முன மூன்றும் மனம் வாக்கு காயம் என்னும் மூன்றிற்கும் இனமானவை ஆதலால் ஓரினமாய்த் தொடர்ந்து நின்றன. மன நிலையை மத்தியில் வைத்துச் செயலையும் மொழியையும் அயலிரு மருங்கிலும் சேர வைத்தார். முக்கரணங்களையும் ஒக்க உணர்த்திய பின்னர்ப் பக்கம் ஒன்று சேர்த்துப் பாட்டைப் பூர்த்தி செய்திருக்கிறார். அதன் வேறுபாடு தெரியக்கடைசியில் வைத்து "மேவலால்" என வேறொரு வாய்பாட்டால் கூறியருளினார்.

தான் கற்றதோடு அமையாது பெரியோர்கள் வாயிலாகப் பல்வகையான நூற்பொருள்களையும் கேட்டபொழுது தான் ஒருவன் அறிவு நிரம்பி அடக்கமும் அமைதியும் வாய்ந்து பெருந்

தன்மையுடையனுய்ச் சிறந்து நிற்பான் என்பது "பல் கேள்வி" என்றதனுல் அறியவந்தது.

வறுமை பகைமை பொய்மை மடமை என்பன அந்நாட்டில் சிறிதும் இல்லை; செல்வம் கொடை வீரம் சத்தியம் கல்வி அறிவு முதலிய உயர்நலங்களே யாண்டும் குதிகொண்டு அங்கே குலாவி நின்றன என்பது இதன் திரண்ட பொருளாம்.

வண்மையை முதலில் குறித்தது இருமையினும் இன்பம் தரும் அதன் அருமை கருதி. குறை கூறுவதுபோல் காட்டி மறைமுகமாகக் கோசல தேசத்தின் பெருமையை இதில் உரை செய்திருக்கும் கவி சாதுரியத்தைச் சிவப்பிரகாச சுவாமிகளும் உவப்புடன் கொண்டு, "கொடுப்போர்க்கு இரப்பார் இல்லாத குறை ஒன்றுளது" (பிரபுலிங்கலீலை) என்று இளவலதேயத்தைப் பற்றிக் கூறியிருக்கின்றூர்.

> "கள்வார் இலாமைப பொருள் காவலும் இல்லை; யாதும
> கொள்வார் இலாமைக் கொடுபபார்களும் இல்லை மாதோ."
> (நகரப்படலம் 73)

எனப் பின்னரும் கம்பர் இந்நயம் பேணிப் பேசியிருக்கிறூர். வண்மை இல்லை என முன்னம் குணநிலையில் கூடமாகக் குறித்ததை இதில் குணிநிலையில் வெளிப்படையாக விளக்கியுள்ளார். கருத்துக்களைக் கனிவுற விளக்கும்இவரது நளினமும், ஓரிடத்தில் உரைத்ததைப் பிறிதோரிடத்தில் ஞாபகமாய் உறுதிப்படுத்திச் செல்லும் விநயமும் இதனுல் எளிது தெளியலாம்.

நான்கு நான்கு பொருள்களை வரைந்துகொண்டு சில கவிக ளில் நாட்டு நிலைகளை நன்கு காட்டியிருக்கின்றூர். அவற்றுள் ஒன்றை இங்கே காண்போம்.

### நீதி நலங்கள் நின்ற நிலை

> "பொற்பில நின்றன பொலிவு; பொய்யிலா
> நிற்பில நின்றன நீதி; மாதரார்
> அற்பில நின்றன அறங்கள்; அன்னவர்
> கற்பில் நின்றன கால மாரியே." (நாட்டுப்படலம் 59)

அழகு, பொலிவு, வாய்மை, நீதி, அன்பு, அறம், கற்பு, பருவ மழைகள் அந்நாட்டில் மருவியிருந்தமையை இது கூறுகின்றது.

மக்களின் உருவாலும் உள்ளப் பண்பும் எழிலமைதியும் செயற்கை அலங்காரங்களும் எங்கும் தேசமிகுந்து திகழ்ந்திருந்தன என்பார் "பொலிவு பொற்பில் நின்றன" என்றார். பொற்பு = அழகு, அலங்காரம். "பொலிவும் அழகும் ஒப்பனையும் பொற்பெனல்" (பிங்கலந்தை). காட்சி நலங்கள் கனிந்து யாண்டும் மலர்ச்சியும் மகிழ்ச்சியும் மிகுந்து தேசோமயமாய் அத்தேசம் சோபித்து நின்றதென்பதாம்.

நீதிநெறிகள் சத்தியத்தில் தழைத்து வருதலால் பொய்யிலா நிலையில் நீதி நின்றன என்றார்.

பெண்கள் அன்புடையராயின் வருந்திவந்தவர்களை ஆதரித்து, விருந்தினரைப் பேணி, இல்லறங்கள் யாவும் இன்புறச் செய்வாராதலால் "மாதரார் அற்பில் அறம் நின்றன" என்றார். அற்பு = அன்பு. "அறத்திற்கே அன்பு சார்பு என்ப" (குறள் 76) என்றதனால் அன்போடு அறனுக்குள்ள தொடர்பு புலனாம். ஆடவர்களுடைய அன்பினும் பெண்களுடைய அன்பு நேரே உதவி ஆருயிர் இன்புறச் செய்து அறம்புரிந்து, அகமும் புறமும் இதம்புரிந்துவரும் ஆதலால் அதன் சாரம் தெரிய உரைத்தார்.

"பெருந்தடங்கட் பிறைநுதலார்க்கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்திவந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்துமன்றி விளைவன யாவையே." (நாட்டுப்படலம், 36.)

என்று கோசலநாட்டுப் பெண்களின் பூப்பு நிலையும் காய்ப்பும் கனியும் முன்னம் புற நிலையில் புகன்றார்; இங்கே அகநிலையை மொழிந்தார். நயனும் வியனும் பயனும் தெரிக.

காலமாரி = பருவமான மழை. அதாவது உயிர்க்கும் பயிர்க்கும் வேண்டியபொழுது வேண்டிய அளவுஇனிதுபெய்வது. புண்ணியம் பொருந்தியுள்ள இடத்தேதான் அவ்வாறு பெய்யும்; ஆகவே புண்ணியசாலிகளான பதிவிரதைகள் நண்ணியிருக்கும் நாட்டில் அவர் எண்ணியபடியே அம்மழை இயங்கிவரும்ஆதலால் "காலமாரி அவர் கற்பில் நின்றன" என்றார்.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை." (குறள் 55)

என்ற பொய்யாமொழியை அடியொற்றி இந்த இறுதி அடி வந்துள்ளமை அறிக. மழை கற்புடையார் சொல்வழி ஒழுகிவரும் என்றதனால் அவரது அற்புத நிலைமையும் அருமையும் புலனாம்.

கணவனுக்கு இனியளாய் நெறிநின்றொழுகும் புனித நீர்மையே கற்பாம்; அந்த அரும்பெறல் ஒழுக்கம் பெரும்புயலொழுக்குக்குக் காரணம் என்றதனால் வான்நோக்கிவாழும் உலகெல்லாம் கற்புடையாரைத் திசை நோக்கித்தொழும் என்பது பெற்றாம்.

“ நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யு மழை.” (ஔவையார்)

என்னும் இதில் நல்லார் யார்? என்பதை ஆராய்ந்துகொள்க.

“ வேதம் ஓதிய வேதியர்க்கு ஓர் மழை;
நீதி மன்னர் நெறிமுறைக்கு ஓர் மழை;
காதல் மங்கையர் கற்பினுக்கு ஓர் மழை;
மாதம் மூன்று மழையெனப் பெய்யுமே.”

இந்நிலம் வளம் மிகவுடையதாய் நலமுற வேண்டின் பத்து நாளைக்கு ஒரு முறை மழை பொழியவேண்டும்; அது உத்தமர்களும் உத்தமிகளும் உள்ள நாட்டிலேதான் அவ்வாறு உரிமையுடன் பெய்யும் என்பதை இச்செய்யுளில் அறிகின்றோம். இதன் கண்ணும் பத்தினி வந்துள்ளமை காண்க.

“ நாடும் ஊரும் நளிபுகழ் வேந்தனும்
பீடுறும் மழை பெய்கெனப் பெய்தலும்
கூடலாற்றவர் நலனது கூறுங்கால்
பாடுசான்மிகு பத்தினிக் காவதே.” (வளையாபதி)

“ ஓங்கிரு வானத்து மழையுநின் மொழியது ” (மணிமேகலை)

“ கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண்டிலமால்;
வானம் பொய்யாது; வளம்பிழைப் பறியாது;
நீணில வேந்தன் கொற்றம் சிதையாது;
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு.” (சிலப்பதிகாரம் 15)

“ நண்ணு கற்புடை நங்கையர் சீறடி
மண்ணின் எவ்விடம் தோயினும் மற்றஃது
எண்ணுகின்ற தலங்கள் எவற்றினும்
புண்ணியத்தலம் என்று புகல்வரால்.” (காசிகாண்டம்)

இவற்றால் பதிவிரதைகளின் பெருமையும், அவர் உறைந்துள்ள நாட்டின் உயர்நிலையும் உணரலாகும். அவர் சொல்வழி மழை தொழில் செய்யும்; அவரது ஏவலைத் தேவரும் ஆவலோடு புரிவர்; அவர் இருக்கும் நாடு ஒரு குறைவுமின்றி நிறைவள

முடையதாய் என்றும் ஒளிசெய்து விளங்கும் என இன்னவாறு நூல்கள் உலகும் வழங்கிவருகின்றன.

தமது காவியத்தலமாகிய கோசலத்தைப்பற்றிக் கூறத்தொடங்கிய கம்பர் அங்குள்ள ஆணும் பெண்ணும் நெறிமுறைவழுவா நீர்மையர் என முதலில் நுதலிப் புகுந்தார். அந்தப் புனித நிலைமையை மீண்டும் ஞாபகப்படுத்தி மாதரார் கற்பை முடிவில் வைத்துப் பொற்புடன் இங்ஙனம் முடிவு செய்திருக்கிறார்.

நீரில் படிந்தெழுந்த எருமைகள் கார்மேகங்கள் போல் நிலத்தில் பால் சொரிந்துவரும்; அந்த இனிய பால் அயலே யுள்ள வயலில் பாய்ந்து நெல்லின்பயிரை நீளவளர்க்கும்; கோழிகள் குப்பைகளைக் கிளைக்குங்கால் அங்கே மாணிக்க மணிகள் தோன்றும்; அந்த மணிகளை மின்மினிப் பூச்சிகள் என்று எண்ணித் தூக்கணங் குருவிகள் தூக்கிக்கொண்டுபோய்த் தம் கூடுகளாகிய வீடுகளில் விளக்குகளாக வைக்கும்; கடலருகே வாழும் பரதவர் சிறுமிகள் சங்கு முத்துக்களைச் சிறுவீடுகள் கட்டி விளையாடி எங்கும் சிதறியிருப்பர்; வள்ளிக்கிழங்கை அகழ்ந்தெடுப்பவர் மண்ணுள் மணிகளை எடுப்பர்; சந்தனம் சண்பகம் முதலிய இளமரச் சோலைகளும், பரிமளமிகுந்த எழிலுயர் பொழில்களும், குளிர் மலர்ப் பொய்கைகளும், வாழை கரும்பு கமுகு தெங்கு மா பலா முதலிய கனி வளங் கனிந்த இனிய தோப்புகளும் யாண்டும் நீண்டு நிமிர்ந்து நிலவி நிற்கும்; அளவிடலரிய நிதிகளைக் கலம் சுரக்கும்; நிறைவளங்களை நிலம் சுரக்கும்; பொன் குவியலைப் பிலம் சுரக்கும்; நல்லொழுக்கங்களை குலம் சுரக்கும்; குளிர் தேனைக் கோதைகள் சொரியும்; பருமணிகளைப் பாதைகள் சொரியும்; உறைபுறும் அமுதத்தை ஊதைகள் சொரியும்; செவிநுகர் கனிகளைக் காதைகள் சொரியும்; என இன்னவாறே பலவகை நிலைகளையும் புலமை நலம் கனியப் பாடிவந்தவர் அந்நில நலங்கள் எல்லாவற்றையும் பூரணமாகச் சொல்ல யாராலும் முடியாது; பலகாலும் பலகால்களாலும் ஓடியும் சரயுநதி அந்நாட்டின் வரம்பு காணமுடியாமல் மாறி மாறிச் சுழன்று திரிகின்றதே! இருகால்களையுடைய மனிதரால் எவ்வாறு எல்லைகண்டு சொல்ல முடியும்? எனச் சிலேடை அணியால் விசேடித்து அதன் எல்லையற்ற மகிமையை நாம் எண்ணி வியந்து கொள்ளுமாறு இனிதுசொல்லி இப்படலத்தை முடித்திருக்கிறார். கால் என்றது நீர் ஓடுகின்ற வாய்க்கால்களை. இதில் மூடியுள்ள நயங்களை நாடி அறிந்துகொள்க.

உரை உணர்வுகளுக்கு அடங்காமல் கோசல தேசத்தின் பெருமை உயர்ந்துள்ளது. ஆதலால் என்னால் இயன்ற அளவு கூறி இவ்வளவில் நிறுத்துகின்றேன் என்பது கருத்து.

நாட்டு நிலை முற்றிற்று.

# நான்காவது அதிகாரம்

## நகர நிலை.

கோசல தேசத்தின் இராசதானியாய்த் தேசுமிகப்பெற்றுச் சிறந்திருக்கும் அயோத்தி நகரத்தை இங்கே நாம் காணவந்திருக்கின்றோம். அதன் பெயரைக் கேட்டவுடனே யாருக்கும் ஓர் ஆர்வமும் மதிப்பும் நேரே தோன்றுகின்றன. அது பூவுலகில் ஒரு ஊராயிருப்பினும் காவிய வுலகில் தேவியல்புடன் திகழ்ந்து நிற்கின்றது. இசை திசை பரப்பி இனிதமர்ந்துள்ள அதன் அதிசய அமைதிகள் அளவிடலரியனவாய்த் துதிசெய்யப் பெறுகின்றன. அதனுடைய காட்சிகளும் மாட்சிகளும் கழிபேருவகை தந்து யாண்டும் ஒளி மிகுந்துள்ளன. ஒரு நகரம் என்றவுடனே நல்ல விசாலமான தெருக்கள், பல்வகைப் பண்டங்கள் நிறைந்த கடைவீதிகள், அழகிய பெரிய வீடுகள், மாடமாளிகைகள், கூடகோபுரங்கள், நாற்சந்திகள், பூஞ்சதுக்கங்கள், யானைப் பந்திகள், குதிரை லாயங்கள், விளையாட்டு மைதானங்கள், களியாட்ட வசதிகள், இடையிடையே குளிர்பூஞ்சோலைகள், பசுங்கொடிப் பந்தர்கள், பனிமலர்ப்பொய்கைகள் முதலிய இன்னவாறான நன்னயங்களே நம்மனக்கண் முன் தோன்றும். இவ்வளவோடு அமையாமல் எவ்வளவோ திவ்விய நிலைகளையும் செவ்விய உணர்ச்சிகளையும் வியப்பும் விம்மிதமும் விரிந்து பொங்கக் கவி இதில் விளைத்திருக்கின்றார். பண்டு தொட்டே உலகிலுள்ள எந்நகரங்களிலும் இந்நகரம் உயர்வாக எல்லாராலும் மதிக்கப்பட்டுள்ளது. இராமன் தோன்றியபின் அம்மதிப்பு மேலும் மிகுந்து வானும் புகழ வளர்ந்து நின்றது. இதில் ஒரு மனிதன் இருந்து வாழ்வதே அருந்தவப் பயனாக எண்ணவந்தது. அவ்வாறில் இது ஒரு முத்தி தரும் நகரம் என்று முன்னோர்களால் முடி

யில் சித்தம் செய்பவாயது. பின்னரும் ஆறு நகரங்கள் இத னோடு எண்ண வந்தன. அவை மதுரை, மாயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்பன. தம்மில் வாழ்பவருக்கு இம்மை யில் இன்பமும், மறுமையில் பேரின்பமும் நல்கவல்லன என்று கருதி இந்த ஏழையும் முத்தி நகரம் என்பர். உலக வழக்கிலும் நூல்வழக்கிலும் இங்ஙனம் பெருமை பெற்றுள்ள இவ்வேழனுள் ளும் அயோத்தி முதன்மை பெற்றுள்ளது.

"அழகிய அயோத்திமதுரைபெ மாயை அவந்திகை காசிநற் காஞ்சி
விழுமிய துவரை எனப் புவிதன்னில் மேலவாய் வீடருள்கின்ற
ஏழுநகரத்துட் சிறந்தது." (கந்தபுராணம்-நகரப்படலம் 75)

என்னும் இதில் அயோத்தியை முதலில் வைத்துள்ளமை காண்க. அழகிலும் திருவிலும் சிறந்து, திறலிலும் தேசிலும் உயர்ந்து இன்னவாறு தெய்வத் தன்மையும் பொருந்தி இன்ப நிலையமாயுள்ள இந்நகரத்தைக் குறித்துக் கம்பர் எழுபத்தைந்து பாடல்கள் பாடியிருக்கிறார். நாட்டைவிட்டு நகரத்துக்கு வந்த பொழுது அவரது பாட்டுகள் பரவசப்பட்டெழுகின்றன. ஆர்வ மும் ஆவேசமும் நிறைந்து பெருங் களிப்புடன் பெருகிவந்துள்ள அந்த அருமைக் கவிகளை ஆழ்ந்து நோக்காமல் மேற்போக்காகப் பாடினாலும் உள்ளத்தில் இன்பவுணர்ச்சிகள் ஓடி வருகின்றன.

இலக்கண முடிபுகளையும், அணியமைதிகளையும், பொருள் நயங்களையும் உள்ளே ஊன்றி நோக்கிப் பொழுதுபோக்கி நிற்கும் பெரும் புலவர்களைக்காட்டிலும் சிறிது கல்வி யறிவு வாய்ந்த பொதுமக்கள் கம்பன் கவிகளில் அதிக இன்பம் நுகர்ந்து வருகின் றனர். முன்னவர் அறிவு நிலையில் நின்று கம்பனை அளந்து பார்த்துவிட்டு அகன்று போகின்றனர்; பின்னவர் அன்பு நிலையி லமர்ந்து கவியிலாழ்ந்து இன்பம் நுகர்கின்றனர். ஞானியும் பத்த னும் பேரின்ப நலனை நேரே அடைதற்கு உரியராயினும் பின்ன வர் மிகவும் எளிதாகவும் முழுதும் இன்பகரமாகவும் அதனை அடைந்து மகிழ்கின்றார். அன்னவாறே மனநலமுடைய அன்பர் கள் மதிநலமுடையாரினும் கம்பன் கவியில் இலகுவாக இன்பம் காண்கின்றனர். கலையறிவும் சுவையுணர்வும் செல்வமும் கல்வியும் போல் தனித்தனியே பிரிந்து நிற்கின்றது. இருமையும் ஒரோ வழி ஒரு சேர அருமையாய் மருவி அருள் சுரந்துள்ளன ...ண்

பட்ட அந்த நுண்ணறிவில் கவியின் உள்ளம் இன்னொளிவீசி இனிது திகழ்கின்றது.

பொன்மணிகள் மாற்று ஒளிகளால் ஏற்றம் பெறுதல்போல் கவிகள் பொருட்சுவைகளால் ஊற்றம் பெறுகின்றன. கவிரசனை உணர்வின்பமாய் ஒளிர்கின்றமையால் அதனை உரைகளால் வெளியே சொல்லுங்கால் மேலும் இன்பம் மிகுந்து பெருகுகின்றது. கலைபுணர்விற்குக் கவிச்சுவைபோல் கழிபேரின்பம் தருவது இவ்வுலகில் வேறு எதுவும் இல்லை. மனித சமூகத்திற்கு உன்னதமான ஓர் உணர்வுக் காட்சியை உதவித் தெய்வத் திருவை நல்கிக் கவிகள் உள்ளூர உய்வைச் செய்துவருகின்றன. ஊரைக் குறித்து உவகை நிலையமாய் வந்துள்ள கவிகளுள் சில இங்கே கண்டு மகிழ்வோம்.

### அயோத்தியின் மகிமை.

செவ்விய மதுரம் சேர்ந்தநற் பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞர் அனைவரும் வடநூல் முனிவரும் புகழ்ந்தது வரம்பில்
எவ்வுலகத்தோர் யாவரும் தவம்செய் தேறுவான் ஆதரிக்கின்ற
அவ்வுலகத்தோர் இழிவதற் கருத்தி புரிகின்ற தயோத்திமா நகரம்.
(நகரப்படலம் 1)

### நகரின் நிலைமை.

நிலமகள் முகமோ! திலகமோ! கண்ணோ!
நிறைநெடு மங்கல நாணோ!
இலகுபூண் முலைமேல் ஆரமோ! உயிரின்
இருக்கையோ! திருமகட்கினிய
மலர்கொலோ! மாயோன் மார்பின் நன்மணிகள்
வைத்தபொற் பெட்டியோ! வானோர்
உலகின்மேல் உலகோ! ஊழியின் இறுதி
உறையுளோ! யாதென உரைப்பாம்! (2)

### நகர் அமைப்பின் அழகு.

அயில்முகக் குலிசத் தமரர்கோன் நகரும்
அளகையும் மென்பிறை அமுதர்
பயிலுறு வுற்ற படிபெரும் பாலும்
இப்பெருந் திருநகர் படைப்பான்
மயன்முதல் தெய்வத் தச்சரும் தந்தம்
மனத்தொழில் நாணினர் மறந்தார் ;
புயல்தொடு குடுமி நெடுநிலை மாடத்
திந்நகர் புகலுமா றெவனோ ! (3)

இந்த ஏழு பாடல்களிலும் அயோத்தி நகரைக் குறித்து என்ன சொல்லியுள்ளன என்பதைக் கண்ணூன்றி அறியு முன்னம் இன்னிசையோடி பாடிக் கவிகளை மனனஞ் செய்துகொள்க. தேகப்பயிற்சி உடலுக்கு உரம் தருதல்போல் ஞாபகசக்தி மனத்திற்கு உறுதியும் எழுச்சியும் ஒளியும் தருகின்றது. தமிழ்க் காவியங்களின் குறிக்கோள்களையும் உறுதி நலங்களையும் அறிந்து கொள்ளவேண்டும் என்னும் ஆர்வங்குன்றி, அருமைப் பண்புகளை அடியோடு மறந்து அவற்றைக் குறித்து அவம் பேசிவரும் இக காலத்தில் நான் பேசுவது நவம்போலத் தோன்றும். கையில் கிடைத்த பொருள் அருமையுடையதாயினும் அதனை எளிதாக மதிப்பதும், கிடையாததைப் பெரிதாக எண்ணிப் பேராவல் உறுவதும் இருளுடை யுலகின் இயற்கையாகும். "பெற்ற சிறுகப், பெறாத பேரிது உள்ளும் சிற்றுயிர்" என்னும் இந்த அருமைவாக்கு அந்த அநுபவத்தின்மேல் வந்தது. உத்தமமான ஒளி மணிகள் ஒதுக்கப்பட்டுக் கிடத்தலும், அற்பமான வெட்டுக் கற்கள் புதுக்கப்பட்டு நிற்றலும், காலவேற்றுமையாலும் மக்களின் நிலைக்கேட்டாலும் நேர்வன ஆயினும் உண்மைத் தன்மை ஒளிந்துபோகாது. உயிருள்ளது என்றும் ஒளி பெற்று நிற்கும்; உயிரற்றதுவிரைவில் செயலற்றொழியும். இங்கே பழமையில் மயங்கி நான் கிழமை கூறவில்லை; புதுமைக்கும் புதுமையாய்ப் புத்தொளிபெற்று மக்களை உத்தமநிலையில் உய்த்தருள்வதையே உரிமையுடன் உரைக்கின்றேன். பண்டை நூல்களிலுள்ள இலக்கண நலங்களையும், இலக்கிய வளங்களையும், மனோதத்துவங்களையும், இனிது அறிய மாட்டாமல் எளிதாக இகழ்ந்தும், அவற்றை ஆர்வத்தோடு ஆதரித்து வருவாரைப்பழமை விரும்பிகள் என்று இளிவுரைபகர்ந்தும் புதுமை மோகிகள் சிலர் இந்நாளில் பெரிதும் பிழைபாடு புரிகின்றனர். அவரது நிலைமைக்கு இரங்கி அறிஞர் பலரும் உளமிக உளைந்து உணர்வுதவி வருகின்றனர்.

பழையன களைந்தொதுக்கிப் புதியன புனைந்து சேர்த்து விழுமிய நிலையில் மனித வாழ்க்கைக்குக் கம்பர் வழிசெய்துவைத்திருக்கின்றார். அவரது வைப்பு நிதியை உய்த்துணர்ந்து கொண்டால் உறுதிநலங்கள் பல காண்போம். உயர்வாழ்வுண்டாம்.

இனி முன் குறித்த கவிகளைக் கருத்தூன்றிப் பார்ப்போம்.

தம் காவியத் தலைவனது அவதாரத் தலம் ஆதலால் அயோத்தி அரிய பெரிய மகிமைகளை யுடையதென அதிசய நிலையில் கம்பர் அதனை ஆவலோடு பாடியிருக்கிறார்.

1. கல்வி நலங்கனிந்த நல்லிசைப் புலவர்கள் பல்லோராலும், பலமொழிகளிலும் அந்நகர் உவந்து போற்றப்பட்டுள்ளது; உலக நிலையைத் துறந்த அரிய தவமுனிவர்களும் அதனை வியந்து புகழ்ந்திருக்கின்றனர்; பேரின்ப நிலையமான பரமபதத்திலுள்ளவரும் அதில் வந்து வசிக்க விழைந்து நின்கின்றார் என்று முந்துறக் குறித்தார். இதனால் அதன் திவ்விய நிலைமை புலனும்.

மண்ணுலகமும், விண்ணுலகமும், எண்ணரிய இன்பப்பேறுடைய முத்தித்தலமும் அவ்வூரைக்குறித்து எண்ணியுள்ள படியை முன்னதாக இன்னவாறு நம்மை எண்ண வைத்தார்.

கவிஞர் முனிவர் அவ்வுலகத்தோர் என்றதனால் அவர்தம் புலமையும், நிலைமையும், தலைமையும் முறையே தெரியவந்தன.

சீர்மை கூர்மை இனிமை என்னும் இப்பண்புகள் மொழிகளில் உள்ளன; மண நிலைகளை வண்டுகள் அறிதல்போல் அக்குணநலங்களைக் கவிஞர் கண்டறிவார்; அக்காட்சி கலைமாட்சியாம் என்பதை இதில் நாம் காணுகின்றோம்.

உலகப் பொருள்களையும் உயிர்களின் உள்ளக் கருத்துக்களையும் வெளியே உணர்த்திவருகின்ற சொற்களின் இயல்புகளைக் கம்பர் அறிந்துள்ள திறம் அவர் வாய் மொழிகளால் தெரிந்து கொள்ளலாம். சொற்சுவையில் இவர் உயரிய நற்சுவையாளர்.

சீரிய சொல் எது? கூரிய சொல் எது? தீஞ்சொல் எது? என்று யாரேனும் எதிர்த்து கேட்டால் அவர்க்கு நேரே தெளிவாகப் பதில் சொல்வது மிகவும் அரிது.

சீர்மை, திருந்தியபண்பும் செவ்வியுமுடையது.
கூர்மை, குறித்தபொருளில் தொனி நுட்பம் வாய்ந்தது.
இனிமை, எளிமையும் தெளிவும் வளமையும் இசைந்தது.

சிந்தைக்கு இனிய, செவிக்கு இனிய, வாய்க்கு இனிய என்றபடி நம் செந்தமிழ் மொழிகள் இன்ப நலம் சுரந்து இசை மிகுந்துள்ளமை கலையறிவாளர்கள் எவர்க்கும் நன்கு தெளிவாம்.

கவிஞர் என்று நம் கவிநாயகர் இங்கே சுட்டியது நம்மாழ்வார், குலசேகராழ்வார் முதலான பெரியோர்களை.

நம்மாழ்வாரது ஞான குணங்களிலும், அவா அருள நூலாகிய திருவாய்மொழியிலும் கம்பர் பெரிதும் ஈடுபட்டிருக்கிறார். அந்த ஈடுபாட்டின் ஆர்வ நிலையை இவர் பாடியிருக்கும் சடகோபரந்தாதியில் தெளிவாகத் தெரியலாம்.

" கவிப்பா அமுதம் இசையின் கறியொடு கண்ணன் உண்ணக்
குவிப்பான் குருகைப் பிரான்சடகோபன் குமரிகொண்கன்
புவிப்பா வலர்தம் பிரான் திருவாய்மொழி பூசுரர்தம்
செவிப்பால நுழைந்துபுக் குள்ளத்துளே நின்று தித்திக்குமே.

" போந்தேறுக வென்றிமையோர் புகலினும், பூந்தொழுவின்
வேந்தேற டர்த்தவன் வீடேபெறினும், எழிற்குருகூர்
நாந்தேறிய அறிவன் திருவாய்மொழி நாளும் நல்கும்
தீந்தேறல் உண்டுழ லுஞ்சித்தியே வந்து சித்திக்குமே."

(சடகோபரந்தாதி, 7; 23)

ஆழ்வாரைப் பாவலர் பிரான் எனவும், அவர் கவியை அமுதம் எனவும் கூறி எனக்கு இந்திரபதவி வந்தாலும், வைகுந்தம் கிடைத்தாலும் ஆங்கும் திருவாய்மொழித் தீந்தேனை யான் மறவேன் என்ற இதனால் அவர் பால் இவர் கொண்டிருக்கும் அன்பும் மதிப்பும் நன்கு புலனும். பாவலர், பாவில் வல்லவர் என்றவாறு. காவியத்தில் கவிஞர் என்று சுட்டியுள்ளதையும் இதனையும் ஒட்டி யுணர்க.

பரிபூரணமான ஞானசீலராய்அன்பின் பேரெல்லையில்நின்று அந்தமிலா இன்பநிலையைச் செந்தமிழில் தெளித்திருத்தலால் அவர் வாய்ச்சொல் திருவாய்மொழி என வந்தது.

" யானும் தானாய் ஒழிந்தானை யாதும் எவர்க்கும் முன்னோனைத்
தானும் சிவனும் பிரமனும் ஆகிப் பணைத்த தனிமுதலைத்
தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்தித்து என்
ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்றை உணர்ந்தேனே."

(திருவாய்மொழி 8—7[1])

திருமால்பால் பெருமால்கொண்டு ஞானக் காட்சியால் அப் பெருமானைக்கண்டுகளித்துள்ளபடியை வெளியேகாட்டியபடியிது.

செவ்விய மதுரம் சேர்ந்த நற்பொருளும், சீரிய கூரிய தீஞ்சொல் லும், இத்திவ்விய கவியில் சேர்ந்திருத்தலை ஓர்ந்துகொள்க.

இந்த ஆழ்வாரைப்போலவே மற்ற ஆழ்வார்களும், சங்கப் புலவர்களும் அயோத்தியைப் புகழ்ந்து பாடியிருக்கின்றனர்.

"அங்கணெடு மதிள்புடைசூழ் அயோத்தி என்னும்
அணிநகரத் துலகனைத்தும் விளக்கும் சோதி
வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி
விண்முழுதும் உயக்கொண்ட வீரன் தன்னை
செங்கணெடுங் கருமுகிலை இராமன் தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ர கூடம் தன்னுள்
எங்கள்தனி முதல்வனை எம்பெருமான் தன்னை
என்றுகொலோ கண்குளிரக் காணும் நாளே."

என்று குலசேகரப்பெருமாள் இங்ஙனம் கூறி யிருக்கிறார். அயோத்தி என்பதற்கு யுத்தத்தால் உயர்ந்ததுஎன்பதுபொருள். அறிவாலும் ஆற்றலாலும் பிறரால் வெல்லமுடியாத அரியபெரிய அரண் வலிபுடையதென்பதாம்.

"புலத்தினும் போரினும் போர்தோலாக் கூடல்" (பரிபாடல் 19)

என மதுரையைக் குறித்து நப்பண்ணனார் பாடியிருக்கிறார். அப்படியே அயோத்தியும் போராற்றலில் பேராற்றல் வாய்ந்து பெருமிதம் எய்தியுள்ளமையான் அதனுள் வசிப்பவர் எவ்வளவு இளைஞர் ஆயினும் தெவ்வரைவென்று சீர்பெற்று நின்றனர்.

"வெள்ளணி அணிந்த ஞான்றே வேந்தர்தம் முடியிற்கொண்ட
கள்ளணி மாலை போந்து கழல்கழு விலங்கு நோன்றாட்
புள்ளணி கொடியி னானிற் போர்பல தொலைத்த ஆற்றல்
அள்ளிலை அவிர்ந்த மைவேல் அயோத்தியர் இறையும் வந்தான்."
(சீவகசிந்தாமணி 614)

வெள் அணி = பிறந்த நாளைக்குறித்துக் குழந்தைக்குச் செய்யும் அலங்காரம். அயோத்தி அரசர் இளம்பிராயத்திலேயே எதிரிகளை வெல்வர் எனத்திருத்தக்கதேவர் இதில் உரைத்திருத்த லறிக. புள் = கருடன். கொடியினான் என்றது திருமாலை.

"மலைத்தொகை யன்ன மைபடு யானை
இலைத்தார் மார்பின் ஏரணி தடக்கைப்
பொருந்தா மன்னரைப் புறக்குடை கண்ட
அருந்திறற் சூழ்ச்சி அடல்வேற் றானை
அயிர்த்துணைப் பல்படை அயோத்தி அரசன்." (பெருங்கதை-3,17)

எனக் கொங்குவேளிர் கூறியிருக்கின்றார். இங்ஙனம் சீரிய கூரிய தீஞ்சொற் கவிஞர்கள் அயோத்தியைக் குறித்து முன்னமே பாடியிருத்தலால், "கவிஞர் அனைவரும் புகழ்ந்தது" என அதன் பழம் பெருமையைக் கிளர்ந்து மொழிந்தார்.

வடநூல் முனிவர் என்றது வால்மீகி வசிட்டர் போதாயனர் முதலானவர்களை. அவ்வுலகம் என்றது பரமபதத்தை. அது நெடுங்காலம் அருந்தவம் புரிந்து அடையத்தக்க அருமையுடையது ஆதலால், "தவம்புரிந்து ஏறுவான் ஆதரிக்கின்ற அவ்வுலகம்" என்றார். அரிய பெரிய தவத்தால் பெற்றுப் பேரின்பம் நுகர்ந்துவரும் அந்த வைகுந்தவாசிகளும் அயோத்தியில் வந்து வசிக்க ஆசைப்படுவார் என்பார் "அவ்வுலகத்தோர் இழிவதற்கு அருத்திபுரிகின்றது அயோத்திமா நகரம்" என்றார். இழிதல்=மேலிருந்து கீழிறங்கல். பேரின்ப நிலையில் ஏறினாரையும் பேராவலுடன் தன்பால் இறங்கி வரச்செய்யும் என்ற இதனால் இதனது அதிசய அமைதிகள் புலனும்.

எதை அடைத்தால் எல்லாம் அடைந்ததாமோ அத்தகைய ஜெயமான அந்தமில் இன்பப்பேற்றை அடைந்தவரும் அயோத்தியை அடைய விரும்புவதற்குக் காரணம் யாது? எனின், அப்பரமபத நாதனை திருமாலே அப்பதவியைவிட்டு இராமனாய் வந்து இதில் அவதரிக்க நேர்ந்துள்ளமையான் என்க.

வைகுந்தத்திலிருந்து செய்ய முடியாத அரிய பெரிய ஒரு காரியத்தை அயோத்தியிலமர்ந்து செய்துமுடிக்க அம்மூர்த்தி ஆர்த்தியுடன் வந்திருத்தலால் இதன் ஆக்கமும் வாசியும் அறியலாகும். காரிய சித்திக்கு இது வீரியம் பெற்றுள்ளதென்பதாம்.

புரிந்தது என்னாது புரிகின்றது என நிகழ்காலத்தால்கூறியதனால் அச்செயல் அன்று நிகழ்வதுபோல் கவி கண்டிருக்கும் ஆர்வக் காட்சி தெரிகின்றது. அருத்தி=ஆசை.

அடுத்த கவியில் இந்நகரை நிலமகள் முகம் என்று நினைந்து உளமிக மகிழ்கின்றார். மகிழ்ந்தவர் அவ்வளவில் அமையாமல் ஆராமை மீதூர்ந்து அழகும் அருமையும் வாய்ந்த பலவகைப் பொருள்களுடன் அதனை எதிர்வைத்து நோக்கி இன்புறுகின்றார். அன்பு ததும்பிய அவரது ஆர்வநிலை எல்லை மீறி உள்ளம் பறிபோயுள்ளதை அதில் அவர் சொல்லால் அறிகின்றோம்.

2. அயோத்திமா நகரம் பூமிதேவியின் திருமுக மண்டலம் போல் எழில் மிகுந்து உள்ளது என்று முடிவாக மொழிந்துவிடாமல், "முகமோ? திலகமோ? கண்ணோ? நாணோ? உயிரோ?" எனப் பல பல எண்ணி ஒரு துணிவும் தோன்றாமல் "யாது என உரைப்பாம்?" என்று ஆற்றாமையோடு முடிவில்லாமல் விடுத்திருக்கிறார். அதன் மகிமை சொல்ல முடியாதென்பதாம்.

இதில் பத்துப் பொருள்களை ஒத்து எண்ணி அவற்றின் அருமை பெருமைகளையும் உயர்வு நலங்களையும் உய்த்துணரும் படி நல்ல சிந்தனைகளை நமக்குத் தந்திருக்கிறார். "எண்சாண் உடம்பிற்குச் சிரசே பிரதானம்" என்றபடி மனித உருவிற்கு முகம் எவ்வளவு தலைமையும் நிலைமையுமுடையதோ உலக வுருவிற்கு அயோத்தி அவ்வளவு முதன்மையும் அமைதியுமுடையது என்பதை "முகமோ?" என்றதனால் முன்னுற உணர வைத்தார். விரிந்து பரந்த பெரிய உலகில் அயோத்தி ஒரு சிறிய ஊர் தானே; அதற்கு இதை முகம் என்றால் பரிமாணத்தின் நிருமாணத்தைக் குறித்து ஏதேனும் வாதம் வரினும் வரும் ஆதலால் அதற்கு இடமில்லாமல் திலகமோ என்றார். நில மகளுக்குக் கோசல தேசம் முகம் ஆகவும் அம்முகத்தில் இலகும் திலகம்போலும் அயோத்தி அதில் எழில்செய்து இனிதமர்ந்துள்ள தென்பதாம். கண்ணோ என்றது அருமை உரிமை அழகு ஒளி அமைதி முதலியவற்றை எண்ணி என்க. இன்னவாறே நாண் முதலிய பிறவற்றின் இயலமைதிகளையும் நகர் இயல்புடன் நிகர் கண்டு ஓர்ந்து உணர்ந்துகொள்க.

இதில் வந்துள்ள ஓகாரங்கள் எண் முறை தழுவி, ஐயம் தொடர்ந்து, இன்னோசை பொலிந்து, உள்ளுருக்கம் தோன்ற உணர்ச்சியைத் தட்டி யெழுப்பி ஓங்கி நிற்கின்றன. அந் நிலை கவியின் சுவையை மிகவும் இனிமையாகக் கனிவு செய்துள்ளது.

நிலமகள், திருமகள், திருமால் என்னும் இவர்களோடு அயோத்தியை இதில் உரிமைப்படுத்தி வைத்திருக்கிறார். அவ் வைப்புநிலை கவியின் உள்ளக்கிடக்கையை உணர்த்தி நிற்கின்றது.

அழகும் அமைதியும் இனிமையும் இன்ப நலனும் பெண் மையின் தன்மைகளாதலால் அந்நன்மைகள் யாவும் நன்கமைந்

துள்ள நகரம் பெண்ணினத்துடன் ஒப்பவைத்து இங்ஙனம் பெட்புடன் பேச வந்தது.

உலக நிலையில் அழகிய சில பொருள்களை உவமையாக வரைந்து உரையாடி வந்தவர் அமைதி காணாமையால் உடனே தெய்வ வுலகிலுள்ள திவ்விய நகரங்களை அயோத்தியோடு சீர்தூக்கி நோக்கிச் சிறப்புரைக்கின்றார்.

3. இந்திரனது இராசதானி நகரமாகிய அமராவதியினும், குபேரன் பட்டணமாகிய அளகாபுரியினும் மேலாய் அயோத்தி நகரம் மிகவும் சிறந்திருக்கின்றதென்கின்றார்.

அழகு திரு அமைப்பு இன்ப நுகர்ச்சி முதலிய உயர் நலங்களெல்லாம் ஒருங்கே அமைந்துள்ள அவ்விரண்டு நகரங்களையும் முன்னதாக நன்கு படைத்துக் கைதேர்ந்த பின்னரே பிரமா இந்த நகரத்தை இங்கே படைத்திருக்கிறார்; ஆதலால் அவற்றினும் இது திருந்திய பண்பும் செவ்வியும் மிகுந்து உயர்ந்துள்ளதென்பதாம். அயோத்திக்கு நெடுங்காலத்திற்கு முன்னரே அந்நகரங்கள் தோன்றியுள்ளன ஆகையால் அவற்றின் பழமையும், இதன் புதுமையும் விளங்க இங்ஙனம் கற்பனை செய்து கருத்துரைத்திருக்கிறார்.

கைவேலை செய்யாமல் தங்கள் மனோசங்கற்பத்தினாலேயே எவ்வளவு பெரிய அழகிய நகரங்களையும் எளிதாக அமைக்கவல்ல தெய்வ சிற்பிகளும் அயோத்தியைக் கண்டபின்னர், “இவ்வளவு எழில்நலமுடைய நகரை இனிமேல் நாம் யாண்டும் செய்யமுடியாது; செய்யினோ சிரிப்புக்கு இடமாம்” என்று அஞ்சித் தம்முடைய மானச சிருட்டியை அடியோடு கைவிட்டு மறுகி யிருந்தார் என்பார், “மயன் முதல் தெய்வத்தச்சரும் தத்தம் மனத் தொழில் நாணினர் மறந்தார்” என்றார்.

தெய்வத் தச்சரும் வியந்து போற்றத்தக்கதாய்ச், சிருட்டி கர்த்தாவாகிய அயனை கண்ணூன்றிக் கருத்தோடு திருத்தமுறச் செய்ததாய்ச் செவ்வி மிகுந்து திவ்விய நிலையில் திருவயோத்தி சிறந்திருந்ததென்பதாம். அந்நகரிலுள்ள மாடமாளிகைகள் வானளாவி உயரிய நிலையில் ஓங்கியிருந்தன என்பதை, “புயல்தொடு

குடுமி நெடுநிலை மாடம்" என்னும் தொடர்மொழிகளால் உளம் மகிழ்ப்ப உரைத்தருளினார். புயல் = மேகம். அயில் = கூர்மை. குலிசம் = வச்சிராயுதம். இந்த ஆயுத அடை இந்திரனுக்குத் தந்தது அவனது அருந்திறலாண்மையும் ஆட்சி நிலையமான அவன் பதியின் பெருந் தகவும் தெரிய என்க.

அடுத்த நான்காவது கவியில் அயோத்தியைப் போக பூமி என்கின்றார்.

4. அயோத்தி நகரை இன்ப நிலையமான சுவர்க்கம் என்று சொல்ல விரும்பினார்; அது, இந்நிலவுலகில் செய்த புண்ணியப் பேற்றால் உயிர்கள் இனிது எய்தத்தக்கது ஆதலால் அதன் செய்தியை முன்னுற விளக்கினார்.

" அறம்பெரி தாற்றி அதன்பயன் கொண்மார்
சிறந்தோர் உலகம் படருநர் போல" (பரிபாடல் 19)

என்னும் இதில் புத்தேளுலகின் பெற்றி புகன்றுள்ளமை யறிக.

இங்கே சிறந்தோர் என்றது தேவரை. இந்தப் பரி பாடலின் அடியைத் தழுவிக் கம்பர் மொழி வந்துள்ளமை காண்க.

துறக்கம் என்பது புண்ணியம் புரிந்தோர் புகுந்திருத்தற் குரியது; அவ்வுரிமை வேதப் பிரசித்தமானது; ஆகவே பரம புண்ணியசாலியான இராமன் எண்ணில் காலம் இனிதமர்ந்து அரசு புரிந்திருந்த பெருநலமுடையது ஆதலால் திருவயோத்தி தகைமையான புண்ணிய பூமியேயாம் என்று உரிமை மீக் கூர்ந்து இதில் உறுதிசெய்திருக்கும் அழகை ஊன்றிப்பார்க்க.

அடுத்த கவியில் இந்நகரம் பொன்னகரினும் சிறந்தது என்கின்றார்.

5. ஐம்பொறிகளை யடக்கி அருந்தவம் புரிந்து பெருந் தகவுடன் உயர்ந்திருக்கின்ற பெரிய தவசிகளுக்கும், அரிய ஞான யோகிகளுக்கும் இனியபுகலிடமாயுள்ள திருமாலே உவந்துவந்து பிறந்து வளர்ந்து திருவுடன் அமர்ந்து நெடுங்காலம் உளமகிழ்ந் திருந்த இப்புனிதத் தலம்போல் புத்தேளுலகத்து எங்கணும் இனியது ஒன்றில்லை; அங்ஙனம் இருந்திருப்பின் செங்கண்மால் அங்கேயே தங்கியிருப்பார்; அங்ஙனம் எங்கும் தங்காமல் இங் கேயே விழைந்து வந்துள்ளமையால் இந்நகரின் பெருமையை

நான் என்ன என்று சொல்லி எப்படி முடிவு கூறவல்லேன்? என அதன் எல்லையற்ற மகிமையை எண்ணி எண்ணி வியந்து உண்ணிறையன்போடு உருகிப்பாடியிருக்கும் அருமை இதில் அறிவுக் கண்ணால் அறிந்து அநுபவிக்கத்தக்கது.

6. அரசு எலாம் அவண; அணி எலாம் அவண; என்று தொடங்கிப் பலவகைவளங்களும் நலங்களும் அந்நகரில் நிரம்பியிருந்த நிலைமைகளை உரைக்கின்றார். அவண என்றது அவ்விடத்தில் உள்ளன என்றபடி. அவண் என்னும் சுட்டில் அகரம் ஏறிப் பன்மை குறித்து நின்றது. இங்ஙனம் வருவதைப் பலவின்பால் குறிப்பு வினைமுற்று என்பர். இப்பிரயோகம் பழங்காலத்தது.

"வல்லா கொல்லோ தாமே அவண" (ஐங்குறுநூறு 333).

"இவண இசையுடையோர்க் கல்லது அவணது
உயர்நிலை யுலகத்துறையுள் இன்மை." (புறம் 50)

"அவணத தவர் கூந்தல அகிற புகையை" (சிந்தாமணி 2853)

"அவண போதல் அஞ்சி" (பெருங்கதை 1, 48)

"அப்போ நள் இரட்டாது இவ்வணையான" (தொல்காப்பியம்)

இவற்றுள் அவண வந்துள்ள நிலைமையும் இவணும் அறிக. அ அண் என்று பிரித்து அருகே அணுகியுள்ள இடம் என அவயவப் பொருள் காண்க. அவண் = அவ்விடம்.

விழுமிய அரசர்கள், அழகிய அணிகள், அரிய பெரிய மணிகள், நிமிர்ந்த மதயானைகள், உயர்ந்த இரதங்கள், சிறந்த குதிரைகள், முதலியன இடங்கள் தோறும் அங்கு நிறைந்திருந்தன. எல்லாம் என்றது இந்த இனங்களில் எவ்வளவு விதங்கள் உளவோ அவ்வளவும் வகைவகையாய்த் தொகை யெய்தி நின்றன என்றவாறு. அரிய பல பொருள்களின் நிறைவு கூறிய படியிது.

மனன சீலர்களான முனிவரர்கள், அருந்தவர்கள், இராசயோகிகள், ஞானிகள், கந்தருவர்கள், இயக்கர்கள், விஞ்சையர்கள், தேவர்கள் முதலிய திவ்விய நிலையினர் யாவரும் விழைந்து வந்து அச்செவ்விய நகரில் உறைந்திருந்தனர். உதகமண்டல முதலிய இனிய இடங்களுக்கு இந்நாளில் உல்லாச யாத்திரையாகச் செல்வர்கள் செல்லுதல்போல் மேலே குறித்த நல்லோ

எல்லோரும் அறிய நலம் கருதி ஆன்மபோதம் விரும்பித் திரு வபோத்திக்கு அடிக்கடி போந்து ஆர்வத்துடன் அமர்ந்திருந்தனர் என்பதாம். ஆகவே அதன் புனித நிலையும், போக நலனும் இனிது புலனும். விரசுவார் = கலந்து வசிப்பார். பரவுவார் பரசுவார் என்பதுபோல் விரவுவார் விரசுவார் என வந்தது. விரவல் = கலத்தல். எதுகை நோக்கி அகரம் ஐகாரமாயது.

நகரின் அருமை பெருமைகளையும் அற்புத மகிமைகளையும் பொதுவாக உரைத்து அதன்பின் அரண் அமைதியை உரைக்கின்றார். அதனால் அரசமைதி தெரிகின்றது.

அரண்நிலை.

சிறந்த இராசதானி ஆதலால் பகைவர்களால் எவ்வகையினும் யாண்டும் பாதிக்கப் படாதபடி திண்மையான உயர்ந்த அரண் தகுந்த நிலையில் அமைந்திருந்தமையின் அதன் இருப்பும் சிறப்பும் அமைப்பும் வனப்பும் வியப்புற உரைத்திருக்கின்றார்.

அரணைக் குறித்துப் பழைய சங்கநூல்களும் உரைத்துள்ளன. திருவள்ளுவப் பெருந்தகை அரண் என ஒரு அதிகாரம் வகுத்து அதன் உறுதிநலங்களைத் தெளிவாக விளக்கியிருக்கிறார். அரண் என்னும் சொல்லுக்குப் பாதுகாப்பு என்பது பொருள். அது மலை, காடு, நிலம், நீர், மதில் என ஐவகைப்படும். இவற்றுள் சில இயற்கையாகவும் அமைவதுண்டு. பாரி நகர்க்குப் பறம்புமலை இயற்கையரணாய் நின்றது இலங்கைக்கும், துவாரகைக்கும் கடல்கள் இயல்பாகவே இனிய பாதுகாப்பாய் இசைந்திருந்தன. கடவுள் சிருட்டியில் இவ்வாறு அமைந்தன போகச் செயற்கையாகவும் அரசர்கள் அரண்களை அமைத்துக்கொள்வர். அவ்வாறு அயோத்தியில் அமைந்துள்ள மதிலின் நிலைமையைக் குறித்துக் கம்பர் இங்கே காட்டியிருக்கின்றார். அக்காட்சி கருதரும் நிலையில் கதித்து நிற்கின்றது.

“நால்வகைச்சதுரம் விதிமுறை நாட்டி நனிதவ உயர்ந்தன” என்று முதலில் மதிலின் தளவரிசை கருவமைப்பு ஆழம் அகலம் நீளம் உருவளப்பு உறுப்புத்திறன் உயர்ச்சி முதலியவற்றை விளக்கி மேல் அதிசய நிலையில் துதி செய்கின்றார்.

“உயர்வகலம் திண்மை அருமைஇந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல்.” (குறள்-அரண்.3)

என்ற வள்ளுவர் வாய்மொழியை உள்ளங்கொண்டு கம்பர் அம்மதிலின் காட்சியைக் கண்டிருக்கின்றார். இவ்வுண்மை அவர் உரைகளில் ஒளிர்கின்றது. ஏணி முதலியன வைத்து எவரும் எவ்வகையினும் யாண்டும் ஏறமுடியாதபடி நீண்டுயர்ந்து மிகவும் உன்னத நிலையில் மதில்கள் ஓங்கி நின்றன ஆதலால், "நனிதவ உயர்ந்தன" என்றார். அதன் திண்மை, செய்கைத்திறம், சிற்ப வன்மை, உள்ளமைப்பு,உறுதிப்பாடு, அடுத்திறலுடையபல்வகைப் படுபொறிகள் இடங்கள்தோறும் கரந்துள்ளஇருப்பு, இமைப்பு, எழுச்சி முதலியன எவராலும் அளந்தறிய முடியா என்பார் "உணர்வு முடிவிலாமையினால் வேதமும்" ஒக்கும் என்றார்.

வேதப்பொருள்கள் ஆயுந்தோறும் மனிதரது அறிவெல்லையைக் கடந்து அளவின்றி விரிந்து நிற்றல்போல் அம்மதிலின் திறங்கள் நுணுகிக் காணுந்தோறும் காட்சிக்கு அடங்காமல் மாட்சி மிகுந்துள்ளன என்பதாம்.

வேதம், தேவர், முனிவர், துற்கை, காளி, பெருமை, ஈசன் என்னும் இப்பேர்களை எடுத்துக்காட்டிச் சுட்டிய இவர்களோடு ஒப்பிட்டு ஆராய்ந்து உணர்வுடையார் மதிலின் நிலைமைகளை ஊன்றி உணர்ந்துகொள்ளுக என்று நம்மிடம் ஒப்பித்து விட்டுக் கவி இதில் ஒதுங்கி நிற்கும் விநயம் உவகைக்கிடமாயுள்ளது. இன்ன இன்ன வகையில் மதில் இவர்களை ஒத்திருக்கின்றது என்று குறிப்பும் கொடுத்து உய்த்துணரும்படி இங்கே நம் அறிவுக்கு அவர் வேலை கொடுத்திருக்கிறார். இதனால் அவரது புலமை நிலையும், போதனைத்திறனும் புலனாகின்றன.

இடையில் உள்ளவற்றை ஓர்ந்துகொள்ளுமாறு உங்களிடம் விடுத்து," எய்தற்கு அருமையால் ஈசனை ஒக்கும்" என்ற இறுதி வாசகத்தை மட்டும் சிறிது இங்கே உரை செய்கின்றேன்.

ஈசனை யாவரும் எளிதில் அடைய முடியாது. இங்ஙனம் அப்பெருமான் பெறலரும் பேறாய் இருப்பினும், "பத்திவலையில் படுவோன்" (மாணிக்கவாசகர்), "பத்துடை அடியவர்க்கு எளியவன்; பிறர்களுக்கு அரிய வித்தகன்." (நம்மாழ்வார்) என்றபடி உள்ளமும் உயிரும் புனிதமாய் என்புள்ளுருகும்அன்புடையார்க்கு மிகவும் எளியனாய் இன்புற நேர்வன்; அன்பிலாராய

கொடியர்க்கு யாதும் அறிதற்கரியனாய் அகன்று நிற்பன்; அது போல் அயோத்தி அரசின் உரிமையாளர்க்கு எல்லாப் பாகங்களும் இனியனவாய் மதில் இதம்புரிந்தருளும்; பகைவர்க்கு யாதும் அணுக ஒட்டாமல் கொடுந்துயர் விளைத்துக் கடுங்காப்புடன் அது கடுத்து நிற்கும் என்பதாம்.

அந் நிலையை அடியில் வரும்பாடலால் அறிந்துகொள்ளலாம்.

மதிலின் திறல்.

" சினத் தயில் கொலைவாள் சக்கரம் தண்டு
சிலைமழுத் தோமரம் உலக்கை
கனத்திடை உருமின வெருவருங் கவண்கல்
என்றிவை கணிப்பில கொதுகின்
இனத்தையும் உவணத் திறையையும் இயங்கும்
காலையும் இதமல நினைவார்
மனத்தையும் எறியும் பொறியுள என்றால்
மற்றினி யுணர்த்துவ தெவனோ." (நகரப் படலம் 12.)

மதிலில் அமைத்துள்ள அரிய எந்திரங்களை விளக்கியபடியிது.

உயரப் பறக்கும் கருடனும், நுணுகி நுழையும் கொசுவும் அதனுள் புகமுடியா. எங்கும் தடையின்றிப் புகவல்ல காற்றையும் அது கடுத்து நீக்கும்; விரித்து விரித்துச் சொல்லுவானேன் அந்நகர்க்குத் தவறாக ஒரு சிறு எண்ணம் எண்ணினும் எண்ணிய அந்நுண்ணிய மனத்தையும் நூக்கி யழிக்கும் என அதன் அரிய காப்பு நிலையை உணர்த்தியிருக்கும் திறனை இதில் ஊன்றிப்பார்க்க. உவணம் = கருடன். கொதுகு = கொசு.

இதனால் மதிலரணின் நிலைமை தெளிவாம்.

இராசமாபுரத்தின் மதில் நிலையைக் குறித்துத் திருத்தக்கதேவர் உரைத்திருக்கிறார். சில அடியில் வருவன காண்க.

" மாற்றவர் மறப்படை மலைந்துமதில் பற்றின்
நூற்றுவரைக் கொல்லியொடு நூக்கியெறி பொறியும்
தோற்றமுறு பேய்களிறு துற்றுபெரும் பாம்பும்
கூற்றமன கழுகுதொடர் குந்தமொடு கோணமா; (1)

விற்பொறிகள் வெய்யவிடு குதிரைதொடர் அயில்வாள்
கற்பொறிகள் பாவைஅனம் மாடமடு செந்தீக்
கொற்புனைசெய் கொள்ளிபெருங் கொக்கெழில செய் கூகை
நற்றலைகள் திருக்கும்வலி நெருக்கு மரநிலையே; (2)

செம்புருக்கு வெங்களிகள் உமிழ்வதிரிந் தெங்கும்
வெம்புருக் குவட்டுமிழ்வ வெந்நெய்முகந் துமிழ்வ
அம்புமிழ்வ வேலுமிழ்வ கல்லுமிழ்வ ஆகித்
தம்புலங்க ளாலவனார் தாட்படுத்த பொறியே. (3)

கரும்பொனியல் பன்றிகத நாகம்விடு சகடம்
குரங்குபொரு தகரினொடு கூர்ந்தரிவ நுண்ணூல்
பரந்தபசும் பொற்கொடி பதாகையொடு கொழிக்கும்
நிரந்துமதில் தெவ்வர்தலை பனிப்பத் திருந்தின்றே.” (4.)

(சீவகசிந்தாமணி)

இதில் குறித்துள்ள கொலைப் பொறிகளைக் கூர்ந்து நோக்குக.

ஒரு விசையில் நூறு பேரைக் கொல்லவல்ல யந்திரம் ஒன்று மதிலில் தந்திரமாக நிறுத்தி யிருந்தார் ஆதலால் அது நூற்று வரைக் கொல்லி என வந்தது. அதனைச் சதக்கிநி என்பர். பேய், களிறு, பாம்பு, கழுகு, குந்தம்,* புலி, வில், விடுகுதிரை, வாள், கல், பாவை, அன்னம், தீ, கொள்ளி, கொக்கு, கூகை, கழுமரம், உருக்கிய செம்புக்குழம்பு, நெருப்புநெய், இருப்புப் பாளம், அம்பு, வேல், சூலம், கல் முதலியவற்றை எங்கும் அள்ளி வீசத்தக்க ஒள்ளிய தீப்பொறிகள் முதலியன அம்மதி லுள் மருவியுள்ள நிலையினை இவை உணர்த்தி நிற்கின்றன.

நம் நாட்டில் அக்காலத்தில் அமைந்திருந்த அரணுற்றலை யும், யந்திர நிலைகளையும் இதனால் அறியலாகும்.

பாண்டிய மன்னர் ஆட்சிக் காலத்தில் மதுரையில் மதிலரண் மிகவும் அதிசய நிலையில் அமைத்திருந்தனர்.

மதுரை மதில் நிலை

“மிளையும் கிடங்கும் வளைவிற் பொறியும்
கருவிரல் ஊகமும் கல்லுமிழ் கவணும்
பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்
காய்பொன் உலையும் கல்லிடு கூடையும்
தூண்டிலும் தொடக்கும் ஆண்டலை அடுப்பும்
கவையும் கழுவும் புதையும் புழையும்
ஐயவித் துலாமும் கைபெயர் ஊசியும்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்
எழுவும் சீப்பும் முழுவிறற் கணையமும்
கோலும் குந்தமும் வேலும் பிறவும்
ஞாயிலும் சிறந்து நாட்கொடி நுடங்கும்.”

(சிலப்பதிகாரம் 15.)

வில் முதலிய பல்வகைப் பொறிகளும் மதிலில் மருவியிருந்த நிலைமை இதில் அறிந்துகொள்க. மிளை = காவற்காடு. கிடங்கு=அகழி. தொடக்கு=சங்கிலி. புதை=அம்புக்கட்டு.

பண்டைக்காலத்தில் இந்நாடு சிறந்த அரசர்களையுடையதாய் வீரத்திறல் மிகுந்திருந்தமையான் இத்தகைய அரண்களும்கோட்டைகளும் கொத்தளங்களும் இங்கே குலாவி நின்றன. அந்நிலையினைப் பாட்டளவில் கண்டும் கேட்டும் இன்று நாம் கருதி அயிர்க்கின்றோம். . இது பாடியது அரசர் குடியில் பிறந்த இளங்கோவடிகள் என்னும் பெரும்புலவர். அவர் நேரில் கண்ட காட்சியையே இவ்வாறு கூறியிருக்கின்றார். இற்றைக்கு ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் இந்நாடிருந்த நிலைமையையும் தலைமையையும் இது காட்டியுள்ளது.

முன்னே குறித்த சிந்தாமணிக் கவிகளையும், இந்தப் பாடலையும் கம்பர் நன்றாகப் படித்திருக்கிறார் என்பது அவர் தொடுத்திருக்கும் கவியில் தோன்றுகின்றது. ஆயினும் இவரது சொல் நோக்கும் பொருள் நோக்கும் தொடை நோக்கும் நடை நோக்கும் எத்திசையும் புத்தொளி வீசிப் பொலிவுற்று நிற்கின்றன. இவருடைய செய்யுள்நடை சிங்க ஏற்றின் பெருமிதம் போல் எங்கும் கம்பீரமாக ஓங்கி ஒளிர்தலைக் கலைக் கண்கொண்டு கனிந்து காண்க. “இதம் அல நினைவார் மனத்தையும் எறியும் பொறியுள” என்றது யாரும் யாண்டும் காணாதது. எத்தகைய விசித்திரப் பொறிகளும் புறத்தே எதிரிகளுடைய உடலுறுப்புக்களை ஒழிக்குமே யல்லாமல் உள்ளத்தை ஒன்றும் செய்யமுடியாது. யாதும் முடியாததையும் முடிக்க வல்ல அதியற்புதமான அரும் பொறி கவியின் விற்பன வுணர்வில் இங்கே விளைந்தெழுந்துள்ளது. இந்த அதிசயக்கருத்து அவரை உலகம் என்றும் துதி செய்யவந்தது.

மதில் வலியைக் கூறிய பின்பு அடுத்து அகழ் நிலையைக் கூறுகின்றார். அகழியில் அமைந்துள்ள நீர் நிறைவையும் சலசாங்களையும் மலரினங்களையும் அதன் பலவகை நிலைகளையும் புலமை மணம் கமழப் புகன்றிருக்கின்றார். அதன்பின் ஊரின் சீர்மை நீர்மைகளை நேரே காண்பதுபோல் நிலைபெறக் காட்டுகின்றார். அக்காட்சிகள் பெருமித நிலையில் பெருகியுள்ளன.

அரண்மனை அமைதி, கூடகோபுரங்களின் நிலை, இராச வீதிகளின் இயல்பு, மாடமாளிகைகளின் பொலிவு, ஆடவர் மகளிருடைய குணநலங்கள், அழகமைதிகள் முதலியன எங்க ணும் விழுமிய நிலையில் அங்கு விளங்கியிருந்தன. மின் என, விளக்கென, வெயில் பிழம்பெனப் பொன்னொளி தழைத்து அந் நகர் இருந்தது. அதில் குலாவியிருந்த குடிசனங்கள் அனை வரும் அறநெறியுடையராய் அருள்நலங்கனிந்து திருந்திய பண் பும் செவ்வியும் மிகுந்து பெருந்திருவும் அரும்புகழும் ஒருங்கு நிறைந்து உவந்து வாழ்ந்தனர். வாழ்க்கை நிலையங்கள் யாண்டும் இன்ப நலங்கள் சுரந்து எழில் மிகுந்திருந்தன.

" வானுற நிமிர்ந்தன ; வரம்பில் செல்வத்த ;
தானுயர் புகழன ; தயங்கு சோதிய ;
ஊனமில் அறநெறி யுற்ற எண்ணிலாக்
கோனிகர் குடிகள்தம் கொள்ளை சான்றன.''

(நகரப்படலம் ௩௪)

அயோத்தியிலிருந்த வீடுகளின் இயல்பினை விளக்கியபடி யிது.

மாளிகைகள் யாவும் மேல்மாடங்களை யுடையனவாய் வான் அளாவி நின்றன; அளவிடலரிய செல்வங்களையுடையன; எவரும் வியந்து புகழத்தக்கன; எம்மருங்கும் ஒளி வீசி எழில்மிகப் பெற் றன. புண்ணிய சீலர்களான கண்ணிய மிகுந்த மக்கள் தம் மிடம் இன்புற்று வசிக்க அவை இனி தமர்ந்திருந்தன என்பதாம்.

புறத்தே உருவப் பொலிவின் உயர்வும், அகத்தே திருவின் நிறைவும், அறநெறி அமைவும் எங்கும் இசைந்து இன்பங்கள் சுரந்திருந்தமை இதனால் அறிய நின்றது.

பளிங்குக் கற்கள் சந்திரகாந்தத் தகடுகள் பவளத்துண்டங் கள் சந்தன மரங்கள் முதலான அரிய பொருள்களால் சுவர் தள வரிசை போதிகை தூண் முதலியன அமைந்து இடங்கள்தோறும் இந்திர நீலமணிகள் பதிந்து அந்தரத்தமரரும் விழைந்து நோக் கும்படி சுந்தர மாளிகைகள் பல அங்கே விளங்கியிருந்தன என முந்திய கவிகளில் மொழிந்துள்ளார் ஆதலால் அதனை நினைந்து கொள்ள " வயங்கு சோதிய " என்றார். சோதிய என்றது சோதி யையுடையன என்றவாறு. பன்மையும் தன்மையும் தெரியவந்தது.

"அஆ வஎன வரூஉம் இறுதி
அப்பால் மூன்றே பலவறி சொல்லே" (தொல்காப்பியம்)

என்னும் இயல்விதியும் ஈண்டு எண்ணிக்கொள்க.

குடிகள் எல்லாருமே அரசுக்கு நிகரான பெருந் திருவுடைய ராய்ச் சிறந்திருந்தனர் என்பது "கோன் நிகர் குடி" என்ற தனால் அறிய நின்றது. கொள்ளை=மிகுதி. ஒருவர் இருவர் அல்லர்; பலரும் அரசவிழை திருவினராய் நிலவி நின்றனர் என்க.

"பாருள் அடங்குப குளமஉள; வீறுசால்
மன்னர் விழையும் குடிஉள." (நான்மணிக்கடிகை 53)

என்றபடி ஓரோவழி அரிதாகக் காணப்படுகின்ற பெருமைக் குடிகள் திருவயோத்தியில் ஒரு நிகராய் மிகவும் பெருகியிருந்தன என்பதாம். இதனால் அதன் குடி வளனும், கோன் உளமும் படியறிய நின்றன.

குடிகள் எவ்வளவுக்கு எவ்வளவு செல்வச் செழிப்பால் சிறந் துள்ளனவோ அவ்வளவுக்கு அவ்வளவு அங்கே அரசன் பெருமித முடன் உயர்ந்து விளங்குவான்; உடல்வன்மை உயிர்க்கு நன்மை யாதல்போல் குடிவளம் கோனுக்கு நலமாம் என்க. "குடி உயரக், கோன் உயரும்" என்றார் ஔவையாரும். "ஊரார் பிள்ளையை உற்று வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்" என்ற பழ மொழிப்படி பிறர் உயர்ச்சியைப் பேணி நிற்பவன் தானாகவே அவன் தலைமையெய்தி உலகில் உயர்வான் என்னும் தரும தத்துவமும் ஈண்டறியவேண்டும்.

இந்தக் குடியுயர்ச்சியெல்லாம் தசரதன் உயர்ச்சியையே குறித்து நிற்கின்றது. செல்வம் அதிகாரம் அரசுரிமை முதலியன சிறிது மருவியவுடன் அருகிலுள்ளவர்களைத் தாழ்த்தி அடக்கி வைக்க எண்ணும் அவமுடையார் இவ்வுயர் நிலையை உணர்ந்து உறுதிபெறவேண்டும்.

எல்லாரும் இன்புற்றிருக்க ஒருவன் அன்புற்றுவரின் அவன் இருமையினும் பெருமை எய்தி இன்பமீக் கூர்வான் என்க.

செல்வச் செருக்கால் அல்லல் யாதும் கருதாமல் எல்லாரும் நல்ல அறங்களையே நயந்து புரிந்து வந்தார் என்பார் "அறநெறி

உற்ற" என்றார். அறிவும் அருளுமின்றி மருளொடு மருவி அறம் என நினைந்து மறம்புரிவாரும் வேறு உளராதலால் அவ் வாறன்றிப் புனிதமான புண்ணியங்களை அங்கு இனிது வளர்ந் தன என்பது ஊனம் இல் அறம் என்றதனால் உணர வந்தது.

திருவும் இன்பமும் என்றும் குன்றாமல் கோனிகர் குடி களாய் அவர் வானுயர் நலனொடு வளர்ந்து வருவதற்கு அறமே மூலகாரணமாயிருந்துவந்தது என்பதை நாம் உய்த்துணரும்படி முடிவில் அதனை இங்ஙனம் வைத்திருக்கிறார். அறநெறியை இடங் கள் தோறும் இவர் அறிவுறுத்திவரும் அமைதி ஆய்ந்துகொள்ளத் தக்கது. "புண்ணியம் பயக்கின்றுழி அரியது எப்பொருளே?" என்று எண்ணியிருத்தலால் கருதியனயாவும் அறம் கைதரவல்ல தென்னும் உறுதிபெரிதும் உடையராய் இவர் உறைந்துள்ளமை உணரலாகும்.

இத்தகைய அறநலங்களில் சிறந்து பெரும் புகழும், பெரும் பொருளும், பெரும் போகமும் நிறைந்துகுடிசனங்கள் எல்லாரும் கோன் மகிழ அவண் குலாவி வாழ்ந்தனர் என்க.

தருமகுணசாலிகளாய்ப்பொறுமை மிகுந்திருந்தாலும் அருந் திறலாண்மையும், பெரும் போர் வலிமையும் அவரிடம் நிறைந் திருந்தன. அழகில் மகளிர் பேர்பெற்று நின்றதுபோல் ஆடவர் வீரத்தில் விறற்று நின்றார்.

"அணியிழை மகளிர்நுட அலங்கல் வீரநுட
தணிவன; அறநெறி தணிவிலாதன." (நகரப்படலம் 33)

எனவரும் இதனால் அவர்தம் எழில் நிலையும், உயரியல்பும் இனிது புலனும். தணிவன = அமர்ந்திருக்கப்பெற்றன.

காளும் ஆடவர் அங்கு உல்லாசமாகப் பொழுது போக்கி யுள்ள திறங்கள்பெரிதும் வியப்பிற்குரியன; அவை இன்பச் சிறப் பையும் வீர உணர்ச்சியையும் கம்பீரத்தையும் விளக்கியுள்ளன.

மைந்தர் நிலை.

அதிர்கழல் ஒலிப்பன ; அயில இமைப்பன ;
கதிர்மணி அணிவெயில காலவ; மான்மதம்
முதிர்வுறக் கமழ்வன ; முத்தம மினனுவ ;
மதுகரம் இசைப்பன ; மைந்தர் ஈட்டமே.

### மைந்தரின் பொழுதுபோக்கு.

முழங்கு துந்துமிக் கடகரி முன்பின் வரவும
எழுங்குராத் தியுரி பொரு இரதம் ஏறவும
...ழங்கு தேனொடு இரதமும் பரிவு தீர்தர
வழங்கலும் பொழுதுபோம் சிலர்க்கு மாநகர்.

### ஆண்மைத்திறம்.

ஏரிபொரு களிற்றொடு பொருத்திக், கைப்படை
வரிசி [illegible] க், வாளுளைப
புரவியிற் பொருவினர் சென்றாடிய, போர்க்கலை
தெரிதலிற் பொழுதுபோம் சிலர்க்குச் சேணகர்.

(நகரப்படலம் 60, 67, 68)

காலில் வீரக் கழல்கள், கையில் வேல்கள், மெய்யில் மணி யணிகள், மார்பில் புனுகு கலந்த சந்தனப் பூச்சுகள், கழுத்தில் முத்துமாலைகள், தலையில் பூவின் புனைவுகள் முதலிய திவ்விய நலங் கள் ஆடவர்களிடம் யாண்டும் மேவியிருந்தன. அவர் மதகரி கள் ஏறியும், இரதங்கள் ஊர்ந்தும், இரவலர்க்கு ஈந்தும், யானைப் போர்களை நோக்கியும், குதிரைச் சவாரிகள் புரிந்தும், வில் வேல் முதலிய படைக்கலங்கள் பயின்றும், போர்க்கலை தெரிந்தும் நாளும் விழுமிய நிலையில் பொழுது கழித்து வந்தனர் என்பதை முன் வந்துள்ள மூன்று கவிகளாலும் அறிந்து கொள்கின்றோம்.

மதுகரம் = வண்டுகள். மலர் மணம்நாடி மருவி நின்றன என்க. ஈட்டம் = கூட்டம். ஆடவர் திரளில் ஒலித்தல் முதலியன சொலி த்திருந்தன என்பதாம். பழங்கண் = துன்பம். வறுமைத் துயரம் என்க. அந்நாட்டில் வறுமை யின்மையால், வண்மை இல்லை என்று முன்னே கூறினர்; இங்கே வறியர்க்கு வழங்கி னர் என்கின்றார்; இது என்னே! முன்னொடு பின் மாறுபடு கின்றதே! எனின், அயல்நாடுகளில் இருந்துவந்த வறியர்க்கு உதவிய வகையைக் குறித்திருக்கிறார் ஆதலால் யாதொரு வேறு பாடும் மாறுபாடும் இதில் இல்லை என்க. செண்டு = குதிரை வாளி ஓடும் வையாளிவீதி. காற்றினும் கடுகிச் செல்லும் பரிக ளிலமர்ந்து அரிய பல ஆடல்கள் புரிந்துள்ளமை "ஆடியும்" என்றதனால் அறிய நின்றது. போர்க்கலை = வில் வித்தை முத லியன. வீரவிளைவு அங்கு விறுற்றிருந்தமை இதனால் தெரியலாம்.

திருவுடைமை வீரத்திறம் இன்பச் செவ்வி ஈகைப்பண்பு என்னும் இன்னவகையான நன்னயங்கள் யாவும் நன்கமைந்து மைந்தர் அங்கு மாண்புற்றிருந்தனர் என்பதை இந்தவாறு நமக்கு அறிவித்தருளினர். கல்வி செல்வம் முதலிய எல்லா நலங்களும் ஒருங்கே நிறைந்து கலைமகளும் திருமகளும் உளமகிழ்ந்து களிநடம் புரிய அந்நகர் ஒளிமிகுந்திருந்த தென்பதாம்.

அதன் கல்வி நிலையையும், செல்வ நிறைவையும் குறித்து நம் கவிஞர் பிரான் மிகவும் சாதுரியமாகச் சொல்லியிருக்கிறார். அச் சொல்லமைதியை அடியில் வரும் கவியில் காண்க.

கல்வி செல்வங்களின் நிலை.

கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்வி முற்ற
வல்லாரு மில்லை; அவைவல்ல ரல்லாரு மில்லை;
எல்லாரு மெல்லாப் பெருஞ்செல்வமு மெய்தலாலே
இல்லாரு மில்லை; உடையார்களு மில்லை மாதோ.
(நகரப்படலம் 74)

அந்நகரிலுள்ளவர்கள் எல்லாருமே நன்றாகப் படித்தவர்கள்; படியாமல் மடிந்திருந்தவர் யாரும் இலர்; ஆதலால் "இவர் கற்றவர்; அவர் கல்லாதவர்", எனச்சுட்டிச்சொல்லும்படியான வேறுபாடு அங்கே யாரிடமும் காணமுடியாது; ஆகவே சிறந்த கல்விமான்கள் என்னும் உயர்ந்த புகழை எவரும் தனியே அடைந்து கொள்ள முடியாமல், அனைவரும் நிகராகக் கல்வியில் நிறைந்திருந்தனர் என்பதாம்.

இக்கருத்தை முன் இரண்டடிகளில் சுருக்கமாகக் கவி உரைத்திருக்குந் திறத்தை நுனித்து நோக்குக. இருப்பார் என்னாது நிற்பார் என்றது கல்லாமல் வீணே காலம் கழித்து நெடிது நிற்கும் அந்நிலையின் இழிவைச்சொற்போக்கில் உணர்த்த என்க.

"கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாளர் இடைப்புக்கு—மெல்ல
இருப்பினும் நாயிருந் தற்றே இராஅது
உரைப்பினும் நாய் குரைத் தற்று." (நாலடியார்)

"கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்—சவை நடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவனன் மரம்." (மூதுரை)

கல்லாது நிற்பவர் நிலையைக் குறித்து வந்துள்ள இவற்றின் சொல்லாட்சிகள் மேற்குறித்த கவியில் மருவியிருத்தலறிக. கல்லாதவரை நாய், மரம் என வாய்வந்தபடி மேலோர் வையலாமா? எனின், கல்லாமையின் பொல்லாமையை நினைந்து உள்ளம் உருகி உயிர்கட்கு இரங்கி உரிமை மிகுந்துள்ளமையான் இங்ஙனம் அவர் உரைத்தார் என்க.

முற்ற என்றது பூரணமாக என்றவாறு. முற்ற வல்லார் என்பதில் கல்வியின் எல்லை முழுவதும் முறையே துறைபோய்க் கரைகண்டவர் எவரும் இல்லை என்னும் இயல்பும் உள்ளே தொனித்துள்ளது. தம் அறிவாற்றலுக்குத் தக்க அளவு கற்கலாமே யன்றி மேல் எ [illegible]

கலைகள் பயின்று அறிவு உரம் பெற்றிருத்தலால் கல்வியில் வல்லவரை வல்லார் என்றார். இவ்வன்மை உடல் வன்மை போல்வதன்று; உயிர்க்கு உயர்நன்மை பயக்கும் என்க.

"நில்லாது சீவன் நிலையன் றெனஎண்ணி
வல்லார் அறத்தும தவத்துளும ஆயினர்;
கல்லா மனிதர் கயவர் உலகினில
பொல்லா வினைத்துயர் போகஞ் செய்வாரே."
(திருமந்திரம்)

கற்றவர் உய்வுபெற்றுயர்தலும், கல்லாதவர் வெய்யராய்த் துயருழந்தயர்தலும் இதில் உணர்த்தியிருத்தலறிக.

அவை என்று பன்மையில் சுட்டியது பல்வேறுவகைப்பட்ட கலைகள் உள்ளமை கருதி. பலகலைகளையும் வழுவறப் பயின்று அவரனைவரும் தலைமையெய்தி இருந்தனர் என்பதாம். ஒருவருமே தவறுமல் அந்நகரிலுள்ளவரனைவரும் நல்ல கல்விமான்களாய் இருந்தனர் என்னும் இது மிகவும் வியத்தற்குரியது.

இக்காலத்தில் நம் நாட்டில் நம்முள் நூற்றுக்கு எட்டுப்பேரே படித்திருக்கின்றனர்; மற்றைத் தொண்ணூற்றிரண்டு பேர்கள் எழுத்தறியாத முழுத்த மூடர்களாயுள்ளனர் என்று இங்ஙனம் கணக்கெடுத்து எண்ணிக் கண்கலங்கி நிற்கின்றேம். இந்த நிலையில் அயோத்தியின் கல்வி நிலையைக் கம்பர் எடுத்துக்காட்டும் பொழுது நாம் அதிசயிக்கின்றேம்; அத்துடன் நமது நாட்டின்

நிலைமையை நினைந்து நாணி வருந்துகின்றோம். என்செய்வது? காணி யாட்சி கையில் இல்லையே!

அந்நாட்டில் பெண்கல்வி பரவியுள்ள படியை* முன்னம் பொதுவாக உரைத்தார்; இங்கே ஆடவரின் கல்விப் பரப்பைச் சிறப்பாக உரைக்கின்றார்.

“மனிதனைத் தெய்வமென மாண்புறுத்தும் கல்வி
இனிததற் கில்லை எதிர்.” (நீதி நிலையம்)

என எல்லாரும் துதிசெய்ய நிற்கும் கல்வியை அன்னவர் இன்னவாறு ஒருசேர உரிமையுடன் பெற்றிருந்தார் என்ற இதனால் அவரது சீர்மையும் சிறப்பும் தெய்வப்பெற்றியும் தெரியலாகும்.

பூரணமான கல்வி குடிகளிடம் இங்ஙனம் பரவி யிருந்ததற்குக் காரணம் அரசனது ஆட்சி முறையேயாம். தன் நாட்டில் எவனாவது ஒருவன் கல்லாதவனாய் இருந்தால் அது தனது கோலுக்கு ஒரு கொடிய பொல்லாங்கு என்று அவன் குறிக்கொண்டு நின்றான் ஆதலால், கல்வி எல்லாரிடமும் அவ்வாறு அங்கே குதிகொண்டு நின்றது. அப்பேரரசன் கல்வியில் கைதேர்ந்துள்ள நிலையை அடுத்துவரும் அதிகாரத்தில் காணலாம்.

முதலில் கல்விநிலையைக் குறித்தார்; பின்பு செல்வச் செழிப்பை உரைத்தார். ஓர் ஊரில் செல்வர் சிலர் இருந்து, இலர் பலர் இருந்தால், “அவர் உடையவர்; இவர் இல்லாதவர்” என்று தரம்பிரித்துச் சொல்லலாம். எல்லாருமே சமமான செல்வர்களாய் ஒருங்கே நிறைந்திருப்பின் அங்கே வேறுபாடு கூறமுடியாது ஆதலால் “இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை” என இடையே இவ்வாறு நளினமாகக் கூறிமுடித்தார்.

எல்லாம் என்றது நிலம் பொன் மணி நெல் பசு பரி முதலிய செல்வக்கூறுகள் அனைத்தையும் குறித்து நின்றது. அட்ட ஐசுவரியங்களும் அங்கு நிறைந்திருந்ததென்பதாம். ஏற்றத் தாழ்வின்றி எல்லாரும் எல்லா வகையிலும் நிறை பெருஞ் செல்வராய் நிலவியிருந்தனர் என்பது கருத்து.

---

* இந்நூலின் பக்கம் 160ல் பெருந்தடம் என்னும் பாடல் பார்க்க.

செல்வத்திலும் கல்வியை முன்வைத்தது அதன் சிறப்பு நோக்கி. "*கேடில் விழுச்செல்வம்" என்று அது புகழ்ந்து போற்றப்பட்டுள்ளமை காண்க. இத்தலைமையும் தகைமையும் தெரியக் கல்வியை முதலில் நிறுத்தி அதன்பின் செல்வத்தை வைத்தார். அறிவிலும் திருவிலும் அந்நகர் அதிசய நிலையிலுள்ளமை இதனால் அறிய வந்தது.

"நாவிற் பிறந்த புலமா மகளோடு நன்பொற்
பூவிற் பிறந்த திருமா மகள்புல்ல நாளும்
பாவிற் பிறந்த கலைபாரறச் சென்ற கேள்விக்
கோவிற் பிறந்த குடி." (சிந்தாமணி, நாமகள் 1)

என்னும் இதை அடியொற்றிக் கல்வி செல்வங்களைக் குறித்துக் கம்பர் இங்கே பாடியிருக்கின்றார் என்று தெரிகின்றது. புலமா மகள் = சரசுவதி. பூமகள் = இலக்குமி. புல்ல = பொருந்த. இதன்கண்ணும் கல்வியை முன் வைத்துள்ளமை காண்க.

எல்லாக்கல்விகளும், எல்லாச்செல்வங்களும், எல்லாரிடமும் அயோத்தியில் இனிது நிறைந்திருந்தன என்று சொல்லவந்தவர், இல்லை இல்லை என்று சொல்லி அவற்றின் இருப்பை உறுதிபெற இங்ஙனம் உரைத்திருக்கிறார்.

"உருவில் மைந்தரில் வேனிலவேட் குடைகுநர் இல்லை;
பொருளில் மார்களில் தனதனைப் பொருவிலார் இல்லை;
தெருளில் மாக்களில் சேடனிற் றாழ்குநர் இல்லை;
அருளில் மார்களில் ஐந்தரு நிகர்க்கலார் இல்லை."
(நைடதம், நகரப்படலம் 9)

மாவிந்த நகரத்திலுள்ளவர்களெல்லாரும் அழகில்மன்மதனையும், சம்பத்தில் குபேரனையும், அறிவில் ஆதிசேடனையும், கொடையில் கற்பகத்தையும், மிஞ்சியிருந்தனர் என்பதாம். வேனில்வேள் =மன்மதன். உடைதல் =தோல்வியடைதல். அழகு இல்லை என்று அங்கே எள்ளித்தள்ளப்படுவோன் அழகுத் தெய்வமாகிய காமனோடு ஒத்துஎண்ணப்படுவான்என்கின்றார். இக்கவிக்கு அவ்வூரின்மேல் உள்ள பேரபிமானம் இவ்வுரையால் உணரலாகும்.

---

*குறள் 400. என்றும் அழிவின்றி நின்று உயிர்களுக்குஉயர்வினை உதவிவருதலால் கல்வி "கேடுஇல் விழுச்செல்வம்" என வந்தது. விழுமம் =சீர்மை, மேன்மை. தன்னையுடையாரை மேன்மைப்படுத்தி யாண்டும் உறுதிபுரிந்து நெடிது பேணிவரும் சீர்மை தெரிந்து கல்விக்கு வள்ளுவப் பெருந்தகை பேர் வைத்திருக்கும் அருமையைப் பார்க்க.

கம்பரைப் போலவே இந்நூலாசிரியரும் நான்கு இல்லைகளைப் பெய்து வைத்துக் கல்வி செல்வம் அழகு கொடைகளில் அந்நகரத்தவர் அடைந்துள்ள எல்லைகளை விளக்கியிருக்கும் இயல்பை இதில் ஊன்றிப்பார்க்க. இவரைப் பின்பற்றிச் சிவப்பிரகாச சுவாமிகளும் பாடியிருக்கிறார். அடியில் வருவது காண்க.

"வறியனெவன் வடதிசை மன்னவன்;
அறிவிலாளன அனந்தனும் ஆவன; ஏர்
சிறியனெவன் சிலைமதன் பூம்பொழில்
வெறியுலாவும் விளவலத் தெய்தினோ." (பிரபுலிங்கலீலை)

தாம் கூறப்புகுந்த நாடு நகரங்களில் ஆர்வமீதூர்ந்து இவ்வளவு பரவசராய்க் காப்பியக் கவிகள் பல பாடியுள்ளனர். இவ்வாறு வருவதை உயர்வு நவிற்சி என்பர். நாட்டு மக்களின் நிலைமை குறித்து வந்துள்ள இந்த இரண்டு கவிகளுக்கும் கம்பன் கவிக்கும் உள்ள ஏற்றம் தெரிக. திட்பம் நுட்பம் இயற்கைநிலை உணர்ச்சி நலன் உரைத்திறன் விநயம் முதலியன ; எளிதமைந்து அது உயர்வுடன் ஒளிர்தலை உய்த்துணர்ந்து கொள்க.

கம்பர் பல இடங்களில் திருத்தக்க தேவரைப் பின்பற்றி வந்துள்ளாராயினும் அந்தப் பழமையில் புதுமை ஒளிகொடுத்து எழிலுறுத்தி அழகு மிகச்செய்திருக்கிறார்.

உயிராதாரமாயுள்ள இருவகைச்செல்வங்களின் நிறைவுகூறி முடிவில் அந்நகரின் புனிதமான இன்ப நிலையைக் கூறுகின்றார்.

நகரின் இன்பநிலை.

ஏகம் முதற் கல்வி முளைத்தெழுந் தெண்ணில் கேள்வி
ஆகம் முதற் றிண்பணை போக்கி யருந்தவத்தின்
சாகந் தழைத்தன் பரும்பித் தருமம் மலர்ந்து
போகங் கனியொன்று பழுத்தது போலு மன்றே.

(நகரப்படலம் 75)

அயோத்தி இன்ப நிலையமாயுள்ளமையை இது கூறுகின்றது.

கல்வி, கேள்வி, தவம், அன்பு, தருமம் என்னும் அருமை நலங்கள் யாவும் உரிமையாக அமைந்து அந்நகரிலுள்ளவர்கள் எல்லாரும் நல்ல சுகபோகிகளாய் வாழ்ந்து வந்தனர் என்பதாம். இக்கருத்து இக்கவியில் கருத்தூன்றி நுனித்து நோக்கவுள்ளது.

ஏகம்=ஒன்று. தனக்கு நிகரொன்றில்லாதது ஏகம் என்க. ஏகன் என்று கடவுளுக்கு ஒரு பெயர். எல்லா உயர் நலங்களுக்கும் கல்வி மூலமுதலாயிருத்தலால் அது ஏகம் முதல் என எண்ணவந்தது. "ஏகமா நகர்" (சிந்தாமணி) என்புழி ஏகம் குறித்து நிற்றலறிக.

கல்வியாகிய வித்திலிருந்து ஒரு இனிய தரு முளைத்து வளர்ந்து, கேள்வியாகிய பல கிளைகள் கிளைத்து நீண்டு, தவமாகிய தழைகள் மிகவும் தழைத்து அடர்ந்து, அன்பாகிய அரும்புகள் எங்கணும் அரும்பி அலர்ந்து, புண்ணியமாகிய பூக்கள் பூத்துக் காய்த்து, இன்பமாகிய அரிய பெரிய பழம் ஒன்று பழுத்தது போல் திருவயோத்தி செழித்துச் சிறந்திருந்தது என்பதாம். எழுவாய் இதில் வருவிக்கப்பட்டது. பழுத்தது எது? என எண்ணி நோக்கி வினை முதலைக் கண்டுகொள்ள நுண்ணிதின் வைத்த படியிது. இனிய ஒரு கனிமரக் காட்சி காண்க.

எழுந்து, போக்கி, தழைத்து, அரும்பி, மலர்ந்து, பழுத்தது என வினை முடிபுகளை இணைத்து நோக்கிப் பொருள் நிலைகளைக் கருத்தூன்றி யுணர்ந்து கொள்க.

போகம்=ஐம்புலன்களும் ஆர நுகரும் இன்பம்.

அரிய இனிய வளங்கள் பலநிறைந்து, யாண்டும் இன்ப நலன்கள் சுரந்து, மக்கள் என்றும் குன்றா மகிழ்ச்சியுடையராய்க் குலாவி வாழும்படி அந்நகரம் நிலவி யிருந்தது ஆதலால் அந்நிலையினைத் தம் புலமைக் காட்சியில் கண்டு பெரிதும் வியந்து "போகம் கனி ஒன்று பழுத்ததுபோலும்?" என்றுஅதிசயித்து மூக்கில் விரல் வைத்து விழித்த கண் இமையாமல் விழைந்து நோக்கி விம்மித மெய்தி நம் கவியரசர் துதிசெய்து நிற்கும் காட்சியை இதில் கண்ணூன்றிக் காண்க.

முன்னம் புண்ணிய நகரம் என்று முதலில் எண்ணியதற்கு ஏற்ப அதன் போகச் சிறப்பை முடிவில் இங்ஙனம் புலப்படுத்தி யிருக்கிறார். போகம் என்ற சொல்லாற்றலால் அங்கு வாழ்பவர்கள் எல்லாரும் அல்லல் யாதும் அறியாமல் எண்ணியன யாவும் இனிது நுகர்ந்து நல்ல சுகிகளாய்ப் போக பூமியிலுள்ளவர்கள் போல் பொலிவெய்தி யிருந்தனர் என்பது பெறப்பட்டது.

போக பூமியின் இயல்பு.

"[illegible]
[illegible]
[illegible]
[illegible]
ஆகிய செய்தவத் தனமும் அன்பும்
[illegible] போக பூமி." (பிங்கலந்தை)

இன்ப நிலத்தின் நலங்கள் இதனால் இனிதறியலாகும்.

அன்பு தவம் போகம் என இதில் வந்துள்ள மொழிகள் முன்குறித்த கவியிலும் வந்திருக்கின்றன. இவ்வரவு சிந்திக்கத்தக்கது.

இன்பக் கனிக்கு மூலவித்தாகக் கல்வியை முதலில் எண்ணியிருத்தலால் அதன் தலைமையும் நிலைமையும் அறியலாகும். அறியாமையை ஒழித்து மக்களுள்ளத்தே அறிவொளியை விளைத்து வருதலால் எல்லாப் பேற்றிற்கும் மூலகாரணமாகக் கல்வி இங் ஙனம் எண்ணப்பட்டுள்ளது.

கல்வி நலன்.

"கற்பக் கழிமடம் அஃகும்; மடம் அஃகப்
புற்கந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணரும்; கோளுணர்ந்தால்
தத்துவமான நெறிபடரும், அந்நெறி
இப்பால் உலகத் திசைநிறீஇ அப்பால்
உயர்ந்த உலகம் புகும்." (நான்மணிக்கடிகை 29)

"வைகப்பொருள் கொடுக்கும் கற்றல்; கற்றபின் கண்ணுமாகும்;
மெய்ப்பொருள் விளைக்கும்; நெஞ்சின் மேவிற்கோர் துணையுமாகும்,
பொய்ப்பொருள் பிறகள், பொன்னும், புகழுமாம், துணைவியாக்கும்
இப்பொருள் எய்திநின்றீர் இரங்குவ தென்னை! என்றான்."
(சீவக சிந்தாமணி 1595)

கல்வி இம்மையில் புகழையும் மறுமையில் இன்பத்தையும் நல்கும் ; அதனை அவசியம் கற்றுக்கொள்க ; அது உனக்குக் கண் ஆம் ; நல்ல மெய்ஞ்ஞானத்தை விளைத்து அது மேன்மை மிகச் செய்யும் ; பொன்னும் புகழும் போகமும் அருளும் எனக் கல்வியின் பெருமையை இவை உணர்த்தி நிற்றல் அறிக.

கல்வி நலனைக் குறித்து மேலோர் பலவாறாகப் புகழ்ந்திருக் கின்றனர். விரிவஞ்சி விடுகின்றேன். அதன் அருமை பெரு மைகளை வியந்து கல்லாடர் ஆர்வ மீதூர்ந்து பாடியிருக்கும் பாடல் ஒன்றைமட்டும் பார்த்துவிட்டு மேலே போவோம்.

## கல்வி நிலை.

" நிலம்பெயர்ந் தசலியா நிலைமை யானும்
பலவுந் தொடுத்த ஒருதிறத் தானும்
நிறையும் பொறையும் பெறுநிலை யானும்
தேவர் மூவருங் காவ லானும்
கனிய பாரைச் சைலம் ஆகியும் ;
அளக்கவென் றுறையாப் பரப்பின தானும்
அமுதமுந் திருவும் உதவுத லானும்
பட்டுறை புகத்தொடு பயிலுத லானும்
முள்ளுடைக் கோட்டு முனைவெறி சுறவம்
அதிர்வலை தடியும் அளக்கர் ஆகியும் ;
நினைவுளம் கருதி நிகழ்ந்தவை நிகழ்பவை
தருதலின் வானத் தருவைந் தாகியும்;
மறைவெளி படுத்தலின் கலைமகள் இருத்தலின்
அகமலர் வாழ்தலின் பிரமன ஆகியும் ;
உயிர்பரிந் தளித்தலின் புலப்பசை போக்கலின்
படிமுழுது அளந்த நெடியோன் ஆகியும் ;
இருநிலம் சலியா திருத்த லானும்
மருந்தக ஆதவும் இருமை யானும்
பெண்ணிடங் கலந்த புண்ணியன ஆகியும் ;
அருள்வழி காட்டலின இருவிழி ஆகியும் ;
கொள்ளுநர் கொள்ளக் குறையாது ஆதலின்
நிறையுளம் நீங்கா துறைஅருள் ஆகியும் ;
அவைமுத லாகி இருவினை கெடுக்கும்
புண்ணியக் கல்வி." (கல்லாடம் 12)

பொன்மலை, பாற்கடல், கற்பகதரு, பிரமா, திருமால், சிவன், அருள், கண் என்னும் இந்த எண் வகை அருமைப் பொருள்களோடு கல்வியை ஒப்ப வைத்து எண்ணி அதன் வியத்தகு தன்மைகளையும், நன்மைகளையும் இதில் உணர்த்தியிருக்கும் அழகை ஊன்றிப்பார்க்க. ஏது, சிலேடை, உருவகம் என்னும் அணிகள் அமைந்து இனிது வந்துள்ள இக்கவியின் பொருள் நிலைகளை ஆராய்ந்து கல்வியின் உயர் நிலைமையை உய்த்து உணர்ந்து கொள்க. ஈண்டு எழுதின் விரியும்.

மீண்டும் மீண்டும் நீவிரே படித்து ஆண்டுள்ள பொருள் விரிவுகளைத் தெரிந்து கொள்ளுதல் நலம், எவ்வளவு கூரிய மதி

யுடையாராயினும் மேலெழுந்தபடியாய் நூல்களை விரைந்து படித்தால் பொருள்கள் பெரிதும் விளங்கா; மந்தராயினும் ஆழ்ந்து அமர்ந்து நோக்கின் யாவும் நன்கு பலனும்.

> "[illegible] பாட [illegible]
> [illegible] பாட பழகி [illegible] பலகற் [illegible].
> விரைவாய்ப் பார்க்கின் தெரியாது ஒன்றும்;
> விரையாது [illegible] நகர [illegible] என்க." (இலக்கணக்கொத்து)

எனவரும் பயிற்சி முறையின் உயர்ச்சி நிலையை உள்ளங்கொண்டு உறுபொருள் தெரிக. இக் காலத்தில் படிப்பு முறை உள்ளம்படியால் வெள்ளோட்டமாய் ஓடுகின்றது. அதனால் உணர்வு ஒளி மழுங்கி நிற்கின்றது. சிறிதளவு படித்தாலும் கருதிப் பயிலுதல் நலம். படிப்பில் ஆர்வமும் மனவொருமையும் கல்வியை வளம் பெறச்செய்கின்றன. அவ்வாறே கேள்வியும்; கொஞ்சமாயினும் நெஞ்சம் தெளிவுற நல்லது கேட்கவேண்டும்.

> "எனைத்தானும் நல்லவை கேட்க; அனைத்தானும்
> ஆன்ற பெருமை தரும்" என்றது பொய்யாமொழி.

பிற அறிஞர்களுடைய உணர்வு நலங்களைக் கேள்வியால் உணர்ந்துகொண்ட பொழுதுதான் ஒருவனுடைய கல்வி யறிவு வளம் பெற்று விளங்கும் ஆதலால் கல்விக்குக் கேள்வி கிளை என வந்தது. கேள்வி இல்லையாயின் கல்வி கிளைகள் இல்லாத தனிமரம் போல் பொலிவிழந்து நிற்கும் என்பது புலனாயது.

செவியால் கேட்கப்படுவனவெல்லாம் கேள்வி ஆயினும் ஈண்டு நல்ல அறிவின் பதிவையே அது குறித்து நின்றது.

> "மறவுரையும் காமத் துரையும் மயங்கிப்
> பிறவுரையும் மலகிய ஞாலத்து—அறவுரையைக்
> கேட்கும் திருவுடையாரே பிறவியை
> மீட்கும் திருவுடையார்," (அறநெறிச்சாரம்)

இதனால் இன்னதுதான் கேள்வி என்பது இனிது புலனாம்.

இத்தகைய கல்வி கேள்விகள் வாய்ந்து மனநலமுடையனாய் நல்வினைகளைச் செய்யின் அது தவமாம். அத் தவவொழுக்கம் மனிதனைப்புனிதப்படுத்தி மிகவும் உன்னத நிலையில் உயர்த்தும்; தன்னளவில் உயர்ந்துள்ள அவன் எல்லா உயிர்களும் இன்புறும்

படி உள்ளம் கனிந்து இதம்புரிந்துவரின் அது அன்பாம். அந்த அன்பு மனித வாழ்க்கையில் ஒரு தெய்வீகமுடையது ; அதனால் அறநலங்களெல்லாம் ஒருங்கே உளவாம் ; அவ்வறம் எல்லா இன்பங்களையும் இனிது நல்கவல்லது ஆதலால் கல்வி முளைத்துக், கேள்வி கிளைத்துத், தவம் தழைத்து, அன்பு அரும்பித், தருமம் மலர்ந்து, போகம் பழுத்தது என இன்ப மூலங்களை எண்ணி அடுக்கி இங்ஙனம் உணர்த்தியருளினார். போகத்தைக் கனியாகக் கருதியதனால் அதற்கு இயைய மரம் இவ்வாறு உருவகிக்க நேர்ந்தது.

அயோத்தி வாசிகள் கல்வியில் வல்லுநர், கேள்வியில் சிறந்தவர், தவவொழுக்க முடையவர், எல்லா வுயிர்களிடத்தும் அன்பராய் யாண்டும் இதம்புரிபவர், தரும குண சீலர்கள் ஆதலால் அங்ஙனம் புண்ணியசாலிகளான அவர் எண்ணிய போகங்கள் யாவும் இனிது நுகர்ந்து இன்புற்று வாழ்ந்திருந்தனர் என்பது இதனால் அறிய நின்றது.

அன்பு முதலிய அறநலங்களையுடையார் இன்பம் நுகர்வர் என்றதனால் அல்லாதவர் அது கிடையாமல் துன்புறுவர் என்பதாயிற்று.

கம்பர் காட்டிய இனிய மரத்தில் பழுத்த இன்பக்கனிஒன்று கண்டோம் ; இதே நிலையில் பட்டணத்துப் பிள்ளையார் அதி மதுரமான ஒரு கனிமரத்தைக் கலையுலகில் காட்டியிருக்கிறார். இலக்கியச் சுவை நிறைந்து இனம் ஒத்திருத்தலால் அதனையும் உரிமையுடன்ஈண்டு உவந்து பார்க்கவேண்டும். அடியில் வருவது காண்க.

தீங்கனி விளையும் செழுநிலம்.

" நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற அகழ்ந்து போக்கித் தூர்வைசெய்து,
அன்பு என்பாத்தி கோலி, முன்புற
மெய்யெனும் எருவை விரித்து, ஆங்குஐயமில்
பத்தித் தனிவித்திட்டு, நித்தலும
ஆர்வத் தெண்ணீர் பாய்ச்சி, நேர்நின்று
தடுக்குநர்க்கு அடங்காது இடுக்கண் செய்யும்
பட்டி அஞ்சினுக்கு அஞ்சி, உட்சென்று
சாந்த வேலி கோலி, வாய்ந்தபின்,
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்

கருணை இளந்தளிர் காட்ட அருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து
சேமப் படுத்துழிச் செம்மையின் ஓங்கி
மெய்ம் மயிர்ப் புளக முகிழ்த்திட்டு அர்பொனக்
கண்ணீர் அரும்பிக், கடிமலர் மலர்ந்து,
புண்ணிய அஞ்செழுத்து அருங்காய் தோன்றி,
நஞ்சுபொதி காளகண்டமும் கண்ணொரு மூன்றும்
தோளொரு நான்கும் சுடர்முகம் ஐந்தும்
பவளநிறமும் பெற்றுத் தவளநீறு பூசி
அறுசுவை அதனினும் உறுசுவை புடைத்தாய்க்
காணினும் கேட்பினும் கருதினும் களிதரும்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி
பையப் பையப் பழுத்துக் கைவர
நம்மோர்கள் இனிதின் அருந்திச்
செம்மாந்திருப்பச் ; சிலர் இதனை வாராது
மனம் எனும் புனத்தை வறும்பாழ் ஆக்கிக்
காமக் காடு மூடித் தீமை செய்
ஐம்புல வேடர் ஆறலைத் தொழுக
இன்பப் பொய்த்தேர் எட்டாது ஓடக்
கல்லா உணர்வெனும் புல்வாய் அலமர
இச்சைவித்து துருத்துழி யான்எனப் பெயரிய
நச்சு மாமரம் நனிமிக முளைத்துப்
பொய்யென் கவடுகள் போக்கிச், செய்யும்
பாவப் பல்தழை பரப்பிப் பூவெனக்
கொடுமை அரும்பிக், கடுமை மலர்ந்து
துன்பப் பல்காய் தூக்கிப், பின்பு
மரணம் பழுத்து, நரகிடை வீழ்ந்து
தமக்கும் பிறர்க்கும் உதவாது
இமைப்பிற் கழியும் இயற்கையோர் உடைத்தே.''

(திருவிடைமருதூர் மும்மணிக்கோவை).

இது, திருவிடைமருதூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைக் குறித்துப் பாடியது. மருதத்தீங்கனி என்றது அங்குக் கோயில் கொண்டுள்ள மூர்த்தியை. மருதம் என ஒரு மரமும் உண்டு ஆதலால் அதற்கு இயைய உருவகம் வந்தது.

வஞ்சனை முதலிய தீமைகளை நீக்கி நெஞ்சைப் பண்படுத்தி அன்பு வாய்மை அருள் சாந்தம் முதலிய குணநலங்கள் வாய்ந்து

ஞானசிலரா யுள்ளவர் ஒரு தெய்வத்திங்கனி கைவரப்பெற்று என்றும் பேரின்ப நிலையில் பெருகியிருப்பர்; அங்ஙனம் பண்படுத்தாமல் தீய எண்ணங்களால் மனத்தைப் பாழ்படுத்தி யிருப்பவர் நோய்பலதொடர்ந்து துன்பங்களில் ஆழ்ந்து முடிவில் நரகத்தில் வீழ்ந்து நைந்து கிடப்பர் என்பதாம்.

இந்தக் கருத்தை உருவகித்து இதில் உணர்த்தியிருக்கும் அருமை பெரிதும் வியந்து போற்றத்தக்கது.

கம்பர் ஏகதேச உருவகமாகச் சிலவே கூறினர்; இதில் பல வந்துள்ளன. அவர் வித்திலிருந்து தொடர்ந்தார்; இவர் நிலத்திலிருந்து தொடங்கியிருக்கிறார்; அவர் அன்பை அரும்பு என்றார்; இவர் அதைப் பாத்தி ஆக்கினர். அவர் கல்வி முளை முளைத்து என்றார்; இவர் ஞான முளை முளைத்து என்றார். அவர் ஓரின்பமான போகக்கனி ஒன்றை உரைத்தார்; இவர் பேரின்பமான தெய்வக் கனியை என்றும் தித்திக்கக் குறித்தார். உலக நிலையில் உயர் நிலை ஒன்றையே அவர் உணர்த்தினர்; உயர்வு இழிவு என்னும் இருவகை நிலைகளையும் இணைத்து இவர் இனிது விளக்கினர். வாரளவில் அது உருவாகியுள்ளது; இது உலகுயிரெங்கணும் உயர் பேரின்பமாய் ஓங்கி ஒளிமிகுந்துள்ளது.

சொற்சுருக்கம், பொருட் பெருக்கம், அணிஅமைப்பு, கவித்திட்டம், கலைப்பண்புகளில் ஓரளவு இரண்டும் நிறை ஒத்திருப்பினும் பத்திச்சுவை தெய்வக்காட்சி ஆன்மவுருக்கம் அருட்பண்பு உலக நிகழ்ச்சி உயிருணர்ச்சிகளில் இது மிகவும் தலை சிறந்து நிற்கின்றது. படுதுயரங்களுக்கெல்லாம் கெடு மூலமான கொடிய நச்சுமரம் ஒன்று இச்சை வித்தில் முளைத்ததென இதில் குறித்திருக்கும் குறிப்பையுங்கருத்தையும் நுனித்தறிந்து தத்துவ தரிசனம் செய்யவேண்டும்.

முளைத்து, தழைத்து, கவடுகள் போக்கி, அரும்பி, மலர்ந்து கனி பழுத்து எனக் கம்பர் வாக்கில்வந்துள்ள மொழிகள் யாவும் இதன்கண் இருக்கின்றன. ஆகவே இதை நோக்கி அது எழுந்ததா? அல்லது கலையுணர்வில் தனியே புதிதாய் விளைந்துவந்ததா? என்பதைஆராய்ந்து உணர்ந்துகொள்ளவேண்டும். பட்டணத்தார் காலம் கம்பருக்கு மிகவும் முந்திய தென்பர்.

இந்த அருமைக் கவி ஒவ்வொருவர் நெஞ்சிலும் உரிமையாகப் பதிவு செய்யத்தக்கது. இதன் பொருள் நலங்களை உணருந் தோறும் உயிர்கள் உயரின்பம்பெறும்.

உயர் கதியில் செல்லும் உயிர் நிலைகளையும், அதோகதியில் வீழும் உயிரினங்களையும் படம்பிடித்து உள்ளும் புறமும் தெளிவுற இது காட்டியுள்ளது. "மனம் எனும் புனம்" எனத் தொடரும் பகுதியில் உணர்த்தியபடியே உலகில் மக்கள் மிகுதியாக உள்ளனர். அப்பகுதி முழுவதையும் கருத்தூன்றி நோக்கிப் பொருள் நிலைகளை உய்த்துணரின் மனம் பாழ்பட்டுஇருளடைந்து வறிதேயுழலும் மருளுயிர்களின் பரிதாப நிலை எதிரே இனிது புலனும். அக்காட்சியில் நமது அகநிலைமையும் தகவும் தெளிவாம்.

பட்டணத்தார் ஒரு காவியக் கவியாயிலராயினும் பூவியலை நன்கு உணர்ந்து தேவியல்போடு கலந்து திளைத்துப் பரவசராய்ப் பாடியுள்ளமையால் இப்பாடல் இவ்வளவு பண்பமைந்து இன்ப மிகுந்துள்ளது. அநுபவ சாரமாய் ஆருயிர்க்குப் பேராதரவாய் இது பெருகியிருக்கிறது.

ஏகம் என்னும் நம் போகக் கவியுடன் உறவுரிமை யுடைய தாய் உருவமைந்திருந்தலால் அதனோடு இது ஈண்டு எண்ணி அறிய வந்தது.

நாடு நகரங்களின் நிலைகளை நலமுறப் பாடி வந்தவர் முடிவில் கற்பு கல்வி அன்பு தவம் தருமங்களை உரிமையுடன் எண்ணி வைத்து, அவை இன்ப மூலங்களாயுள்ளமையை நாமெல்லாரும் உணர்ந்துய்யுமாறு நுண்ணிதாக உணர்த்தி நம் கவிஞர்பிரான் மங்களமாய் இங்ஙனம் முடித்திருக்கின்றார்.

அயோத்தி நகரின் மகிமை, அமைதி, அழகு, அதிசயம், செல்வச் செழிப்பு, கல்விநிறைவு, குடிகளின் குணநலங்கள், கொடை வீரங்கள், சுகபோகங்கள் முதலியன இதுவரை அறிந்தோம்; இனி அந்நகரின் அதிபதியாய் முறை செய்துவரும் அரசர் பெருமானைக் கண்டு உவகை மீக்கொள்வோம்.

நகர நிலை முற்றிற்று.

# ஐந்தாவது அதிகாரம்

## தசரதன் தன்மை.

---

நாட்டின் சிறப்பும் நகர்ச்சிறப்பும் கம்பன்றன்
பாட்டின் சிறப்போடு பார்த்துவந்தோம்—நீட்டுகொடைக்
கையான் தசரதன்றன் காமர் சிறப்புமினிப்
பொய்யாமற் காண்போம் புகுந்து.

இது முதல் இனிமேல் காவிய பாத்திரங்களைக் கண்டு மகிழ வந்துள்ளோம். முன்னுற மூலபுருடனைக் கண்ணுறுகின்றோம். இந்தப் பாத்திர சோதனை இந்நூலுக்கு ஓர் சூத்திரமாகும். இன்ப நிலையமான இராம கதைக்கு மூல முதல்வனுயுள்ள தசரதனை முதலில் உரிமையுடன் அறிந்து உறுதி பல காண்போம். இவன் அரசர்க்குஅரசன். பல அரசர்களையும் அடக்கி ஆளும் தலைமையுடைமையால் சக்கரவர்த்தி என்னும் மிக்க புகழுடன் இவன் விளங்கியுள்ளான். இவன் சிறந்த மதிநலமுடையவன். நல்ல சுகி. எல்லாக் கலைகளிலும் வல்லவன். வில் வலியில் மிகவும் கைதேர்ந்தவன். குறி எய்வதில் அதி நிபுணன் என்று அக்காலத்திலிருந்தவரெல்லாராலும் வியந்து போற்றப்பெற்றவன். கண்ணெதிரே காணுத பொருளையும் ஓசையை ஓர்ந்து அதனை ஒரேதொடையில் எய்து வீழ்த்தும் இயல்பினன். அவ்வாறு எய்ய வல்ல அம்பு நிலைக்குச்சத்த வேதி என்றுபெயர். சத்தம்=ஒலி. வேதி=அறிய வல்லது. அந்த அத்திர வித்தையில் இவன் நன்கு சித்திபெற்றவன். இவனது வில்லாண்மை போர் வல்லார் எல்லாராலும் போற்றப்பட்டுள்ளது.

"மனுவாதி மன்னர்பலர் மாண்வலிபெற் றிருந்தாலும்
உறுவலியில் தசரதன்போல் தலைசிறந்து நின்றவர் யார்?"

என்று வீரர்பலரும் வியந்து பேச இவன் வீறுற்றிருந்தான். அரசரும் மன்னரெவரும் பணிந்து போற்றப் பேராண்மையுடன் இவன் சீராண்டு வந்தான். அமரரும் இவனது உதவியை ஆவலுடன் வேண்டி நின்றார். சம்பரன் என்னும் அசுரனேடு இந்திரன் பலமுறையும் அமராடி யாதும் முடியாமல் அயர்ந்து நின்றான்; முடிவில் இவனிடம் வந்து குறையிரந்து நின்று துணைவர வேண்டினன். இவன் இரங்கிச் சென்று அமர் முகத்தில்

அவ் அசுரனை அடியோடு வென்று அமரர் கோனுக்கு அருள் புரிந்து வந்தான். அன்று முதல் அமரரனைவரும் தமரென நினைந்து உரிமை மீக்கூர்ந்து இவனை உவந்து கொண்டாடினர். சம்பரனை வென்று வந்தமையால் சம்பராரி என உம்பரும் புகழ இவன் உயர்ந்து விளங்கினன். திருந்திய பண்பும் சீர்த்த நாகரிகமும் கூர்த்த அறிவும் இவனிடம் குடிகொண்டிருந்தன. அருந்தவமுடைய முனிவரும் இப் பெருந்தகையிடம் பேரன்பு புரிந்து வந்தார்.

பரமபதநாதன் என்று உலகமெல்லாம் உரிமையுடன்கொண்டாட நிற்கின்ற இராமன் தனக்குத் தந்தை என்று உவந்து கொண்டாட இவன் தழைத்து நின்றான் என்றால் இவனது தனி மகிமையை எவரளந்து சொல்லவல்லார்? தசரதனுக்கு மகன் ஆனமையால் தாசரதி என்று இராமனுக்கு ஒரு பெயரும் வந்தது. அக்குலமகனைப் பெற்றதனால் சூரிய குலத் தோன்றல்களுள் மிகவும் பேரிசையாளனாய் இவன் பெருகி வரலாயினன்.

இவனுடைய தந்தை பெயர் அசன். அயன் எனவும் வழங்குவர். தாய் இந்துமதி. அவள் சர்வாங்க சுந்தரி. யாரும் நிகரில்லாப் பேரழகுடைய அவள் பண்டைக்காலத்து அரசர் முறைப்படி சுயம்வரத்தில் அசமகாராசனுக்கு மணமாலை சூட்டினள். அதனைக்கண்டு பொறாமைகொண்ட அரசகுமாரங்கள், “அழகினால் மட்டும் இந்த அழகியை மணந்துகொள்ளமுடியாது; போர் வீரனுக்கே அரசகன்னிகை உரியள்” என ஆரவாரம் செய்து அமர்க்கு மூண்டார். மூளவே புதிய மணமகளைத் தந்தையிடம் அமர்த்திவிட்டு மடங்கலேறென அசன் அமர்மேல் பாய்ந்து அரசரனைவரையும் அடங்கவென்றான். அவ்வெற்றித் திருவுடன் முன்பெற்ற மனைவியையும் அழைத்துக்கொண்டு திருவயோத்தியை யடைந்து பெருமகிழ்வுடன் வாழ்ந்துவந்தான். அவனது வீரமணத்தின் வரலாறு இரகுவம்சத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இராமாயணத்தில் சுருக்கமாக ஒரு கவியில் குறித்திருக்கிறார். அடியில் வருவது காண்க.

அசன் புரிந்த திருமணம்.

“ வில்என்னும் நெடுவரையால வேந்தென்னும் கடல்கலக்கி
எல்என்னும் மணிமுறுவல இந்துமதி எனுமதிருவை
அல்என்னும திருநிறத்த அரியென்ன அயன் என்பான்
மல்என்னும் திரள்புயத்து அணிஎன்ன வைத்தானே.”

(குலமுறைகிளத்துபடலம் 12)

பாற்கடலைக் கடைந்து இலக்குமியைத் திருமால் அடைந்து மார்பில் வைத்துக்கொண்டான்; போர்க் கடலைக் கடைந்து இந்துமதியை அசன் பெற்றுத் தோளில் வைத்துக்கொண்டான் என்பதாம். திரு, இந்துமதிக்கும்; திருமால், அசனுக்கும் ஒப்பாம். இதனால் இத் தம்பதிகளுடைய தனிமகிமை இனிது புலனும். அயன் என்றது அசனை. தசரதன், தயாரதன் எனவருதல்போல் சகரத்திற்கு யகரம் இதில் இனமாய் வந்தது. தேசம், தேயம் என வருதலும் காண்க.

அயன் என்று பிரமனுக்கும் ஒரு பெயர் உண்மையால் திருமாலோடு உடன் எண்ண வந்த இதில் அரி, அயன் என்னும் அவ் இனமுறையும் இயல்பாகத் தொனிக்கும்படி கவி அமைத்திருக்கும் நயத்தை நுனித்து நோக்குக.

அருந்திறலாண்மையுடைய இவ் அசன் பெருங்கொடை வள்ளலாகிய ரகுவினுடைய அருமைப் புதல்வன் என்க. ஞான நலம் வாய்ந்த முனிவரரும் இம்மான வீரனை மதித்து வந்தார். அரிய தானங்கள் பல புரிந்து சிவபெருமானை நினைந்து தவம் கிடந்தே இவன் தசரதனைப் பெற்றான். அசனுடைய தந்தையின் பெருமையும் மைந்தன் அருமையும் இதனால் அறியலாகும்.

ரகுவின் வழி முறை.

"அலையநதிர் வேலுழவன் தந்த மைந்தன்
அரசர்மணி முடியுரிஞ்சி அலங்கு சோதிப்
புனைகழற்கால தழும்பிருந்த அயன் என்றோதும
போர்வேறனை முனைவனமுககட் புனிதறபோற்றி
வினையறநோற் றினிதருளும மைந்தன் நாமம்
வெள்வேலால் திசைபததும் வென்ற சீர்த்தி
கலைகடலும் நெடுவரையும் வெண்மை தீற்றும்
கதிர்வெளவித் தயரதன் என்றுரைப்பர் மாதோ."
(கூர்மபுராணம், சூரியன் மரபு, 52)

திசை விளங்கநல் லறத்தினை நிறுவிய செங்கோல்
இசை தரும்படி செலுத்திய ரகுவெனும் இறைவன்
அசன் எனும் பெயர் அரசனை அளித்தனன்; அசனும்
தசரதன்தனைத் தந்தனன் முச்சகம் தவிர்ப்ப.
(பாகவதம், 9-8.)

ரகுமன்னனுடைய மகன் அசன்; அவன் மகன் தசரதன் என்பது இவற்றானும் அறிந்தோம். ஆகவே தசரதனுக்கு ரகு தந்தையைப் பெற்ற பாட்டன் என்பது நன்கு தெளிவாயது.

அமரரும் வியக்கத்தக்க அரிய போர் வீரமும், பெரிய வண்மையும், இனிய பல குணங்களும் ரகுவினிடம் இயல்பாக மருவியிருந்தன ஆதலால் கோசலத் தரசர்க்கு அவன் ஓர் குலமுதல்வனுய்த் தலைமை யெய்தி நிலவி நின்றான். அதனுல் ரகு குலத்தினர் என்று அம்மரபிலுள்ள முற்காலத்தவரும் பிற்காலத் தவரும் பெருமையோடு பேச நின்றனர். வடமொழியில் காளிதாச மகாகவியால் ரகுவம்சம் என்று ஒரு காவியமும் செய்யப்பட்டுள்ளது. ரகுவின் தொடர்பு தெரிய இராகவன் என்று இராமனே பெயர் பெற்று நின்றான் என்றால் அவன் உயர்வின் அளவை எவர் அளந்து சொல்வது? சூரியன் மரபு ஆதியிலிருந்தே இவ்வாறு வீரியம் பெற்று விளங்கியுள்ளது.

இதுவரை கூறியதனுல் தசரதனுடைய தலைமுறையும், வழிமுறையும் ஒருவாறு அறியவந்தன. தலைமுறை=முன்சென்றது. வழிமுறை=பின்வந்தது.

### தசரதன் பெயர்க் காரணம்.

உருவம் தோன்றிய வழியெல்லாம் பெயரும் தோன்றும். பெயர், இடுகுறி, காரணம் என இருவகைப்படும். ஏதேனும் ஒரு காரணத்தை முன்னிட்டு வருவது காரணப்பெயர்; காரணம் ஒன்றுமின்றி இயல்பாக எழுவது இயற்பெயர்; அல்லது இடுகுறிப்பெயர் என்க. இங்கே வந்துள்ள தசரதன் என்னும் பெயர் இயல்பாக வந்ததா? அல்லது காரணம்பற்றி எழுந்ததா? என்பது ஆராய வருகின்றது.

குலதெய்வத்தின் பெயர், தம் குடியில் உயர்ந்திருந்த முன்னேரின் பெயர் என இன்னவாறு ஏதேனும் ஒரு தொடர்பு பற்றியே நம் நாட்டுமக்களின் பெயர்கள் பெரும்பாலும் ஈட்டமுற்று வந்துள்ளன. இந்நிலையில் வடநாட்டு மன்னர்பிரானுகிய அன்னவனுடைய பெயர் என்னமுறையில் எய்தியது?என்று ஈண்டு எண்ண நேர்ந்தது. அமரருக்குத் துணையாய் அமருலகில் சம்பராசுரனேடு தசரதன் அமராடுங்கால் தனது தேரைப் பத்துத் திசைகளிலும்

விசித்திரமாகச் செலுத்தி வித்தகத் திறல் புரிந்துள்ளான் ஆதலால் அக்காரணம்பற்றித் தசரதன் என்று பெயர்வந்தது என்பர். தசம்=பத்து. ரதம்=தேர். "வெள்வேலால் திசை பத்தும் வென்ற கீர்த்தி" என மேல் வந்துள்ள கூர்ம புராணமும் இவ்வுண்மையைக் குறித்திருக்கின்றது. திசை பத்து என்றது பெருந்திசை நான்கு. கோணம் நான்கு, விண் மண் இரண்டு ஆகப் பத்து என்க. முன், பின், பக்கம் மேல் கீழ் என்னும் எல்லா இடங்களிலும் தேராளிகளாய்த் தன்னை வளைந்து கொண்டு போராடிய பகைவரனைவரையும் திசை திசை எதிர்ந்து ஒருங்கே வென்றமையால் தசரதன் என்னும் பெயர் வந்ததென்பதும் கருத நின்றது. அப்படியாயின் பிறந்தபொழுது பெற்றோர் இவனுக்கு இட்ட பிள்ளைத் திருநாமம் என்ன? திசை பத்தும் வென்று இசைபெறுமுன் இவன் எப்பெயரால் அழைக்கப்பட்டு வந்தான்? செயல்பற்றி வந்த பெயர் உயர்வாகவழங்க நேர்ந்தமையால் இயல்பான பெயர் மறைந்துபோயது? எனின், அவ்வாறு மறையுமுன் அப்பெயர் எங்கேனும் மறைமுகமாய் நூல்களில்குறிக்கப்பட்டுள்ளதா? யாண்டும் அறவே காணவில்லையாயின், "பெற்றோர் இவனுக்கு வைத்த பெயர் தசரதன் என்பதே; அதற்கு வேண்டுமென்றே இவ்வாறு கற்பனையாகக் காரணம் கற்பித்து முன்னோர்கள் அப்பேரைப் பிரமாதப்படுத்தியிருக்கிறார்கள்" என்று நவீன முறையில் துணிந்து முடிவுகட்டி விடலாமே? எனின், அதற்கும் வழி இல்லை. என்னை? தசரதன் வாயினாலேயே தேர்பத்தும்வென்ற போர் வெற்றியைச் சொல்லி யிருக்கிறான். எங்கே சொல்லி யுள்ளான்? எனின், இங்கே காண்க.

தசரதன் உரைத்தது.

"பஞ்சிமென் தளிரடிப் பாவை கோல்கொள
வெஞ்சினத் தவுணர்தேர் பத்தும் வென்றுளேந்து
எஞ்சலில் மனமெனும் இழுதை ஏறிய
அஞ்சுதேர் வெல்லுமீ தருமை யாவதோ?"
(அயோத்தி, மந்திரப்படலம்-19)

தன் மந்திரிகளிடம் தசரதன் சொல்லியபடியிது. தனது அருமை மகனை இராமனுக்கு முடி சூட்டி வைத்துவிட்டுத், தான் ஐம்பொறி அடக்கி அருந்தவம் புரியவேண்டும் என்பதை

இவ்வாறு குறித்திருக்கிறான். இங்கே பாவை என்றது கைகேசியை. அமர்கருதி அமரருலகம் செல்லுங்கால் அது பொழுது புதுமணம் புரிந்துவந்திருந்த தன் மனைவியையும் இவன் உடனழைத்துப் போனான். அங்கே போர் ஏழு நாள் தொடர்ந்து நடந்தது. வீரவுணர்ச்சி நிரம்பியிருந்த கைகேசி போர் நீளுகின்றதே! என்று கவன்று கடைசி நாள் தனது நாயகன் தேரை அவளே செலுத்துவதாகச் சொன்னாள். தசரதன் வியந்து சரி என்று இசைந்தான். அன்று அத்தருண மங்கை அருணனும் அதிசயிக்க அமரில்மூண்டு அதிசாதுரியமாக யாரும் அறியாத அற்புத நிலையில் தேரை நடாத்தினாள். அதனைநோக்கி அகமிக மகிழ்ந்து வீராவேசத்துடன் பகைவர் படைகளைப் படுகளப்படுத்தித், திசைதொறும் எதிர்ந்த அசுரர் தலைவர் அனைவரையும் அடியோடு வென்று அமரர் எதிர்கொள்ள அரசன் மீண்டான். அந்தப் பெரிய வெற்றிக்கு உற்ற துணையாய் அன்று உடனிருந்துதவிய தனது அருமை மனைவியின் உரிமையை உவந்து, "பாவை கோல் கொள" என்று யாவரும் அறிய ஆவலுடன் உரைத்தான். நிகழ்ச்சியை இவ்வாறு உரைத்திருப்பினும், "ஒரு பெண்ணை ஒப்புக்காக உதவிக்கு வைத்துக்கொண்டு எண்ணில் அடங்காப் பகையை விண்ணில் வென்ற எனக்கு மண்ணில் ஐவரை வெல்வது பெரிதா"? என்ற குறிப்பும் இதில் தொனித்திருக்கின்றது. அஞ்சுதேர் என்றது வாய் கண் முதலிய ஐம்பொறிகளை. இழுதை=மூடன், பேய். மனத்தை மடையன் என்றது பின்னால் வருந்துபரங்கள் ஒன்றையும் கருதாமல் கண்டபடியே புலன்களில் மண்டித்திரியும் அதன் மடமையை நோக்கி.

உலகபோகங்களைத் துறந்து அகமுகமாய்த் திரும்பி ஆன்ம நிலையை அவாவி எழுவார் எவரும் இந்த மனநிலையை இவ்வாறு இகழ நேர்வர். புலன் நுகர்வில் அல்லல் மிக விளைத்து அலைக்கழிவு செய்து எல்லையில்லாத பிறவித்தொல்லைகளுக்கெல்லாம் ஏதுவாய் நிற்றலால் அந்த மனத்தின் பொல்லாங்கை வெறுத்து அதனை அறவே வெல்லவேண்டும் என்று அறவோர் இங்ஙனம் அடர்ந்து நிற்கின்றார்.

"பகைமன வெற்றி யல்லால், பவக்கடல் வங்கம் இல்லை;
வகைபடும் உலகில செல்வர், வரிசையோர் மறுவிலாதோர்
மிகையுயர் புருடர் கீர்த்தி மிக்கவர் என்போர் உள்ளக்
குகையிடைத் தொழில்கள் நஞ்சார் கொடுமனப்பாம்பைக்
கொன்ருர்"
(ஞானவாசிட்டம், தாமவியாளா-11)

மனத்தை வெல்லாதவர் பிறவிக்கடலைக் கடவார்; பொல்லாத அம்மனப் பாம்பைக் கொன்றவரே உயர்ந்தமுத்தி உலகை அடைவார்; அவரே கீர்த்தி மிக்க தீரபுருடர் என இதில் கூறியிருத்தல் அறிக. பாம்பு என்று குறித்தது அதன் தீம்புநிலை தெரிய. "படுதுயர்செய் கொடுமனம் போல் பகை யுலகில் உண்டோ"? என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

வெல்லல் என்றதனுல் அதன் போராட்டத்தின் பொல்லா நிலைமை புலனும்.

"மனமெனும்ஓர் பேய்க்குரங்கு மடப்பயலே! நீதான்
மற்றவர்போல் எனை நினைந்து மருட்டாதே கண்டாய்!
இனமுறஎன் சொல்வழியே இருத்தியெனிற் சுகமாய்
இருந்திடு நீ; என்சொல்வழி ஏற்றிலையானுலோ
தினையளவுன் அதிகாரம் செல்லவொட்டேன்; உலகம்
சிரிக்கவுனை அடக்கிடுவேன் திருவருளால் கணத்தே;
நனவில்எனை அறியாயோ? யார்என இங்கிருந்தாய்?
ஞானசபைத் தலைவனுக்கு நல்லபிள்ளை நானே."
(அருட்பா)

இராமலிங்க சுவாமிகள் மனத்தோடெதிர்த்து அதனை அதட்டி அச்சுறுத்தி அடக்கி வைத்திருக்கும் அழகை இதில் பார்க்க.

குரங்கு, பேய், மூடன் என வாயில் வந்தபடி வயிற்றெரிச்சலுடன் மனத்தை வைதிருத்தலால் உயிர்கட்கு அது செய்திருக்கும் கோய் நிலைகள் அறியலாகும்.

இழுதை ஏறிய தேர் என்றது பொறிகளை அது நடத்தும் நிலை தெரியநின்றது. தேகம், தேர்; பொறிகள், குதிரைகள்; மனம், கடிவாளம்; அறிவு, சாரதி; ஆன்மா, தலைவன்; என்று உபநிடதத்தில் உடலமைதியைப்பற்றித் தத்துவ நிலையில் உருவகித் திருப்பதை அடியொற்றி இது வந்துள்ளது.

பத்தை வென்றவனுக்கு அஞ்சை வெல்வது அரிதா? என்றது எளிதாக வென்று விடுவேன் என்னும் துணிவுதோன்ற வந்தது. ஐம்புலன்களும் ஆரத்துய்த்து நல்ல சுகியாயிருந்தவன் ஆதலால் அந்த நிலையை அறவே மாற்றித் தவநிலையில் விரைவில் வெற்றி பெறுவேன் என்று தன்மனவுறுதியை மந்திரிகளிடம் இவ்வாறு தெளிவாக அறிவுறுத்தினன்.

இதில், "அவுணர் தேர் பத்தும் வென்றுளேன்" என்று தன் சொந்த வாக்குமூலத்தாலேயே துலக்கியிருத்தலால் தசரதங்களையும் வென்றமையால் தசரதன் என்னும் பெயர் வந்தது என்னும் அவ்வுண்மை மிகவும் உறுதியாயது.

வீரப்புகழுடன் இவ்வாறு பேரும் சீரும் பெற்று யாரும் போற்ற அவனிபுரந்து இவ் அரசர்பிரான் அமர்ந்திருந்தான்.

தம் காவிய நாயகனை இராமனைத் தந்த தந்தை ஆதலால் அந்த நன்றியறிவுடன் மூந்துற இவனைக் குறித்துச் சிந்தை மகிழ்ந்து கம்பர் பன்னிரண்டு கவிகள்பாடியிருக்கின்றார். அதற்கு அரசியற் படலம் என்று பெயர். அரசின் இயல்பினை உரைத்தலால் அப்பெயர் எய்தியதென்க.

அரசு நிலை.

திருவும் தேசும் அறிவும் இன்ப நலங்களும் பெருகியிருந்த அயோத்திமா நகரத்தில் தசரதன் இனிது வீற்றிருந்து உலக முழுவதும் தனிச் செங்கோல் செலுத்தி அரசர்க்கு அரசனாய் அரசுபுரிந்துவந்தான். உருவில் மனிதனாயினும் அரிய தெய்வப் பெற்றி இவனிடம் மருவியிருந்தது. அதனால் தருமமூர்த்தி என்று இருநிலம் போற்ற இவன் இசைபெற்று நின்றான். அரசியல் துறைகளில் இவன் அதிநிபுணன். தன்கீழுள்ள அரசர்களையும், குடிகளையும் வரிசை யறிந்து நோக்கி ஆதரித்து ஆள்வதில் இவன் காட்டி வந்துள்ள சதுரப்பாடுகள் மறுபுலமெங்கணும் வியந்து போற்றப்பட்டுள்ளன. நீதி நெறிகளில் இவன் நிலைத்த நெஞ்சினன். அன்பு அடக்கம் ஈகை இரக்கம் வாய்மை சாந்தம் வீரம் முதலிய உயர்நலங்களெல்லாம் இவனிடம் இயல்பாக இனிதமர்ந்திருந்தன. அருள் நல முடையனாயினும் பகைவர்க்கு வெருள் தரு கூற்றம் போல் இவன் விளங்கி நின்றான். இவனது

அருந் திறலும், பெருந்தகவும், உள்ளப்பான்மையும், வள்ளற் குணங்களும், உரையாடும் திறனும், உருவின் கம்பீரத்தோற்ற மும், ஆட்சிமுறையும், கம்பர் மொழிகளால் ஒளிமிகப்பெற்றுக் காவியத்தில் எங்கும் இன்ப நிலையில் உலாவி நிற்கின்றன.

இந்தப் புவிச் சக்கரவர்த்தியைக் குறித்து நம் கவிச்சக்கர வர்த்தி கூறியுள்ள பாடல்களுள் இரண்டு ஈண்டு அடியில் வருகின் றன.

### தசரதன் தகைமை.

" தாய் ஒக்கும் அன்பில ; தவம் ஒக்கும் நலம் பயப்பின்;
சேய் ஒக்கும் முன்னின்றுஒரு செல்கதி யுய்க்கும் நீரால் ;
நோய்ஒக்கும் என்னின் மருந்துஒக்கும் ; நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னன்.

ஈய்ந்தே கடந்தான் இரப்போர் கடல் ; எண்ணில் நுண்ணூல்
ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர் ; வாளால்
காய்ந்தே கடந்தான் பகைவேலை ; கருத்துமுற்றத்
தோய்ந்தே கடந்தான் திருவிற்றொடர் போக பௌவம்''

(அரசியற் படலம் 4, 5)

தாய் தவம் சேய் மருந்து அறிவு என்னும் இனிய பொருள் களோடு தசரதனை ஒப்பவைத்து உயிர்களை அன்புடன் அவன் ஆதரித்துவந்துள்ள நிலையினை முன்கவியில் குறித்திருக்கிறார். பின் கவியில் அவனது கொடை, கல்வி, வீரம், இன்பச் சிறப்பு களை எவரும் இன்புற நன்கு விளக்கியிருக்கின்றார்.

அன்பு என்பது அகத்தக் கரணத்தில் நிகழுகின்ற உரிமை யான ஒரு பிரியவுணர்ச்சி. இந்தப் பிரியம் தன் மனைவியின்மீது ஓர் ஆடவனுக்கு மண்டி யெழுங்கால் காதல் என்று பேர் பெறும்; சகோதரர்களிடம் நிகழுங்கால் வாஞ்சை எனவரும் ; நண்பர் களிடம் உலாவும் பொழுது நேசம் என நிலவும்; மேலோர் பாலும் கடவுளிடத்தும் கனியுங்கால் பத்தி என்று விளங்கும் ; எளிய பிராணிகளிடம் இறங்கும் பொழுது அருள் என அமை யும்; இதனால் அன்பின் பண்பு நிலைகள் யாவும் நன்கு புலனும். உள்ளத்தின் கனிவாகிய இது மனித வாழ்க்கையில் மிகவும் புனிதமுடையது. மனிதனை இனியனாகச் செய்து என்றும் இன்ப நிலையிலுய்த்தலால் அன்பு பிறவிப்பயனாகப் பேணப்பட் டுள்ளது. " அன்பே சிவம்'' என்றார் திருமூலநாயனார்.

"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போ டியைந்த தொடர்பு." (குறள் 73)

எனவரும் இதனால் அரிய மனிதப் பிறப்பை எடுத்தது, எல்லா வுயிர்களுக்கும் இனிய அன்பு செய்யவே; அங்ஙனம் செய்யாவழிப் பெறலரும் பேறாகப் பெற்றுவந்துள்ள இப்பிறப்பு வீணேயாம் என்பது பெற்றாம். ஆகவே அன்பின் பெருமையும் ஆருயிர்க்கு ஓருயிராய் அது அமைந்திருக்கும் உரிமையும் நன்கு தெளிவாம்.

இங்ஙனம் சிறந்த உயிர்ப்பண்பாய் உயர்ந்திருக்கின்ற இவ் வுள்ளுருக்கம் பிள்ளைப் பேறுடைய தாயர்களிடம் இயல்பாகவே பூரணமாய் நிறைந்து புனிதமுடன் பொங்கியிருத்தலால் அன் புரிமைக்கு எங்கும் அவர் தலை சிறந்து நிற்கின்றார்.

"பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து" (திருவாசகம்)

எனவரும் இதில் கடவுளைப்போன்புத் தாயாக மணிவாசகப் பெருந்தகை பேசியிருக்கிறார். "தாயே அனைய கருணையான்" (இராம, சுந்தர-பிணி 127) என இராமனை எண்ணி யிருக்கிறார். எனவே தாயின் உயர்வும் இயல்பும் இவற்றால் உணரலாகும்.

பிறந்த மனிதர் எல்லாரும் தாயாது ஆர்வ நலங்களை நன்கு உணர்ந்திருப்பர் ஆதலால் அன்பு நிலைக்கு உரிமையாக அவரை உரைக்கும்பொழுது எவரும் உவந்து இன்புறுகின்றனர். இங் ஙனம் அனுபவசாரமான இன்ப உவமையைக் கம்பர் நமக்கு இங்கே தந்திருக்கிறார்.

தன்னால் பாதுகாக்கப்படுகின்ற குடிசனங்களிடத்தே தச ரதன் வைத்துள்ள வாஞ்சையை விளக்குதற்குத் தாயின் அன்பை எடுத்துக்காட்டி அவனது பரிபாலனத்தின் பரிபூரண நிலையைக் கவி உணர்த்தியிருக்கும் திறம் உவகைக்கு இடமாயுள்ளது.

தான் பெற்ற பிள்ளையை ஓர் உத்தமத்தாய் எவ்வளவு உரி மையுடன் உவந்து போற்றி வருவாளோ அவ்வாறு கோசல நாட்டு மக்களெல்லாரையும் தசரதன் பேணி வந்தான் என்ப தாம். இராமனுக்குத் தந்தை உலகிற்குத் தாயாய் நின்று தண் ணளி புரிந்தான் என்பது குறிப்பு.

நாட்டின் பராமரிப்பிற்குத் தாயின் பாராட்டைப் பிறரும் உவமை குறித்திருக்கின்றனர். சில அடியில் வருவன :

"தாயில் தூவாக் குழவி போல
ஓவாது கூஉம் நின் உடற்றியோர் நாடே." (புறம் 4)

"நீயொழி காலை நின்னா டெல்லாம்
தாயொழி குழவி போலக் கூஉம்
துயர்நிலை உலகம் காத்தல் இன்றி நீ
உயர்நிலை உலகம் வேட்டனை யாயின்." (மணிமேகலை 25)

"குழவி கொள்வாரிற் குடிபுறந் தந்து" (பதிற்றுப்பத்து 6)

"இக் கு நாட நிலை உல தாயில மடியக
குழவி கொள்பவரின் இகழாது ஓம்பி" (பெருங்கதை, 4-10)

தாய் குழந்தையைக் காப்பதுபோல் அரசன் நாட்டைக் காக்கின்றான் அவன் அன்புடன் காவாதாயின், தாயிழந்தகுழவிபோல் நாடு நோயுழந்து வருந்தும் என இவை உணர்த்தியுள்ளனகாண்க.

பரணர், சாத்தனார், காக்கைபாடினியார், கொங்குவேளிர் என்னும் பழம் பெரும் புலவர்கள் அரசைத் தாயோடு ஒப்ப வைத்து முறையே இங்ஙனம் உரைத்திருக்கின்றனர்.

"காவல் குழவிகொள்பவரின் ஓம்பு மதி" எனச் சேரவிரும் பொறை என்னும் பேரரசனை நோக்கி நரிவெரூஉத்தலையார் அருளியிருக்கிறார். காவல்=காக்கப்படும் தேசத்தை.

பண்டைக்காலம் தொட்டே சங்கத்துச் சான்றோர் இந் நாட்டில் கையாண்டு வந்துள்ள அரசியல் கருத்தைக் கம்பர் இங்கே அன்போடு கலந்து தசரதனுக்குத் தந்திருக்கிறார்.

மேலே வந்துள்ள பழைய குறிப்புக்களால் பண்டு இந் நாடிருந்த நிலைமையும், அதனை அரசர் ஆண்டுவந்த தலைமையும், அவர்க்குப் புலவர் உழையிருந்து உறுதிமொழிகள் புகன்று உதவி நின்ற தகைமையும் நன்கு புலனும். கவிகளின் வாக்கு மூலங்கள் அவரவர் இருந்த கால நிலைமையை ஞாலம் அறியக்காட்டி யருளி யின்றன.

ஒரு குழந்தைக்குத் தாய் எப்படி ஆதரவோ அப்படி ஒரு நாட்டுக்கு அரசன் என்பது இதில் உய்த்துணரவுள்ளது. உரிமை

யான அரசு இல்லாத நாடு, "தாயிலாக் குழவி போலச் சாதுயர் எய்துகின்றேன்." (சீவகசிந்தாமணி) என்றபடி வெய்துயிர்த் துழலும் என்பது பெற்றும்.

தீது யாதும் சேராமல் கண்ணும் கருத்துமாய் நின்று குடிகளைப் பேரன்புடன் தசரதன் பாதுகாத்து வந்தான் என்பார், "அன்பில், தாய் ஒக்கும்" என்றார். இதனால் அவனது உள்ளப் பண்பும், உருக்கமும், உதவி நிலையும் உணர வந்தன.

அடுத்துத் தவத்தைத் தொடுத்தார். முன்னையதினும் இது நுணுகியது. தாய் என்றால் யாருக்கும் தெளிவாகத் தெரியும்; தவம் அவ்வாறு தெரியாது. தவம் என்றால் என்ன? மனம் மொழி மெய்கள் தீயவழிகளில் செல்லாமல் அடக்கி நல்ல நெறியில் நின்று எல்லா உயிர்கட்கும் இதம்புரிந்துவருவது எதுவோ அது தவம் என்க.

"உயிர்நோய்செய் யாமை; உறுநோய் மறத்தல்;
செயிர்நோய் பிறர்கட் செய்யாமை—செயிர்நோய்
விழைவு வெகுளி இவைவிடுவ னாயின்
இழவன் றினிது தவம்." (சிறுபஞ்ச மூலம்)

"உற்றநோய் நோன்றல, உயிர்க்குறுகண் செய்யாமை,
அற்றே தவத்திற்கு உரு" (குறள் 261)

தவம் இன்னது என்பது இவற்றால் இனிது புலனும்.

இத்தவம் உயிர்க்கு உறுதியாய் ஒளிமிகச் செய்யும்.

இதனை இழந்திருக்கும் உயிர்கள் அவநிலையில்இழிந்துழலும். மனிதன் அடைகின்ற எல்லா இன்ப நலங்களுக்கும் தவமே மூல காரணமாயுள்ளது. உள்ளூற இது இல்லையாயின் வெளியே எவ்வளவு அவாவி முயன்றாலும் நல்ல பயன்கள் நாடியபடி கிடையா.

"உய்த்தொன்றி ஏர்தந்து உழவுழுது ஆற்றவும்
வித்தின்றிப் பைங்கூழ் விளைக்குறல் எனஒக்கும்?
மெய்த்தவம் இலலான் பொருளொடு போகங்கட்கு
எய்த்துழந்தே தான் இடர்ப்படுமாறே." (வளையாபதி)

விளைவுக்கு வித்தைப்போல் பொருள் போகங்களுக்குத்தவம் ஆதாரமாயுள்ளது; அது இல்லாத இடத்தில் நல்ல சுக போகங்கள் உளவாகா என இது உணர்த்தி நிற்றல் காண்க.

" தவத்தளவே ஆகுமாம் தான் பெற்ற செல்வம்" (ஔவையார்)

" வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்." (குறள் 265)

விரும்பியவற்றை விரும்பியபடியே ஒருவன் அடையவேண்டுமா யின் அவன் தவம் செய்திருக்கவேண்டும்; தவமே செல்வ நலங் களெல்லாவற்றையும் ஒருங்கே நல்க வல்லது என்று இவற்றுள் சொல்லியிருத்தலறிக.

உயிர்களுக்குத் தவம் எவ்வாறு நலம் பயந்து வருகின்றதோ அவ்வாறே குடிகளுக்குத் தசரதன் இதம்புரிந்து வந்தான் என் பார், " நலம் பயப்பில் தவம் ஒக்கும்" என்றார்.

பரிபாலன முறையில் தாயும், உபகார நிலையில் தவமும் ஒப் பாம் என்க. தாய் என்றவுடனே அன்புரிமையினால் தாம் தெரி யாமல் யாருக்கும் அளவுமீறி உதவி விடுவனோ? என எண்ண நேரும் ஆதலால் அதனைப் பரிகரிக்கத் தவம் குறித்தார்.

உறவினன், பழகினவன் எனவாரம்பற்றி யாதும் செய்யான்; எவராயினும் அவரவரது தகுதியளவறிந்தே அரசுரிமையில் அவன் தயவு புரிவன் என்க.

தாம் செய்த தவத்தின் அளவே எவர்க்கும் பயன் விளையும்; அதுபோல் குடிகளின் தகுதியளவே அரசிடம் நயனடைய முடி யும் என்பதாம். எனவே யாரும் அவனை ஏமாற்றி இதம்பெற முடியாதென்பது பெற்றாம். பெறவே அவனது சதுரப்பாடும் தெய்வப்பெற்றியும் வரிசையறிந்து செய்யும் திறனும் அரசு புரியு முறையும் நடுவு நிலைமையும் நன்கு புலனாம்.

சேய் என்றது இம்மை மறுமை என்னும் இருமையினும் நன்மை செய்யும் நயம் கருதி

" எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின் " (குறள் 61)

என்ற இதனால் தக்க மகவைப்பெற்றவர் அடையும் பெரும் பேறுகள் அறியலாகும். பிறங்கா=இல்லாத.

இங்கே பாதொரு குறைவுமின்றிப் பெற்றோரை ஆதரித்து, இறந்த பின் அவருயிர் சிறந்த பதவி அடையும்படி பிறந்த குல

மகன் பேணிச் செய்வன்; அவ்வாறே தன் குடிகள் இகபரலோகங்களில் உயர் சுகிகளாயிருக்கும்படி பொருள் அறங்களை அருளி அரசன் பேணி வந்தான் என்பார், "கதி உய்க்கும் தீரால் சேய் ஒக்கும்" என்றார். ஒரு கோமகனுடைய தந்தையைக் குடிகளுக்குத் தாய் சேய் என்று குறித்து அவனது உபகார நிலையை உளமிக வியப்ப இங்ஙனம் உணர்த்தியிருக்கிறார்.

குடிகள் யாதனும் துயரடைய உடனே அதனை ஓர்ந்து நீக்கி அரசன் விரைந்து இதம்புரிவான் என்பார், "நோய் ஒக்கும் என்னின் மருந்து ஒக்கும்" என்றார். துயரக்கூறுகள் அங்கு யாரிடமும் நேரவென்பது ஒக்கும் என்னின் என்ற ஐயக்குறிப்பால் அறியலாகும்.

பெரியகலைஞானிகளுக்கும் அரிய மதியூகிகளுக்கும் எட்டாத அதிநுட்பமான எத்தகைய தத்துவ நுண்பொருள்களையும் மிகவும் எளிதாகத் தெளிவிப்பான் என்பார், "நுணங்கு கேள்வி ஆயப்புகுங்கால் அறிவு ஒக்கும்" என்றார்.

ஒப்பன் என்று பால் விளங்கக்கூறுமல் மேல் எங்கும் ஒக்கும் என்றது அவ்வத்துறையில் அதனதன் மயமாய் நின்று அவன் செயலாற்றியுள்ள இயல்புணர என்க. இவ்வுதவி நிலை சிலர்க்கு மட்டுமன்று; அந்நாட்டிலுள்ள எல்லார்க்கும் ஒருசேர உரிமையுடன் நிகழ்ந்து வந்தது என்பது "எவர்க்கும்" என்றதனால்

இறுதியில் கூறிய அறிவுவமை அதிசயமுடையது. அறிவு, வாலறிவு நூலறிவு என இருவகைப்படும். முன்னது தெய்வத்தன்மையது; பின்னது மனித இயல்பினது. அது பேரறிவு; இது சிற்றறிவு என்க. மனிதனுடைய இச் சிற்றறிவு புனிதமுடையதாய் இனிது வளரின் அப்பேரறிவின் ஒளியை ஓரளவு பெறும். அங்ஙனம் பெற்ற அறிவுதான் இந்நிலவுலகில் தலைமையுடையதாய் நிலவி நிற்கும். அவ்வுயரறிவு அருள் வயத்தரான அருந்தவர்களிடமே சார்ந்து விளங்கும். விளங்கவே,

"கற்றோர் அறியா அறிவினர்; கற்றோர்க்குத்
தாம்வரம்பாகிய தலைமையர்," (திருமுருகாற்றுப்படை)

என அறிவுலகில் அவர் ஒளிமிகப்பெறுவர். இத்தகைய அரும் பெறலறிவு தசரதனிடம் இனிது அமைந்திருந்தமையால் கலை யறிவாளருள் அவன் தலைவனாய் நின்றான்.

நுணங்கு கேள்வி என்றதனால் அரசியல் ஆலோசனைகள் அல்ல ; அதிநுட்பமான கல்வி ஆராய்ச்சியே என்பது பெற்றாம். பல்வேறு வகைப்பட்ட நூல்களையெல்லாம் ஒருங்கே கற்ற பெரும் புலவர்களும் அறிதற்கு அரிய நுண்ணிய கருத்துக்களை மன்னன் எளிதில் உணர்த்திவிடுவான் என்பது அறிவு ஒக்கும் என்றதனால் அறியவந்தது. "அறிவுடையார் எல்லாம் உடையார்" (குறள்430) என்றமையால் அறிவின் அருமையும் பெருமையும் நன்கு தெளிவாம்.

கலை நுட்பமும் மதி நுட்பமும் ஒருங்கே வாய்ந்த அதிமதி நூகி என அரசைக் குறித்திருக்கும் அழகைப் பார்க்க.

"வேந்தற்கு அறிவெனும் அமைச்சன் சொன்னான்" (சிந்தாமணி 232) என்புழி அறிவை மந்திரியாகக் குறித்திருக்கிறார். "அறிவொக்கும் எவர்க்கும் அன்னான்" என்பது இந்த அடி யோசையை நிறைபொத்திருக்கின்றது.

அடுத்த கவியில் அரசனது கொடைமாட்சி, கல்விக்காட்சி, வீரவெற்றி, இன்பநுகர்ச்சிகளை இனிது விளக்கியிருக்கிறார். மேற்குறித்தவை யாவும் அவற்றின் பூரண எல்லையைப் பொருந்தி யுள்ளன என்பதை உவமையால் உய்த்துணரவைத்தார்.

இரப்போரைக் கடல் என்றதனால் அவனது கொடையின் எல்லையற்ற நிலைமை எளிது புலனாம். வரையாது கொடுக்கும் வள்ளல் என்னும் உரையினும் இது உள்ளம் வியப்ப உயர்வோங்கி யுள்ளது. அவன் தானம் வானம் புகழ வளர்ந்து நிற்கின்றதென் பதாம்

உலகிலுள்ள நான்கு பெருங்கடல்களையும் ஒருங்கே கடந்துள்ளான் என அவனது அரியபெரிய தன்மைகளை அதிசயமுற உரைத்திருக்கிறார். இங்கே பாராட்டிக் கூறியுள்ளகுணநலங்கள் பேரரசுக்குரிய பெருமிதமுடையன.

"அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற்கு இயல்பு." (குறள் 382.)

என இறைமாட்சிகளை வள்ளுவப் பெருமான் உரை செய்திருக்கிறார். இதில் குறித்த ஈகை முதலியன மேற்கவியில் வந்துள்ளன காண்க.

ஈதல், ஆய்தல், காய்தல், தோய்தல்கள் உதவி முதலியவற்றின் உயர்நிலைகளை உவகையுற உணர்த்தியுள்ளன.

கடல், அளக்கர், வேலை, பௌவம் என்பன உவரி ஒன்றையே குறித்துவரும் ஒருபொருட் சொற்கள்; கடலுக்குரிய பெயர் வகைகள் தெரிய இங்ஙனம் மொழிவிளக்கம் செய்துள்ளார். உலக வழக்கில் எல்லார்க்கும் எளிதாகத் தெரிகின்ற கடலை முதலில் வைத்து அதனைத் தொடர்ந்து இனிதறியும்படி அடைவுசெய்திருக்கிறார். முன்னர், "ஆறுபாய் அரவம்" என்ற கவியில் ஓசைச் சொற்களில் ஆசை காட்டினர்; இங்கே கடலின் பெயரைக் கவனிக்கச் செய்கின்றார். காரணம் காண்க.

கடல், கடத்தற்கு அரிய நீர் நிலைகொண்டது.
அளக்கர், அளக்கமுடியாத அருமை அமைந்தது.
வேலை, வெல்லமுடியாத எல்லையுடையது.
பௌவம், பூமியைச் சூழ்ந்து புனைந்து நிற்பது.

ஈகை உயிர்க்கு உறுதியாய் இம்மையில் புகழும் மறுமையில் பேரின்பமும் பயத்தலான் முதலிலும், போகம் உடலளவில் உரிமையாய் இங்கே இனிமை பயந்துள்ளமையான் இறுதியிலும் வைத்தார். இடையிலுள்ள அறிவும் வீரமும் அரசின் உயரியல்பாய் நின்று உள்ளும் புறமும் ஒளிசெய்துள்ளன.

குடிகளைப் பாதுகாத்து எவ்வுயிர்க்கும் இனியனாய் நின்ற நிலைமையை முதலில் உரைத்து, வண்மை முதலிய குணநலங்களை இரண்டாவது கவியில் குறித்திருக்கிறார்.

இங்கே சிந்தாமணிக்கவி ஒன்று சிந்திக்கவுரியது. அடியில் வருகின்றது:

" வண்கையால்கலி மாற்றி, வைவேலினல்
திண்டிறற் றெவ்வர் தேர்த்தொகை மாற்றினன்;
நுண்கலைக் கிடனாய்த், திருமாமகள்
கண்களுக்கு இடனாம் கடி மார்பனே."

(சீவக சிந்தாமணி 158.)

இது, சச்சந்தன் என்னும் அரசனைக் குறித்துக் கூறியது.

இதை முழுவதும் அடிபொற்றியே "ஈந்தே கடந்தான்" என்னும் கவியைக் கம்பர் பாடியிருக்கிறார். இதில் வந்துள்ள வண்மை, படைவெற்றி, கலை ஆராய்ச்சி, திருவின் போகங்கள் சிறிது உருமாறி அதில் வந்திருக்கின்றன. இங்கே குறித்த கவி அங்கே இரப்போர் என எழுந்தது; நுண்கலை, நண்ணூல் என நின்றது; வேல், வாள் ஆயது; திருமாமகள், திருவின் போகம் என வந்தது.

இவற்றோடு பாத்திர ஒற்றுமையும் இதில் கலந்திருக்கிறது. என்னை? தம் காவியத் தலைவனாகிய சீவகன் தந்தையைத் திருத்தக்கதேவர் கூறியபடியே தம் கதா நாதனான இராமன் தந்தையைக் கம்பர் இங்ஙனம் கூறியிருக்கிறார் என்க. எனினும், நானு கடல்களை இடைமடுத்துத் தசாதனுடைய கொடை வீரம் முதலிய குணநலங்களை அதிகம்பீரமாகக் காட்டியிருக்கிறார். இரு கவிகளையும் எதிரெதிர் நோக்கி உயர் நயம் காண்க.

எவ்வளவு செல்வங்கள் கைநிறைந்திருந்தாலும் போகங்களை அனுபவிக்தற்குத் தனியே ஒரு யோகம் வேண்டும். கோடி தொகுத்தாலும் துய்க்கமுடியாமல் வைத்திழப்போரையும் பார்க்கின்றோம். செல்வத்தின் நல்ல பலன்கள் ஈதலும் அனுபவித்தலுமேயாம். ஈதல் உயிர்க்கு உறுதியாய் இருமையும் இன்பம் தரும். அனுபவம், உடலளவில் நின்று இம்மையிலேயே கழிந்து போம். ஈகை பிறவுயிர்களுக்கு உதவியைச் செய்கின்றமையான் அதனைச் செய்த உயிர் திவ்விய நிலையை அடைகின்றது. எதிர் பாராதபடி திடீரென்று ஒருவன் உயர்பதவியடையின், "கொடுத்து வைத்த புண்ணியவான்" என உலகம் அவனை எடுத்துப் புகழ்கின்றது. இப் பழமொழியில் கொடைப் பயன் தொனித்திருக்கும் நிலைமையை நோக்கவேண்டும். புகழ் புண்ணியங்களை விளைத்து ஆன்ம கோடிகளுக்கு இவ்வாறு உயர் பயனை உதவிவருதலால் "ஈதல், உயிர்க்கு ஊதியம்" என மேலோராலும் நூலோராலும் எண்ணப்பெற்றது.

"ஈதற்குச் செய்க பொருளை" (திரிகடுகம் 90.)

என்றதனால் பொருளீட்டத்தின் தலைமையான குறிக்கோள் இனிது புலனும். இங்ஙனம் உயிருதியமாயுயர்ந்துள்ளமையான் ஈகையை முன் வைத்துப் பின் தேகபோகங்கள் எண்ண வந்தன.

உலகபோகங்களைத் தோயும் தோறும் கைப்பொருள் தேய நேரும். அங்ஙனம் தேய்ந்துபோயினும் ஆசை ஓய்ந்துபோகாமல் கடன் கொண்டும் சுகங்களைத் துய்க்கத் துணிவர்.

"கடன்வாங்கிக் கார் வாங்கிக் கண்டவர்கள் களிவாங்க
உடன்வாங்கிய பொருள்நீங்க உயிரேங்கி உழலகின்றார்"

என்றபடி நிகழ்வனவெல்லாம் திருவிழந்த போகங்கள். தசரதன் கருவிலேயே திருவுடையனாதலால் அவனது போகங்கள் பெருமிதத்தோடு பெருகித் தனியோகமுடையதாய்த் தழைத்திருந்தன. அநுபவ நலங்கள் அதிசய நிலையிலுள்ளன.

ஐம்புல இன்பங்களோடு உயர்ந்தஅணி, சிறந்தஆடை, யானை இரதம் குதிரை சிவிகை முதலியன வாய்ந்து புவியரசரெல்லாரும் துவிகையராய் நின்று அடிதொழுதேத்த முடிபுனைந்தமர்ந்து அரிய இனப நலன்கள் யாவும் நெடிது நுகர்ந்து வந்தான் ஆதலால்,"திருவின் தொடர் போகம்" என்று அது பெருமை பெற்று நின்றது. அவனது போகநுகர்ச்சியில் திருமகள் பெருமகிழ்ச்சியடைந்து பெருகிவந்தாள் என்பதாம். ஆகவே அவனுடைய பாக்கிய நிலைமையும், போக்கிய மேன்மையும் நன்கு அறியலாகும்.

போகம் என்றால் என்ன? அது எப்படி இருக்கும்? எனின், மாதிரிக்குச்சில இங்கே காட்டுகின்றேன். அடியில் வருவன காண்க.

"பழுதின்று உயர்ந்த எழுநிலை மாடத்தும்
செந்தாது உதிர்ந்த நந்தன வனத்தும்
தென்றல் இயங்கும் முன்றில் அகத்தும்
தண்டாச் சித்திர மண்டப மருங்கினும
பூவிரி தரங்க வாவிக் கரையினும்
வேண்டுழி வேண்டுழி ஆண்டு ஆண்டிட்ட
மருப்பின் இயன்ற வாளரி சுமந்த
விருப்புறு கட்டில மீமிசைப் படுத்த
ஐவகை அமளி அணைமேற் பொங்கத்
தண்மலர் கமழும் வெண்மடி விரித்துப்
பட்டினுட் பெய்த பதநுண் பஞ்சின்
நெட்டணை அருகாக் கொட்டைகள் பரப்பிப்
பாயல மீது பரிபுரம் மிழற்றச்
சாயல அன்னத்தின் தளர் நடை பயிற்றிப்
பொற்றோரணத்தைச் சுற்றிய துகிலென

அம்மென் துறங்கின ஒம்மென் கலிங்கம்
கண்ணும் மனமும் கவற்றப பண்வர
இரங்குமணி மேகலை மருங்கிற் கிடப்ப
ஆடர வல்குல் அரும்பெறல் நுசுப்பு
வாடவிங்கிய வனமுலை கதிர்ப்ப
அணியியல் கழுகை அலங்கரித்ததுபோல
மணியியல் ஆரம் கதிர்விரித் தொளிர்தர
பணிவளை தாங்கி அணிகெழு மென்தோள்
வரித்த சாந்தின்மிசை விரித்துமீதிட்ட
உத்தரீயப்பட் டொருபால் ஒளிர் தர
வள்ளை வாட்டிய ஒள்ளிரு காதொடு
பவளத் தருகாத் தரளம் நிரைத்தாங்கு
ஒழுகி நீண்ட குமிழ் ஒன்று பதித்துக்
காமன் வேலும் காம பாணமும்
ஆக காலமும் அனைத்துமிட் டமைத்து
இரண்டு நாட்டமும் புரண்டு கடை மிளிர்தர
மதியென மாசறு வதனம் விளங்கப
புதுவிரை மலங்கல குழல்மிசைப் பொலியும்
அஞ்சொல மடந்தையர் ஆகம் தோய்ந்தும்,
சின்னம் பரப்பிய பொன்னின் கலத்தின்
அறுசுவை அடிசில் வறிதினிதருந்தாது
ஆடினர்க் கென்றும் பாடினர்க் கென்றும்
வாடினர்க் கென்றும் வரையாது கொடுத்தும்,
பூசுவன பூசியும், புனைவன புனைந்தும்,
தாசுநல்லன தொடையிற் சேர்த்தியும்,
ஐந்து புலன்களும் ஆர ஆர்ந்து
மைந்தரும் ஒக்கலும் மகிழ மனமகிழ்ந்து
இவ்வகை இருந்தோம்." (பட்டணத்துப்பிள்ளையார்)

இதில் குறித்திருக்கும் போக நிலைகளைக் கூர்ந்து பார்க்க. இவ்வகையான இன்பநலங்கள் யாவும் எண்ணியவாறெல்லாம் இனிது நுகர்ந்து அரச திருவுடன் சிறந்து பரமசுகியாய்த் தசரதன் இருந்துள்ளமையைத் "தோய்ந்தே" எனவரும் இறுதியடியில் நாம் பெரிதும் அறிந்து மகிழ்கின்றோம்.

இங்ஙனம் அன்பு முதலிய குண நலங்களும் இன்ப சுகங்களும் மன்னனிடம் மருவியிருந்த மாட்சிகளை முன்னுற வுரைத்துப் பின்னர் அவனது ஆட்சியின் நலன்களை விளக்குகின்றார்.

ஆட்சி நிலை.

"வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசியர்
உள்ளமும் ஒருவழி ஓட நின்றவன்
தள்ளரும் பெரும்புகழ்த் தயரதப் பெயர்
வள்ளலவன் துறையின் மன்னர் மன்னனே." (அரசியல் 6)

தசரதனது ஆட்சிக் காலத்தில் அவன் நாடிருந்த நிலைமையைக் கூற வந்தவர் இப்படிப் பாடியிருக்கிறார். இப் பாட்டால் அந்நாட்டு நலன் என்ன புலனாகின்றது? எண்ணிப் பாருங்கள்! கருத்துக்களை விளக்குவதில் கம்பர் கைக்கொண்டுள்ள விசித்திர வகைகள் பல. அவற்றுள் இது ஒன்று.

வெள்ளம் முதலியவற்றில் நம் உள்ளம் பதிந்து உணருமாறு இங்கே வைக்கியிருக்கின்றார். ஊன்றி யுணரவேண்டும்.

வெள்ளம் ஒருவழி ஓட,
பறவை ஒருவழி ஓட,
விலங்கு ஒருவழி ஓட,
வேசியர் உள்ளம் ஒருவழி ஓட, நின்றவன்.

என வினைமுடிபுகளைத் தனித்தனியே பிரித்துக் குறித்துக்கொள்க. உம்மை கொடுத்து ஒருவழியே கவியும் இதில் ஓடியிருக்கிறார்.

வெள்ளம் என்றதனால் எல்லா நலங்களுக்கும் மூலகாரணமாயுள்ள மழைவளம் தெரியவந்தது. அங்கே மாதம் மும்மாரி பொழிந்து வந்தமையால் யாண்டும் வற்றுமலும் நீண்டு மூற்றுமலும் சரயு முதலிய நதிகளில் என்றும் ஒரு படியே நிரந்தர நிதானமாய் நீர் ஓடிக்கொண்டிருந்தது; அந்த நீரோட்டத்தை இந்தவாறு முந்துற உரைத்தருளினர்.

பருவ காலங்களில் மழை பெய்யாது ஒழியினும், அதிகமாகப் பொழியினும் நாட்டுக்கு நலமாகாது ஆதலால் அக் கெடு நிலை அங்கே இல்லை என்பதை இத்தொடர் மொழி விளக்கியுள்ளது. உரியபொழுது பிரியமான மழை பெய்யும் என்பதாம்.

பருவம் அறிந்து உரிமையுடன் இங்ஙனம் மழை பொழிந்தது அரசனது செங்கோல் நிலைமையைத் தெளிவுறுத்தியது.

"* இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு." (குறள் 545)

* பருவ மழையும், பெருவிளைவும், செங்கோல் மன்னன் நாட்டில் ஒருங்கே உளவாம் என்பதாம். இயல்பு=உத்தம அரசுக்குரிய உயர் தன்மை. உளி=உடன். பெயல்=மழை.

என்றது பொய்யாமொழி. எய்யா விளைவும், பொய்யா மழையும் அரச நீதியின் பலன்களாம் என்பதை இதனால் அறிந்தோம். நீதி மன்னவனுக்கு வானும் நிலனும் ஒருங்கே வளஞ் சுரந்தருளும் என்பது கருத்து.

"[illegible]
[illegible] பிறழினும்,
வெள்ளம் மாறாது விளையுள் பெருக
புள்ளிமிழ்ந் தொலிக்கும் இசையே" (மதுரைக்காஞ்சி)

நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னன் ஆண்டு வருங் காலத்தில் இந்நாடிருந்த நிலைமையைக் கூறியபடியிது. வானம் பொய்ப்பினும் தானம் பொய்யாமல் கோன் நீதி குடிகொண்டிருந்ததென்பதாம். வெள்ளமும், பறவையும் இதில் வந்துள்ளமை காண்க. நலமுடைய அரசால் வளம் மிகுந்திருந்ததென்க.

"மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
தென்றிசை மருங்கின் வெள்ளி ஓடினும்
வயலகம் நிறையப் புதற்பூ மலர
மனைத்தலை மகவை யீன்ற அமர்க்கண்
ஆமா நெடுநிரை நன்புல் ஆரக்
கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கிப்
பெயல் பிழைப் பறியாப் புன்புலத்ததுவே
ஆய்தொடி அரிவையர் தந்தை நாடே." (புறம் 117)

இது, பாரியைக் குறித்துக் கபிலர் பாடியது.

தூமகேது முதலிய தீய கோட்கள் ஆகாயத்தே தோன்றினும், வடதிசை வெள்ளி நிலைமாறித் தென்திசை ஓடினும், மழை மாறாது பெய்ய, வயல்கள் நிறைந்து விளைய, புதல்கள் எங்கணும் பூக்கள் மலர, நாடு வளம் பெற்று நல்லோர் பல்கியிருந்தனர்; அதற்குக் காரணம் அவனது செங்கோலே என்பதாம். இனிய புல்லை நிறைய மேய்ந்து பசுக்கள் பெருகி நின்றன என்றதனால் இதன் கண் விலங்கு வந்தது காண்க.

அரசன் நீதிமானாய் நின்று செங்கோல் செலுத்திவரின் அவன் நாடு வெள்ளம் குன்றாது விளங்கி நிற்கும்; புள்ளும்

விலங்கும் கூடப் புன்மை தீர்ந்து நன்மை சார்ந்து அங்கே உள்ளுவந்து வாழும் என்பது இவற்றால் அறிய வந்தது.

"செந்தீ முதல்வர் அறம்நினைந்து வாழ்தலும்,
வெஞ்சின வேந்தன் முறைநெறியிற் சேர்தலும்,
பெண்பால் கொழுநன் வழிச்செலவும் இம்மூன்றும்
திங்கள்மும் மாரிக்கு வித்து." (திரிகடுகம் 98)

மழைக்குரிய மூலகாரணங்கள் மூன்றை இதன்கண் காண்க.

மன்னவன் கோலுக்கும் மழைக்கும் என்ன சம்பந்தம்? எனின், அவன் நெறிமுறை தவறாமல் நடுவு நிலைமையுடன் குடிகளைக் காத்துவரின் அவரனைவரும் குணநலமுடையராய் இனிது ஒழுகிவருவர்; வரவே அறம்வளரும்; அதுவளர அங்கே தரும தேவதை குடிகொண்டு விளங்கும்; விளங்கவே வானம் சுரந்து வழங்க இனிய பல வளங்களும் நிறைந்து புண்ணிய பூமியாய் அந்நாடு பொலிந்து திகழும் என்க.

"அறம் புரிந்தன்ன செங்கோல நாட்டத்து
முறைவேண்டு பொழுதிற் பதன்எளி யோர்ஈண்டு
உறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே." (புறம் 35)

நீதி மன்னர் விரும்பியபொழுது மழை ஈண்டு விரைந்து பெய்யும் என இது உணர்த்தி நிற்றலறிக. பதன்=காட்சி.

"மழையின்றி மாநிலத்தார்க்கு இல்லை; மழையும்
தவமிலார் இல்வழி இல்லை; தவமும்
அரசியல் இல்வழி இல்லை." (நான்மணிக்கடிகை 48)

எனவரும் இதனால் அரசுக்கும் மழைக்கும் உள்ள இயல்பு புலனும்.

மண்ணின் தலைவன் முறைபுரிந்துவரின் விண்ணும் உறை புரிந்தருளும் என்ற இதனால் அவன் முறை மாறின், அது பெயல் மாறும் என்பது பெற்றும்.

"முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்." (குறள் 559)

அரசன் கொடுங்கோலனாய் நீதிமாறி நடந்தால், வானம் கடுங் கோடையாய் நீர்மாறி நிற்கும் என இது உணர்த்தியுள்ளமை

காண்க. உறை—மழைத்துளி. உறை கோடி என்றது பருவ காலங்களில் பெய்யாமல் மழை மாறிப்போம் என்பதாம்.

உலகிற்கும் அரசிற்கும் உள்ள உறவும் பொறுப்பும் இதனால் நன்கு உணரலாகும். அவன் செங்கோலன் ஆனால் இங்கே எல்லா வளங்களும் செழித்து விளங்கும்; வெங்கோலனாயின் உயிர்கள் பல வகையிலும் படுதுயரங்கள் அடையும் என்பது கருத்து.

"கோன்நிலை திரிந்திடிற், கோள்நிலை திரியும்;
கோள்நிலை திரிந்திடின், மாரிவறங்கூரும்;
மாரிவறங் கூரின், மன்னுயிர் இல்லை;
மன்னுயிர் எல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயிர் என்னும் தகுதியின் றாகும்." (மணிமேகலை)

"கோணிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கள் மிஞ்சி
நீணிலை மாரியின்றி விளைவஃகிப் பசியும் நீடிப்
பூணுலை மகளிர் பொற்பிற் கற்பழிந்து அறங்கள் மாறி
ஆணையில் வழுக்குக் கெடாம் அரசுகோல் கோடின் என்றான்."
(சிவகசிந்தாமணி)

"திறந்தெரி பரந்த வெம்மை நெடுங்கடல் சுடுவதாயின்
இறந்துபோம் அடங்கு நீர்வாழ் உயிர்க்கிடர் எல்லையுண்டோ?
மறந்தெழுந்து அடங்கா செவ்வேல் மன்னவன் வெய்யனாயின்
அறந்தெரிந் தயங்கு வையம் அருமபடர் உழக்குமன்றே."
(சூளாமணி)

"வேந்தன் முறை திறம்பின் வேத விதி திறம்பும்;
ஏந்திழையார் தம்கற்பும் இல்லறமும் நில்லாவாம்;
மாந்தர் பசியால் உழங்க, மழைவறந்து,
பாரதன் முழுதுடைந்து பசிப்பிணி வந்துமால்."
(பிரமோத்தரகாண்டம்)

"தற்பாடு பறவை பசிப்பப் பசையற
நீர் குறை கொள்ளாது மாறிக் காலபொரச்
சீரை வெண்டலைச் சிறுபுன் கொண்மூ
மழைகா லூன்றா; வளமைப் விளையா;
வாய்மையும் சேட்சென் றுகரக்கும்; தீதுதரப்
பிறவும் எல்லாம் செறிமாறு படுமே;
கடுஞ்சினம் கனைஇய காட்சிக்
கொடுங்கோல் வேந்தன் காக்கும் நாடே." (ஆசிரியமாலை)

அரசன் கொடுங்கோலன் ஆயின் இவ்வுலகில் விளையும் கடுங்கேடு களை இவை உணர்த்தியுள்ளன காண்க. வெய்ய கோலால் வான் வறந்து வையம் வருந்தும் என்றதனால் செய்ய கோலால் மழை வளம் சுரந்து விளைவுமிகப் பெருகி உயிர்களெல்லாம் உளமகிழ்ந் திருக்கும் என்பது பெற்றும். ஆகவே அரசநீதி உலகுயிர்கட்குப் பேராதரவாய் மழை முதலிய நலங்களுக்கு மூலகாரணமாய் உள் ளமை நன்கு புலனும்.

இங்ஙனம் உடன்பாட்டாலும் எதிர்மறையாலும் கோலின் ஆட்சியை நமது நூல் ஆட்சிகள் பண்டுதொட்டே குறித்து வந்திருத்தலால் அரசு முறையில் இந்நாடு கண்ணூன்றியிருக்கும் கருத்தும், இதன் பழைய விருத்தியும் தெரியலாகும்.

"பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்" (ஔவையார்) என்றதனால் உயிர்களின் புண்ணியத்தினலேயே பயிர்களுக்கு மூலமான பருவமழை பெய்யும் என்பது பெற்றும். அவ்வுயிர்கள் நல்வழி ஒழுகி நலம்புரிந்து வரும்படி அரசனது பாதுகாவல் வலம்புரிந்துவரும் ஆதலால் மழைபெயல் முதலிய எல்லா நலங் களும் அவன் இயல்பைப் பொறுத்து நின்றன.

"கொண்டான் குறிப்பறிவாள் பெண்டாட்டி ; கொண்டன
செய்வகை செய்வான் தவசி ; கொடிதொரீஇ
நல்லவை செய்வான் அரசன் ; இவர் மூவர்
பெய்யெனப் பெய்யும் மழை." (திரிகடுகம்)

என்னும் இச்செய்யுளால் அரசனது தெய்வப்பெற்றி புலனும்.

நீதி மன்னனுக்கு வானும் ஏவல்செய்யும் என்னும் நிலைமை தெரிய மழை தலைமையாக இங்கே எண்ணவந்தது.

"வெள்ளம் ஒருவழி ஓட நின்றவன்" என்றதனால் தசரதன் நெறிமுறை தவறாத சிறந்த செங்கோல் வேந்தன் என்பது நன்கு தெளிவாயது. இந்த உண்மையை வெள்ளம் என்ற ஒரு சொல் லால் நம் உள்ளம் உய்த்துணரும்படி கம்பர் இங்ஙனம் வைத் தருளினர்.

அறிவு நலம் நன்கு வாய்க்கப் பெறாத பறவைகளும் மிருகங் களும் கூடக் கோசலநாட்டில் யாண்டும் கொடுமையின்றி யார்க்

கும் இனியனவாய் உரிமையுடன் உயிர்வாழ்ந்திருந்தன என்பார், "பறவையும் விலங்கும் ஒருவழி ஓட" என்றார். ஒரு வழி என்றது நெறிவழுவாத நேர்வழியை. பகுத்தறிவு நன்கு வாய்க்கப் பெறாதவைகளும் இங்ஙனம் நல்வழியில் ஒழுகின என்றால் அவ்வறிவு மிகுந்துள்ள மக்களின் ஒழுக்க மாட்சி சொல்லவேண்டாதாயிற்று. அருந்தவமும், சிறந்த அரசநீதியும் நிறைந்துள்ள இடத்தில் உயர்ந்த சத்துவகுணமே ஓங்கி நிற்கும் ஆதலால் அங்கே எத்துணைக் கொடிய பிராணிகளும் செற்றமின்றி இதமுடையனவாகவேயிருக்கும் என்க. இழிந்த பிராணிகளும் உளங்கலந்து ஒருமையுடன் உவந்து வாழ்ந்தன என்றது ஆளுகையின் நலம் தெரியவந்தது.

"புலிப்போத்தும் புல்வாயும், ஒரு துறையில் நீர் உண்ண உலகாண்டோன் உளன் ஒருவன்" (குலமுறைகிளத்துபடலம் 5) என்று தசரதனுடைய முன்னோருள் ஒருவனாகிய மாந்தாதாவைக் குறித்திருத்தலும் ஈண்டு அறியத் தக்கது.

பெண்கள் இயல்பாகவே சபலநெஞ்சினர். அதிலும் குடிவாழ்க்கையின்றிப் பொது நோக்கராய்ப் பொருள் கருதி நிற்கும் பொது மகளிர் "உண்ணிறை யுடைய வல்ல; ஓராயிர மனத்தவாகும்" என்றபடி பலவாறு நிலைதிரிந்தே யிருப்பர்.

"பள்ள முதுநீர்ப் பழகினும் மீனினம்
வெள்ளம் புதியது காணின் விருப்புறூஉம்
கள்ளவிழ் கோதையர் காமனொ டாயினும்
உள்ளம் பிறிதாய் உருகலும கொள்நீ." (வளையாபதி)

என வரும் இதனால் அவர் உள்ளநிலை யுணரலாகும்.

இங்ஙனம் யாண்டும் என்றும் ஒருவழிப்படாத உள்ளமுடைய அவரும் தசரதனது நீதி நெறியை அஞ்சி உள்ளம் திருந்தி யாதொரு கள்ளமுமின்றி முறையே ஒழுகி வந்தார் ஆதலால், "வேசியர் உள்ளமும் ஒருவழி ஓட நின்றவன்" என்றார்.

சீர்முதலாக எண்ணி முறையே மேலேறி வந்தது அவற்றின் நீர்மை நோக்கி. வைப்பு முறையிலுள்ள நுட்பம் அறிக. உயிரில்லனவும் உள்ளனவும் ஆகிய சராசரங்கள் யாவும் நெறிமுறையே ஒழுகிவர அரசமுறை வழுவிதாய் நிலைத்திருந்த தென்பதாம்.

ஓட ஓடினன் என்றாவது, ஓடச் செய்தனன் என்றாவது கூறாது ஓட நின்றவன் என்றதனால் அவனது அதிசய நிலை அறிய வந்தது. எங்கும் ஒருவழிப் படாதன அங்கு ஒருவழி ஓடியன மிகவும் அதிசயங்களாம்; அந்த அற்புதங்களை மன்னன் கண்ணூன்றி வருந்திச் செய்யாமல் அவன் ஆணைவழியால் அவை தாமாகவே இயற்கை பொழுக்காய் இனிது நடந்தன என்பதாம்.

சூரியன் முன்னிலையில் தானாகவே உலகம் தொழிற்படுதல் போல் தசரதன் சீரிய நீதி முன் உயிர்கள் நெறிமுறை தழுவி நேரே விழுமிய நிலையில் ஒழுகிவரலாயின என்க.

இவ்வாறு ஆட்சி நலனை உணர்த்திவிட்டுப் பின்பு அரச வுறுப்புக்களின் மாட்சிகளை உரைக்கின்றார்.

சிங்காதனம், வெண்கொற்றக்குடை, செங்கோல், மணிமுடி முதலியன அரசக்குரிய உயரிய அங்கங்களாகும்.

"படையுங் கொடியுங் குடையும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க் குரிய."
(தொல்காப்பியம், மரபியல், 71)

இதனால் அரச சின்னங்கள் இன்ன என்பது அறியலாகும்.

இந்த அங்கங்களை அறிவு நலம் கனிய அழகுறவிளக்கியிருக்கிறார். அரசன் கொலு வீற்றிருக்குங்கால் பணியாளர் இருமருங்கும் சாமரை வீசுதலும் பின்புறம் குடை கவித்து நிற்றலும் மரபு. அந்தக் குடை முத்துக் குஞ்சங்களால் அலங்கரிக்கப் பெற்று விசித்திர வேலைப்பாடுடையதாய் விரிந்து பரந்து கவிந்து சிங்காசனத்துடன் இணைந்திருக்கும் ஆதலால், "குடைகெழு வேந்தன்" "குடை நிழல் வைகினன்" "குடை நிழல் ஆண்டான்" என்னும் அடைமொழிகளால் அரசர் குறிக்க நின்றனர். உயர்ந்த அரச மரியாதையாய் இங்ஙனம் சிறந்திருக்கின்ற குடையைக் குறித்து உரைத்திருக்கும் பாடல் அடியில் வருகின்றது.

குடை நிலை

மண்ணிடை உயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றி
தண்ணிழல் பரப்பவும் இருளைத் தள்ளவும்
அண்ணல்தன் குடைமதி அமையும் ஆதலான்
விண்ணிடை மதியினை மிகையி தென்னவே.
(அரசியற்படலம் 9)

மன்னன் குடையைச் சந்திரனோடு ஒப்பவைத்துஎண்ணி அதனினும் இது சிறந்த நலனுடையதென்று கூறியபடியிது.

விண்ணில் நின்று நிலவைப் பொழிந்து இருளை நீக்கி எல்லா உயிர்கட்கும் மதி மகிழ்ச்சியைச் செய்துவரும்; இது, மண்ணில் நின்று அருள் நீதிகளை எங்கும் பரப்பிப் பகை பழிபாவம் முதலிய கொடிய இருள்களை அடியோடு நீக்கி எவ்வுயிர்க்கும் இன்பம் புரிந்துவரும். உயிர்களுக்கு உவகையை விளைத்துவருவதில் பொதுவாக இவ்வாறு இரண்டும் நிறையொத்திருப்பினும் சில குறைகள் மதியினிடம் மருவியுள்ளன.

அது சில காலம் தேயும்; சில காலம் வளரும்; ஒரு சமயம் அடியோடு மறைந்தும்போம். அங்ஙனம் மறையாமல் பூரணமாக நிறைந்திருப்பினும் இரவில்மட்டும் சிறிது ஒளி செய்து புற இருளை நீக்கிப் பகலில் உரு ஒழிந்துபோம். இது என்றும் ஒரு படியே நின்று யாண்டும் யாதொரு குறையுமின்றிப் பகல் இரவு எப்பொழுதும் நீதி ஒளி வீசி உலகுயிர்களின் உள்ளும் புறமும் ஒரு தீதும் சேராமல் உரிமையுடன் பேணிவரும். இங்ஙனம் அருமைப் பண்புகள் பல அமைந்து ஆருயிர்க்குப் பேரின்பம் புரிந்துவருதலால் விண்ணிடை மதியினை இது மிகை என உலகம் எண்ணும்படி அண்ணல்தன் குடைமதி அமைந்திருந்ததென்க.

தசரதனுடைய வெண்கொற்றக்கொடை விண் மதியினும் சிறந்து மண்ணில் ஒரு அதிசயமான புதிய மதியாய்த் தண்ணிழல் பரப்பி இன்னளிபுரிந்து இனிமை மயந்து யாவரும் துதி செய்யத் தேவரும் புகழத் திகழ்ந்திருந்ததென்பது கருத்து.

வடிவம் நிறம் பண்புகளால் சந்திரனை ஒத்தெண்ணப்பட்டுள்ள குடை பயன் அருளுதலில் அதனினும் மிஞ்சி மிகவும் வியனிலையுற்றிருந்தது என்ற இதனால் மன்னன் ஆட்சியில் மன்னுயிர்கள் மகிழ்ச்சியெய்தி யுள்ளமை நன்கு புலனும்.

அரச நீதியின் அருளமைதியைக் குடைமேல்வைத்து இவ்வாறு கூறியருளினர். சச்சந்தன் குடைநிலையைக் குறித்துத் திருத்தக்கதேவர் கூறியுள்ளதும் இங்கே அறியத்தக்கது.

"கோதை நித்திலஞ் சூழ் குளிர் வெண்குடை
ஓத நீநில மொப்ப நிழற்றலால
தாதையேயவன் தாள்நிழற் றங்கிய
காதலாலகளிக் கின்றதிவ் வையமே." (சிந்தாமணி 159)

அவன் குடை உயிர்க்கெல்லாம் ஒப்ப நின்று நிழலைச் செய்து வந்தமையால் இவ்வையம் களிப்புற்றிருந்த தென்பதாம். பசி பிணி பகை முதலிய துயர்கள் யாதும் குடிகள் அடையாதபடி கொற்றவன் பேணி வருதலால் அவனது இனிய பாதுகாப்பு நீர்மையைக் குடைமேலேற்றி இங்ஙனம் கூறியருளினர்.

இருள் அகல ஒளி மிகுந்து குளிர் நீர்மையுடன் இன்பம் பயந்துவரும் திங்களோடு செங்கோல் மன்னர் குடையைச் சேர வைத்து அவர்தம் ஆட்சியின் நன்மையைக் காவியங்களில் கவிஞர்கள் இவ்வாறு காட்சிபெற வைத்திருக்கின்றனர்.

"திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
அங்கண் உலகளித்தலான்." (சிலப்பதிகாரம்)

"வெயிலழல் கவியாது வியலக வரைப்பின்
உயிரழல கவிக்கும் உயர்ச்சித் தாகிப்
பூந்தார் அணிந்த ஏந்தல வெண்குடை."
(பெருங்கதை 1-42)

"ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்குநின் விறல்கெழு வியன்குடை
வெயில்மறைக் கொண்டன்றோ? அன்றே ; வருந்திய
குடிமறைப்பதுவே கூர்வேல வளவ." (புறம், 35)

"உலகுடன் நிழற்றிய தொலையாவெண்குடை" (அகம் 204)

"முற்றுநீர் வளாகமெல்லாம் முழுதுடன் நிழற்று மூரி
ஒற்றைவெண் குடையினீழல உலகுகண்படுப்ப ஓம்பி"
(சூளாமணி)

"வெங்கலி யிருள்கெட வெண்ணிலா வுமிழ்
திங்களங் கவிகையான் ; திகிரி ஒன்றினன்" (நைடதம்)

அரசாது குடைநிலைமையைக் குறித்து இவை வந்துள்ளனகாண்க.

வெயிலுக்கும் மழைக்கும் பொதுமக்கள் உபயோகித்து வரும் குடை இனிய நிழலுதவித் தனிமனிதனைத் தற்காத்து

வருதல் போல் மன்னன் குடை மன்னுலகுக் கெல்லாம் இன்னளி செய்துவருதலால் விண்மதி என இது வியந்து புகழவந்தது. இங்ஙனம் புகழ்வதைக் குடைமங்கலம் என்பர்.

"தன்னிழ லோர் எல்லோர்க்கும தண்கதிராம்; தறுசேரா
வெந்நிழலோர் எல்லோர்க்கும வெங்கதிராம்-இன்னிழல்வேல்
மூவா விழுப்புகழ் பூலத்தார்ச் செம்பியன்
கோவா யுயர்த்த குடை." (புறப்பொருள்வெண்பாமாலை)

சோழனது வெண்கொற்றக் குடையைச் சந்திர சூரியர்களோடு ஒப்புவைத்து அவன் குடிகளைப் பேணி வந்த அருளையும், பகைவரைத் தொலைத் தொழித்த நிலையையும் இது குறித்து நிற்றல் அறிக.

மணி முடி போல் குடையும் சிறந்த அரச சின்னம் ஆதலால் யானைமேல் பவனிவருங் காலத்தும் அவர் மேல் இது கவிந்திருக்கும். "குடை நிழலிருந்துகுஞ்சரம் ஊர்ந்தோர்" (வெற்றிவேற்கை) என்றதனல் குடைக்கும் அரசுக்கும் உள்ள தொடர்பு புலனும்.

ஒரு நாள் இரவு சோழமன்னன் யானைமேல் பவனிவர நேர்ந்தது. சிறந்த அம்பாரிமேல் பூச்சக்கரக் குடைக் கீழ் அவன் அமர்ந்திருந்தான்; படைகொடி விருதுகளுடன் பவனி பெருமிதமாய் நடந்துவந்தது. வந்து இறங்கியவுடன் அரசன் அரியாசனத்தில் அமர்ந்தான். மந்திரி பிரதானிகளும் முறைப்படி மருங்கு நின்றனர். அருகே நின்ற ஒட்டக்கூத்தரை நோக்கி அரசன் உல்லாசமாக உரையாடலானன்: "புலவீர்! மழை வெயில்களுக்குத் தாம் மக்கள் குடைபிடிப்பது வழக்கம்; இரவில் யாரே பிடியார்; பிடிப்பின், "அற்பனுக்கு வாழ்வு வந்தால் அர்த்த ராத்திரியிலும் குடை பிடிப்பான்" என்று உலகம் பழிக்கும். இங்ஙனம் ஒரு பழமொழி வந்திருந்தும் இன்று நாம் இரவில் குடை பிடித்து வந்தோம். இப்படி வரலாமா? இது தப்பல்லவா?" என்றான். கேட்ட கூத்தர், "இதுஅரச மரியாதை ஆதலால் சமூகம் வரலாம்; இதில் தவறு இல்லையே" என்றார். "வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்று நீர் சொல்லாடுகின்றீர்! மரியாதையாயினும் அவசியமில்லாதபொழுதும் குடையுடன் வருவது உசிதமாக எனக்குத் தோன்றவில்லை" என்று நகைமுகத்துடன் சொல்லிவிட்டு, அயலே நின்ற புகழேந்தியை

நோக்கினன். அந்த அருமைக் கவிஞர் அரசை உரிமையுடன் பார்த்து உடனே ஒரு கவி பாடினர். அது அடியில் வருவது:

குடைக்கீழ் வந்தது குலநீதியாம்.

"அண்டமீ துலவி வாழும் அருந்ததிக் கற்பாள் உன்னைக்
கண்டதால் உவகை எய்திக் கறபழி நதிடுவள் என்றே
எண்டிசை புரக்கும வேநதாய்! இரவினிற கவிகைநீழல்
கொண்டுமா நடாத்துமாறு குலோத்துங்கா நீதிதானே"

என்று சாதுரியமாக இந்த இனிய கவியைச் சொல்லியவுடனே எல்லாரும் உள்ளம் வியந்து உவகை மீக்கூர்ந்தார்.

"ஆகாயத்தில் நட்சத்திர வடிவாயுள்ள அருந்ததி என்னும் பெருங்கற்புடையாள் இரவில் உன் பேரழகை நேரே கண்டால் உள்ளம் பேதுற நேரும்; அங்ஙனம் பேதுறாதபடி கவிகையுள் மறைந்து நீ பவனி வந்தது கற்பொழுக்கத்தைப் பாதுகாத்து உலகில் நீதி செலுத்திவரும் உனது செங்கோல் நிலைமையைத் தெளிவுறுத்தி நின்றது" என்னும் பொருளைப் பொதிந்து வந்துள்ள இதனைக் கேட்டதும் அரசன் மிகவும் அதிசயித்துக் கவியை விழைந்து பாராட்டினன். சிறந்த கட்டழகன் என அரசனைச் சுட்டி உற்சாக மூட்டிக் கற்பு முதலிய நலங்களை அவன் பாதுகாத்து வரவேண்டும் என்று நுட்பமாக இதில் அறிவுறுத்தியிருக்கும் திறனை உய்த்து நோக்குக. இயற்கை நிகழ்ச்சிகளை நல்ல உணர்ச்சிகளுடன் இணைத்துக் கவிஞர்கள் இப்படி அற்புதமாகக் கூறி விடுகின்றனர். இதனைக் கற்பனை என்பர். கற்பனை என்பது கல்வி நலம்சுரந்த மானச சிருட்டி என்க. அதனால் மனிதவாழ்வு புனிதமிகவுடையதாய் உயர்நிலையை அடைகின்றது.

இங்ஙனம்செவ்விய குடைநிழலிலமர்ந்து திவ்விய திருவுடன் சிறந்து எவ்வுயிரும் இன்புற அரசன் இனிதிருந்த நிலைமையை அடியில்வரும் செய்யுளால் அறியலாகும்.

"வயிரவான் பூணணி மடங்கல் மொய்மபினன்
உயிரெலாம் தன்னுயிர் ஒபப ஓம்பலால
செயிரிலா உலகினில் சென்று நின்றுவாழ
உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினன்."

(அரசியற்படலம், 10)

இது, உயிர்க்கு உடல்போல் உலகுக்குத் தசரதன் இருந்தான் என்கின்றது. மடங்கல்=சிங்கம்.

தன்னுயிரைப் போலவே பிறவுயிர்கள் எல்லாவற்றையும் கண்ணூன்றிக் கருதி மன்னன் பேணி வந்த நிலைமையை ஓர் உவமையால் உணர்த்துகின்றார்.

உலகிலுள்ள பொருள்களெல்லாம் உயிருள்ளன எனவும், உயிரில்லன எனவும் இருவகையுள் அடங்கும். முன்னது இயங்குதிணை; பின்னது நிலைத்திணை என நூல்களில் வழங்கப்படும். வடமொழியாளர் இவற்றைச் சரம் எனவும், அசரம் எனவும் கூறுவர். இயங்குதல், சரித்தல் என்பன உயிர்களின் புடைபெயர்ச்சியைக் குறித்து வந்தன.

புல் மரம் முதலிய ஓரறிவு உயிர் முதல் ஆறறிவுயிர் ஈறாக வுள்ளன யாவும் யாதொரு துயரும் உறாமல் தத்தம்நிலையினின்று நெடிதுவாழ இனிது பாதுகாத்துவந்தான் என்பார், "சென்று நின்றுவாழ் உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்" என்றார்.

உயிர்க்கு உடம்பு எப்படி ஆதாரமாயிருக்கிறதோ அப்படி உலகிலுள்ள சராசரங்கள் எல்லாவற்றிற்கும் தசரதன் ஆதாரமாயிருந்தான் என்பது கருத்து.

உடம்பு என்பதில் உம்மை, தாய் தவம் சேய் என முன்னம் சொன்னதை எண்ணி வந்தது. குடிகளை உயிராகவும் கோனை உடம்பாகவும் குறித்தது உரிமையுடன் பாதுகாத்த அருமை தெரிய.

குடிகளோடு அமையாமல் சீவகோடிகளெல்லாவற்றையும் அவன் அருள்புரிந்து பேணி வந்தான் என்பது, "சென்று நின்று வாழ் உயிர்" என்றதனால் உணர வந்தது. அவனது பரந்த கருணையையும் சிறந்த பாதுகாப்பையும் குறித்தபடியிது.

"வையம் மன்னுயி ராக அம்மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடல்அன்ன மன்னன்"

(அயோத்தி, மந்தரை சூழ்ச்சி, 17)

எனப் பின்னரும் பொதுவாக மன்னவன் நிலைமையை உரைத்திருக்கிறார். உயரியல்புடைய அரசனை உயிர் என்றது உடல் என்றது புதுமையாய் ஈண்டு ஊன்றி உணர நின்றது.

உணவுப் பொருள்கள் முதலிய எல்லா வளங்களும் ஒருங்கே நிறைந்திருந்தாலும் அரசன் இல்லையாயின் அந்நாடு அவலமிக அடையும்; அவன் இருப்பின் உவகை மிகுந்து ஒளிபெற்று ஓங்கும் ஆதலால் அவனை உலகிற்கு உயிர் என்றே பழங் கவிகளெல்லாம் வழங்கி வந்;

" நெல்லும் உயிரன்றே, நீரும் உயிரன்றே,
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம ;
அதனால், யான்உயிர்என்ப தறிகை
வேலமிகு தானைவேந்தற்குக் கடனே." (புறம் 186)

" நெல்லுயிர் மாந்தர்க்கெல்லாம் நீருயிர் இரண்டும் செபபிற்
புல்லுயிர் புகைந்துபொங்கு மூழ்ங்கழல இலங்கு வாட்கை
மலலலங் களிற்றுமாலை வெண்குடை மன்னர் கண்டாய்
நலலுயிர் ஞாலந்தன்னுள் நாமவேல நம்பி எனறான்."
(சீவகசிந்தாமணி 2908)

" மற்றமா நகருடை மன்னன் தன்னுயர்
ஒற்றைவெண் குடைநிழல உலகிற் கோருயிர்ப்
பெறறியான் பயாபதி என்னும பேருடை
வெற்றிவேல் மணிமுடி வேந்தர் வேந்தனே."
(சூளாமணி, நகரம்-16)

" மன்னுயிர் ஞாலக் கின்னுயிரொக்கும, இறை "
(பெருங்கதை 2, 11)

" ஏதமதகற்றி உலகினுக் குயிராய
இருந்தனன் இறைகுலோத்துங்கன் "
(திருவிளையாடற்புராணம், பழியஞ்சி, 44)

" தன்னுயிராமென உலகின தங்கிய
மன்னுயி ரனைத்தையும புரக்கு மாட்சியான்." (நைடதம்)

என இவ்வாறு முன்னோரும் பின்னோரும் மன்னனை உலகிற்கு உயிர் என்று குறித்திருக்கின்றனர்.

உடலை இயக்கித் தொழிற்படுத்தி அது உழைத்துத் தர உண்டு உவந்து தலைமையுடன் உயிர் தருக்கியிருக்கும் ஆதலால் குடிகளை விருத்திசெய்து வளப்படுத்தி அவர் உழைப்பால்தான் உயர்ந்து குலச் செருக்குடன் குலாவி நிற்கும் கோனுக்கு அது

உவமையாய் வந்தது. இங்ஙனம் புலவர் பலராலும் போற்றி வந்த பொதுக்காட்சியோடு கம்பரது கலைக்காட்சி வேறுபட்டுள்ளது. எல்லாரும் அரசை உயிர் என்றனர். இவர் உடம்போடு ஒப்புரைத்திருக்கின்றார்.

வெயில் மழை முதலிய துயரங்கள் யாவும் பொறுத்துப் பலவகையிலும் கண்ணூன்றிப் பெரிதும் முயன்று வேறொன்றையும் எதிர்பாராமல் உயிர் இன்பம் ஒன்றையே நாடிப் பேரன்போடு உடம்பு அதனைப் பேணி நிற்றல்போல் தன்னலம் யாதும் கருதாமல் உலகுயிர்களின் நலங்களையே யாண்டும் கருதித் தசரதன் உரிமையுடன் அவர்றைப் பேணி வந்தான் என்பதாம். இதனால் இவனது பரிபாலனத்தின் பான்மையும் மேன்மையும் நன்கு தெளிவாயின.

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனைப்பெருகியுள்ள இத்தகைய உத்தம அரசனை ஒரு நாடு கிடைக்கப்பெற்றால் அது எத்துணை இன்ப நலங்களையுடையதாய் எழில் மிகுந்திருக்கும்!

ஏகாதிபத்தியம், சனநாயகம், சர்வாதிகாரம், குடியரசு எனக் கலாய் விளைந்து இக்காலத்தில் படியறிய வந்துள்ளவற்றிற்கும் இம்முடியரசுக்கும் உள்ள வாசியை ஊன்றி யறிய வேண்டும்.

தமக்கு இதவுரிமைகள் வேண்டும் என்று குடிகள் கொதிப்பனவெல்லாம் அரசனுடைய கொடுமைகளையே விளக்கியுள்ளன. செங்கோலனாய்ச் செவ்விமிருந்து தண்ணளி புரியும் மன்னவன் அடிக்கீழ் மன்னுயிரெல்லாம் மகிழ்ந்திருக்கும் என்க.

தாய் பிள்ளையைப் போற்றுதல்போல், உடல் உயிரைப் பேணுதல்போல் குடிகளைத்தசரதன் பேணிவந்தான் என இங்கே நம் கவியரசர் கூறியபடி புவியரசர் புரிந்துவரின், அந்தஅரசாட்சி எவ்வளவு திவ்விய நிலையில் செழித்திருக்கும்? அந்நாட்டில் உள்ள குடி சனங்களின் உயிர்வாழ்க்கை எத்துணை உயர்வுடன் ஒளி செய்து விளங்கும்? என்பவை ஈண்டு உய்த்துணரவேண்டும். இன்ப நிலையமான அச்செங்கோல் மன்னனைக் குடிகள் கண்ணென உயிரெனக் கனவிலும் நனவிலும் எண்ணிப் போற்றி வருவரே யன்றி, யாதேனும் இகழ்ந்து தூற்ற நேர்வரா? “குடிக்குழப்பம் முடிக்கிழப்பம்” என்னும் பழமொழியால் உலக அமைதி அரசனது அருளமைதியைப் பொறுத்துள்ளதென்பது நன்கு புலனும்.

செங்கோலும் வெண்கொற்றக்குடையும் ஆஞ்ஞா சக்கரமும் முடிமன்னர்க்கு அடையாளங்களாயமைந்தன; அந்த அமைதிகள் யாவும் உயிர்களை நீதியோடு பாதுகாக்கும் நிலைமையையே விளக்கி யுள்ளன. "ஆழி ஒன்றுருட்டி யிவ் அவனி காத்தனன்" என அரசாளுகை முழுவதையும் ஆழியின் மீது வைத்தே மேலோர் வழங்கி வந்துள்ளனர். அந்த நீதிச் சக்கரத்தின் மாட்சியைக் குறித்து நம் கவிஞர் பிரான் காட்டியிருக்கும் காட்சியை அடியில் காண்க.

சக்கர நிலை.

"நன்றென வுயரிய குவவுத் தோளினான்
வென்றியந் திகிரிவெம் பரிதி யாமென
ஒன்றென உலகிடை உலாவி மீமிசை
நின்று நின்று உயிர்தொறும் நெடிதுகாக்குமே"

(அரசியல் படலம், 11)

தசரதனுடைய ஆக்கினைசக்கரத்தின் ஆட்சி நலம் குறித்த படியிது. வட்டமாய், ஒளி மிகுந்து, பகையிருள் கடிந்து, உயிர்கள் யாவும் உவகையுறும்படி உரிமையுடன் நின்றமையால் சூரியனோடு ஒப்பவைத்து அதனை இவ்வாறு செப்பியருளினர். திகிரி = சக்கரம். உயிர்தொறும் என்றது ஒவ்வொரு சீவனையும் ஆவலோடு காவல்புரிந்து கருணைசெய்து வந்தமை தெரிய.

உலகிற்குச் சூரியன் எவ்வளவு உயிராதாரமாயுள்ளானோ அவ்வளவு தகுதியை மன்னன் ஆழி மருவி நின்றதென்பதாம். ஒன்று என என்றது அயலே வேறொன்றும் இல்லாமல் ஏகநாயக மாய் அது இனிதமைந்திருந்தமை கருதி. சூரியன் போல் உல கொளிபரப்பி, தனிமுதல் தலைவனான பரம்பொருளைப்போல் அது இனிது பரிபாலித்திருந்ததென்றவாறு. உடையவன் ஆட் சித்திறம் உடைமைமேல் நின்று இங்ஙனம் உரை செய்யவந்தது.

உயிர்கள் யாவும் செயிர் நீங்கி உவகையுடன் வாழும்படி அரசுபுரிந்து வந்த தசரதன் உலகைப் பாதுகாத்து நின்ற நிலை யைக் குறித்துக் கவி ஓர் உவமையால் விளக்கியிருக்கிறார். பாரு லகெங்கணும் யாதொரு பகையுமின்றி யாவரும் பணிந்துபோற்ற வீரத்திறலுடன் வீற்றிருந்த அப்பேரரசு புரிந்து வந்த சீரிய அரசுமுறையை அடியில் பார்க்க.

### பாதுகாப்பின் பான்மை

“ எய்யென எழுபகை எங்கும் இன்மையால்
மொய்பொரு தினவுறு முழவுத் தோளினான்,
வையகம் முழுவதும் வறிஞன் ஓம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றான்.”

(அரசியற் படலம் 12)

செய் என்றது வயலை. நெல் விளையும் நிலம்; மிகவும் சுருங்கியது; சிறிய அளவினையுடைய அந்த ஒரே வயல்தான் ஒருவனுக்கு உண்டு; அவன் பெரிய குடும்பி; தன் மனைவி மக்களனைவரையும் அதன் வருவாயைக்கொண்டே பாதுகாக்க வேண்டும்; அந்நிலையிலுள்ள அவன் அவ்வயலை எவ்வாறு கண்ணும் கருத்துமாய்க் கருதிப் பண்படுத்திப் பாதுகாத்துவருவானோ அவ்வாறே தசரதன் உலக முழுவதையும் உரிமையுடன் ஆதரித்து வந்தான் என்பார், “வறிஞன் ஓம்பும் ஓர் செய் என வையகம் முழுவதும் இனிது காத்து அரசு செய்கின்றான்” என்றார்.

செய்தனன் என இறந்த காலத்தால் கூறாமல், செய்கின்றான் என்று தாம் நேரே கண்ணெதிரே கண்டதுபோல் கவி குறித்திருக்கும் கருத்து மிகவும் கருதத்தக்கது.

நீதி நலம் கனிந்த அந்த அரசாட்சி பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னரே நிகழ்ந்ததாயினும் இன்றும் நம் எதிரே நிகழ்வது போல் இக்காவியம் நாளும் காட்டி வருகின்றது.

பெறலரிய பெருந்திருவுடைய பெரிய சக்கரவர்த்தியை ஒரு வறிஞனோடு ஒப்பவைத்தது பாதுகாப்பில் அவன் கண்ணூன்றியிருக்கும் கருத்து நிலை தெரிய என்க.

தேகபோகங்களை ஏகபோகமாய் நுகர்ந்து யாண்டும் தன்னலமே கருதிச் செல்வச் செருக்குடன் இறுமாந்திருக்கும் அரசுக்கும் இதற்கும் உள்ள வேறுபாட்டை ஈண்டு எண்ணி நோக்கின் இதன் ஏற்றமும் இயல்பும் எவர்க்கும் எளிது தெளிவாம்.

ஓர் செய் என்றது வேறே யாதொன்றும் இல்லாமல் அந்த ஒரு காணி நிலமே அவனுக்கு உயிராதாரமாயிருந்தமை உணர என்க.

பயிர்காக்கும் உழவனையும், உயிர் காக்கும் கிழவனையும் ஒருங்கே காட்டி உழவு நிலையையும், அரசுமுறையையும் நம் உளமிக மகிழ உணர்த்தியிருக்கும் அழகை இதில் ஊன்றிப் பார்க்க.

செய், வையகத்திற்கும்; அதில் விளையும் பயிர்கள், அதன் கண் வாழும் உயிர்களுக்கும்; பாதுகாவல், பரிபாலனத்துக்கும்; உழவன் அரசனுக்கும் ஒப்பாம்.

இந்த உவமையைக் கம்பர் புதிதாகக் குறித்திருக்கிறார்; முந்திய நூல்களில் இல்லை. பிந்தி வந்தவர் இவர் உரையைப் பேணி வந்துள்ளனர். அடியில் வருவன காண்க.

" வறிஞன் ஓம்பிய செறுவொன்று ஏய்ப்பப்
பருவம நோக்காப் பவநெறிதொறும் பவந்தொறும்
இருவினைப போகமும் எற்கொண்டார்த்துப"
(பண்டாரமும்மணிக்கோவை 20)

கம்பர் மொழியைப் பொன்போல் போற்றிஇதுவந்திருக்கும் நிலையைப் பார்க்க. இவ் வுவமையைப் பொதிந்து சிவபிரகாச சுவாமிகளும் செய்யுள் ஒன்று செய்திருக்கிறார்கள்.

" மிடியன் ஒருசெய் யாளனச்செய் விளைபக் காக்கும் செயல்போலப்
படியில் கல்வி விரும்பினோன் பாடம் போற்றும் அதுபோல,
ஒடிவில் செங்கோல் மனுவேந்தன் உலகம் புரக்கு முறைபோலக்,
கொடிய நோன்பு செய்தீன்ற கொடியை வளர்த்தாள் மோகினியே."
(பிரபுலிங்கலீலை)

தன் மகளாகிய மாயையை உரிமையுடன் பாராட்டி மோகினி வளர்த்து வந்த வகையை உரைத்தபடி இது. நம் கவி குறித்த உவமையையும் உவமேயத்தையும் ஒருங்கு கூட்டி மேலும் ஒன்று சேர்த்து இப்பாட்டு வந்துள்ளமை காண்க.

அரசன் என்றால் அவன் இவ்வாறு இருக்கவேண்டும் என்று இதுவரை நம் கவிநாதர் உரைத்து வந்துள்ள நிலைகள் உணரும் தோறும் உவகைக்கு இடமாயுள்ளன. மானசக் காட்சியிலன்றி உலகக்காட்சியில் இக்காலத்தில் யாண்டும் காணமுடியாத அற்புத இன்பக் காட்சிகளை அரசுருவில் காட்டியிருக்கிறார். முன் குறித்த நலங்களை யெல்லாம் இங்கே கூர்ந்து சிந்திக்கவேண்டும்.

இப்படி ஒரு அரசன் இருந்தால் அந்நாடு எப்படி இருக்கும்?

தசரதனை ஆதாரமாக வைத்துக்கொண்டு உத்தமமான ஓர் உயரிய அரசுருவினை நம் கவியரசர் உருவகித்து உலகிற்கு இவ்வாறு உணர்த்தியிருக்கிறார். அரசியல் கொள்கைகளில் கம்பரது துணிவான தீர்மானம் இன்னதென்பது இதனால் இனிதறியலாம்.

அறிவுலகத்தை அமைத்து மனித சமூகத்தைப் புனிதமும் இனிமையுமுடையதாகக் கவிகள் புரிந்து வருகின்றனர். சட வுலகத்தில் மலிந்துள்ள குற்றங் குறைகளை யெல்லாம் கொழித்து நீக்கி நல்ல உத்தம நலங்களை உருப்படுத்தி உயிர்களுய்யவுணர்த்தி யருள்கின்றனர். அகவுலகிலும் புறவுலகிலும் அவர் அழகு மிகச் செய்கின்றனர். யாண்டும் அழகையே அவர் காண்கின்றனர். அதனையே விழைவுடன் என்றும் மொழிகின்றனர்.

அவர்களுடைய இருதயம் கலைநலம் சுரந்து தெளிவமைந்து ஒளிமிகுந்து தெய்வப் பெற்றி வாய்ந்திருப்பதால் அவர் திவ்விய புருடராய்த் திகழ்ந்துள்ளனர். திருவுடைய முடி மன்னரினும் அறிவுடைய இவர் அதி கம்பீர நிலையில் தலைமையுடன் என்றும் நிலவி நிற்கின்றனர். கலையணங்கின் கருணைமிகப்பெற்றமையால் யாண்டும் தலை வணங்காமல் தனிமுதல்வராய்த் தழைத்துவிளங்குகின்றனர். இந்நிலை இந்நாட்டில் மட்டும் அன்று; எந் நாட்டிலும் உண்மையான கவிஞர்கள் உபரிய சக்கரவர்த்திகளாகவே ஓங்கி ஒளிர்கின்றனர். அமெரிக்கா தேசத்துப் பெரும் புலவரான எமர்சன் என்பவர் கவிஞரைக் குறித்து உரைத்திருக்கும் வாக்கியம் ஒன்று அடியில் வருகின்றது.

"The poet is not any permissive potentate, but is emperor in his own right." (Emerson)

"சிறிய கவிஞன் யாரையும் எதிர்பாராத பேரரசனாய்ப் பெருகியிருக்கின்றான்." எனவரும் இதனால் கவிஞருடைய உள்ளப்பான்மையும், உபரிய மேன்மையும் உணரலாகும்.

இங்ஙனம் உன்னத நிலையில் ஓங்கி ஒளிர்கின்ற நம் கவிச் சக்கரவர்த்தி ஒரு புவிச் சக்கரவர்த்தியைக் குறித்து இதுகாறும் உரைத்து வந்த வகைகளை நாம் உணர்ந்து வந்தோம். இனி அம்மன்னனது வாழ்க்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையெல்லாம் முறையே நோக்கி மகிழ்வோம்.

### தசரதன

செங்கோல் வேந்தனாய்த் திசைதொறும் இசை பரப்பித் தேசம் புரந்துவந்த தசரதன் ஒரு நாள் சிங்காதனத்தில் வீற்றிருக்குங்கால் சிந்தனை ஒன்று தெய்விகமாகக் கிளர்ந்தெழுந்தது. சிந்திக்கின்றான்: "கல்வி செல்வம் அதிகார முதலிய உயர் நலங்

களெல்லாம் ஒருங்கே நிறைந்திருந்தும் நல்ல பிள்ளைப்பேறு இது வரையும் எனக்கு இல்லாது போயதே! கோசலை முதலிய அழகிய மனைவியர் மூவர் உளர்; விழுமிய வளங்கள்யாவும் மேவியுள்ளன; தானதருமங்கள் பல செய்திருக்கின்றேன்; வானும் வையமும் வாழ்த்த வாழ்ந்து வருகின்றேன்; இது என்ன வாழ்க்கை? இந்திர வாழ்வேயாயினும் மைந்தர் இலராயின் மணமற்ற மலர்போல் அது மாண்பிழந்துபடுமே; குழவிமுகம் பார்த்து, மழலைமொழி கேட்டு, இனிது தழுவி உரிமையுடன் உருகிஉளமகிழாத மனிதப் பிறவியும் ஒரு பிறப்பா? பருவமுதிர்ந்து இறக்கும்பொழுது தன் மக்களை நினைந்தல்லவா மனிதன் ஆறுதலடைந்து அகமகிழ்ந்து போகின்றான். சாகும் தருணத்தும் சாவாமருந்துபோல் எவா மக்கள் இன்பம் பயந்து நிற்கின்றார். உலகமெல்லாம் வந்து பணியும் அரசதிருவுடன் வாழ்ந்து வருகின்ற இந்த வாழ்வைத் தொடர்ந்து நடத்த ஒரு வழிமுதல் வேண்டுமே! ஈண்டு இனி யாரை வேண்டுவேன்? ஆண்டவனே!" என்று இவ் ஆண்டகை பல பல நினைந்து அலமரலாயினன். அவ்வமயம் அங்கே வசிட்டர் வந்தார். இந்த அரசக்கு அவர் குலகுருவாயும் மதிமந்திரியாயும் நிலவியிருந்தார். அவரை வணங்கித்துதித்து அருகே சிறந்த ஆசனத்தில் அமரச் செய்தான். அவர் அமர்ந்தருளினர். அதன் பின் அரசு முறையையும் உலக நிலையையும் குறித்து இருவரும் உரைகள் பல ஆடினர். அங்ஙனம் அளவளாவி வருங்கால் அரசன் முகத்திலுள்ள கவலைக் குறியை முனிவர் கருதி நோக்கினர்; காரணம் வினவினர். அந்த அருந்தவர் கேட்டவுடன் இந்தப் பெருந்தகை உரைத்தது பெரிதும் வியந்து போற்றற் குரியது. அடியில் வருகின்றது.

தசரதன் வசிட்டரிடம் உரைத்தது.

" அறுபதி னாயிரம் ஆண்டும் மாண்டுற
உறுபகை ஒடுக்கியிவ் வுலகை ஓம்பினேன்;
பிறிதொரு குறையிலை எற்பின் வையகம
மறுகுறும் என்பதோர் மறுக்கம் உண்டரோ;

" அருந்தவ முனிவரும் அந்தணாளரும்
வருந்துதல இன்றியே வாழ்வின் வைகினர்;
இருந்துயர் உழக்குநர் எற்பின் எனபதோா
அருந்துயர் வருத்துமென் அகத்தை என்றனன்."

(திருவவதாரப் படலம் 3, 4)

பெருந்தகவுடன் வந்துள்ள இந்த உரைகள் பெரிதும் சிந்தனைக்குரியன. "உலக முழுவதும் அடிதொழ ஒரு குறைவுமின்றிச் சார்வ பௌமனுய்த் தலைமை எய்தியுள்ள நீர் இன்று ஏதோ கவலை கொண்டுள்ளீர்? காரணம் என்ன?" என்று முனிவன் வினவியதற்கு மன்னன் சொன்ன பதில் இது.

"எல்லா நலங்களும் நிறைந்துள்ளன; யாதொரு குறையும் இல்லை; ஆனல் ஒரே ஒரு குறைமட்டும் உண்டு; பிள்ளைப்பேறில்லையே என்ற அக்கவலை ஒன்றுதான் என் உள்ளத்தை வருத்துகின்றது" என்று சொல்லவேண்டியவன் இவ்வாறு சொல்லியிருக்கிறன்.

இந்த அரசை ஆளுதற்கு; நான் மலடன் என்னும் பழிநீங்கி மகவைக் கண்டு மகிழ்தற்கு; என்னுடைய பேரைச் சொல்லுதற்கு; என் குலத்தை விளக்குதற்கு; எனக்குக்கொள்ளிவைத்து எள்ளும் தண்ணீர் இறைத்தற்கு; புத்து என்னும் நரகம் புகாமல் நான் உத்தம பதவியை அடைதற்கு; என இன்னவாறு ஏதாவது ஒரு காரணத்தை எடுத்துச் சொல்லிப் பிள்ளைப்பேற்றை விரும்பி இருக்கவேண்டும்; அங்ஙனம் யாதும் சொல்லாமல், "எற்பின் வையகம் மறுகுறும் என்பதோர்மறுக்கம் உண்டு" என்று சொன்னது மன்னனது பரோபகாரசிந்தையையும், பேச்சுத் திறத்தையும், விநயத்தையும் விளக்கியுள்ளது. தான் காலம் நீங்கிப் போனல் இஞ்ஞாலம் வேலி இல்லாத பயிர்போலவும், தாய் இல்லாத குழவிபோலவும், தலைதடுமாறி நிலைகுலையுமே! என்று நெஞ்சம் கவன்றபடி யிது. எற்பின் = எனக்குப்பின். மறுகல் = ஆதரவின்றி அலமருதல். மறுக்கம்=மனக்கலக்கம்.

தசரதனுடைய இந்த வாக்குமூலம் பல மூலங்களை நோக்கி நிற்கின்றது.

தனக்குப் பின்பு அரசை ஆளுதற்குரிய நல்ல சந்ததி இல்லாமையால் குடிகள் துயரடைய நேர்வரே என்று பொதுவாக வருந்தியுரைத்திருக்கும் இதில் குறிப்பாக இராமாவதார நிகழ்ச்சிகள் தொனித்தறியவுள்ளன. என்னே உண்மை? எனின், பின்னே காண்க.

தசரதன் இறந்துபோனவுடன் இராமன் வனம் போயிருந்தமையால் கோசலதேச முழுவதும் கொழுகொம்பு இல்லாத

கொடிபோல் அல்லல் பல அடைந்து அலமந்து கிடந்தது. அத லால் பின்னே நிகழவுள்ள அந்த அவலநிலை, தன்னை யறியாமலே மன்னன் வாயில் "எற்பின் வையகம் மறுகுறும்" என்று முன்ன தாக இன்னவாறு மூண்டு முளைத்த தென்க. பேரிழவாய்ப் பின்பு விளையும் விளைவுகளுக்கோர் மூலமூலையை இம்மொழியுள் மூடியிருக்கும் திறம் நாடியறியின் கவியின் நயனும் வியனும் நன்கு புலனும்.

இங்ஙனம் தொனி நுட்பமுடைய மொழிகளும் கவிகளுமே காவியங்களுக்குச் சீவியங்களாயுள்ளன. இந்த வகையில் முந்தைய கவிஞரெவரினும் கம்பர் முந்தி நிற்கின்றார். பிறர் பெரிதும் வருந்தி அரிதில் காணும் நயங்களை இவர் உல்லாசமாக எளிதில் உதிர்த்துச் செல்கின்றார். இவரது சொல்லும் பொருளும் உள் ளுந்தோறும் உணர்வின்பங்கள் பெருகி உள்ளங்குளிர ஒளி செய் துள்ளன.

பிள்ளைப்பேறு வேண்டும் என்று உள்ளம் கருதி யுள்ளதை அரசன் உரையால் உலகில் வெளிப்படுத்தி யிருக்கும் இந்தக் கவி யின் சாதுரியத்தையும் மாதுரியத்தையும் வியந்து மகிழ்ந்து கொள்ளாமல் எந்த உள்ளந்தான் அயர்ந்துஒதுங்கி நிற்கும்? கலா தெய்வத்தின் கருணைப்பிரவாகத்தில் தனி மூழ்கி யிருக்கும் இவரது மேதாவிலாசம் புனித மிகவுடையதாய் மனித சமூகம் திசை நோக்கித் தொழும்படி அதியுன்னத நிலையில் இனிதமர்ந் துள்ளது.

"அறுபதினாயிரம் ஆண்டு" என்றுரே ஒரு மனிதன் அவ்வ ளவு நீண்ட காலமாக உலகில் உயிர்வாழமுடியுமா? என்று ஐயுற நேரின், அவ்வாழ்வைத் தெய்வப்பெற்றியோடு ஒப்பவைத்துச் செப்பம் செய்து கொள்க. மனிதருக்கு ஒரு ஆண்டு தேவருக்கு ஒருநாள் என்ப. அவ் வகையில் திவ்வியநிலையை அடைந்துள்ள இம்மன்னனது அறுபது ஆண்டுகள் மனித சமூகத்திற்கு அறு பதினாயிரம் என்று கூற நேர்ந்ததென்க.

வியப்பும் விம்மிதமும் விளைத்து உயிர்களை உயர் நிலையில் உயர்த்துவதே காவியத்தின் குறிக்கோள் ஆதலால் யாண்டும் தேவியல்பைத் தழுவியே பாவியல்புகள் இந்நாட்டில் நீண்டு ஒழுகி வரலாயின. வரினும் உட்கருத்தையும் உண்மையையும் உய்த்

துணர்ந்து கொள்ளவேண்டும். காவிய மரபுகள் யாண்டும் கலை நலம் சுரந்துள்ளன. உலகம் துதிசெய்து கொள்ளும்படி அதிசய நிலைகள் பல அமைந்து புதுமை ஒளிவீசி அவை பொலிந்து விளங்குகின்றன. அவற்றின் போக்கும் நோக்கும் உயிர்கட்கு ஆக்கம் பயப்பதிலேயே ஊக்கியுள்ளன.

வேறு யாரையும் குறியாமல் அருந்தவ முனிவரையும் அந்த ணரையும் விதந்து குறித்தது அவர்தம் பெருந்தகவுகளை நினைந்து. சித்த சுத்தியும் உத்தம ஒழுக்கமுமுடைய அவர் இனிது வாழ்வது ஒரு நாட்டிற்குப் பெரிதும் நலம் ஆதலால் அந்த நன் மையைப் பாதுகாத்து வந்த அரசின் தன்மை தெரிய நின்றது.

„ மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனின் இன்றால்.'' (மணிமேகலை)

" அருந்திறல் அரசர் முறைசெயின் அல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச்சிறவாது.''
(சிலப்பதிகாரம்)

எனவரும் இவற்றால் அரசு காவலின் நிலைமை அறியலாம்.

களையை அகழ்ந்தொதுக்கிப் பயிரை உழவன் பாதுகாத்தல் போல் தீயோரை இகழ்ந்தொழித்து நல்லோரை மன்னன் நயந்து காப்பன் என்க. அரசனுக்குக் காவலன் என்று ஒரு பெயர். பூவுலகத்தை அவன் பாதுகாக்கும் செயலும் இயலும் தெரிய அப்பெயர் அவனுக்கு உயர்வாக வந்தது.

துட்ட நிக்கிரகமும், சிட்டபரிபாலனமும் அரசர்க் குரியன; அவற்றுள் ஒன்றைமட்டும் இங்கே குறித்தது, கோசல நாட்டி லுள்ள குடிகளெல்லாருமே நல்ல கல்விமான்களாதலால் அங்கே கடிந்தொதுக்கத்தக்க கொடியர் எவரும் இல்லை என்பதை உய்த் துணர என்க.

தன் பொருட்டுப் பிள்ளையை வேண்டாமல் உலக நன்மைக்கே மன்னன் வேண்டி யுள்ளமையால் வேண்டப்பட்ட அப்பிள்ளை வேண்டியபடியே அகில மங்கள குணகணங்களுடன் உலக மெல் லாம் காக்க உருவாகி வந்தது. பின்னால் வரவுள்ள அப்பெரு வரவை உணர்த்தி முன்னால் வந்துள்ள அரசரை கவலை நிலையில் கதித்து எழுந்துள்ளமையால் அதன் தவநிலைமையைத் தனியே சிந்திக்க வேண்டும்.

தசரதன் இங்ஙனம் விநயமுடன் கூறிய இனிய வார்த்தைகளைக் கேட்டதும் வசிட்டர் உளமிக உருகினர். அவர் அரிய தவவொழுக்கத்திற் சிறந்தவராதலால் அரசனது மன நிலையையும், கால நிலையையும் கருதி ஆராய்ந்தார். அந்த உரை நிகழ்ந்த பொழுது தம் உள்ளத்துள்ளே ஓர் ஒளியும் உணர்ச்சியும் தழுவி எழுந்தன. இன்ப சூசகமான அந்த எழுச்சியை நினைந்து சிறிது பொழுது மௌனமுடனிருந்து பரமனைத் தியானித்தார். ஞானமயமான அம் மோனக் காட்சியில் வானும் வையமும் உய்ய ஒரு தேவரகசியம் தோன்றியது. தொடர்ந்து நோக்கினர்: சில காலங்களுக்கு முன்பு அரக்கர்கள் ஆற்றிய கொடுமைகளைப் பொறுக்க முடியாமல் தேவர்கள் செய்த வேண்டுகோளுக்கு இரங்கித் திருமால் இந்நிலவுலகில் வந்து அவதரிப்பதாக உறுதி கூறியிருந்தார். அன்று அப்பரமன் அருளிய திருமொழிகள் அடியில் வருவன.

திருமால் திருவாய் மலர்ந்தது.

" வானுளோர் அனைவரும வானரங்களாக்
கானினும வரையினும கடிதடத்தினும
சேனையோ டவதரித் திடுமின் சென்றென
ஆனன மலர்ந்தனன அருளின் ஆழியான் : 1

" மசரத மனையவர் வரமும் வாழவுமஓா
நீசரத கணைகளால நீறுசெயய யாம
கசரத துரகமாக கடலகொள் காவலன்
தசரதன மதலையா வருதும தாரணி ; 2

" வளையொடு திகிரியும் வடவை தீதர
விளைதரு சுடுவுடை விரிகொள் பாயலும்
இளைஞாகள் எனஅடி பரவ ஏகிநாம
வளமதில அயோத்தியில் வருதும் என்றனன." 3

1. இராமனுக்குப் படைத்துணையாய் வந்த வானரங்களெல்லாம் தேவர்களே என்பது இதனால் அறிந்தோம்.

2. மசரதம்—பேய்த்தேர்: கானல் நீர்போன்ற மாயவாழ்க்கையுடைய தீயவர்கள் திமிரை நான் வந்து மாய நூறுகின்றேன். அங்ஙனம் வருங்கால் தசரதன்மகனைத் தோன்றுவேன் என்பதாம். இன்னவாறு முன்னதாகத் தீர்மானித்துள்ளதை மன்னன் அறியான் ஆதலால் அவன் மகப்பேறுகருதி மகம்புரிந்தான். தெய்வம் உவந்துதரக் கைநீட்டி நின்றும் அதனை அடைய மனிதனும் தகுதியான வினைசெய்ய வேண்டும்.

என்றும் உண்மையும் இதில் உய்த்துணரவுள்ளது. இக்கரும பூமியின் கருமவகையும் தருமநிலையும் இதனால் இனிதறியலாகும்.

3. சக்கரம் சங்கு அரவணை திருமாலின் அங்கங்கள் ஆதலால் அப்பெருமான் இங்கே அவதரித்த பொழுது அவை முறையே பரதன் சத்துருக்கன் இலக்குவன் என வந்து இராமனுக்குத் துணைகளாய் நின்றன என்க.

இந்தப் பரம ரகசியத்தைத் தமது ஞானநோக்கினால் வசிட்ட முனிவர் அறிந்ததும் உள்ளம் பூரித்து உவகைமீக் கூர்ந்தார். ஆயினும் இந்த உண்மையை மன்னனிடம் வெளிப்படையாக ஒன்றும் சொல்லாமல் வேறுபல நீதிகளை இயம்பித் தேறுதலாக ஆறுதல்கூறி, "அரசே! நீர் யாதும் கவலவேண்டாம்; இறைவன் விரைவில் அருள்புரிவான். கருதிய நலங்களைக் கருமமும் தருமமும் உயிர்களுக்கு உறுதியாயுதவும்; புண்ணிய சீலராகிய நீர் எண்ணிய படியே எல்லாம் எய்தி மகிழ்வீர்! புத்திரகாமேட்டி என்னும் யாகம் ஒன்றை இப்பொழுது நீர் உடனே செய்யவேண்டும்; அங்ஙனம் செய்யின் இந்த மண்ணுலகம் மட்டும் அன்று விண்ணுலகமெல்லாம் விழைந்து போற்றும் சிறந்த புதல்வர்கள் உமக்குப் பிறந்தருளுவர்; அந்த அருமை மக்களால் நீர் அடையும் பெருமைகள் அளவிடலரியன. அகில உலகங்களும் அவரால் உவகையில் உயரும்; இதனை உண்மையாக நம்பும்; விரைந்து வேள்வி செய்யும்" என இன்னவாறு முனிவர் சொன்னவுடனே மன்னன் பெருமகிழ்ச்சியடைந்தான். உளமலியன்போடு உரிமைமிகுந்து உவகையுரை யாடினன். "ஞானசீலரான தேவரீரைத் துணையாக அடைந்துள்ள எனக்குக் கிடையாத பொருள் யாது? யாவும் எளிதில் அடைந்து நிலம்புரத்தலாகிய என்குல உரிமையைத் தேவர் அருள்வழியால் இதுவரை நலம்பெறச் செய்துவந்தேன்; இன்னும் அவ்வாறே செய்துவர இன்னருள்புரிக; என்குலம் தழைக்க வந்த தேவரது நலம் தழைத்த மொழிகளால் இன்று நான் உளம் தழைத்துள்ளேன். சுட்டிய வேள்வியைச் செய்யத் துணிகின்றேன். வேண்டிய பொருள்கள்யாவும் ஈண்டியுள்ளன. அடிகளே நாயகமாய் நின்று அந்தப் புனித யாகத்தை இனிது முடித்தருள வேண்டும்" என்று மன்னன் முடிவணங்கி வேண்டினன். முனிவர் இன்னருள் புரிந்து இனிது நோக்கி, "மன்னர் மன்னவ! சொன்ன அவ்வேள்வியை என்னால் ஆற்ற இயலாது;

அது அருமை மிகவுடையது ; தெய்வத்தன்மை மிக்கது. அதனை நலமுறச் செய்ய வல்லவர் இந்நிலவுலகில் ஒருவரே உளர். அவர் அருந்தவக் குரிசில் ; விபாண்டகன் என்னும் பெருந் தவசியினுடைய அருமைப் புதல்வர். ஐம்பொறி யடக்கியவர் ; நிலை திரியாத நெடிய யோகி. உலகநிலை ஒன்றும் தெரியாதவர்; என்றும் ஆன்ம நிலையிலேயே அழுந்தி யிருப்பவர். ஞான சூனியர்களாயிருத்தலால் உலகிலுள்ள மானுடங்களை யெல்லாம் இருகால் விலங்குகள் என ஒருகால் எண்ணி யிருந்தவர். அப்பெரியாரைக் கொண்டுவந்து யாகத்தைப் பூர்த்திசெய்தால் அரியபுத்திரப்பேறு உடனே உண்டாம்" என்று உறுதிமொழி புகன்றார். அன்று அவர் கூறிய உரைகள் கம்பரது சீரிய கவிகளில் வீரியமுடன் விளங்குகின்றன. அடியில் வருவன காண்க.

கலைக்கோட்டு முனிவர் நிலை

" மாசறு சுரர்களோடு மற்றுளோர் தமையும் ஈன்ற
காசிபன் அருளும் மைந்தன் விபாண்டகன் கங்கைசூடும்
ஈசனும் புகழ்தற்கொத்தோன் இருங்கலை பிறவும் எண்ணில
தேசுடைத் தந்தை ஒப்பான் திருவருள்புனைந்த மைந்தன்; 1

" வருகலை பிறவும் நீதிமனுநெறி வரம்பில வாய்மை
தருகலை மறையும் எண்ணில சதுமுகற்குவமை சான்றோன்
திருகலை யுடையஇந்தச் செகத்துளோர் தன்மை தேரா
ஒருகலை முகச்சிருங்க உயர்தவன் வருதல வேண்டும். 2

" பாந்தளின் மகுடகோடி பரித்த பாரதனில வைகும்
மாந்தரை விலங்கென்றுன்னும் மனத்தன் மாதவத்தன்எண்ணில்
பூந்தவி சுகந்துளோனும் புராரியும் புகழ்தற் கொத்த
சாந்தனல் வேள்விமுற்றின் தனயர்கள் உளராம் என்றான்" 3

கலைக்கோட்டு முனிவரைக் குறித்துத் தசரதரிடம் வசிட்டர் உரைத்துள்ள இந்த வாசகங்களில் தெய்வவாசனையும் தவமணமும் கமழ்ந்திருக்கின்றன. சரிதச்சுருக்கம், உருவத்தோற்றம், தவத்திறம், மனப்பான்மை முதலியன உணருந்தோறும் உவகையும் வியப்பும் ஓங்கிவருகின்றன. முனிவரது நெற்றியின்மேல் சிறிய கலைமான் கொம்பு ஒன்று முளைத்திருந்தது ; இளம்பிறைபோல் நீண்டு உச்சியில் கிளைத்து அது ஒளிசெய்து நின்றது. மனித

முகமும் கலைமான் தோற்றமும் கலந்திருந்தமையால், "ஒரு கலை முகச் சிருங்க உயர்தவன்" என்றார். சிருங்கம்=கொம்பு. வடமொழியாளர் இவரை ருசிய சிருங்கர் என்பர். ருசியம்=மான். கலைமான்கொம்பினைத் தலையில் கொண்டுள்ளவர் என்னும் காரணம் பற்றி இப்பெயர் வந்தது.

பலவகைக் கலைகளிலும் வேதத்திலும் நீதிநெறிகளிலும் தவயோகங்களிலும் நிறைவுற்று உலக நிலை யாதும் ஓராமல் தனியே இவர் ஒதுங்கியிருந்தார் என்பதும், சிவபெருமானும் பிரமனும் வியந்து புகழத்தக்க பொறுமையுடையவர் என்பதும், அரிய தெய்வப்பெற்றிகள் பல அமைந்து அருந்தவரெவரும் பணிந்து போற்றத்தக்க பெருந்தவராய் விளங்கியிருந்தார் என்பதும் இந்த முனிவரைப்பற்றி இங்கே நாம் அறிந்துகொண்டோம்.

"மாந்தரை விலங்கு என்று உன்னும் மனத்தன்" என்றதனால் உலகமக்களைக் குறித்து இவர் எண்ணியிருந்த உண்மையும், இவரது தன்மையும் உணரவந்தன. மக்களை மிருகங்கள் என்று கருதியது இகழ்ச்சியினாலன்று; அவருடைய இயல்புகள் யாதும் தெரியாமல் அயலே அகன்றிருந்தமையான் என்க. காடே வாழ்க்கையாய் யாண்டும் புறநோக்கமின்றி என்றும் ஆன்ம நிலையிலேயே அழுந்தியுள்ளமையால் உலகநிலை தெரியாது போயது. "திருகலையுடைய இந்தச் செகத்துளோர் தன்மைதேரா உயர்தவன்" என்றதனால் இவ்வுண்மையுணரலாகும். திருகல்=மாறுபடுதல். உலகையும் மக்களையும் ஒருங்கே நோக்கி இத்திருகல் அடை உருவாகிவந்தது. நிலையற்றது எனச் செகத்தையும், ஒரு நிலையின்றி மாறுபட்டுழல்பவர் என மனிதரையும் சுட்டிநின்றது. உருட்டும் புரட்டும் செய்பவனைத் திருகுதாளக்காரன் என்பர். இருபாலும் பெரும்பாலும் திருகலையுடையனவாய் வருதலால் அவ்வாறறிய இவ்வுரை வந்தது. முனிவர் முன்னம் உன்னியிருந்ததும், கம்பர் உலகரை எண்ணியுள்ளதும் இங்கே ஒருங்கே காண வந்தன. திருகுகின்ற அலைகளையுடைய கடல்சூழ்ந்த உலகம் எனவும் பொருள்படுமாயினும் இந்தத்திருகலுரை மனுக்களின் மறுகலையே குறித்து நின்றது.

நாட்டுமக்களைக் காட்டு மிருகங்களாகவே கலைக்கோட்டு முனிவர் கருதியிருந்தார் என்றது அவரது கள்ளமறியாத உள்ள

நிலையை உணர்த்த என்க. பிள்ளையுள்ளம் போல் இப்பெரியார் உள்ளம் பேதம் ஒன்றும் தெரியாதிருந்ததென்பர்.

"பாலரொடு பேயர் பித்தர் பான்மையென நிற்பதுவே
சீலமிகு ஞானியர்தம் செய்கை."

என்றபடி இச்செய்தவர் இருந்தார். உலகத்தின் பேதாபேதங்களை ஒரு சிறிதும் உணராமல் அபேத நிலையிலேயே பெரிதும் இவர் ஆழ்ந்திருந்தார் என்பதை இவ்வாறு அழகாகவும் தெளிவாகவும் விளக்கியிருக்கிறார். பின்னும் ஓரிடத்தில் நகைச்சுவை ததும்ப இதைவிட நயமாகக் கூறியிருக்கின்றார். என்னை அது? எனின், முன்னே வருவது காண்க.

மங்கையர் பின்னே முனிவர் வந்தது

"சிலைக்கோட்டு நுதற்குதலைச் செங்கனிவாய்க் கருநெடுங்கண்
விலைக்கோட்டும் பேரல்குன் மின்னுடங்கும் இடையாரை
முலைக்கோட்டு விலங்கென்றங் குடனாணுகி முன்னின்ற
கலைக்கோட்டுப் பெயர் முனியால துயர்நீங்கக் கருதினான்"

இது சனக மன்னனிடம் விசுவாமித்திரர் கூறியது. இராமனது வரலாற்றைக் கூறி வருங்கால் முதலில் இது கூற நேர்ந்தது.

ருசிய சிருங்கர் வரலாற்றில் இது மிகவும் உருசியுடையது.

உரோமபதன்

உரோமபதன் என்னும் மன்னன் ஒருவன் அந்நாள் இருந்தான். அங்க தேசம் அவனுடையது. அவன் நாட்டில் ஒரு காலம் மழை பெய்யாது நின்றது. குடிகளெல்லோரும் மறுகி வருந்தினர். அரசன் கவன்றான்; யாது செய்வது? என அலமந்தயர்ந்து தானங்கள் பல செய்தான். செய்தும் வானம் வழங்கவில்லை. அமைச்சரை வினவினான்; யாதும் அமையாது போயது. முடிவில் சுதாமன் என்னும் பெரியார் எதிர்ப்பட்டார். "கலைக்கோட்டுமுனிவரை இங்கே அழைத்துவரின் உடனே இந்நாட்டில் மழைபெய்தருளும்" என்றார். மன்னன் கேட்டு மகிழ்ச்சியடைந்தான். அவரைக் கொண்டுவருவார் யார்? என்று குறிக்கொண்டு ஆராய்ந்தான். எதையும் எதிர்பாராமல் எவரையும் மதியாமல் உலகினை வெறுத்து ஒதுங்கியிருக்கின்ற அம்முனிவரை நாட்டுக்குள் அழைத்துவருவது அரிது என்று தெரிந்து அவலமீக்கூர்ந்தான். அக் கவலையை யறிந்து அயலே நின்ற தருண மங்கையர்

இருவர் அரசன் முன்வந்து அடிபணிந்து "நாங்கள் போய்க் கொண்டு வருகின்றோம்." என்று துணிந்து மொழிந்தார். இளங் குமரிகள் புகுந்து இனிது மொழிந்த இக்தக்காட்சியைக் கம்பர் கவிப்படத்தில் அழகொழுகத் தீட்டிக் காட்டியிருக்கிறார். காணுங்கள்:

மங்கையர் மொழிந்தது

"ஓதநெடுங் கடலாடை யுலகினில்வாழ் மனிதர்விலங் கெனவே யன்றும்
கோதில்தவத் தருந்தவனைக் கொணர்நம்வகை யாவதெனக் குனிக்கும் வேலை
சோதிநுதற் கருநெடுங்கட் டுவரிதழ்வாய்த் தரளநகைத் துணைமென் கொங்கை
மாதரொருவர் யாமேகி அருந்தவனைக் கொணர்துமென வணக்கம் செய்தார்.

மன்னன் மகிழ்ந்தது

ஆங்கவரம் மொழிபுரைப்ப அரசன்மகிழ்ந் தவர்க்கணிதூ சாதி யாய
பாங்குளமற் றவையநளிப் பனிப்பிறையைப் பழித்தநுதற் படைத்த வேய்த்தோள்
ஏந்திமிடை தடித்தமுலை இருண்டகுழல் மருண்டவிழி இலவச் செவ்வாய்ப்
பூங்கொடியீர்! ஏகுமெனத் தொழுதிறைஞ்சி இரதமிசைப் போயினரே."

(திருவவதாரப் படலம், 38, 39)

மன்னன் இன்னவாறு உவந்தனுப்ப மங்கையர் இரதமேறிச் சென்றார். பின்னர் நிகழ்ந்தது என்ன? என்பதைப் பின்னே பார்க்கலாம். முன்னதாக அவர் முனைந்து வந்தது காண்போம்.

யாரும் செய்யமுடியாத காரியத்தை நாங்கள்போய்ச் செய்து வருகின்றோம் என்று பெண்கள் இருவர் துணிந்து புகுந்ததும், அரசன் மகிழ்ந்து அவர்க்குப்பரிசில் பல தந்து முகமனுரைகூறித் தேர் முதலிய வரிசைகளுடன் அவரைச் செல்லவிடுத்ததும், கவியின் சொல்லாட்சிகளும் இதில் உல்லாசமான உவகைக் காட்சியாய் உள்ளன. காரிய சாதனையில் மூண்டுநின்ற மங்கையருடைய உருவ எழிலை முனிவர் வாயாலும், அரசன் வாயாலும் மிகவும் இரசமாக விளக்கியிருக்கிறார். பொருளைக் கருதாமலே

சொல்லழகுகளை நோக்கியே இக்கவிகளைப் பலமுறையும் படிக்கத் தோன்றும். படித்துப்பாருங்கள்; செவிக்கும் வாய்க்கும் இனி யனவாய்ச் சிந்தையில் இனிப்பது புலனும்.

மனிதரை விலங்குகள் என்று எண்ணும் தனி இயல்பு முனி வரிடம் முனைந்திருந்தமையால் அதனை இங்கும் நினைந்து குறித் திருக்கிறார். கோது இல் குணம் என்றது குற்றமற்ற பண்புகளை. அவையாவன அருள் அடக்கம் பொறுமை வாய்மை முதலிய குணநலங்கள். காமம் வெகுளி மயக்கம் முதலிய தீமைகள் யாது மின்றிச் சத்துவகுண சம்பன்னராய் உத்தமமான தவநெறியில் உயர்ந்திருந்தார் ஆதலால், "கோதில் குணத்து அருந்தவன்" என்றார். ஆகவே இம்மாதவர் மகிமை நன்கு அறியலாகும்.

இத்தகைய முனிவரை அழைத்துவரச்சென்ற அந்த அழகி கள் அங்கே புரிந்த வித்தகச்செயல்கள் மிகவும் வியப்பிற்குரியன.

தேர் ஏறிச் சென்ற அவர் நெடுவழி கடந்து முனிவர் வசிக் கும் தவ வனத்தையடைந்தார். உடனே நேரே நெருங்காமல் இரண்டு நாழிகை வழியளவில் அயலே தங்கி அங்கே ஒரு குடிசை அமைத்தார். இலை தழை கொடிகளால் அழகுறப் புனைந்து அதனை இனிய பன்னசாலை ஆக்கினர். தாம் உடுத்தியிருந்த சிறந்த உடை அணிகளை ஒருங்கே களைந்து ஒதுக்கிவைத்துச் சிவந்த ஆடை அணிந்து, கூந்தலை உச்சியில் முடியாகச் சுற்றிக் கட்டி, உடல் முழுவதும் வெண்ணீறு பூசி அரிய தவயோகிகள் போல் அமர்ந்து உரிய சமயத்தை எதிர்நோக்கியிருந்தார். "முனி வரை எவ்வாறு காண்பது? என்னவிதமாய்ப் பேசுவது? எப்படி வசப்படுத்துவது?" என இப்படிப் பற்பல நினைந்து விற்பனமுட னுறைந்தார். முனிவருடைய தந்தையார் விபாண்டகர் என்பவர் பெரிய தவசியாயினும் புத்திரவாஞ்சையால் எப்பொழுதும் அவ ரோடு இனிதமர்ந்திருந்தார். உலகை மறந்துள்ள பிள்ளையை உள்ளம் மறவாமல் உரிமைகொண்டு அவர் உடனுறைந்துள்ளதை யறிந்து இவர் உள்ளங் கவன்றார். அவர் இல்லாதிருக்கும் சமயத்தை என்றும் எதிர்பார்த்து நின்றார். பிரியமுடைய அவர் பிரிய நேர்வதை நுணுகி ஆராய்ந்து வருங்கால் ஒரு நாள் இயல் பாக அவர் அயலகல நேர்ந்தது. உடனே விரைந்து இவர் முனி வர் சாலையை நவீனமான நிலையில் மிகவும் விநயமாக அடைந்தார்.

இனிய தவப்பொலிவுடன் வந்த இவரைக் கண்டதும் முனிவர் உவப்பு மீக்கொண்டார். உபசரித்து இருக்கப் பணித்தார். இவர் சிலோகம் என்று இருந்தார். எல்லாரையும் மிருகங்களாகவே எண்ணும் இயல்பினையுடைய அவர் இவரையும் அவ்வாறே கருதி மேலும் ஒரு விசேடக் காட்சி கண்டார். மார்பில் பணைத்திருந்த தனங்களை இரண்டு கொம்புகள் என்று நினைந்துகொண்டார். தனக்குத் தலையில் ஒரு கொம்பு கிளைத்துள்ளது; இவர்க்கு மார்பில் இரண்டு முளைத்துள்ளன என உள்ளத்துள் எண்ணித் தகுதியான இனமென்று மிகுதியாகப் பாராட்டினார். முனிவர் இவ்வாறு அன்புரிமை கொண்டாடினும் இவர் அமைதியாகவே யிருந்து செவ்வாய் திறந்து சில மொழி பகர்ந்து விரைந்து விடைபெற்று மீண்டுவந்தார். அவரது தந்தையார் விபாண்டகர் எங்கே வந்துவிடுவாரோ என்று இங்ஙனம் அஞ்சி மீண்ட இவர் மீண்டும் மூன்று தினங்கள் கழித்து அவரில்லாத சமயம்பார்த்து, வெல்லப் பாகில் செய்த நல்ல பண்டங்களுடன் இனிய பல கனி வகைகளையும் சேர்த்து எடுத்துக்கொண்டு முனிவரிடம் போனார். அவர் பிரியமுடன் கண்டார். பழம் முதலிய பண்டங்களை இவர் பணிந்து கொடுத்தார். அவர் உவந்துகொண்டார்; புதிய சுவை கண்டார்; உள்ளம் களித்தார். தம் கள்ளம் அறியாவகை வல்லன சில பேசி இவர் மெல்ல மீண்டார். சடைமுடி மரவுரி முதலிய தவவேடங்களுள் மறைந்திருந்தாலும் அழகிய இளங்குமரிகள் ஆதலால் இவருடைய முகப்பொலிவு முனிவர் கண்முன் முனைந்து நின்றது. இனிய தவநிலையர் என இவரை அவர் நினைந்திருந்தார். சில நாள் தீர்ந்தபின் மறுபடியும் இவர் உரிமையுடன் முனிவரிடம் வந்தார். முன்பினும் இன்புறு பொருள்களை அன்பொடு தந்தார். அவர் இன்பமீதூர்ந்தார். அந்த உள்ளக் களிவை உணர்ந்து கொண்டு அவருடைய திருவடிகளில் நெடிதுபணிந்து, "தேவரீர்! அடிமைகளுடைய குடில் வரையும் இன்று எழுந்தருளவேண்டும்; பன்னாளும் எதிர்பார்த்திருந்தோம்; இந்நாள் நன்னாளாயுள்ளது; நயந்தருளவேண்டும்" என்று இன்னவாறு இவர் குழைந்து வேண்டினர். வேண்டவே சூது வாதுகள் யாதும் அறியாத அம்மாதவர் இசைந்தார். எழுந்தார். இவர் உவந்தழைத்து உடன் கொண்டுபோனார். போகப்போக வேகம் மிகுந்தது; ஏகமாய் வழி எதிரே நீண்டது. "உங்கள் தவச்சாலை எங்கே உள்ளது?"

என்று ஏதும் கேளாமலே மாதவரென நினைந்து இம்மாதர்பின் அவர் ஆதரவுடன் வந்தார். தம் கள்ளம் தெரிந்திடின் கடுத்துச் சபித்துவிடுவரோ என்று உள்ளம் பதறினும் உறுதிமிக உடையராய், "எங்கள் குடிசை அதோ உள்ளது; இதோ வந்துவிட்டோம்" என வழிநடை தெரியாவகை வழிபாடுகள் புரிந்து இனிய சாகசங்களுடன் முனிவரை இவர்கடிது அழைத்து வந்தார். டாவம்' விரகொன்றும் அறியாத அவர் விரைந்து நடந்தார். தான் வளர்த்த கலைமான் ஒரு வளர்ப்புக்காரன் பின் வளைந்து வருதல் போல் இவர் பின் அவர் தொடர்ந்து வந்தார். காடு கடந்து நாடு புகுந்தும் அவர் வேறுபாடு கண்டிலர்; வஞ்சமற்ற அந்நெஞ்சு நிலையைக் கண்டு இவ்வஞ்சியரும் அஞ்சினர். அஞ்சினும் காரிய சித்தி கருதிக் களித்துவந்தார். முனிவர் மன்னன் நகரருகு வரவே என்ன ஆச்சரியம்! எங்கும் கவிந்து மழை பொங்கிப் பொழிந்தது. அப்பெயல் இயல்பைக் குறித்துவரும் கவி அடியில் வருவது.

பெரியவர் வரவும் பெருமழை பெய்தது.

"வளநகா் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கருகி வான்முகில்
சளசள எனமழைத் தாரை கான்றன
குளநெடு நதிகள்தம் குறைகள் தீரவே."(திருவவதார-46)

கலைக்கோட்டு முனிவர் அரசனுடைய நகரமாகிய சண்பையின் அருகு வரவும் அங்கு தேசம் எங்கணும் மழைபெய்த நிலையை உரைத்த படியிது. கான்றன=சொரிந்தன.

சளசள என்றது அந்த மழை பொழிந்தபொழுது அங்கே நிகழ்ந்த ஒலி நிலையை உணர்த்தி நின்றது. இது ஒலிக்குறிப்பு. உருப்படியான பொருள் நேரே ஒன்றுமின்றி ஒலிக்குறிப்பால் பொருள் நிலைகளை உணர்த்திவரும் மொழிகள் தனித்தனியே பிரிந்து வரா. இரண்டு சொற்கள் இணைந்தே யாண்டும் பயின்றுவரும். பிரித்து உரைத்தால் பொருட் குறிப்பைப் புலப்படுத்தாது ஆதலால் இது இரட்டைக்கிளவி; இதனைப் பிரித்துக் கூறலாகாதென்று இலக்கண நூலார் விதித்திருக்கின்றனர்.

"இரட்டைக்கிளவி இரட்டிற் பிரிந்திசையா" (தொல்காப்பியம்) என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். கிளவி=சொல்.

மொழிகள் வழங்கி வருவதைக் கண்டு விதிகள் விளங்கி வருகின்றன என்பதை இதனால் அறிந்துகொள்ளலாம். இக் குறியிட்டு வழக்கம் நூல் வழக்கிலும், உலக வழக்கிலும் பண்டைக் காலந் தொட்டே பயின்று வருகின்றது.

"சலசல மும்மதம் சொரிய" (சிந்தாமணி, 82)
"களகள முழங்கும் வேழம்" (சிந்தாமணி, 806)
"சலசல மிழற்றும் சாய விகற்பமும்" (பெருங்கதை 1, 32)
"குறுகுறு நடந்து சிறுகை நீட்டி" (புறம், 182)
"கலகல கூஉம்" (நாலடியார் 140)

என வருவன காண்க. "சளசள என்று இவன் என்ன ஓயாமல் பேசுகின்றான்?" எனப் பொது மக்கள் வழங்கி வருதலும் அறிக. இந்த வழக்கச் சொல்லைக் கம்பர் இங்கே அழகாகக் கையாண்டிருக்கிறார். சளசள என்னும் இக்குழுமொழி அன்று பெய்த மழையின் மிகுதியை இன்றும் ஒலித்து உணர்த்திக்கொண்டே யிருக்கிறது. ஒலி நிலைகள் பலவகையின.

"களகள உதிர்ந்தது கயற்கண் ஆலியே."
(பாலகாண்டம், உண்டாட்டு 29)
"தண்டிகை யிருந்தநீ நம் கோளகோள கொதித்ததன்றே,"
(வருணனைவழி வேண்டுபடலம், 61.)
"கொண்டைத் தடங்கணாள் உள்ளே கிளுகிளுத்தாள்"
(மாயாசனகப்படலம் 87)

இரட்டைக் கிளவியை இன்னவாறு பின்னரும் தம் காவியத்துள் கவி இசைத்திருக்கிறார். இடங்கள்தோறும் அது குறித்து நிற்கும் ஒலி நலங்களை உய்த்துணர்ந்து கொள்க.

இதில் மேகத்திற்குக் குறித்திருக்கும் உவமை கூர்ந்து சிந்திக்கவுரியது. களன்=கழுத்து. கடு=விடம்.

வானவன் களன் அமர் கடு என முகில் கருகி என்றது சிவபெருமான் கண்டத்தில் தங்கியுள்ள நஞ்சைப்போல் மேகம் கருமை நிறம் அடைந்து என்றவாறு.

நீர் உண்டு சூல்கொண்ட கார்மேகத்திற்கு ஒப்புக்கூறக் கருமைநிறமுடைய அருமையான பொருள்கள் எவ்வளவோ இருக்கவும், அவற்றையெல்லாம்விடுத்து இங்கே விடத்தை உவமை குறித்தது அதன் இடத்தையும் இயல்பையும் பயனையும் எண்ணி என்க. உள்ளுறை நயங்களை நன்ருக ஊன்றி அறிந்துகொள்க.

ஒரு காலத்தில் கடலிலிருந்து ஆலகாலம் என்னும் கொடிய விடம் கொதித்தெழுந்தது. அதன் தீயவேகம் அகிலவுலகங்களும் மாயும்படி எங்கும் மண்டிப் பரவியது. தேவர் முதல் யாவரும் குய்யோ முறையோ என்று கூவி ஐயோ சிவனே! என்று அப் பரமனிடம் வந்து அடைக்கலம் புகுந்தார். அப்பெருமான் அனைவருக்கும் ஆதரவுகூறி அவ்வெய்யவிடத்தைக் கையில் ஒடுக்கி உடனே உண்டு தன் கழுத்தில் நிறுத்தினன். நிறுத்தவே சாதலும் நோதலும் நீங்கி எல்லா உயிர்களும் இனிதுவாழ்ந்திருந்தன. செந்நிறத்திருமேனியனான அப்புண்ணிய மூர்த்தியின் கண்டத்தில் அந்நஞ்சுக்கறை நன்கு கறுத்து நீலமணிபோல் நிலவி நின்றது. அந்நிலையினை மேலோரெல்லாரும் வியந்து புகழ்ந்திருக்கின்றனர். தான் துயருறினும் பிறவுயிர்கள் இன்புறச்செய்த அவ் வுயரியல்பினை உலகம் என்றும் உள்ளம் உருகி உணர்ந்துபோற்றி வருகின்றது. “அன்று அவன் ஆலம் உண்டான் அகிலமும் அதனுல் இன்று, நின்றிடலான” என்றதனுல் அதன் நிலை தெரியலாகும்.

“நீல மணிமிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே.” (புறம் 91)

எனத் தன்னலங் கருதாமல் தனக்கு நெல்லிக் கனிதந்த நல்வியல்பை நினைந்து அதிகமானை நோக்கி ஒளவையார் இங்ஙனம் வாழ்த்தியிருக்கிருர்.

வேறு மந்திரம் யாதும்செபியாமல்இந்த நீலகண்டத்தையே நினைந்து வந்தமையால் ஓர் அடியவர் திருநீலகண்டர் எனநின்றுர்.

“புவனங்கள் உய்ய ஐயர் பொங்கு நஞ்சுண்ண யாம்செய்
தவமின்று தடுத்ததென்னத் தகைந்துதான் தரித்ததென்று
சிவன் எந்தை கண்டம் தன்னைத் திருநீலகண்டம் என்பார்”
(பெரிய புராணம்)

நீலகண்டத்தால் ஞாலம் உய்ந்திருக்கும் நிலைமையை இது குறித்திருத்தலறிக. புவனங்கள் = அண்டத்தொகுதிகள்.

“விண்ணோர் அமுதுண்டும் சாவ, ஒருவரும்
உண்ணுத நஞ்சுண்டிருந்தருள் செய்குவாய்”
(சிலப்பதிகாரம், 12)

"கோலாலம் ஆகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த
ஆலாலம் உண்டான் அவன் சதுர்தான் என்னேடி?
ஆலாலம் உண்டிலனேல் அன்றயன்மால் உள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் விடுவர்காண் சாழலோ."
(திருவாசகம்)

"மாலெங்கே வேதனுயர் வாழ்வெங்கே இந்திரன்செங்
கோலெங்கே வானோர் குடியெங்கே—கோலம்சேர்
அண்டமெங்கே அவ்வவ் அரும்பொருள்எங் கேகினது
கண்டமங்கே நீலமுறாக் கால." (அருட்பா)

"வானவர் இந்திரன் இந்திரை கேள்வன் மறைவிரிஞ்சன்
தானவர் என்று புகல்வதுண்டோ? சமரில் சிலையால்
கானவன்எற்றும் கனவிசர் அன்று கடல்விடத்தைப்
போனகமாக அமுதுசெய்யாவிடிற் பூதலத்தே."
(கருவையந்தாதி)

*"ஆலங் குடியானை ஆலாலம் உண்டானை
ஆலங் குடியான்என் றார்சொன்னார்—ஆலங்
குடியானே ஆயின் குவலயத்தோ ரெல்லாம்
மடியாரோ மண்மீதி லே." (காளமேகம்)

சிவபெருமான் நஞ்சை உண்டதனால் இவ்வுலகில் உண்டாகியுள்ள நலங்களை இன்னவாறு நூல்கள் பலவும் நுவன்றுள்ளன.

உலகுயிர்கள் யாவும் உய்யுமாறு அப்பரமன் கண்டம் இங்ஙனம் கறுத்திருந்தது ஆதலால் அது அங்கநாடு உய்யும்படி பெய்ய வந்த மழைக்கு இங்கே உவமையாய் வந்தது.

காளகண்டத்தோடு காளமேகத்தை ஒப்புரைத்து ஞாலம் இன்புற வந்த அதன் மூல சரித்திரத்தையும், இதன் கோலநிலையையும் உய்த்துணர வைத்திருக்கும் நுட்பம் உவகைக்கு இடமாயுள்ளது. பொருளும் உவமையும் அருள் சுரந்துள்ளன.

---

* இது, திருவாலங்காடு என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் பரமனைக் குறித்துப் பாடியது. ஆலங்குடியான்=கல்லால நிழலில் அமர்ந்து சனகாதியர்க்கு உபதேசம் செய்தவன். இரண்டாவது ஆலங்குடியான் என்றது திருவாலங்காட்டில் கோயில்கொண்டிருப்பவன் என்க. ஆலம் குடித்தானை ஆலங்குடியான் எனச்சொன்னது என்னே! என நயமாகச் சொல்லிப் பயன்விளக்கியிருக்கும் அழகைப் பார்க்க.

இந்த உவமையைப் பின்னும் ஓரிடத்தில் குறித்திருக்கிறார்.

"நண்ணுத லருங்கடல் நஞ்சம் நுங்கிய
கண்ணுதல் கண்டத்தின் காட்சி காணலாய்
விண்ணகம் இருண்டது வெயிலின் வெங்கதிர்
தண்ணிய மெலிந்தன தழைத்த மேகமே."

(கார்காலப்படலம் 3)

கார் காலத்தில் மேகங்கள் பரமனது நஞ்சுண்ட கண்டம் போல் கறுத்து விண்ணில் விளங்கிநின்றன என இதில் வழங்கி யுள்ளமை காண்க.

இவ்வுவமை மாணிக்கவாசக சுவாமிகள் வாக்கிலும் வந்திருக்கிறது. அடியில் வருவது காண்க.

"பூண்பதென்றே கொண்ட பாம்பன் புலியூர் அரன்மிடற்றின்
மாண்பதென்றே என வானின் மலரும் மணந்தவர்தேர்
காண்பதன்றே இன்று நாளையிங்கேவரக் கார் மலர்த்தேன்
பாண்பதன் தேர்குழலாய்! எழில்வாய்த்த பனிமுகிலே."

(திருக்கோவையார், 323)

முகில் அரன் மிடற்றின் வானின் மலரும் என்று கூட்டி நோக்குக. மேகம் கண்ணுதல் கண்டத்தின் விண்ணகம் இருண்டது என்னும் அந்த வாக்கியமும் இந்த வாசகமும் முழுவதும் ஒத்திருக்கும் நிலைமையை ஊன்றி உணரவேண்டும்.

"கருமால்விடையுடையோன் கண்டம்போல் கொண்டல் எண்டிசையும், வருமால்" (திருக்கோவையார், 326)

"அற்படு காட்டினின் றாடிசிற் றம்பலத்தான் மிடற்றின்
முற்படு நீண்முகில்" (திருக்கோவையார், 348)

என நஞ்சுண்ட கண்டம நீர்மகத்துக்கு உவமையாக வாறு பின்னரும் வந்துள்ளது.

"நேயமிகு மாயல்வளர் நீலகண்டேச்சுரனார்
ஆயுமவர்க் கெல்லாம் அருள்மேகம அம்மானை
ஆயுமவர்க் கெல்லாம் அருள்மேகம் ஆமாயின்
காயமுழுதும் கறுக்காதோ அம்மானை ?
கண்டமட்டுந்தான் கறுப்புக் காட்டினதே அம்மானை,"

(சொக்கநாதப் புலவர்)

கண்டமட்டும் என்றது வேண்டிய மட்டும் எனவும், கழுத்து அளவும் எனவும் இருபொருள் தரும்படி இசைத்திருக்கின்றார்.

விடம் உண்டு கருமை எய்தியுள்ள பரமனது கண்டத்தின் கருணையை இவ்வண்ணம் புலவர் பலரும் புகழ்ந்து பாராட்டியிருக்கின்றனர். ஆலம்போல் கறுத்து அமுதம் பொழிந்தது என்க.

உரோமபதன் நாட்டில் மழைபெய்ய நேர்ந்த மேகம் உமாபதியின் களனமர் கடு எனக் கருகிவந்தது என்னும் இவ்வுரை அருமை மிகவுடையது. இக்கருத்து கவியின் கருத்தில் விரைந்து உதித்த நிலை வியந்து நோக்கவுள்ளது. இனிய மழைபொழியும் மேகத்திற்கு இன்னாத கடுநிறத்தை இணைத்துக்காட்டி, அது அடைந்திருக்கும் புண்ணிய நிலையை எண்ணி மகிழவைத்தார்.

நீண்ட காலமாக வறண்டிருந்த அந்நாடு இவ்வுயர் மழை பெய்யவே உயிர்களெல்லாம் அதிசயமுடையனவாயுள்ளங் களித்தன. குளங்களும் நதிகளும் பெருகி வெள்ளம் எங்கும் விரிந்து பரந்தது.

மழை தொடங்கியவுடனே முனிவர் நாட்டுள் வந்துவிட்டார் என்று அரசன் உணர்ந்து அகமிக மகிழ்ந்து மந்திரி புரோகிதர் பிரதானிகளுடன் அவரை எதிர்கொண்டு காணவிரைந்து எழுந்தான். படைகளும் குடை கொடி விருதுகளும் புடைசூழ ஆவலோடு நான்கு நாழிகை வழி தூரம் கால்நடையாய் நடந்து அக்காவலன் கடுகி வந்தான். மாதர்பின் அம் மாதவர் வருவதைக் கண்டான். மகிழ்ச்சிமீக்கொண்டு விரைந்து முன்போய் அவரடிமேல் தன்முடிபட நெடிது வீழ்ந்தான். அருந்தவக் குரிசிலான அப்பெருந்தகை வரவால் மழை வந்ததே என்று உளமிக வுருகி விழிநீர் சொரிந்து விழைவுடன் எழுந்து ஆர்வமீதூர்ந்து குழைந்து முன் நின்றான். அவன் வணங்கி நின்றதும், தவசிகள் என உரிமையோடு தம்முடன் வந்தவர் அவனைப் பணிந்து போனதும், சனங்கள் அயலே திரண்டுள்ளதுமாகிய அந்நிலைகளைக் கண்டதும் வெருண்டு நோக்கி ஏதோ வஞ்சனைபுரிந்துள்ளார் என முனிவர் வெஞ்சினங்கொண்டார். அக் கோபக் குறிப்பைக் கண்டதும் அரசன் அஞ்சி மீண்டும் வணங்கித் தன் நாட்டில் மழையின்றி யிருந்த இன்னல் நிலையையும் அத்துயர்நீங்கச் செய்தவகையையும் உரிமையுடன் உள்ளம் உருகி உரைத்தான். பலஉயிர்கள் நலமுற

நேர்ந்த நிலைமையை அறிந்ததும் அவர் அருள்புரிந்து அடங்கி நின்றார். கொண்டகோபம் தணிந்து உள்ளம் கனிந்து முனிவர் கருணைபுரிந்து நின்ற நிலையைக் கவி நயமாகக்காட்டி யிருக்கிறார்.

முனிவர் முனிவும் கனிவும்

" அரசனும் முனிவரும் அடைந்த ஆயிடை
வரமுனி வஞ்சமென் றுணர்ந்த மாலைவாய்
வெருவினர் விண்ணவர் வேந்தன் வேண்டலால்
கரையெறி யாதலை கடலும் போன்றனன். "

(திருவவதாரப்படலம். 51)

நம்மை வஞ்சித்திருக்கின்றார் என முனிவர் நெஞ்சம்தெரிந்த வுடன் விண்ணவர் நெஞ்சம் கலங்கி நெடிது வெருவினர் என்றது அவரது அரிய பெரிய தவத்தின் ஆற்றலை உணர்த்தி நிற்கின்றது.

மண்ணவர் பிழை செய்ய விண்ணவர் வெருவியது என்னை? எனின், மனிதரை விலங்குகள் என எண்ணும் இயல்பினராதலால் அவரைப்பொருட்படுத்தாமல் ஒதுக்கிவிட்டு, "இமையாக் கண்ணராயிருந்தும் எம்மை இவர் ஏமாற்றிவர நீர் வந்து உண்மை கூறாமல் உடனமைந்து நின்றீர்!" என்று முன்னுற முனிவர்நம்மையே சபித்து நாசம் செய்வர் என்னும் யோசனையால் அவர் அங்ஙனம் அஞ்சினர் என்க.

அன்றியும் மழைபெய்யும்படி இப்பொழுதுவந்த இந்த அருந்தவர் வரவு, தாம் உய்யும்படி இனிமேல் வர இருக்கும் இராமனது வரவுக்கு மூலகாரணமான முன் வரவு ஆதலால் இதில் பின்னம் வந்து பிளவுபடின் என்றும் பிழைமிகுந்துபடுமே என்ற

மண்ணில் ஒரு முனிவன் மனம் திரிய விண்ணும் வெருவி அயர்ந்தது என்ற இதனால் தவத்தினது பேராற்றலும் பெருமிதமும் அறியலாகும்.

" ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். " (குறள், 899)

என்றது பொய்யாமொழி. இங்கே வேந்தன் என்றது இந்திரனை. வேந்து=அரசுரிமை. அரிய தவ விரதங்களைத் தாங்கி நிற்பவராதலால் சாந்தகுணசீலரான பெரியோர், ஏந்திய

கோள்கையார் என நின்றார். மண்ணுறு மாதவன் சீறின் விண்ணுறை தேவரும் சீறுவர் என்ற இது விண்ணவர் வெருவினர் என்னும் இதனோடு ஈண்டு எண்ண வுரியது.

வேந்தன் வணங்கிவேண்ட வெகுளி நீங்கி இணங்கி அமைந்த முனிவருக்கு இதில் குறித்திருக்கும் உவமை கூர்ந்து சிந்திக்கத் தக்கது.

உலகினை ஒழிக்கும்படி உருத்தெழுந்த ஊழிக்கடல் ஏதோ ஒரு தெய்வத்திருவருளால் திடீர் என்று தலை யடங்கி நின்றது போல் முனிவர் நிலையடங்கி யிருந்தார் என்பார், "கரை எறியாது அலைகடலும் போன்றனன்" என்றார். முனிவரது எல்லையில்லாத தவப்பெருமையும், வல்லமையும் கடல் என்ற ஒரு சொல்லால் உணர வந்தன. அது நீர்க்கடல்; இது குணக்கடல் என்க.

ஆன்ற தவ வொழுக்கங்களுடைய சான்றோர் வான்றோய் திறலுடன் மருவியிருந்தாலும் எளிதில் சினந்துவிடார் ஆதலால் அவரது பொறுமையும் பெருமையும் தெரிய இங்ஙனம் உவமை காட்டி

பெண்களை விடுத்து மாயமாகத் தன்னை அரசன் வஞ்சித்திருக்கின்றான் என்று அறிந்தவுடன் அகம் திரிந்தார்; திரியவே அவன் மறுகி நின்று உண்மையை உருகி உரைத்தான்; உரைக்கவே உலக நன்மையை நினைந்து இரக்கமீதூர்ந்து இவர் இசைந்தருளினார் என்க.

" நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம்" (ஔவையார்)

என்றபடி இவரது மன நிலையும் சின நிலையும் இங்கே அறிய நின்றன. இத்தகைய உத்தம குணவமைதி இவரிடம் இனிதுறைந்துள்ளமையால் "புராரியும் புகழ்தற் கொத்த சாந்தன்" என முன்னுறக் குறித்தார். குறிப்பின் நயம் கூர்ந்து நோக்குக.

அமைதி கம்பீரம் அளவிடலரிய அறிவாற்றல் நிலை குலையாமை நிறைந்த பெருந்தகைமை முதலிய உயர் நலங்கள் இயல்பாக அமைந்திருத்தலால் அரிய முனிவர்களை நிலம், கடல், மலைகளோடு ஒப்புறவைத்து நூல்கள் உரைத்து வரலாயின.

"நிலமகள் பொறுது தள்ளின் நிறுத்துநர் யாவர்? ஓதை
மலிகடல் புரளுமாயின் மறிப்பவர் உளரோ? எங்கள்
தலைவநீமுனிவை யாயின் தடுப்பவர் உலகில் யாண்டும்
இலைஇலை அருள்செய் எந்தாய்! எனச்சென்ன வசவன் தாழ்ந்தான்"
(பிரபுலிங்கலீலை)

பெரியார் வெகுண்டால் கடல் கரை புரண்டதுபோலாம் என்னும் இது நம் கவியின் கருத்தை ஒத்துவந்திருத்தல் அறிக.

கருணைக்கடல் என்று சொல்லும்படி சாந்தகுண சீலராயிருந்த இந்த ருசியசிருங்கரை உரோமபதன் இரதத்தில் எழுந்தருளச் செய்து மிகவும் மரியாதையுடன் நகர்க்கு அழைத்து வந்து அரண்மனையில் தனியே ஓர் அழகிய மாளிகையில் அமர்த்தி அரிய உபசாரங்கள் புரிந்து ஆர்வமீதூர்ந்து போற்றி வந்தான். நாட்டில் வளங்கள் சுரந்து நலங்கள் பல மிகுந்தன. முனிவர் நண்ணியவுடனே வானம் வழங்கியதையும் அவரது தவ மகிமையையும் புண்ணிய நிலையையும் எண்ணி எண்ணி மன்னன் இறும்பூதுற்றான். துயர் நீக்கி உயர்நலம் அருளிய இந்த மாதவர்க்குப் பதிலுதவி என்ன செய்வது? என்று அக்காவலன் ஆவலுடன் பல பல பன்னி ஆராய்ந்தான். உலகைத் துறந்துள்ள இவர் உள்ளம் உவந்து கொள்ளத்தக்க அரிய பொருள் யாது? என்று தன்னுள்ளே உரிமையுடன் நன்கு உசாவி முடிவில் தனது அருமைத் திருமகளான சாந்தை என்பவளை அவருக்குத் தானமாகத் தாரை வார்த்துத் தந்தான். பேரழகியான அந்த அரசிளங்குமரி ஊழியம் புரிந்துவர அவர் அங்கே உவந்திருந்தார்.

ிய சரிதையில் அரிய பல நலங்கள் அமைந்துள்ளன. தவத்தின் பெருமை, உத்தமமான தவசிகளுடைய மனநிலை, வானும் வையமும் அவரை வணங்கி நிற்கும் வகை, காரியசாதனையில் மங்கையரது சீரிய திறங்கள், எவரையும் வசப்படுத்த வல்ல அவரது இங்கித இயல்புகள், நல்லார் ஒருவர் வரின் எல்லாரும் இன்புற இனிய மழை பொழியும் இயைபு, முனிவரும் மன்னரும் இந்நாட்டில் முன்னிருந்த முறைமை, இன்னவாறான நன்னயங்கள் நாடகக் காட்சியாய் இதில் நன்கு அமைந்திருக்கின்றன. மேன்மையான ஆன்ம சிந்தனைகள் இதன்கண் மிகுந்திருத்தலால் ஒவ்வொருவரும் உரிமையுடன் உணர்ந்து சிந்திக்கவேண்டும்.

மாந்தரை விலங்குகள் என முனிவர் எண்ணியிருந்தார் என்பதில் அவரது அபேதமான சாந்தநிலை புலனுயினும் வேறொரு பொருளும் உள்ளே தொனித்துள்ளது.

உண்ணுதல், உறங்குதல், பிள்ளைகளைப் பெறுதல் என்னும் இன்ன அளவிலேயே நின்று மேலொரு படியும் ஏருமல் மிருகங்களைப்போல் உலக போகங்களிலேயே உழந்து திரிபவர், உயிரொளிபெற்று உயர்நிலையிலுள்ள ஞானசீலர்களுக்கு ஈனங்களாகவே தெரிவர். ஆதலால் இவரை அவர் விலங்குகளாக எண்ணநேர்ந்தனர் என்க.

“ அடைய வேண்டியது அடைந்து மேல்துயரமற்று இன்பமஅளவிலாதாய்க்
கடையதாம் தருவிலங்கு பறவைகள்போல் விணுள்கள் கழியா தாகித்,
தடையிலா மனனத்தால் வாழ்வதே உயர்வாணுள்; சரகம திரகதோர்
உடைபபிறப்பு உயர்ந்ததாம்; கிழவேசரிப் பிறப்பாம் ஒழிந்த வெல்லாம் ” (ஞானவாசிட்டம்)

பிறவிப் பயனை பேரின்ப நிலையை அடையத்தக்க அறவொழுக்கங்களமைந்து அறிவுநலங்கனிந்து வாழ்பவரே உயர்ந்த வாழ்க்கையுடையவர்; அத்தகைய ஒழுக்கமில்லாமல் இழிந்த பழக்கவழக்கங்களுடன் உழந்து திரிபவர் ஈனமான கழுதைப்பிறப்பே யாவர் என இதில் உரைத்திருத்தலறிக. வேசரி=கழுதை. பெறுதற்கரிய மனிதப்பிறப்பை எடுத்தும் உரிய பயனை அடையாமல் வறிதே வாழ்நாளைக்கழித்திருப்பவர் இவ்வாறு இளிவாக எண்ணப்பட்டு ஒருவழியும் காணுது வீணே இழிந்து போகின்றூர்.

மிருகங்களை நோக்க மக்கள் எவ்வளவுதூரம் உயர்ந்தவரோ அவ்வளவு நிலையில் உலக மக்களினும் ஒளியுடைய ஞானிகள் உயர்ந்துள்ளார் என்னும் உண்மை இதில்

“ விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றூரோடு ஏனை யவர் ” (குறள், 410)

என்னும் தேவர் வாக்கும் ஆவலுடன் ஈண்டுச் சிந்திக்க வுரியது.

மனிதரே யாயினும் புனித மிகுந்து ஆன்ம நிலையில் மேன்மையெய்தி யிருந்தமையால் யாவரும் வணங்கத் தேவரும் வியந்து போற்ற மேவரும் சீர்த்தியுடன்முனிவர் இங்கே விளங்கி நின்றூர்.

பிரமச் சாரியாய் அருந்தவ நிலையிலமர்ந்திருந்த அப்பெருந்தகை இப்பொழுது அரச கன்னிகையுடன் அங்க நாட்டில் எழுந்தருளியிருக்கின்றார்; அவரை அழைத்துவந்து யாகம் செய்க; எல்லா இன்ப நலங்களும் எளிதில் உண்டாம் என்று வசிட்டர் சொன்னவுடனே தசரதன் உள்ளம் பூரித்து உவகைமீக்கூர்ந்து இன்றே போய்க் கொண்டு வருகிறேன் என்று அன்றே அவன் எழுந்தருளினான். அவ் எழுச்சியில் ஆர்வமீதூர்ந்து நின்றது.

வேறு யாரையும் அனுப்பலாகாது; அந்த ஞான முனிவரரை நானே போய்க் கொண்டுவரவேண்டும் என்று இம்மன்னர்பிரான் எழுந்தபொழுது உடனெழுந்த இராச ஆடம்பரங்கள் அதிசய நிலையின. அருந்திருவும் பெருந்தகவும் நிறைந்த அந்தக் கம்பீரக் காட்சிகளைக் கவிப்படங்களில் கண்ணூன்றிக் காணவேண்டும். சில அடியில் வருவன:

முனிவரை அழைத்துவரத் தசரதன் எழுந்தது.

“ என்றலுமே முனிவரன்றன் அடியிறைஞ்சி யீண்டேகிக்
கொணர்வென் என்னாத்
துன்றுகழல முடிவேந்தர் அடிபோற்றச் சுமந்திரனே
முதல்வ ராய
வன்றிறல்சேர் அமைச்சரொடு மாமணித்தேர் ஏறுதலும்
வானோர் வாழ்த்தி
இன்றெமது வினைமுடிந்த தெனச்சொரிந்தார் மலர்மாரி
இடை விடாமல். (1)

காகளமும் பல்லியமும் கனைகடலின் மேல்முழங்கக்
கானம் பாட
மாகதர்கள் அருமறைநூல் வேதியர்கள் வாழ்த்தெடுப்ப
மதுரச் செவ்வாய்த்
தோகையர்பல் லாண்டிசைப்பக் கடல்தானை புடைசூழச்
சுடரோன் என்ன
ஏகியரு நெறிநீங்கி உரோமபதன் திருநாட்டை
எதிர்ந்தான் அன்றே. (2)

மன்னனை எதிர்கொள்ள உரோபதன் வந்தது.

*கொழுந்தோடிப் படர்கீர்த்திக் கோவேந்தன் அடைந்தமை*
*சென்று ஒற்றர் கூறக்*
*கழுந்தோடும் வரிசிலைக்கைக் கடறுரனை புடைசூழக்*
*கழற்கால் வேந்தன்*
*செழுந்தோடும் பலகலையும் விலவிச மாகதர்கள்*
*திரண்டு பாட*
*எழுந்தோடும் உவகையுடன யோசனை சென்றான் அரசை*
*எதிர்கொள் எண்ணி.* (3)

இருவரும் தழுவி இன்புற்று நின்றது.

*எதிர்கொள்வான் வருகின்ற வயவேந்தன் தனைக்கண்ணுற்*
*றெறுழிவி னானை*
*அதிர்கின்றபொலந்தேர்நின்று அரசர்பிரான் இழிந்துழிச்சென்*
*றடியின் வீழ,*
*முதிர்கின்ற பெருங்காதல் தழைத்தோங்க எடுத்திறுக*
*முயங்க லோடும்*
*கதிர்கொண்ட சுடர்வேலான் தனைநோக்கி இவையுரைத்தான்*
*களிப்பின் மிக்கான்.* (4)

உரோபதன் உவகை யுரையாடியது.

*யான்செய்த மாதவமோ? இவ்வுலகம் செய்தவமோ?*
*யாதோ இங்கண்*
*வான்செய்த சுடர்வேலோய்! அடைந்ததென மனமகிழ*
*மணித்தேர் ஏற்றித்*
*தேன்செய்த தார்மௌலித் தேர்வேந்தைச் செழுநகரிற்*
*கொணர்ந்தான் தெவ்வர்*
*ஊன்செய்த சுடர்வடிவேல் உரோமபதன் என்றுரைக்கும்*
*உரவுத் தோளான்"* (திருவவதாரப் படலம்) (5)

மாதவரை அழைத்துவரத் தசரதன் தேர் ஏறி அங்கநாடு சென்றதும், இவன் வரவறிந்து மகிழ்ந்து உரோமபதன் விரைந்துவந்து இவனை எதிர்கொண்டு கண்டதும், உள்ளங்கனிந்து உவகையுரை மொழிந்ததும், உடன் கொண்டுபோய் உபசாரம் புரிந்ததும் ஆகிய இந்நிகழ்ச்சிகளை விளக்கி நிற்கும் இக்கவிகளிலுள்ள உணர்ச்சி நலங்களையும், நயங்களையும் ஊன்றி யுணரவேண்டும்.

1. பிரயாணத்திற்காக அலங்கரித்துக் கொண்டுவந்து நிறுத்தியிருக்கும் தேரின்மேல் தசரதன் ஏறும்பொழுது, "வானோர் வாழ்த்தி, இன்று எமது குறை முடிந்தது எனச் சொரிந்தார் மலர்மாரி இடைவிடாமல்" என்றது பல சிந்தனைகளை உள்ளடக்கிக்கொண்டு இன்ப நிலையமாயுள்ளது.

மன்னன் புறப்பட்டது, கலைக்கோட்டு முனிவரை அழைத்து வர; அவர்வரின் வேள்வியை இனிது செய்து முடிப்பர்; அதன் பயனாக இராமன் வந்து அவதரிப்பான்; அப்பெருமான் தேவசத்துருக்கள் யாவரையும் தொலைத்து நல்லோரெல்லாரும் என்றும் நலமுறும்படி அறநலங்களை நன்கு நிலைநிறுத்துவன் ஆதலால் பின்னே வரவுள்ள அப்பெரு நன்மைகளையெல்லாம் முன்னுற அறிந்து மகிழ்ச்சிமீக்கூர்ந்து இக்கோமான் மீது வானோர் அங்ஙனம் பூமாரி பொழிந்தார் என்க.

அமையம் வாய்த்தபோதெல்லாம் தம் காவிய நாயகன் தோற்றத்தை நாம் நன்கு சிந்தித்துக் கொள்ளும்படி நம் கவி நாயகர் நினைவுறுத்தி நெறிசெய்து வருகின்றார்.

2. அரசன் இரதமூர்ந்து செல்ல நேர்ந்தவுடன் இனிய கீதங்களும், பலவகை வாத்திய முழக்கங்களும் மங்கலப்பாடல்களும், பல்லாண்டுகளும், வாழ்த்துரைகளும், எங்கும் கடலொலி போல் பொங்கி முழங்கின என இராச கம்பீரங்களை வியப்பும் விம்மிதமும் விளைந்து பெருக இதில் இனிதாக விளக்கியிருக்கிறார். காளம் = ஒருவகை ஊதுகுழல். இதனைச் சின்னம் என்பர்.

3. கொழுந்து ஓடிப் படர்கீர்த்தி என்றது புதிது புதிது ஆக நாளும் தளிர்த்துக் கிளைத்துச் செழித்து ஓங்கித் திசையெங்கும் பரந்து விரிந்துள்ள புகழ் என்றவாறு. என்றும் வளர்

4. சக்கரவர்த்தியின் வரவினை ஒற்றர்போய் அந்த அரசனிடம் சொன்னவுடனே அவன் ஆர்வமீதூர்ந்து அரிய வரிசைகளுடன் எதிர்கொள்ள எழுந்து வருகின்ற நிலை திருவும் தேசும் பொலிந்து இனிமை மிகுந்துள்ளது.

முத்துமாலைகளும் இரத்தினாபரணங்களும் பக்கமெங்கும் படர்ந்தொளி வீச நடந்து வந்தான் ஆதலால்

"பல்கலனும் வில்வீச" என்றார். வில்=ஒளி. உரோமபதன் முதிரன்புடன் தன்னை எதிர்காண வருவதைக் கண்டவுடனே தசரதன் தனது அழகிய இரதத்திலிருந்து கீழே இறங்கினின்றான்; நிற்கவே அவன் விரைந்துவந்து அடியில் வீழ்ந்து வணங்கினான்; வணங்கிய அவனை வாரியெடுத்து மார்போடு இவன் இறுகத்தழுவினான்; அவன் உள்ளமுருகி உழுவலன்புடன் முகமனுரைகள் பல உவகை மிகுந்து கூறினான்.

"வருகின்ற வயவேந்தனைக் கண்ணுற்று அரசர் பிரான் தேர்நின்று இழிந்தழி" என்னும் இதில் தசரதனுடைய பெருந் தன்மையும், மரியாதையும், விநயமும், நாகரீகமும் நன்கு புலனுகின்றன. வீரியமுடைய ஒரு பெரிய அரசனும், சீரிய சக்கர வர்த்தியும் நேரே சந்தித்து ஆர்வமுடன் அளவளாவி மகிழும் நிலைமையைக் கவி இங்கே அழகாக விளக்கியிருக்கிறார். இராச கம்பீரம் நிறைந்து அன்பூர்ந்திருக்கும் இந்த அற்புதக் காட்சி அறிவு நலம் பொலிந்து இன்பமீதூர்ந்து எழில்பெற்றுள்ளது.

5. தசரதனை நேரே கண்டுகொள்வது எய்தற்கரியதோர் பெரும்பேறும் என்பது, "யான்செய்த மாதவமோ? இவ்வுலகம் செய்தவமோ?" என்று ஆராமை மீதூர்ந்து உரோமபதன் உரைத்துள்ள உரைகளால் நன்கு உணரலாகும். இதில் மன்னர் பிரானை அவன் விளித்திருக்கும் நன்னயம் மிகவும் வியனுடையது. சம்பரன் முதலிய கொடிய அசுர வீரர்களனைவரையும் அடியோடு தொலைத்து வானுலகத்தைத் தேவர்களுக்குத் தானமாக வழங்கிவந்த வீரவள்ளலே! என்பான் "வான் செய்த சுடர் வேலோய்!" என்றான். செய்த என்றதனால் அது பகைவர் கை வசப்பட்டுப் பலவகையிலும் நிலை குலைந்து சீரழிந்திருந்தது; அதனைத் திருப்பிப் பழையபடி திருமலிந்து திகழச் செப்பஞ் செய்து ஒப்புவித்தருளினான் என்பது உய்த்து உணர நின்றது.

வானுலகைப் பாதுகாத்து வானவரையும் குடியிருத்தி வைத்திருக்கும் நீ நான் இருக்கும் இடத்தை வலிய நாடிவந்தது என்ன ஆச்சரியம்! யான் என்ன தவம் செய்தேனோ? என் முன்னோர் என்ன புண்ணியம் செய்துள்ளாரோ? இன்ன வண்ணம் இங்கே நீ எய்துதற்கு என அதிசய பரவசனாய் அவன் கூறியிருக்கும் மொழிகள் தசரதனது பெருமகிமையைப் புலப்

இங்ஙனம் உள்ளன்புடன் உவகையுரையாடித் தேரில் எழுந்தருளச்செய்து அரிய பலமரியாதைகளுடன் மன்னனைத் தன்னகருக்கு அழைத்துக்கொண்டு போய்ச் சிறந்த மணி மாடத்தில் இருத்தி மிகுந்த உபசாரங்கள் புரிந்து உயர்ந்த விருந்தொன்று எவரும் வியந்து புகழ அவன் விழைந்து செய்தான். பரிமளம் தவழ்ந்த சந்தன முதலியன தந்து மந்திரிகளுடன் வந்தனை வழிபாடுகள் புரிந்து, பின்பு தனியே இனிதமர்ந்து சல்லாபம் செய்து வருங்கால் 'தேவரீர் இங்கே கருதிவந்த காரியம் யாதோ? அருள்புரியவேண்டும்'' என்று மிகவும் விநயமாக வினவினன். உண்மையைத் தசரதன் உரிமையுடன் உரைத்தான். அவன் உவந்து கொண்டான். "முனிவர்பிரானை நானே அங்கே கொண்டுவந்து விடுகின்றேன்; அதற்காக அரசு வீணே இங்கே காத்திருக்கவேண்டாம்'' என்று கைகூப்பி மொழிந்தான். அவனது அன்புரிமையை அறிந்து இன்பமடைந்து இனிது விடைபெற்றுப் பரிவாரங்களுடன் விரைந்து மீண்டு வேந்தன் திருவயோத்தியை அடைந்தான்.

மறுநாள் உரோமபதன் கலைக்கோட்டு முனிவரிடம் சென்று அடிபணிந்து நின்று, "அடியேனுக்கு ஒரு வரம் அருளவேண்டும்" என்றான். முனிவர் புன்னகைசெய்து, "என்ன அது? சொல்; நீ சொன்னபடி செய்தருளுவல்" என்று இன்னருள் புரிந்தார். மன்னன் மகிழ்ந்து இதமாக இனிது மொழிந்தான். நன்னயமாக அவன் சொன்னபடியை அடியில் பார்க்க.

உரோமபதன் ருசியசிருங்கரிடம் உரைத்தது.

"புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகைதன்
புகழிற் பூத்த
அறனென்று திருமனத்தான் அமரர்களுக் கிடரிழைக்கும்
அவுணராயோர்
திறலுண்ட வடிவேலான் தசரதனென் றுயர்கீர்த்திச்
செங்கோல் வேந்தன்
விறல் கொண்ட மணிமாட அயோத்திநகர் அடைந்திவணி
மீடல் என்றான்."

அரசனுடைய வாக்கு வன்மை இதனால் நன்கு அறியலாகும்.

தான் கருதிய எண்ணங்களைப் பிறர் உள்ளம் கொள்ளும்படி சொல்லிக் காரியங்களை எளிதாக மனிதன் சாதித்துக்கொள்ளும் திறம் அதி சாதுரியமான ஒரு தத்துவக் கலையாம். உணர்வும் சூழ்வும் நிறைந்த அந்த உத்தம உரை நலங்களைக் கம்பர் விசித்திரமாகப் பயின்றிருக்கின்றார். காலம் இடங்களுக்கேற்பத் தகுதி யறிந்து பாத்திரங்களின் வாயிலாக இவர் வெளிப்படுத்தியிருக்கும் உரை நுட்பங்கள் அளவிடலரியன. உணருந்தோறும் உவகைக் கிடமாய்ப் பொருளாழமும் நளினமும் கெழுமியுள்ள நல்ல சொல் வன்மைகள் இவரது காவியத்தில் பல நிலைகளில் உயிரோவியங்களாயுலாவி நிற்கின்றன. உரையுணர்வுகளைக்காணுந்தோறும் களிப்புமீதூர்ந்து கலையுலகம் தலைமேல் கைகூப்பி இவரைத் தொழுது வருகின்றது. சூத்திரதாரிபோல் தாம் மறைந்திருந்து கொண்டு, பாத்திரங்களை வெளியே காட்டி உலகமெல்லாம் நேத்திரானந்தமாய் விழைந்து காணும்படி அவற்றை இவர் ஆட்டி வரும் அதிசய நிலை அமரரும் துதிசெய்ய உள்ளது.

காரியம் கருதிவந்த தசரதனை முனிவரிடம் உடனழைத்துப் போகாமல் ஊருக்கு அனுப்பிவிட்டுத் தான்மட்டும் தனியே வந்து ருசியசிருங்கரிடம் உரோமபதன் இவ்வாறு உரையாடிய தற்குக் காரணம் என்ன? கருதவேண்டும். இதற்கு விடை எவர் கூறினும் அது பூரணமான தீர்மானமாகாது. தத்தமக்குத் தோன்றியவாறே அவரவரும் ஊகமாக உறுதிசெய்து கொள்ள வேண்டியதேயாம். நிகழ்ச்சிகளுள் சிலவற்றை இப்படி உய்த்துணர விட்டு நம் கவியரசர் உல்லாசமாய் ஒதுங்கிப் போகின்றார். ஓர்ந்து சிந்திக்குமாறு ஊக்கமூட்டி மக்களின் உணர்ச்சிகளை வளர்த்து வருவது கலைப்பண்புகளுள் ஒன்றாம்.

புத்திரப்பேறு கருதிவந்த தசரதனது கருத்தை முற்றும் தெரிந்துகொண்ட உரோமபதன் முனிவரிடம் ஒன்றையும் வெளிப்படையாக உரையாமல், "அயோத்திநகர் அடைந்து இவண் மீளவேண்டும்" என்றே யாதும் நீளவிடாமல் இவ்வளவு அடக்கமாக வேண்டியிருக்கின்றான்.

தசரதன் பெரிய சக்கரவர்த்தி; சிறந்த கீர்த்திமான்; அந்த ஆண்டகையின் வேண்டுகோளுக்கு இணங்கித் "தேவர் போய்

அருள்புரிந்துவர வேண்டும் என்று தனியே வேண்டினால் முனிவர் ஏதேனும் மறுத்துவிடுவாரோ?'' என்று நினைந்து அவனது குல பரம்பரையின் தலைமையையும், முன்னோர்களின் நிலைமையையும் அவர் மனம் கனியும்படி நயமாக மொழியத் தொடங்கிச் சிபியின் தொடர்பை அழகாக முதலில் இதில் இசைத்திருக்கின்றான்.

சிவியின் சீர்த்தி.

சிபி என்பவன் சூரியகுலதிலகனான சாக்குச மனுவின் புதல்வன். திகிரி மன்னர் வரிசையில் முதன்மை பெற்றவன். நீதியும் தருமமும் நிறைந்த நெஞ்சினன். எவ்வுயிரையும் தன்னுயிர்போல் எண்ணியொழுகும் தண்ணளியுடையவன். செவ்வியும் சீலமும் வாய்ந்து திவ்விய நிலையில் இவன் செங்கோல் செலுத்தி வந்தான். இசை திசை பரப்பி இவன் இனிது வாழ்ந்து வருங்கால் இம் மண்ணுலகமே யன்றி விண்ணுலகமும் இவனை வியந்து நின்றது. அதனால் இவனுடைய மனநிலையைச் சோதிக்க இந்திரன் துணிந்தான். யமனைத் துணைக்கொண்டான். புறாவும் வேடுவனுமாக முறையே இருவரும் உருவமாறினர். கடுஞ்சூழ்ச்சி செய்து கரவுடன் வந்தார். மாலைப்பொழுது; ஓர் அழகிய பூஞ்சோலையுள் மன்னன் உல்லாசமாகத் தனியே உலாவி நின்றான். பறந்து விரைந்து பறவை புகுந்தது. வேந்தன் வியந்து நோக்கினான். அது வெருண்டு மருண்டு இவனருகே அடைந்தது. பதைத்துடல் துடித்தது; அக்கள்ளப் புறவின் கண்கலக்கத்தைஇவ்வள்ளல்கண்டு உள்ளம் இரங்கி உரிமையுடன் எடுத்தான். உச்சியும் உடலும் உவந்து தடவினான். அடுத்து வேடன் கடுத்து வந்தான். என் இரை தந்திடு மன்னவ என்றான். இதனைவிடுக; வேறு வேண்டும் பொருள் தருகின்றேன் என்று வேந்தன் மொழிந்தான். வேடன் இசையவில்லை. கொடுத்தால் இப் புறவையே கொடுங்கள்; இன்றேல் இதன் எடைக்கு எடையாக உங்கள் உடல் தசை தாருங்கள் என்றான். அரசன் உடனே இசைந்தான். தன் தொடைத் தசையை அறுத்தெடுத்தான்; அதன் எடைக்கு இசையத் தராசில் இட்டுத் தூக்கினான். புறவின் தட்டே புவியில் தாழ்ந்தது. மன்னன் யாதும் தளராமல் தன் உடலிலிருந்து சதையைக் கொஞ்சம் கொஞ்சமாக் குடைந்தெடுத்துக்குறிப்பிட்டு நிறுத்தான். இடுந்தொறும் இடுந்தொறும்

தசைத்தட்டேட உயர்ந்தது. வேறு தசையின்மையால் முடிவில் அரசனே அத் தலையில் புகுந்தான். நிலைமைதெரிந்து நெஞ்சம் கலங்கினர்; புறவும் வேடனும் உருவம் நீங்கி, இந்திரனும் எமனுமாய் எதிரே நின்று, “அருள் வள்ளலே! நின்பெருமை யறியாமல் பிழை புரிந்தோம்; பொறுத்தி செய்தருள்” என்று அரசைவாழ்த்தி அன்பு மீதூர்ந்து புகழ்ந்தார். கொய்த தசையெல்லாம் உடலில் எய்தி நிறைந்து எழில் சுரந்து நின்றது. அரசன் தெய்வ மகிமையை நினைந்து சிந்தை மகிழ்ந்தான். வந்தவர் விழைந்து வரம் பல தந்து வணங்கிப்போனர். ஒரு சிறிய பறவைக்காகத் தனது அரிய உயிரை உதவிய இப்பெரியவனை வானும் வையமும் புகழ்ந்து வழுத்தி வரலாயின.

செயற்கரிய செய்த இத்திவ்விய மன்னனது மரபில் வந்தவன் தசரதன் என்று தெரிந்து முனிவர் உளமகிழும் வண்ணம் “புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை தன் புகழில் பூத்தவன்” என்று, தனது வேண்டுகோளுக்கு நீண்ட அணிகோலி அவ் ஆண்டகை மொழிந்தான்.

பெருந்தகை தன் வழியில் வந்தவன் என்னது புகழில்பூத்த என்றது அந்த மூலபுருடனது கீர்த்தியுருவில் முளைத்தெழுந்த மூர்த்தி எனத் தசரதன் தோற்றத்தின் ஏற்றம் துலங்க என்க.

சிறந்த புண்ணிய சிலர் மரபில் பிறந்திருந்தாலும் பலரிடம் அப்பிறப்புரிமை மட்டும் ஒப்புக்கு இருக்குமேயன்றி வேறு சிறப்பு நலம் யாதும் இராது; சில இடங்களில் நேருக்கு மாறாகவும் இருப்பதுண்டு; அந்த வரிசையில் தசரதன் சேர்ந்தவன் அல்லன்; தன் முந்தையோர் புகழ்கள் எந்த வழியும் கொழுந்தோடிப்படரும்படி கொழுகொம்பாயுள்ளான் என்பான் “அறன் ஒன்று திருமனத்தான்” என்றார்.

திரு என்றது தீயன சிந்தியாத தூய்மையுடைமை கருதி. நல்ல மனம் எல்லாச் செல்வங்களுக்கும் இன்பங்களுக்கும் நிலைக்களம் ஆதலால் அந்நலமுடையது எதுவோ அது திருமனம் என்க. இதனுல் நெஞ்சத் திருவின் நிலை தெரியலாகும்.

“மன நலம் மன்னுயிர்க்கு ஆக்கம்” (குறள் 457)

என்றது பொய்யாமொழி. உயிர்க்கு உயர்ந்த செல்வம் மன நலமே யாம் என இது உணர்த்தி நிற்றலறிக. ஒருவன்

புறத்தில் எவ்வளவு செல்வங்களையுடையனுயினும் தன் மனத்தில் நலம் இலனுயின் அவன் ஆக்கங் கெட்ட மூதேவியேயாவன் என்பது குறிப்பு. உயிர்க்கு உய்வைத்தரும் தெய்வத் திரு மன நலமே என்றதனுல் அதன் மகிமை புலனும்.

தசரதன் பிறப்பிலேயும் சிறப்பான புகழ் மரபில் பிறந்தவன்; தானும் மனநலமும் மதிநலமும் வாய்ந்து தருமகுணசாலியாய்ச் சிறந்து தழைத்திருந்தான் என்பதாம்

சூரிய குலத்தில் சீரிய மன்னர் வேறு பலர் இருந்தும் அவரெல்லாரையும் விடுத்துச் சிபியை மட்டும் இங்கே விதந்து குறித்தது என்னே? எனின், ஒரு பறவைக்காக அருள் புரிந்து தனது அரிய உயிரையும் வழங்கிய பெரிய உபகாரி ஆதலால் அவன் வழியில் வந்த தசரதனும் அவ்வாறே உலகம் நலமுறும்படி பரோபகாரமான கருமமே கருதியிருப்பன்; அவ்வுபகாரியின் கருத்தைப்பூர்த்தி செய்யின் அது உலகுயிர்க்கெல்லாம் ஒருங்கே உதவி செய்தபடியாம் எனக் கலைக்கோட்டு முனிவர் உணர்ந்து மகிழ்ந்து -னே எழுந்தருள என்க.

இந்தச் சிபிச் சக்கரவர்த்தியின் சரிதம் ஆன்ம வுருக்கமும் அற்புதமும் வாய்ந்திருத்தலால் கம்பர் உள்ளத்தை இது மிகவும் கவர்ந்திருக்கின்றது. தம் காவியத்தில் பல இடங்களிலும் பலர் வாயிலாகவும் கொண்டு இக்குலமகனை நலமுறப் பாராட்டியிருக்கின்றார். சில அடியில் வருவன காண்க.

இன்னுயிர்க்கும் இன்னுயிராய் இருநிலம் காத் தாரென்று
பொன்னுயிர்க்கும் கழலவரை யாம்போலும் புகழ்கிற்பாம்
மின்னுயிர்க்கும் நெடுவேலாய்! இவர்குலத்தோன் மேற்பறவை
மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாருக வழங்கினனல்.

(குலமுறைகிளத்து படலம் 7)

இது, இராமனது குலமுறையைக் கூறி வருங்கால் விசுவாமித்திரர் சனக மன்னனிடம் உரைத்தது. பறவை மன்னுயிர்க்குத் தன்னுயிரை வழங்கினன் என முனிவர் வாக்கால் சிபியை விளக்கியிருக்கும் அழகை நோக்குக. மாறு = ஈடாக.

*அரிந்தான் முன்னோர் மன்னவனன்றே அருமேனி*
*வரிந்தார் வில்லாய்! வாய்மை வளர்ப்பான், வரம் நல்கிப்*
*பரிந்தால் என்னாம்? என்றனள் பாயும் கனலேபோல்*
*எரிந்தா றுதே இன்னுயிர் உண்ணும் எரியன்னாள்.*

(கைகேசி சூழ்வினைப் படலம் 43)

இது, தசரதனை நோக்கிக் கைகேசி சொன்னது. உங்கள் முன்னோருள் ஒருவர் மனவுறுதிமாறாமல் ஒரு புறவுக்காகத் தம் உடலை அரிந்து கொடுத்தார்; அந்த வழியில் வந்துள்ள நீங்கள் கொண்ட மனைவிக்கு உதவாமல் உரைமாறினால் உங்கள் நிலைமை என்னாம்? என்று அவள் இன்னமொழி கூறுமிடத்தும் இந்த இனியவனை இன்னவாறு இடைமடுத்திருக்கிறாள்.

"பிறந்தநாள் தொடங்கி யாரும் துலைபுக்க
பெரியோன் பெற்றி
மறந்தநாள் உண்டோ? என்னைச் சரணென்று
வாழ்கின்றானைத்
துறந்த நாட்கு, இன்றுவந்து துன்னினான்
சூழ்ச்சி யாலே
இறந்தநாள் அன்றோ என்றும் இருந்தநாள்
ஆவ தென்றான்." (விபீடணன் அடைக்கலப்படலம் 110)

இது, விபீடணனைத் தழுவிக்கொள்ளவேண்டும் என்று வானரங்களிடம் இராமன் குறித்தபொழுது உரைத்தது. "அடைக்கலம் என்று அடைந்தவரை உயிரைக் கொடுத்தும் உவந்து காப்பது எம் குலமரபுக்கு நிலையான உரிமையாம்" என்பதை நிலைநிறுத்தத் துலைபுக்க பெரியோனை இக்குலமகன் இங்கே எடுத்துக் காட்டியிருக்கும் காட்சி கருதி உணருந்தோறும் உள்ளம் உருகி உயர்கின்றது. "இறந்தநாள் அன்றோ என்றும் இருந்தநாள்?" என்ற இப்பெருந் தகைமையை நினைந்து நினைந்து நெடிது சிந்திக்க வேண்டும். அந்த அற்புத இருதயம் அதிசய நிலையது.

புக்கடைந்த புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க
மைக்கடங்கார் மதயானை வாள்வேந்தன் வழிவந்தீர்!
இக்கடன்கள் உடையீர்நீர் எம்வினைதீர்த் தும்முடைய
கைக்கடன்தான் உயிர்காக்கக் கடவீர்என் கடைக்கூட்டால்

(கும்பகருணன் வதைப்படலம் 355.)

இது, கும்பகருணன் போரில் இறந்துபட நேர்ந்தபொழுது இறுதியில் இராமனை உருகி வேண்டிய உறுதிமொழி.

புறவொன்றின் பொருட்டா யாக்கை புண்ணுறஅரிந்த புத்தேள்
அறவனும் ஐய நின்னை நிகர்க்கிலன்; அப்பால நின்ற
பிறவினை உரைப்ப தென்னே? பேரருளாளர் என்பார்
கறவையும் கன்றும் ஒப்பார் தமர்க்கிடர் காண்கின் என்றான்.

(வேலேற்ற படலம் 49)

இது, விபீடணன்மேல் வெகுண்டு வந்த வேலை விரைந்து முன் பாய்ந்து தன் மார்பில் ஏற்று வீழ்ந்து மறுபடி பிழைத்தெழுந்து வந்த இலக்குவனைத் தழுவி இராமன் உரைத்தது. இதில் சிபியைத் தருமமூர்த்தி என்று குறித்திருத்தல் அறிக. இக்கவியின் கருத்தைக் கருத்தூன்றிக் காண்க.

சிபி மன்னனை நம் கவி மன்னன் சீராட்டிப் பாராட்டியிருக்கும் வகையும் தொகையும் இவற்றால் அறியலாகும். இவனைக் குறித்து இன்னும் பலர் ஏத்தியிருக்கிறார். சில அடியில் வருவன.

" தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி அஞ்சிச் சீரை புக்க
வரையா ஈகை உரவோன் " (புறம் 43)

" உடல கலக்கற அரிந்துதசை இட்டும் ஒருவன்
ஒருதுலைப் புறவொடு ஒக்கநிறை புக்க புகழும்,"

(கலிங்கத்துப் பரணி, இராச, 13)

" காக்கும் சிறுபுறவுக் காகக் களிகூர்ந்து
தூக்கும் துலைபுக்க தூயோனும் "

(விக்கிரம சோழனுலா, 21)

" கொலையே றுடம்படையக் கொய்தாலும் எய்தாத்
துலையேறி வீற்றிருந்த சோழன்."

(குலோத்துங்க சோழனுலா, 32)

" மருள் இறை என்று சரணடைந்த வஞ்சப்
புறாநிறை புக்க புகழோன்." (இராச ராச சோழனுலா, 11)

இன்னவாறு முன்னோரும் பின்னோரும் இம்மன்னனைப் புகழ்ந்திருக்கின்றனர். பேருபகாரியாய்ப் பாருலகெல்லாம் உவந்து புகழச் சீரும் சிறப்பும் பெற்றுச் சிறந்திருந்தான் ஆதலால்

சூரிய குல அரசருள் சிபியைத் தெரிந்தெடுத்துத் தசரதன் குல மூலத்தின் நலன் நன்கு தெரியக் கலைக்கோட்டு முனிவரிடம் இங்ஙனம் உரோமபதன் கனிவமாக நவின்று நின்றான்.

அவனது மனநிலையை யறிந்து மாதவர் மகிழ்ந்து இசைந்தார். மன்னன் உள்ளம் பூரித்து உவகை மீக்கூர்ந்து, "வேந்தர் வேந்தன் கவலை யொழித்து உயர்ந்தனன்" என்று களித்து ஓடிப் பிரயாணத்திற்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் விரைந்து ஆயத்தம் செய்து சிறந்த இரதத்தைக் கொணர்ந்து நிறுத்தினான். அதில் அருந்தவர் ஏறினார். சாந்தையும் உடன் தொடர்ந்து சார்ந்தமர்ந்தாள். அரச மரியாதைகளுடன் இரதம் இனிது நடந்தது. திருவயோத்தியை நோக்கித் தேர் திரும்பும் பொழுது மங்கலக்குறிகள் எங்கும் பொங்கி நின்றன.

நன்னிமித்தங்கள்

"அந்தர துந்துமி முழக்கி ஆய்மலர்
சிந்தினர் களித்தனர் அறமும் தேவரும்;
வெந்தெழு கொடுவினை வீழ்க்கு மெய்ம்முதல்
வந்தெழ அருள்தரு வானென் றுன்னியே."

இந்த ஞானமுனி வருவதறிந்ததும் வானத்தில் மங்கல முரசம் முழங்கியது; தருமதேவதை களித்தது; இந்திரன் முதலிய தேவரனைவரும் உளமிக மகிழ்ந்து மணமலர் சொரிந்தனர்; முழு முதல் வந்தவதரிக்கும்; கொடுவினை அடியோடொழியும்; எங்கும் இன்ப நலங்கள் பெருகும் என இங்ஙனம் ஒரு பெருங் கிளர்ச்சி அவர் வருகையில் வளர்ந்தெழுந்ததென்பதாம். தேவர் முதல் யாவரும் இராமன் வரவைப்பேராவலுடன்எதிர்பார்த்துப் பெருமகிழ்ச்சி கொண்டு ஒரு மூகமாய் உளம் தழைத்து நின்றனர் என அடிக்கடி கவி நம் உள்ளம் களிக்க உணர்த்தி வருகிறார்.

இவ்வண்ணம் சுப நிமித்தங்களுடன் தொடர்ந்து வந்த இரதம் அயோத்தி யருகே அடையவும், முன்னதாக ஒற்றர்ஓடிவந்து தசரதனிடம் முனிவர் வருவதை உரிமையுடன் உரைத்தார். அக் கொற்றவன் பெரு மகிழ்ச்சியடைந்து அரிய பல வரிசைகளுடன் சதுரங்க சேனைகளும் புடை சூழ்ந்து வர முதிர்காதலோடு எதிர்கொண்டழைக்க விரைந்து வந்தான். முனிவரைக் கண்டான்; அவரடிகளில் நெடிது வீழ்ந்தெழுந்து ஆனந்த பரவ

சனைப் பூடி வணங்கி முன்னே நின்றான். அவர் இன்னருள் புரிந்து இனிது நோக்கி, "மன்னர் மன்னவ! நின் மன நலம் உலகமெல்லாம் நலமுற ஓங்கியுள்ளது; நீ கருதியன யாவும் உறுதியாகப் பெறுவாய்" என நேசமுடன் ஆசிமொழிகள் புகன்றார். அவரது பாதமலர்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டு வேதவித்துக்களுடன் வேந்தன் விரைந்து சிறந்த மரியாதைகளோடு அவரை உவந்து அழைத்து வந்தான். அவ் வருகையின் காட்சி பெருமித நிலையில் பெருகி நின்றது. மக்கள் எங்கணும் ஒக்கலுடன் திரண்டு உவந்து வாழ்த்தி உள்ளங்களித்தார். இராசவீதி வழியே வந்து அரண்மனை முன்றிலையடைந்தவுடன் வசிட்டர் முன் புகுந்து வணங்கி பழைத்துச் சிறந்த மணி மண்டபத்துட் கொண்டுபோய் ஓர் உயர்ந்த அணியாசனத்தில் அமர்த்தினார். இவரையும் அவர் அருகிருக்கப் பணித்தார். அயலே மன்னன் உன்னத ஆதனத்தில் அமர, மந்திரி பிரதானிகள் அனைவரும் சிந்தை மகிழ்ந்து திரண்டு நின்றனர். அந்த இராச சபையில் அருந்தவர் இருவரும் அன்று அமர்ந்திருந்த நிலை ஓர் அற்புதக்காட்சியாய்ச் சிறந்திருந்தது. ஞானசீலர்களான அவர் இரண்டு வான சோதிகள்போல் வயங்கியிருந்தமையால் அவை முழுவதும் அமைதியாய்த் தவவொளி வீசித் தழைத்து நின்றது. அவர் அங்கே ஒருங்கு சேர்ந்திருந்த பெருந்தகவினைக் குறித்துவரும் கவி அடியில் வருகின்றது.

அருந்தவர் இருவரும் அரசவையில் இருந்தது.

கசட்டுறு வினைத் தொழிற் கள்வராயுழல்
அசட்டர்கள் ஐவரை அறுவர் ஆக்கிய
வசிட்டனும், அருமறை வடிவு போன்றொளிர்
விசிட்டனும் வேந்தவை பொலிய மேவினார்.
(திருவவதாரப்படலம் 77)

ஐவர் என்றது ஐம்பொறிகளை. அறிவாகிய அரும் பெரும் பொருளை வலிந்து கவர்ந்துகொண்டு ஆன்மாவுக்கு அல்லல் பல விளைத்தலால் பொறிகள் கள்வர் என வந்தன. நல்ல கருமங்கள் பல இருக்க அவற்றையெல்லாம் இகந்துவிட்டுத் தீயவினைகளையே பெரும்பாலும் விழைந்துகொண்டு புலன்களில் புலையாடும் ஆதலால் "கசட்டுறுவினைத்தொழிற் கள்வர்" என்றார்.

"பாவம் என்றால் ஏதும் பயமின்றிச் செய்ய இந்தச்
சீவனுக்கு யார் போதம் தெரித்தார் பரா பரமே!"

என்று சீவர்களுடைய பாவநிலையை வியந்து தாயுமானவர் இங்ஙனம் இரங்கியிருக்கின்றார். பொய் சொல்லாதே; பிறர் மனைவியரை நயவாதே; களவு செய்யாதே என்று இவ்வாறு போதித்தற்குக் கலாசாலைகளும் குருகுலங்களும் நாளும் பெருகி வரினும் மக்களிடம் நல்ல பலனைக் காணோம். பொய்யே பேசு; பிறர் இல்லை விரும்பு; புறங்கூறு என இவ்வகைய படிப்பினையை யாண்டும் சொல்லிக் கொடாமலே எல்லாரும் அவற்றில் வல்லவராய் விளங்குகின்றனர்; என்னே இது? என்று மனிதனது பொல்லாத இயல்பை நினைந்து ஆச்சரியப்பட்டிருக்கும் இப்பாட்டின் தத்துவநிலையை உய்த்துணர்ந்து கொள்க.

கள்வர் என்றதற்கு ஏற்பத் தொழிலின் தீமையைத் தொடுத்துச் சுட்டினார். கசடு=குற்றம். வசிட்டன் என்ற சொல்லின் எதுகைக்கு இசையக் கசடும், அசடும் ஒற்றிரட்டிவல்லொலி பெற்றுவந்தன. பதங்களைக் கம்பர் பதப்படுத்திக்கொள்ளும் விதங்கள் பல. சொல்லும், பொருளும், இலக்கணங்களும் இவர் வாக்கை நோக்கியே வளைந்து குழைந்து வணங்கி நிற்கின்றன.

ஐவரை அறுவர் ஆக்கிய என்றது ஐம்பொறிகளையும் அடியோடு வென்றவர் என்றவாறு. பொறி வசப்பட்டு மனம்போனபடி போகாமல், அவற்றை அறிவின் வயப்படுத்தி அடக்கி நின்ற அருந்தவன் என்பதாம்.

"பொறிவாயில் ஐந்து அவித்தான்" (குறள் 6).

எனப் பரமனைக் குறித்து வந்திருக்கும் இந்த அருமை வாசகம் ஈண்டுச் சிந்திக்க வுரியது.

மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் பொறிகள்வாயிலாக விளைகின்ற ஆசைகளை முற்றும் அறுத்தவர் என்பதை இங்ஙனம் குறித்திருக்கிறார். அறுவர்=அற்றவர்; அதாவது இல்லாதவர் என்க. அறுவர் என்னும் இவ்வினைப் பெயரை எண்ணுப் பெயராகவும் எண்ணி, ஐந்து பேர்களை ஆறு பேர்களாக ஆக்கியவர் என ஓர் விந்தையான பொருளும் காணும்படி இந்த வாக்கியத்தை அமைத்திருக்கிறார். சிற்சில இடங்களில் சொற்களோடு நம் கவியரசர் உல்லாசமாக இப்படி உவந்து விளையாடுகின்றார்.

"ஏழும் ஏறப்போய் ஆறும் ஏறினார்" (கைபடைப்படலம் 23) என்பதும் இந்த வகையில் வந்தது. இவ்வாறு இன்னும் பலவுள.

புலப்பகைகளை வேரறுத்தவர் என வசிட்டரது சீர்மையை விளக்கி விட்டுப் பின்பு ருசியசிருங்கரைக் குறிக்கின்றார். தலத்தின் குலகுருவாதலால் அவரை முதலில் உரைத்தார்.

இருவருக்கும் இதில் கொடுத்திருக்கும் அடைமொழிகளைக் கூர்ந்து கவனிக்கவேண்டும். முன்னவர் பயிற்சியாலும் முயற்சியாலும் பஞ்சேந்திரியங்களையும் வென்று உயர்ந்தவர்; பின்னவர் இயற்கையாகவே எல்லா அருந்தவங்களும் எளிதமைந்த திவ்விய ஞானி என்க.

ஞான நலங்கள் யாவும் இயல்பாகவே சுரந்து வேதம் எவ்வாறு தூய்மை மிகுந்து உயர்ந்துள்ளதோ அவ்வாறே தேசு வளர்ந்து இவர் சிறந்துள்ளார் என்பார், "அருமறை வடிவு" என்றார். வேதமே இம்மாதவர் உருவமாய் மருவி வந்துள்ளதென்பதாம். இதனால் இவரது இயல்பும் உயர்வும் இனிது புலனும். ஒளிர் என்றது தவப்பொலிவினை நினைந்து.

கலைக்கோட்டுமுனிவருக்கு இங்கே புதிதாக நம் கவியரசர் ஒரு பெயர் இட்டிருக்கிறார். அது வசிட்டன் என்னும் பேரோடு இசையொத்து விசித்திரப் பொருள் கொண்டுள்ளது.

விசிட்டன் என்பதற்குச் சிறந்த ஞானசீலன் என்பது பொருள். சிட்டர் போற்றும் சீரியன் என்றவாறு.

நெறிமுறை வழுவாத நல்ல சீலமுள்ள பெரியாரைச் சிட்டர் என்பர்.

இதன் எதிர்மொழி துட்டர். "சிட்டர் செயல் செய்திலை; குலச்சிறுமை செய்தாய்!" எனச் சீதையை விட்டுவிடாமல் இருப்பதைக் குறித்து இராவணனை நோக்கிக் கும்பகருணன் இவ்வாறு ?ன்.

"சிட்டர்தம் தனித்தேவனும் அதனிலை தெரிந்தான்"
(இராவணன் வதை-103)

"சிட்டனே! சிவலோகனே!"
(திருவாசகம், திருக்கழுக்குன்றப் பதிகம், 2)

"சிட்டர்கள் துதித்திடும் மகத்துவம"
(மதுரைக்கலம்பகம். 82)

இவற்றுள் சிட்டர் குறித்திருக்கும் பொருளை அறிக.

சிட்டம்=ஒழுக்கம், பெருமை, ஞானம். அவற்றையுடையவர் சிட்டர். இத்தகைய சிட்டர்களுள் தலைமையாயுள்ளவன் விசிட்டன் என்க. எனவே இவரது ஏற்றம் தெளிவாம்.

மகத்துவ மிருந்த இந்த மாதவரிடம் தன் உள்ளக்கருத்தை வெளிப்படுத்த விரும்பித் தசரதன் மிகவும் விநயமாகச் சில இனிய மொழிகள் புகல்கின்றான். அன்று இம்மன்னன் பேசியிருக்கும் இன்னுரைகள் இதனடியில் வருகின்றன.

தசரதன் முனிவர்முன் மொழிந்தது.

"சான்றவர் சான்றவ! தரும மாதவம்
போன்றொளிர் புனித!நின் அருளிற் பூத்தஎன்
ஆன்றதொல் குலமினி அரசின் வைகுமால்;
யான்தவ முடைமையும் இழப்பின் றாமரோ"
(திருவவதாரப்படலம் 79)

தன் முகம் நோக்கித் தண்ணளி புரிந்து கேட்கும்படி முன்னுற மன்னன் முனிவரை விளித்திருக்கும்மொழித்திறம் காண்க. முன்னம் தாம் இட்ட பெயருக்கு மன்னன் வாயிலாக நம் கவியரசர் இதில் பொருள் விளக்கம் செய்திருக்கிறார். சான்றோர் எல்லோரும் தலை வணங்கிப் போற்றும் ஆன்றோனே! என்பான் சான்றவர் சான்றவ! என்றான். சிட்டர்களெவரினும் மிகவும் சிரேட்டனை விசிட்டனே! என முன் கவிகுறித்த பெயர்க் கருத்தை நேரே மொழி பெயர்த்து உரைத்த படியிது. சான்றவர் என்பதற்குக் குணங்களால் நிறைந்தவர் என்பது பொருள்.

தரும மூர்த்தியே! தவக்குரிசிலே! முனிவர்திலகமே! புனித உருவமே! தேவரீரது திருவருளினால் எனது குலம் யாண்டும் அரச திருவுடையதாய் இனி என்றும் நின்று நிலவும்; நானும் பெரிய தவமுடையனானேன் என்று உள்ளம் உவந்து அரசன் இங்ஙனம் உரைத்தது தான் கருதிய கருமம் முனிவர் அருளால் இனிது நிறைவேறும் என்னும் துணிவினால் என்க.

தனக்குப் புத்திரப்பேறு உண்டாகும்; தன்குலம் என்றும் தழைத்து விளங்கும், அரசுரிமையைச் சந்ததியிடம் ஒப்பிவித்து விட்டுத் தான் தவம் செய்யப்போகலாம் என்னும் ஓகையினால் உரையாடுகின்றான் ஆதலால் "என்குலம் அரசின் வைகும்; யான்

தவம் உடைமையும் இழப்பின்றும்" என்றான். இன்றும் என்றது இழப்பு உண்டாமோ? என்று தன் உள்ளத்துள் முன்பு அவன் கவன்றிருந்துள்ளமை அறிய நின்றது.

தன் கவலையெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல் முனிவரைக் கண்டவுடனே முற்றும் நீங்கிய தென்பதாம்.

மன்னன் துதித்து இன்னவாறு இனிது மொழிய மாதவர் இவனை ஆதரவுடன் பார்த்துப் பதிலுரை பகர்ந்தார்.

முனிவர் சொன்னது.

"என்னலும் முனிவரன் இனிது நோக்குறு
மன்னவர் மன்ன!கேள், வசிட்டன் என்னும்ஓர்
நன்னெடுந் தவன்துணை நவையில செய்கைநீ
நின்னையிவ் வுலகினில் நிருபர் நேர்வரோ?"

பேசத் தொடங்கிய பொழுது முனிவரது முகம் மிகவும் மலர்ந்து, அகம் உவகை மலிந்திருந்தது என்பது இனிது நோக்கி என்றதனால் உணர நின்றது. அரசன் முனிவரை நோக்கி முன்னே சான்றவர் சான்றவ! என்றதும், அவர் பதிலுரைக்கும் பொழுது இவனைப் பார்த்து இங்கே மன்னவர் மன்ன! என்று அழைத்ததும் இருவர் நிலைமைகளையும் இனிது விளக்கிப் பேச்சின் மரியாதைகளையும் நன்கு காட்டி நிற்கின்றன.

அரிய பெரிய மாதவராகிய வசிட்டருடைய ஆதரவைப் பூரணமாகப் பெற்றிருக்கின்றாய்; நீயும் நல்ல நீதிமான்; உனக்கு நிகரான அரசர் இந்நிலவுலகில் யாவர் உளர்? யாண்டும் இல்லை; இங்ஙனம் மனநலத்தாலும் இனநலத்தாலும் மாண்புமிக்குள்ள நீ என்னை மதித்து அழைத்தது மகிழ்ச்சிக் குரியது; தரும குணசாலியான உன்னையும், அருந்தவக்குரிசிலான இந்த அண்ணலையும் இன்று நான் கண்டு களிப்பெருவகை கொண்டேன்; என்றும் இக்காட்சியை மறவேன்; என்று இம்மாதவர் கூறிய மொழிகள் அங்குள்ள எல்லார்க்கும் மகிழ்ச்சியை விளைத்தன.

அருகிலிருந்த வசிட்டரைப் பெருமைப்படுத்தி உரிமையோடு இவர் பேசியிருப்பது மிகவும் சதுரப்பாடுடையது. காட்டுவாசியாயிருந்தாலும் நல்ல கலைஞானி ஆதலால் இங்ஙனம் பேசலானார்.

மனிதரை முன்னம் விலங்கென உன்னும் மனத்தரான இவர் இன்னவாறு விரைந்து திருந்தியது வியப்பிற் குரியது.

உலகமே தெரியாமல் பாங்கலையில் பதிந்து தனியே இருந்த இம்மாதவரை மாதர் நயமாக அழைத்து வந்ததும், நாட்டுள் வர மழை பொழிந்ததும், உரோமபத மன்னன் உவந்து போற்றி அரச வுபசாரத்துடன் இவரை அரண்மனையில் வைத்திருந்ததும், பின்பு தனது அருமைத் திருமகளாகிய சாந்தையை இவர்க்குத் தாரை வார்த்துத் தந்ததும், பேரழகியான அவளோடமர்ந்து சுகபோகங்களை நுகர்ந்து இவர் சுகித்திருந்ததும், துறவுநிலை துறந்து இல்லறவாசியாயின்புற்றிருப்பினும் அருந்தவரெவரினும் சிறந்த பெருந்தகை என இவரை வசிட்டர் மதித்திருந்ததும், இவரைக் கொண்டே தம் மன்னன் கவலையை மாற்றவேண்டும் என்று உணர்ந்து துணிந்ததும், அவரது உரைவழியே தசரதன் இவரை அழைக்கப்போனதும், உரோமபதன் பணிந்துஉபசரித்து உறுதி கூறி முதலில் மன்னனை அனுப்பிவிட்டுத் தனியே போய் முனிவரை வேண்டி நயமாக அயோத்திக்கு அனுப்பிவைத்ததும், மாதவர் வந்ததும், அவரை வணங்கி வாழ்த்தி அரசன் உபசரித்ததும், அரசவையில் குலகுருவுடன் அவர் அமர்ந்திருந்ததும், சக்கரவர்த்தியும் அவரும் உள்ளங் கனிந்து உரைகள் ஆடியதும் ஆகிய இச்சம்பவங்கள் கம்பர் காட்டும் காட்சியில் அறிவு நலங்கள் சுரந்து எங்கும் அழகும் இன்பமும் நிறைந்துள்ளன.

தம் அரசுக்கு ஒரு வழிமுதல் வேண்டுமே என்று வேந்தன் வேண்ட, அதற்கு வசிட்டர் பதில் உரைக்க, அதில் கிளைத்த ஒரு இனிய கிளையாய் இக்கதை எழில் மிகுந்து எழுந்தது.

தண்ணளி, தவம், அரசமரியாதை விநயம் முதலிய உயரிய இயல்புகளைக் கவி இதில் மிகவும் நயமாக விளக்கியிருக்கிறார்.

இவ்வண்ணம் முகமனுக எதிர் எதிர் உவகையுரை யாடியபின் முனிவர் அரசனை நோக்கி, "என்னை அழைத்துவந்தது எதற்காக? யாகம் செய்யத்தானே"? என்றார். மன்னன் வியந்தான். மலரடி பணிந்தான். பின்பு சொன்னபடியைக் கவியில் காண்க.

தசரதன் சொன்னது

"உலப்பில்பல் லாண்டெலாம் உறுகண் இன்றியே
தலப்பொறை யாற்றினேன் தனையர் வந்திலர்;
அலப்புநீர் உடுத்தபார் அளிக்கும் மைந்தரை
நலப்புகழ் பெறவினி நல்கல் வேண்டுமால்."

என நயந்து வேண்டினான். முதலில் ஒரு புதல்வனாது கிடைக்க வேண்டுமே என்று கவன்றிருந்தவன் இப்பொழுது கொஞ்சம் அதிக ஆசையாய் மைந்தரை எனப் பன்மையில் கேட்கின்றான். இது மனித இயற்கையை உணர்த்தி நிற்கின்றது. அதுவுமன்றி அவதார இரகசியத்தில் தொகையாக நால்வர் இருத்தலால் அவ்வுண்மை மன்னன்வாயில் தன்னையறியாமல் வந்து உதித்ததென்க.

பொதுவாகக் கூறாமல் உலகைப் பாதுகாக்கும் மைந்தரை நல்கவேண்டும் என்றதனால் பேருபகாரியான இவ்வள்ளலது உள்ளக்கிடக்கை உணர நின்றது. உலகம் நலமுற, நான் புகழ்பெற, தேவர்கள் இன்புற ஆவன செய்தருள் என்பது குறிப்பு.

இங்ஙனம் வேண்டிய இப்பெருந்தகைக்கு அவ்அருந்தவர் பதிலுரைக்கின்றார்.

“என்றலும் அரசநீ இரங்கல் இவ்வுலகு
ஒன்றுமோ? உலகம்ஈ ரேழும் ஓம்பிடும்
வன்றிறல மைந்தரை அளிக்கு மாமகம்
இன்றுநீ இயற்றுதற்கு எழுக ஈண்டென்றான்,”

(திருவவதாரப் படலம், 83)

அரசை நோக்கித்தவசி இதில் உரைத்திருக்கும் நிலைமை அருள் வசப்பட்டுக் கம்பீரமாய் விளைந்துள்ளது. உணர்ச்சி, உதவி, பரவசம், உறுதி முதலியன தோய்ந்து மொழிகள் ஒளிபெற்று நிற்கின்றன. “பார் அளிக்கும் மைந்தரை நல்கி அருள்” என்று முந்துறவேந்தன் குறித்ததைச் சிந்தையுட்கொண்டு, “இவ்வுலகு ஒன்றுமட்டுமா? ஈரேழு பதினான்கு உலகங்களையும் பாதுகாக்க வல்ல மைந்தர் தோன்றுவர்; வேள்வியை இன்றே நடத்துக: இப்பொழுதேஎழுக”! என முனிவர் இங்ஙனம் மூண்டு மொழிந்தார். அவரது ஆவேசமும் வேகமும் வியப்பை விளைக்கின்றன.

நீண்டகாலமாக மடலனாய் நின்று இனிப் பிள்ளைப் பேறே உண்டாகாதென்று உள்ளமுடைந்திருந்த மன்னனுக்கு இந்த வார்த்தைகள் என்னவாறு இனித்திருக்கும்? இன்னமிர்தமாய் இன்புறுத்தியிருக்கும் என்பது துணிபு.

அருமைப் புதல்வர் வருவர் என்று அருந்தவர் துணிந்து சொன்னது மிகவும் அதிசயமானது. எவ்வளவு நம்பிக்கை! எவ்வளவு தெளிவு? தவநலந்தனிந்த அவரது தெய்வக்காட்சியை

இவ்வளவென்று இங்கே அளந்து சொல்லமுடியுமா? வியந்து கொள்ள வேண்டியதே.

புனிதமான இந்த ஆன்ம சத்தி ஒவ்வொரு மனிதனிடத்தும் உள்ளேபுதைந்து கிடக்கின்றது. ஏகதேசமாய் இத்தகைய திவ்விய மனிதரிடத்தே வெளிப்பட்டு அது செழித்து விளங்குகின்றது.

முனிவர் தூண்டிய படியே இவ்ஆண்டகைவிரைந்து யாகத்துக்கு வேண்டிய எல்லாப்பொருள்களையும் ஒல்லையில் தொகுத்தான். நல்ல ஓரையில் வேள்வியைத் தொடங்கினர். பல்வகை உபகரணங்களும் நிறைந்து யாகசாலை அதிசய நிலையில் துதிசெய்ய நின்றது. அரசனும் அரிய நோன்புடன் ஒருமையுற்றிருந்தான்; அருமறைமுனிவர் பலரும் கருமமே கண்ணாய்த் தருமசிந்தையுடன் அருகமர்ந்து செயலாற்றி வந்தனர். புதல்வரைக் குறித்து மந்திர முறையோடு ஆகுதிபெய்து முனிவர் ஓமம் செய்தார். உரிய பருவம் வரவும் யாககுண்டத்திலிருந்து தெய்வீகமான ஒரு செம்பொற்கலம் வெளியே வந்தது; அதில் அமிர்தமயமான பாயசம் நிறைந்திருந்தது. அதனைக்கண்டதும் முனிவர்முதல் அனைவரும் அதிசயித்து உவகைமீக் கொண்டார். அந்த அவியமுதை மன்னன் கையால் எடுத்துத் தம் மனைவியர் மூவருக்கும் முறையே வழங்கும்படி மாதவர் சொன்னர். அவ்வாறே கோசலை கைகேசி சுமித்திரைகளிடம் தசரதன் கொடுத்தான். அரசன் அன்று அவி கொடுத்த மாட்சியைக்குறித்துக் கவி கொடுத்திருக்குங்காட்சிகளை அடியில் காண்க.

அரசன் கோசலைக்கு அமுது அளித்தது.

மாமுனி அருள்வழி மன்னர் மன்னவன்
தூமமென் சுரிகுழல் தொண்டைத் தூயவாய்க்
காமரொண் கௌசலை கரத்தின் ஓர்பகிர்
தாமுற அளித்தனன் சங்கம் ஆர்த்தெழ. (1)

கைகேசிக்குக் கொடுத்தது.

கைகயன் தனையைதன் கரத்தும் அம்முறைச்
செய்கையின் அளித்தனன் தேவர் ஆர்த்தெழப்
பொய்கையும் நதிகளும் பொழிலும் ஓதிமம்
வைகுறு கோசலை மன்னர் மன்னனே. (2)

சுமித்திரைக்குத் தந்தது.

நமித்திரர் நடுக்குறு நலங்கொள் மொய்ம்புடை
நிமித்திரு மரபுளான் முன்னர் நீர்மையின்
சுமித்திரைக்கு அளித்தனன் சுரர்க்கு வேந்தினிச்
சமித்தனென பகையெனத் தடமொரடார்ப்பவே. (3)

மறுபடியும் வழங்கியது.

பின்னுமப் பெருந்தகை பிதிர்ந்து வீழ்ந்தது
தன்னையும சுமித்திரை தனக்கு நல்கினன்
ஒன்னலர்க்கு இடமும் வேறுலகில ஓங்கிய
மன்னுயிர் தமக்குநீள் வலமும் துள்ளவே. (4)

மூன்று தேவியர் வயிற்றில் நான்கு பிள்ளைகள் தோன்றுதற் குரிய விவரமான காரணங்களை இவற்றுள் விளக்கியிருக்கிறார். பொன் தட்டிலிருந்த அவியைச் சமமாகப் பகுந்துகொடுத்து வந்தான்; முடிவில் மீதமாயிருந்ததை ஒருங்கு திரட்டிக் கடைசியில் நின்ற சுமித்திரைக்கே மீண்டும் கொடுத்தான். இந்தப் பங்கீடு பரம ரகசியமுடையது. விதியின் ஆணைவழியே மனிதன் மதி நடந்து வருகின்றது. மறுபடியும் இளைய தாரத்துக்கு இவ்வாறு நாயகன் நயந்து தந்தது மூத்த தாரங்களாய் முன்னிற்கும் அவ் இருவர்பாலும் ஒரு நிகரான உறவுகொண்டு நடுவு நிலைமையுடன் அவள் ஒழுகிவரும் செழுதகைமையை நினைந்து என்பர். எனினும், அவ்வுள்ளம் போல் அவளுடைய பிள்ளைகள் இருவரும் முன்னவர் பிள்ளைகட்கு முறையே உழுவலன்புடன் பணிபுரிந்து வரவுள்ள உண்மை அதில் உறைந்துள்ளது. இந்த இரட்டைப் பங்கால் இரட்டைப் பிள்ளைகள் தோன்றலாயினர்.

சுமித்திரையிடம் முதலில் அமிர்தம் கொடுக்கும்பொழுது இந்திரன் உள்ளம் களித்துத் தேவர்களோடு துள்ளி ஆரவாரித்தான். அங்ஙனம் உவகை கொண்டாடுதற்குக் காரணம், "இனி என் பகை தொலைந்தது; நான் உயர்ந்தேன்; என் குலம் வாழ்ந்தது" என்னும் களிப்பினால் என்க.

முன்னுறத் தந்த அமுத வுண்டியால் இலக்குவன அவதரித்து வருகின்றான் என்பதை இவ்வளவு பக்குவமாக விளக்கியிருக்கிறார்.

இந்த இளையவனால் இராவணனுடைய தலைமைப்புதல்வனை இந்திரசித்து அழிய நேர்கின்றான். அவன் சிறந்த வில்வீரன். தேவர்களனைவரையும் அடங்க வென்று இந்திரனைப் பிடித்துக் கொண்டுபோய் இலங்கையில் சிறை வைத்தவன். அவனது இயற் பெயர் மேகநாதன் என்பதே. இந்திரனைச் செயித்தமையால் இந்திரசித்து என வீரப்புகழோடு அவன் விளங்கிநின்றான். இந்தக் குலவீரன் பிறப்பு அந்த மகாவீரன் இறப்புக்கு ஏதுவாய் நிற்ற லால் தன் பகைவன் அழிந்தான் என்னும் உவகை மேலீட்டால் உறவினரோடு கூடி ஆரவாரஞ்செய்து இந்திரன் களியாட்டம் கொண்டான் என்பதை இதில் அழகாக வெளியிட்டிருக்கிறார். " என்பகை சமித்தது எனச்சுரார்க்குவேந்து தமரொடுஆர்ப்பவே" என்றது பின்வரும் போரமரையும் பெரு வெற்றியையும் முன்னுற உணர்த்தி இவ்வீரக் குரிசிலை நாம் வியந்து விழைந்துகொள்ளும் படி வியனுக விளைந்து நிற்கின்றது. சமித்தல்=அழிதல். சீரணித் தலைக் குறித்துவரும் செமித்தல் என்னும் சொல் இங்கே சமித் தென வந்தது. நமித்திரர்=பகைவர். மித்திரர் அல்லாதவர் என்பதாம்.

நிமி என்பவன் சூரிய குலத்தில் சிறந்திருந்த ஓர் அரசன். இட்சுவாகு மன்னனுக்குப் பன்னிரண்டாவது தலைமுறையினன். அவன் சிறந்த யாகங்கள் செய்து தவசித்தியோடு உயர்ந்த பலன் பெற்றவன் ஆதலால் அவனது குலமரபில் வந்துள்ள இவனும் இதுபொழுது அரியவேள்வி புரிந்து பெரிய பேறுகள் பெறலாயி னன் எனப் பரம்பரையின் வரம் புணர வுரைத்தார்.

இவ்வாறு அவி அமிர்து ஏற்று அரசிகள் அந்தப்புரம் அடை ந்தனர். வந்திருந்த அந்தணாளர் முதல் அனைவருக்கும் வானம் பொழிவதுபோல் அரசன் தானங்கள் பொழிந்தான். பின்பு முனிவர்களுடன் அரண்மனை வந்து சேர்ந்தான். அருந்தவரைப் பெருந்தகவுடன் உயர்ந்த ஆதனத்தில் எழுந்தருளச் செய்தான். தமர்களெல்லாரும் தாள் தொழ அனைவருக்கும் ஆசி வழங்கி முனிவர் அமரலானர். ஊரும் நாடும் உவகையங் கடலில் ஆழ்ந் திருந்தன. மக்கட் பேற்றை எதிர்நோக்கிச் சக்கரவர்த்தி மிக்க ஆவலுடன் மேன்மையுற்றிருந்தார்.

மறுநாள் எழுந்ததும் ருசியசிருங்கர் மன்னனை நோக்கி, "அரசர் பெரும! திருவருளால் நீ அரியபேறு பெற்றாய்; உனது மக்கட்பேறு அமிர்தப் பிரவாகமாய் வானமும் வையமும் உய்ய வளர்ந்தோங்கி விளங்கும்; நான் வருகின்றேன்; எனக்கு விடை தருக" என்றார். அரசன் அவரடியில் மணிமுடி படிய விழுந்து தொழுது விநயமாயெழுந்து கண்கள் நீர்மல்க அவர் முன் ஆனந்த பரவசனாய் அவசமாய் நின்றான். அவர் வாழ்த்தி எழுந்தார். உடன் வந்தவர்க்கெல்லாம் மன்னன பொன்னும் மணியும் வாரிச் சொரிந்தான். அருந்தவர் பன்னியாய் வந்துள்ள சாந்தைக்கு உயர்ந்த முத்துமாலைகளையும் இரத்தினமாலைகளையும் கோசலை கையால் கொடுக்கும்படி செய்தான். வசிட்டருடன் சிறிது தூரம் உடன்போய் அரசன் வழியனுப்ப ருசியசிருங்கர் உள்ள முருகி வாழ்த்தி நிற்கும்படி பணித்து விழைந்து விடைபெற்றுத் தேரேறி விரைந்து சென்றார்.

முனிவரது வரவும் போக்கும் இவ்வாறு இனிதமைந்துள்ளன. இந்தச் சரிதம் முதல் நூலாகிய வால்மீகத்தோடு இதில் சிறிது வேறுபட்டிருக்கின்றது. அங்கே கலைக்கோட்டு முனிவர் நிலைமையை மந்திரியாகிய சுமந்திரன் மன்னனுக்குச் சொல்லி, அவரைக்கொண்டு வந்து வேள்வி செய்யவேண்டும் என்று வேண்டியதாக வுள்ளது. இங்கே வசிட்டர் சொன்னதாக இருக்கிறது. மகா தவசியினுடைய வரலாற்றை அவரை யொத்த ஒரு தவசியின் வாயிலாக அறிந்துகொண்டதாக அமைவதே பெருந் தகுதியாம் எனக் கம்பர் கருதியிருக்கின்றார் என்று தெரிகின்றது. அதில் அரச குமாரியாகிய சாந்தையை ருசியசிருங்கர் உலகம் அறிய மணந்து கொண்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் அதைப்பற்றி யாதும் சொல்லவில்லை. ஆதியிலிருந்து அதிக மறைவாகவே அதனை ஒதுக்கி வந்திருக்கிறார். முன்பு மண்ணை மறந்து அரிய தவயோகியா யிருந்தவர் பின்பு பெண்ணை மணந்து பெரிய சுகபோகியாய் உவந்து வாழ்ந்து வந்தார் என்று சொல்லுவதைக் காட்டிலும் சொல்லாமல் விட்டு விடுவதே நல்லதென்று இவர் நினைத்தார் போலும்.

நல்ல உணர்ச்சியும் உயர்ச்சியும் புனித நிலையில் பெரு மதிப்போடு மனித சமுதாயத்தில் என்றும் இனிது வளர்ந்து வரும்படி

நிகழ்ச்சிகளைச் செப்பப்படுத்தி எங்கும் இவர் உரைத்து வந்திருக்கிறார். நல்லன தெளிந்து அல்லன களைந்து எல்லாரும் நலமுற உறுதியுணர்வுகளை இதமாகச்சொல்வது இவரது வழக்கம்.

நயத்தகு தன்மையும் நாகரீகமும் இவர் உரைகளில் வியத்தகு மேன்மையில் எங்கும் விளங்கி நிற்கின்றன நமது கவிச்சக்கரவர்த்தி முனிவரது மணநிலையை நளினமாகக் கூறியிருப்பதை மற்றொரு கவிஞர் ஒளிமறைவின்றித் தெளிவாக விளக்கி யிருக்கிறார்.

"ஒருகோட்டுக் கலைமானும் ஒளிதிகழும
புலியாடை உடுத்தகோவும்
மருமலர்வாழ் திசைமுகனும்
வானவர்கள் நாயகனும் மயிடன்தானும்
கரியநிறத் திருமாலும வாலியும்
பராசரனுமே காமன் அம்பால்
பெருமையிழந் தனரென்றால
சிறுமனிதர்க்கு எபபடியோ பேசுங்காலே?"

(தனிப்பாடற்றிரட்டு)

என்று சுந்தர கவிராயர் என்பவர் இப்படிப் பாடியிருக்கிறார்.

காம நிலை தோய்ந்தார் என்று குறிக்கவந்த இடத்தும் தெய்வங்களோடு முன்வைத்து எண்ணியிருத்தலால் இவரது செய்தவமுடைமையும் திவ்விய நிலைமையும் தெரியலாகும்.

தவ மகிமை, வேள்வி நிலை, தெய்வகிருபை முதலிய உயர் நலங்கள் இவர் கதையில் சுவை மிகுந்துள்ளன.

இவர் அகன்ற மறுதிங்களில் அரசிகள் மூவருங்கற்பவதிகளாயினர். பருவம் நிறையவும் அற்புதப் புதல்வர்கள் உற்பவித்தனர். வகை நலங்கள் எங்கும் ஓங்கி யெழுந்தன. மகப்பேறு அறிந்ததும் சக்கரவர்த்தி அளவிடலரிய பேரானந்த முடையனாய் அரிய தானங்கள் பல வழங்கிக் குருவுடன் அந்தப்புரம் வந்து மக்கள் முகத்தை மகிழ்ந்து நோக்கினான். அழகொழுகத் திவ்விய ஒளி தவழ்ந்து விளங்கும் குழந்தைகளைக் கண்டபொழுது அவன் உள்ளங் கொண்ட உவகையை எவரளந்து சொல்ல வல்லார்? கரை காணாத பெருமகிழ்ச்சியடைந்து தனது அரிய நிதியறையைத் திறந்து வைத்து எது வேண்டுமாயினும் எவரும்

வேண்டியவாறே அள்ளிக்கொண்டு போங்கள்; ஏழு ஆண்டுகள் வரையும் அரசர் முதல் யாவரும் திறை தர வேண்டா; சிறைகளிலுள்ள அனைவரையும் வெளியே விடுக; ஆலயம் புதுக்குக; சாலைகள் சமைக்க; காலையும் மாலையும் கடவுள் பணி புரிக; மாலையும் தீபமும் ஆடையும் அணியும் எங்கும் வழங்கிவருக; என இன்னவாறு வள்ளுவன் மூலம் இவ்வள்ளல் பறையறைவித்தான். அவன் யானை மேலேறி வாமொலி முழக்கிக் கோனுளம் விளக்கினன். அம் முரசொலி யறிந்ததும் நாடெங்கணும் உவகையும் விழாக்களும் ஓங்கி மலிந்தன. ஆண் பெண் அடங்கலும் ஒவ்வொருவரும் உள்ளங் களித்து எதிர்ப்பட்டவர்க்கெல்லாம் தான தருமங்களை அள்ளி யிறைத்தார். தேசமக்களிடம் அன்று தோன்றிய மகிழ்ச்சியும் மலர்ச்சியும் ஆரவாரங்களும் அளவிடலரியன. அடியில் வரும் கவியைப் பார்க்க.

குடிகளின் கொண்டாட்டம்.

“ஆர்த்தனர் முறைமுறை; அன்பினால் உடல்
போர்த்தனர் புளகம்; வேர் பொடித்த; நீணிதி
தூர்த்தனர் எதிர் எதிர் சொலலி னோர்க்கெலாம்
தீர்த்தனென் றறிந்ததோ அவர்தம் சிந்தையே?”

(திருவவதாரப் படலம் 117)

தங்கள் சக்கரவர்த்திக்கு மக்கள் பிறந்தார் என்றதை அறிந்தவுடனே அயோத்தி மக்கள் அடைந்த ஆர்வ நிலைகளைக் கூறியபடியிது. மனம் மொழி மெய்கள் மூன்றிலும் மகிழ்ச்சி மீக்கூர்ந்திருந்த வகையை இதில் உணர்த்தியிருக்கிறார். உள்ளம் பூரித்து, உவகை யுரையாடி, அள்ளிக்கொடுத்து ஆராமையோடு ஆர்த்து நின்றார் என்பதாம். முக்கரணங்களும் ஒக்க உவந்து பக்கம் எங்கும் மக்கள் இங்ஙனம் பாராட்டலானார். முன் மூன்று அடிகளில் நிகழ்ந்த அதிசயச் செயல்களுக்கு உரிய காரணம் ஒன்றை இறுதி அடியில் இனிது காட்டி உறுதி செய்துள்ளார்.

“தனக்கு என்று ஏதேனும் தனியே இலாபம் கிடைத்தால் தான் மனிதன் மகிழ்ச்சியடைவான்; பிறர்க்கு வரின் அவ்வாறு மகிழான்; உரிமையானவர்க்கு யாதாவது பெரிய நன்மையுறின் சிறிது மகிழ்ந்து வெளியே ஒப்புக்கு உவகை யுரையாடி வருவான். இங்கே அப்படியின்றி உண்மையாகவே உள்ளன்பு பூண்டு உயிர்க் காதல் மண்டி எல்லாரும் பரவசராய் நிற்கின்றனர்; என்னே

இது?'' என எண்ணி நோக்கி முடிவில், ''தீர்த்தன் என்று அறிந்ததோ அவர்தம் சிந்தையே?'' என்று தமக்குள்ளேயே வியந்து கவி இதில்வார்த்தைபாடியிருக்கும் வனப்பைப்பார்க்க. தீர்த்தன் = தூயவன், பரிசுத்தன். இங்கே திருமாலைக் குறித்தது. அப்பெருமானே வந்து நம் மன்னனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்திருக்கிறான் என்னும் அத்தெய்வவுண்மைதெரிந்துதான் அவர் உள்ளங்கள் இவ்வாறு உருகியுள்ளன என்று தம் உள்ளம் கொண்டதை உலகம் கொள்ள நம் கவி யுரைத்திருக்கிறார்.

குடிகள் அரசனிடம் கொண்டுள்ள ஆர்வமும், அவன் உலகைப் பேணியிருக்கும் நீர்மையும் இதனால் அறியலாகும்.

''ஓர் ஏழ் ஆண்டு பார் இறை தவிர்க்கிடுக'' என்று வரையறை செய்து அரசன் உரைத்திருக்கிறான். நாலு, எட்டு, பத்து என ஏதாவது ஒன்று கூறாமல் ஏழ் என்றது, ''இராச நோக்கமோ தெய்வ நோக்கமோ'' என்றபடி மன்னன் மனம் துணிந்துள்ளது. ஏழுக்கு ஒரு தனி மதிப்பும் வழக்கும் தமிழ் மொழியில் இருக்கின்றன. ''எழுமை, எழு பிறப்பு'' என வள்ளுவப் பெருந்தகை வழங்கியுள்ள இடங்களைக் காண்க.

ஒரு வாரம் ஏழு நாட்களையுடையது; நாள் ஒன்றுக்குஆண்டு ஒன்றாக ஏழ் ஆண்டுகள் எண்ணிக்கொண்டான் எனவும் எண்ணலாகும். திருமால் அவதாரங்கள் பத்து; அவற்றுள் இராமனாக வந்தது ஏழாவது அவதாரம். அந்த எண்ணம் தெரியத் தன்னையறியாமலே மன்னன் இந்த எண்ணம் கொண்டான் எனினுமாம்.

இவ்வண்ணம் தெய்வீகமான திவ்விய மக்களைக் கண்ட மன்னன் பிறந்த பயன் பெற்றோம் என்று பெருமகிழ்ச்சி மிகுந்து இந்த அருமைக் குழந்தைகளுக்குப் பெயர் வைக்கும்படி தன் குலகுருவாகிய வசிட்டரை வேண்டினன். அந்த அருந்தவர் தெய்வக்காட்சியோடு சிந்தித்து திருநாமம் இடத் தொடங்கினர். அப்பொழுது தருமதேவதை திருவுளம் மகிழ்ந்தது. அரிய பேறுகள் அகிலமும் பெறப் பெரிய பேர்கள் பிறக்கின்றன என வானில் மோனமாக ஒரு ஞான ஒலி முழங்கியது. இராமன், பரதன், இலக்குவன், சத்துருக்கனன் எனப் புதல்வர் நால்வருக்கும் முறையே பெயரிட்டார். முனிவர் அன்று மொழிந்த இப் புனித நாமங்கள் மனித சமூகத்தில் என்றும் புத்தொளிமிக்கு

யாண்டும் இன்புறுத்திவருகின்றன. கோசலை வயிற்றில் இராமனும், கைகேசி வயிற்றில் பரதனும், சுமித்திரை வயிற்றில் இலக்குவனும், சத்துருக்கனனும் ஒருவர் பின் ஒருவராய் வரன்முறையே பிறந்தார் ஆதலால் அவ்வரிசையில் பெயர் வழங்கினர்.

பெயர் வைத்த சித்திரத்தைக் கவி விசித்திரமாக விளக்கியிருக்கிறார். அந்தச் சித்திரப் படங்கள் அடியில் வருகின்றன.

இராமன்

*கராமலை யத்தளர் கைக்கரி எய்த்தே*
*அராவணை யிற்றுயில வோய்என அந்நாள்*
*விராவி அளித்தருள் மெய்ப்பொரு ளுக்கே*
*இராமன் எனப்பெயர் ஈந்தனன் அன்றே.* (1)

பரதன்

*கரதலம் உற்றொளிர் நெல்லி கடுப்ப*
*விரத மறைப்பொருள் மெய்ந்நெறி கண்ட*
*வரதன் உதித்திட மற்றைய ஒளியைப்*
*பரதன் எனப்பெயர் பன்னினனன்றே.* (2)

இலக்குவன்

*உலக்குநர் வஞ்சகர் ; உம்பரும் உய்ந்தார் ;*
*நிலக்கொடி யுந்துயர் நீத்தனள் ; இந்த*
*விலக்கரு மொய்ம்பின் விளங்கொளி நாமம்*
*இலக்குவன் என்ன இசைத்தனன் அன்றே.* (3)

சத்துருக்கன்

*முத்துருக் கொண்டுசெம் முளரி அலர்ந்தால்*
*ஒத்திருக் கும்மெழில் உடையஇவ் ஒளியால்*
*எத்திருக்கும் கெடும் என்பதை எண்ணிச்*
*சத்துருக்கன் எனச் சாத்தினர் நாமம்.* (4)

பெயர்களை முன்னதாக எண்ணிக்கொண்டு அவற்றிற்கு இயைய எதுகை அமைத்துப் பாடிய பாடல்கள் இவை. கருத்துக்களையும் குறிப்புக்களையும் கூர்ந்து நோக்கி நயங்களை ஓர்ந்து கொள்க. உரை வரையின் பெரிதாய் விரியும்.

முதலைவாயில் அகப்பட்டுக் கதறிய கசேந்திரன் என்னும் யானையைக் காக்கவந்த ஆதிமூலப்பொருளாகிய அந்தத் திருமாலே இந்த இராமனாக வந்து அவதரித்திருக்கிறான் என முன்

கவியில் குறித்திருக்கிறார். கரா=முதலை. கரி=யானை. அபாயத்தில் சிக்கியிருந்தபொழுது தன் துதிக்கையைத் தூக்கி ஓலமிட்டு நின்ற அதன் காட்சி கருதிக் கைக்கரி என்றார்.

முன் யானையைக் காத்த அவன் இப்பொழுது வானையும் வையத்தையும் காக்க வந்திருக்கின்றான் என இவ்வரவின் ஏற்றமும் தோற்றமும் தெரிய அதைப் போற்றி வைத்தார்.

இராமன், என்னும் பெயருக்குப் பொருள் எல்லாரையும் இரமிக்கச் செய்பவன் என்பதாம். தன் மேனி அழகாலும் குணகணங்களாலும் எவ்வுயிரையும் இன்புறுத்த வல்ல இன்ப மூர்த்தி என்பதை இப்பேர் இனிது விளக்கியுள்ளது.

இராமன், மரகத மணி போன்ற பசுஞ்சோதித் திருமேனியன்.
பரதன், கொஞ்சம் வெண்மை கலந்த பசுமை நிறத்தன்.
இலக்குவன், சூரிய பிம்பம்போல் சிவந்த மேனியன்,
சத்துருக்கன், சந்திரன்போன்ற வெண்ணிறமுடையவன்.

அழகு குடிகொண்ட உருவநலம் வாய்ந்த இக் குமாரர்கள் அமரசோதிகளென இனிது வளர்ந்து வந்தனர். உரிய பருவம் வரவும் அரிய கலைகள் பலதெளிந்து பெரிய கலைஞானிகளாய்ப் பெருகி நின்றனர். யானை குதிரை தேர் என்னும் வாகன வரிசைகள் பயின்று, வில் வேல் வாள் முதலிய படைக்கல வலிகள் எல்லாவற்றிலும் சிறந்து, யாண்டும் வெல் வீரர்களாய் விளங்கி யுயர்ந்தனர். ஓருயிரே நான்கு வடிவங்களாய் நடித்துவருகின்ற தென்னும்படி ஒருவரை ஒருவர் பிரியாமல் உழுவலன்புடன் ஒழுகி வந்தனர். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள்கள் நான்கும் உருவு கொண்டு உலாவியதுபோல் இவர் உலாவலாயினர். சதுர்மறைகளென இச்சதுரர்கள் மதிநலம் சுரந்து மருவி வளர்ந்தனர். புதல்வர் நால்வருள் இராமன் எந்நிலையிலும் முதல்வனாய் நின்றான். ஞாலம் உய்யவந்த ஒரு பசிய பால சூரியனெனச் சீலம் கனிந்து கோலமுடன் அவன் குலாவி நின்றான். அவனைத் தன் கண்ணினும் உயிரினும் இனியனாக மன்னன் எண்ணிப் போற்றி யாண்டும் இன்பமீதூர்ந்தான்.

இராமனிடம் தசரதன் ஆர்வமுற்றிருந்தது.

"காவியும் ஒளிர்தரு கமலமும் எனவே
ஓவிய எழிலுடை ஒருவனை அலதோர்
ஆவியும் உடலமும் இலதென அருளின்
மேவினன் உலகுடை வேந்தர்தம் வேந்தன்."

(திருவவதாரப் படலம், 125)

இராமனது சுந்தர வடிவத்தைச் சொல்ல நேர்ந்தபொழுதெல்லாம் கம்பர் பரவசமாகின்றார். அவனுடைய குண நலங்களில் ஈடுபட்டுள்ளதுபோலவே தேக சவுந்தரியத்திலும் ஆராமை மீதூர்ந்து ஆழ்ந்திருக்கின்றார். அச் சுகுமாரனது விழுமிய அழகை உரைக்க அழகிய சொற்களைப் புதிது புதிதாக ஆராய்ந்து கொள்கின்றார். ஓவிய எழில் என்னும் இம் மதுரவாசகம் காவியத்தில் பல இடங்களில் பல அடைமொழிகளுடன் வந்திருக்கின்றது. கைதேர்ந்த ஓவியப் புலவன் பன்னாளும் கண்ணூன்றிக் கருதித் தான் எண்ணியவாறெல்லாம் எழிலுறுத்தித் திருந்த எழுதிய திவ்விய ஓவியமும் இவனது செவ்விய உருவிற்கு ஈடாகாது. அது உயிரற்றது ; இது உயரிய உயிர் பெற்றது. பூரணமான எழில் நலங்களெல்லாம் ஒருங்கே வாய்ந்து, விழுமிய உயிர்தோய்ந்து, புனிதமான இனிய ஓவியம் ஒன்று அதிசய நிலையில் எவரும் துதிசெய எதிரெழுந்து வந்தால் இராமன் உடலுருவோடு ஒருவாறு அது சிறிது நிறை ஒத்திருக்கும் என்பதாம்.

எழிலுடைய ஒருவன் என உடைமைப்பொருள் கருதியே பதங்கள் வந்துள்ளன ஆயினும், ஓவிய எழிலும் எதிர்வர நாணி உடைந்து இழிந்து ஒழிந்து போகத் தக்க உயர்ந்த உருவுடையான் என்று பொருள் கொள்ளவும் ஈண்டு இடம் தந்து நிற்கின்றன.

காவி என்பது நீலோற்பலம் என்னும் ஓர் நீர்ப்பூ. பசுமை கனிந்த கருநிறமுடையது. இராமனது சாமளமான கோமளத் திருமேனிக்கு அது இங்கே உவமையாய் வந்தது. கமலம் அவயவங்களைக் குறித்தது. கை, கால், கண், வாய் முதலிய அவயவங்கள் செந்தாமரை மலர் போல் சிறந்து விளங்கின ஆதலால் கமலம் ஒப்புற நேர்ந்தது. "கால் தாமரை, கை தாமரை, கண்கள் தாமரை" எனப் பண்கள் பாடியுள்ளமை காண்க.

நீலப் பச்சை நிறத்தில் இனிய மலர்கள் போல் திவ்விய உறுப்புகள் செவ்வி பெற அலர்ந்து உருவம் ஒளிமிகப்பெற்றிருந்தமையால், "காவியும் ஒளிர்தரு கமலமும்" என்றார். மென்மை தண்மை மணம் மினுமினுப்பு மேன்மை முதலிய இனிமைகளெல்லாம் மேனியில் தனியே மலர்ந்திருந்தன என்பதாம். இளமை சுரந்து, எழில்நலங் கனிந்து, விழுமியநிலையில் ஒளிமிகுந்திருந்த

தென அக்கட்டழகன் வடிவைக் கட்டித் தழுவி உள்ளங்களிக்க இங்ஙனம் உரைத்திருக்கிறார்.

ஒருவன் என்றது ஒப்பற்றவன் என்றவாறு. அறிவு குணம் ஆற்றல்களில் எவரும் தனக்கு நிகரில்லாதவன் என்பதாம். "தன்னிகரில்லாத் தலைவனை யுடைத்தாய்" என்ற இலக்கண விதிப்படி ஒரு காவியம் சரியான உயர்நாயகனைத் தனக்கு உரிமையாக அடைந்திருந்தால் அது காவிய நாயகமாய் யாவரும் போற்ற உத்தம நிலையில் ஓங்கி ஒளிரும் என்பதை இராமாயணம் நமக்கு உணர்த்திவருகின்றது. அவ்வரவு நிலையை உரிமையுடன் வெளிப்படுத்தி இடையிடையே கவி களிப்புறுகின்றார்.

புதல்வர் நால்வருள் முதல்வனுன இராமனைத் தனது உயிராகத் தசரதன் கருதியிருந்தான் என்பதை இதில் தெளிவாக விளக்கியிருக்கிறார். அவனுடைய புத்திரவாஞ்சையும், உள்ளுருக்கமும், உயிர்க் காதலும் இதனுல் நன்கு உணரலாகும்.

தசரதனுக்கு உயிர் இராமன் என்பது கருத்து. அவன் உயிர் தன்னுயிர், அவன் உடல் தன்னுடல் என மன்னன் எண்ணியிருந்த மனநிலை தெரிய, "ஆவியும் உடலமும்" எண்ண வந்தன. உடல் உயிர் பொருள் யாவும் அவனே என அரசன் ஆவல் மீக்கூர்ந்திருந்தான் என்க. "உலகுடை வேந்தன் இலது என மேவினன்" என இதில் முரண்தொடை மேவியுள்ள நயம் காண்க. எல்லா உடைமைகளும் எவன் உண்மையால் இனிமை பயந்துள்ளனவோ அவன் இவன் என்பது குறிப்பு.

சக்கரவர்த்திக்கு உயிர்நிலை இன்னது என்பதை உலகறிய முன்னதாக இதில் உரைத்திருக்கிறார். அந்நிலைமை பின்னே தெளிவாகத் தெரியலாகும்.

தான் பிறந்த குடி வறந்து போகாமல் வழி வழியே சிறந்த நிலையில் உயர்ந்து வரவேண்டுமே என்று உள்ளம் கருதி இவ் வள்ளல் உளைந்ததும், உறுதி தெரிந்து ஊக்கி முயன்றதும், அதன் பயனுக வேள்வியில் தெய்வம் வந்து கைதந்தருளியதும், கருமகலனும், பிறவும் இதில் உணர்வு நலம் பயந்துள்ளன.

*" குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும் " (குறள், 1023)

என்னும் பொய்யாமொழியின்படி இம் முடி மன்னனும் முயன்று குடி செய்துள்ளமை படி யறிய நின்றது.

இடையூறுகளைக் கண்டு யாண்டும் தளராமல் மூண்டு முயன்றால் அவன் ஆண்டகையாகி நீண்ட பயனை நேரே பெறுவன்; தெய்வங்களும் அவனுக்கு உவந்து உதவும் என நம் வள்ளுவப் பெருந்தகை உணர்வுறுத்தியது மாந்தர் உள்ளம் துணிந்து முயன்று உயர்ந்து கொள்ள என்க. ஜொராஷ்டிரன் (Zoroaster) என்னும் ஈரானிய ஞானி சொல்லியுள்ள அருமை வாக்கியம் ஒன்று ஈண்டு அறியவேண்டும். அடியில் வருகின்றது காண்க. "To the persevering mortal, the blessed Immortals are swift" (Zoroaster).

" மனம் தளராமல் முயன்று முன் செல்லும் மனிதனுக்கு உவந்து உதவிசெய்யத் தேவர்கள் விரைந்து வருகிறார்கள்" என்ற இந்த ஈரான் தேசத்து மகான் வாசகமும், குடி செய்வானுக்குத் தெய்வம் முந்துறும் என மேலே வந்துள்ள நம் தேவர் வாக்கும் கருத்து ஒத்திருத்தலைக் கருத்தூன்றி நோக்குக.

இங்ஙனம் தரும சிந்தனையுடன் இனிய கருமங்கள் செய்து அருமை மக்களைப் பெற்றுப் பெரு மகிழ்ச்சியுற்றுத் தசரதன் வாழ்ந்திருந்தான். அவ்வாழ்க்கையில் தெய்வத்தேசு திகழ்ந்து

* தான் தோன்றியகுடி உயர்ந்த மதிப்புடையதாய் ஓங்கி ஒளிர வேண்டும் என ஒருவன் ஊன்றி முயல்வனாயின், கருமங்களின் அதிதேவதை அவனை உரிமையுடன் உவந்துபேணும்; ஊழ்வினை என்பது ஆள்வினையை அடியொற்றி வருதலால் வினையாண்மையுடைய அவனுக்கு அத்தெய்வம் துணையாய் முன்வந்தருளும் என்பார், " தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும் " என்றார். தற்றுதல் = வரிந்து கட்டுதல். மடி = ஆடை. காரியம் செய்யப்புகுவோர் உடையை இறுக்கிக்கட்டிக் கொண்டு செல்வார் ஆதலால் அந்தவீரிய நிலை தோன்ற வந்தது. கச்சையை வரிந்து கட்டிச்செல்லும் மல்வீரர்போல் கருமவீரரும் இங்கே கருத நின்றனர். மடியைவிட்டு முயல்வானுக்குத் தெய்வம் மடிகட்டி முன்வரும் என இதில் படிகட்டி வைத்திருக்கும் அழகைப் பார்க்க. உயர்ச்சிக்குரிய முயற்சியை ஊக்கிச் செய்க; அங்ஙனம் செய்யின் தெய்வமும் கைதரும்; உய்வகை யுண்டாம் என ஊக்க மூட்டி உரைத்த படியிது. ஊக்கி முயன்றவர் யாண்டும் ஆக்கம் பெறுவர் என்பதாம்.

அரசிளங் குமரர்கள் கலை வளங்கள் சுரந்து பலநலங்கள் நிறைந்து சிறந்த போகங்களுடன் உலகம் இன்புற வளர்ந்து வந்தனர். வருங்கால் இராமனுக்கு வயது பதினாறாயது.

அயோத்திமன்னன் இயல்பு, பிள்ளைப்பேறு கருதி உள்ளம் கவன்று குருவினிடம் அவன் கருதி உரைத்த திறம், அவர் அருளியபடியே கலைக்கோட்டு முனிவரை அழைத்து வந்து வேள்வி செய்த விதம், புதல்வர் தோன்றியவகை, அவர்களைக் கண்டு மகிழ்ந்து தான தருமங்கள் புரிந்து நாமங்கள் புனைந்து மன்னன் அமர்ந்திருந்தநிலை, கலை பல பயின்று மதிநலம் சுரந்து மக்கள் மருவியிருந்த மாட்சி முதலியவற்றைப் புலமை நலம் கனியக் கம்பர் இதில் உரைத்திருக்கிறார். அவரது கலைக்காட்சிகள் இடங்கள்தோறும் உணர்வும் இன்பமும் ஒருங்கே சுரந்துள்ளன. ஊன்றியுணர்ந்து கொள்க.

## விசுவாமித்திரர் வருதல்

தன் செல்லப் பிள்ளைகளைக் கண்டு, உள்ளம் பூரித்து, எல்லையில்லாத இன்பக் கடலுள் ஆழ்ந்து தசரத மன்னன் இனிது வாழ்ந்து வருங்கால் ஒரு நாள் விசுவாமித்திரர் திருவயோத்திக்கு வந்தார். அரசவையுட் புகுந்தார். அவ்வமயம் தசரதன் அரியணையில் வீற்றிருந்து அரச காரியங்களைக் குறித்து அமைச்சர்களோடு உசாவிக்கொண்டிருந்தான். அரிய தவசியாகிய அப் பெரியவரைக் கண்டதும் அதி ஆச்சரியத்துடன் மன்னன் விரைந்தெழுந்து அவரடியில் விழுந்து வணங்கி வாழ்த்தி அருகே ஓர் உயர்ந்த மணித் தவிசில் எழுந்தருளச் செய்து உபசாரங்கள் புரிந்து மிகவும் விநயமாக உவந்து அமர்ந்தான்.

முனிவர் வரவும் இவ் அரசு எழுந்து பணிந்த நிலையை நம் கவியரசு அழகிய கவிப் படத்தில் தீட்டிக் காட்டியிருக்கிறார். அக்காட்சியை முதலில் கண்டு கொண்டு, மேலே நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பின்னே காண்போம்.

### தசரதர் கௌசிகரை வணங்குதல்.

வந்துமுனி எய்துதலும் மார்பின்அணி ஆரம்
அந்தர தலத்திரவி அஞ்சவொளி விஞ்சக்
கந்தமல ரிற்கடவுள் தன்வரவு காணும்
இந்திரன் எனக்கடி தெழுந்தடி பணிந்தான்.

(கையடைப்படலம், 4)

விசுவாமித்திரரைக் கண்டவுடன் அரசன் எழுந்து அடி பணிந்த வகையை உரைத்த படியிது. அரசு இருந்த திறம், எழுந்தநிலை, பணிந்த முறை, எவரும் இதில் வியந்து நோக்க வுள்ளன. கந்தம்=வாசம். கடிது=விரைந்து.

சிறந்த அருந்தவரான அவர் வந்ததும் அரியணையில் அமர்ந்திருந்த தசரதன் விரைந்து எழுந்தான்; அங்ஙனம் எழுங்கால் அவன் மார்பில் அணிந்திருந்த வயிரப் பதக்கம் அலம்பி அசைந்தது; அப்பொழுது அதிலிருந்து எப்பொழுதும் காணுத ஓர் பேரொளி எழுந்தது; அவ் ஒளி எவ்வளவு அளவுடையது? எனின், இவ்வளவு என்று என்ருல் அளந்து சொல்லமுடியாது; ஒரு குறிப்பு மட்டும் சொல்லுகின்றேன்; அதினின்று அதன் நிலைமையை நீங்கள் உணர்வினுல் ஊகம் செய்துகொள்ளுங்கள் என்று அணிமேல் மோகம் கொள்ளும்படி ஒளியைப் பாகம் செய்து கவி இங்கே காட்டியிருக்கும் நயம் வியப்பும் விம்மிதமும் விளைத்து உவப்புமிகுந்துள்ளது.

"இரவி அஞ்ச ஒளி விஞ்ச" என்றதனுல் அந்த அரதன மாலையின் உயர் நிலை புலனும். இரவி=சூரியன். விஞ்ச=மிக. உயர்ந்த சாம்பூநதம் என்னும் பசும் பொன்னில் மாணிக்கம் வயிரம் மரகதம் முதலிய நவமணிகளை நலமுறப் பொதிந்துஎழில் பெற இழைத்து வட்ட வடிவமாகச் செய்யப்பட்ட பதக்கத்தை நடுவே யுடைய ஓர் உயரிய இரத்தினமாலையை மன்னன் கழுத்தில் அணிந்திருந்தான்; அந்த ஆரம் மார்பில் படிந்து சந்திர பிம்பம் போன்ற சுந்தரப் பதக்கத்துடன் துவண்டு கிடந்தது; அவன் எழவும், அதன் ஒளி பளீர் என்று வீசியது; வீசவே ஒளி வடிவாயுள்ள சூரியன் "இது என்ன! புதிய ஒளி!" என்று அதிசயித்து நோக்கி அச்சமுறலானுன் என ஓர் அற்புதக் காட்சியை இதில் கற்பித்திருக்கும் மாட்சி கருதும்தோறும் பெரிதும் அதிசயிக்க நேரும்.

மன்னன் மணியணி விண்மணியாகிய கதிரவன் கண்ணெளியும் எதிர் கூசும்படி கதிர் வீசியது என்ற இதனுல் இவனது திருவின் பெருமையும் உருவின் அருமையும் திவ்விய போகங்களும் தெரியலாகும். "திருவின் தொடர் போக பெளவம் தோய்ந்தே கடந்தான்" என முன்னம் குறித்த மன்னன் நிலைமையை இடங்கள்தோறும் இன்னவாறு ஞாபகப்படுத்தி வருகின்ருர்.

தேவர்களும் வியந்து ஆவலோடு நோக்கச் சுந்திரச் சோதி மணி மண்டபத்தில் இந்திரன் போல் தசரதன் கொலு வீற்றிருந்தான் என முந்திய கவியில் உரைத்தார்; இதில் அவன் எழுந்தது அவ் அமரர்கோன் எழுச்சியாயிருந்தது என்று குறித்தார்.

சுதர்மை என்னும் தெய்வ சபைக்குப் பிரமன் வந்தால் இந்திரன் எவ்வாறு வணங்கி மரியாதை செய்வானோ அவ்வாறு தன் அவைக்குள் வந்த மாதவர்க்கு மன்னவன் மகிழ்ந்து செய்தான் என்பதாம். இதில் விரைவும் பணிவும் பயமும் பத்தியும் மருவியுள்ளன.

தசரதன் இந்திரனையும், விசுவாமித்திரர் பிரமாவையும் ஒத்திருந்தனர் என்றது அவர்தம் தன்மையும் தகுதியும் உய்த்துணர என்க.

"மடங்கலபோல மொய்ம்பினன் முன்னர் மன்னுயிர்
அடங்கலும் உலகும்வேறமைத்துத் தேவரோடு
இடங்கொள் நான்முகனையும் படைப்பன் ஈண்டெனத்
தொடங்கிய துனியுறு முனிவன் தோன்றினன்."

என முனைம அரச சபையை அணுகியபொழுது முனிவரைக் குறித்து உரை செய்ததையே மீண்டும் நிறை செய்து அவரது நிலைமை முழுவதையும் நன்கு நினைந்துகொள்ளும்படி இன்னனம் நினைவுறுத்தினர்.

உலக முழுவதையும் படைத்து அதனல் சிருட்டி கர்த்தா எனப் பெயர் பெற்றுள்ள பிரமனையும் "நான் இதோ படைக்கின்றேன்" என்று இவர் சினந்து எழுந்து சீறித் துடித்த* கதையை இங்கே புனைந்து சொன்னது மன்னன் முன்னிலையில் பின்னை நிகழ இருக்கும் நிலைமையை முன்னுற நாம் உணர்ந்துகொள்ள என்க. துனியுறு முனிவன் எனச் சுட்டி விசுவாமித்திரரை நமக்கு அறிமுகப்படுத்தியிருக்கும் கவியின் சாதுரியத்தைக் கண்ணூன்றி நோக்குக. துனி = கோபம். சாபமும் கோபமும் தழைத்த தவமுனி என்றதனல் இவரது தாபத நிலைமையும் தலைமையும் புலனும்.

* திரிசங்கு மன்னனுக்கு உடம்போடு சுவர்க்கம் தருவதாக இவர் மூண்ட பொழுது நேர்ந்தது. அதனை மிதிலைக்காட்சிப் படலத்தில் காணலாம்.

இத் தகைய அருந்தவ முனிவரர் அவையுள் புகவும் அரியணையில் இருந்த மன்னன் விரைந்தெழுந்து பணிந்து அருகே ஓர் அணியாசனத்தில் அமரச்செய்தான். அவர் ஆசி மொழிந்து நேசமுடன் அமர்ந்தார். அரிய பல உபசாரங்கள் புரிந்து உள்ளங் கனிந்து அவரை நோக்கி அரசன் உவகை யுரையாடினன்.

தசரதன் கூறியது.

"நிலஞ்செய்தவம் என்றுணரின் அன்று நெடியோய்! என்
நலஞ்செய்வினை உண்டெனினும் அன்று நகர்நீ யான்
வலஞ்செய்து வணங்கஎளி வந்தவிது முந்தென்
குலஞ்செய்தவம் என்றினிது கூற முனிகூறும்."
(கையடைப்படலம், 6)

கோசிகரை நோக்கி அரசன் கூறியுள்ள இந்த வாசகங்கள் அவரது காட்சியின் அருமையையும், மாட்சியின் பெருமையையும் ஒருங்கே விளக்கி நிற்கின்றன.

முனிவர் குல திலகமே! தேவரீர் ஈண்டு எழுந்தருளியது மிகவும் அதிசயமானது; இங்ஙனம் தாமாகவே எளிது வந்ததற்குக் காரணம் இந்தக் கோசல தேசம் செய்த நல்வினையா? அல்லது நான் பண்ணியுள்ள புண்ணியமா? என்று எண்ணி நோக்கின், அவை யாதும் ஈடாகா; என்னுடைய முன்னோர் செய்த பாக்கியமேயாம் என்பான், "என் குலம் செய் தவம்" என்றான். "யான் செய்த மாதவமோ? இவ்வுலகம்செய்தவமோ? யாதோ?" என முன்னம் உரோமபதன் தன்னை நோக்கிச் சொன்னதையே மன்னன் இங்கே முனிவர் முன்னே சொல்லியிருக்கின்றான். ஆண்டு அவன் யாதோ? என்றதை ஈண்டு இவன் பொருள் கொண்டிருக்கும் அழகைப் பார்க்க.

தன் குல முன்னோரைக் குறித்துத் தசரதன் கொண்டுள்ள பெருமதிப்பு இன்ன அளவினது என்பது இதனால் இனிது புலனும்.

நெடியோய்! என்றது தவவொழுக்கங்களில் பெரியோய் என்றவாறு. ஒத்த பிறப்பினையுடைய மக்களுள்ளே அருந்தவம் புரிந்து, ஆன்ம ஒளி சுரந்து மேன்மை மிகுந்து உயர்ந்து ஓங்கியுள்ளமையால் நெடியோர் எனப் படியோர் புகழப் பெரியோராகிலவி நிற்கின்றார். நெடுமை=பெருமை.

அரசரெவரும் முடி பணிந்து வணங்கும் பெருமிதமுடைய தசரதன் முனிவரது அடி பணிந்தான் என்னும் இது தவத்தின் மகிமையை உணர்த்துவதோடு அவனது தகைமையையும் வெளிப்படுத்தியுள்ளது.

குடிப் பிறப்பு செல்வம் கல்வி அரசாட்சி முதலிய உயர் நலங்களெல்லாம் ஒருங்கே நிறைந்துள்ள அரசன் அதிதியை விரைந்து பணிந்தது அவனது பெருந்தன்மையை மேலும் பெருக்கி நிற்கின்றது.

செல்வமோ அதிகாரமோ சிறிது சேர்ந்தவுடனேயே எவரையும் மதியாமல் இறுமாந்திருக்கும் சிறுமாந்தருக்கும் இப்பெருவேந்தனுக்கும் உள்ள வாசியை ஈண்டு எண்ணியறியவேண்டும்.

* "பணியுமாம் என்றும் பெருமை; சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து" (குறள், 978)

எனப் பெருமை சிறுமைகளின் இயல்புகளை மிகவும் விநயமாக விளக்கியிருக்கும் இந்த அருமைத்திருக்குறள் இங்கே சிந்திக்கத்தக்கது.

நல்ல மேன்மக்கள் தகுதியறிந்து என்றும் பணிவுடையாராயிருப்பர்; கீழ்மக்கள் அவ்வாறு இரார்; யாண்டும் செருக்கு

* பெரியாரது தன்மையும், சிறியாரது இயல்பும் இன்ன நிலையில் இருக்கும் என உணர்த்துகின்றார் ஆதலால் பெருமை சிறுமை எனப் பண்புப்பெயர்களால் குறித்தார். பணியுமே அணியுமே எனத் தாமே துணிவுரை கூறாமல் பணியுமாம் அணியுமாம் என்றது மேலோரும் நூலோரும் முன்னரே இங்ஙனம் வரம்பு செய்துள்ளார் எனப் பரம்பரை வாசகமாய் உரம் பெற என்க. கல்வி செல்வம் முதலிய நலங்களெல்லாம் நிலை மீறி நிறைந்திருந்த காலத்தும் யாண்டும் பெரியோர் செருக்கின்றி வணக்கமாய் அடங்கியிருப்பர் என்பார் என்றும் என்றார். உன்னே ஒரு நலமும் இலராயினும் தம்மைத் தாமே வியந்துகொண்டு சிறியோர் வீணே செருக்கித் திரிவர் என்பார், "சிறுமை தன்னை வியந்து அணியும்" என்றார். பிறர் வியந்து போற்றப் பெரியார் அமர்ந்திருப்பர்; சிறியார் அங்ஙனமின்றித் தாமே தம்மைப் புகழ்ந்துகொண்டு தருக்கி நிற்பர் என்பதாம். பணிவின்றித் தன்னை வியப்பவன் பிறரால் இகழப்பட்டுச் சின்னவன் ஆவன்; பணிவுடையான் உலகம் போற்ற உயர்ந்து திகழ்வான் என்பது இதனால் உணர்ந்து கொள்ளலாகும்.

மீக்கொண்டு திமிர்ந்தே நிற்பர் என்பதாம். ஆகவே பணிவுடைமை சான்றோர்க்கு அணியுடைமை என்பது பெற்றாம்.

மக்களுள்ளே பெரியர் இவர், சிறியர் இவர் எனப் பகுத்து அறிந்து கொள்ளுதற்குப் பணிவும், பணிவின்மையும் முறையே கருவிகளாயுள்ளன என்க.

மேல்நாட்டுப் பேரறிஞராகிய கார்லைல் (Carlyle) என்பவர் கூறியிருக்கும் வாக்கியம் ஒன்று அடியில் வருகின்றது.

"Great souls are always loyally submissive, reverent to what is over them ; only small mean souls are otherwise."
(Carlyle)

பெருமை என்றும் பணியும் ; சிறுமை தன்னை வியந்துஅணியும் ; என்ற வள்ளுவப் பெருந்தகையின் அருமைத் திருவாக்கினை முழுவதும் அடியொற்றி ஒரு மொழி பெயர்ப்புப்போல் இந்த ஆங்கிலவாசகம் வந்திருக்கும் நிலைமையை ஈண்டு ஆய்ந்து சிந்திக்க வேண்டும். கலைஞானிகள் எங்கே பிறந்தாலும் எந் நிலையிலிருந்தாலும் அவருடைய உள்ளக் கருத்துக்கள் காலதேசங்களைக் கடந்து தொலைவிலுணர்வாய் ஒரோ வழி துலையொத்து நிற்கின்றன. அறிவொளிகள் பெரு வெளியில் எதிர்மருவி யின்புறும்.

தீரரை இங்ஙனம் உவந்துபணிந்து தசரதன் புகழ்ந்து போற்ற உடனே அவர் உவகை மீக்கூர்ந்து அரசனை நோக்கிப் பதிலுரை பகர்ந்தார். எதிர் எதிர் நேர்ந்த அம்முகமனுரைகளின் அகநிலைகளை வகைசெய்து, "இனிதுகூற முனிகூறும்" எனக் கவி நயமாக விளக்கியிருக்கிறார்.

மன்னன் உரைக்கு இனிமை கூறி முனி மொழிக்கு ஒன்றும் கூறாமல் தனியே விடுத்தது, பின்னே அது இன்னுமையுடன் மண்டி வருவதை முன்னே கண்டு கொள்ள என்க.

அன்று அவர் மன்னுற உரைத்த துதிமொழிகள் அதி நயமுடையன. அடியில் வருவன காண்க

கோசிகர் தசரதனை நோக்கிக் கூறியன.

"என்னனைய முனிவரரும் இமையவரும் இடையூறொன்றுடையரானால்
பன்னகமும் நகுவெள்ளிப் பனிவரையும் பாற்கடலும் பதுமபீடத்

"தன்னகரும் கற்பகநாட் டணிநகரும் மணிமாட
அயோத்தி என்னும்
பொன்னகரும் அல்லாது புகல் உண்டோ? இகல்கடந்த
புலவு வேலோய்!
இன்றளிர்க்கற் பகநறுந்தேன் இடைதுளிக்கும் நிழலிருக்கை
இழந்துபோந்து
நின்றளிர்க்கும் தனிக்குடைக்கீழ் ஒதுங்கித் துறையிரந்து
நிற்ப நோக்கிக்
குன்றனிக்கும் குலமணித்தோட் சம்பரனைக் குலத்தோடும்
தொலைத்து நீகொண்டு
அன்றளித்த அரசன்றே புரந்தரனின் றாள்கின்றது
அரச! என்றான்." (கையடைப்படலம் 7, 8)

பேசுவதில் முனிவர் எவ்வளவு சாதுரியங்களையுடையவர் என்பதை இவற்றால் இனிது அறிந்துகொள்ளலாம். அரசனுடைய புகழ் நிலையைக் குறித்துவந்துள்ள இதில் முனிவருடைய கலைத் திறம், மொழித்திறம், முதலியன முழங்கி நிற்கின்றன.

தவசிகளுக்கும் தேவர்களுக்கும் ஏதாவது ஒரு இடையூறு நேர்ந்தால் அதனை நீக்கி இதமடையும் பொருட்டு அவர் அடைக்கலமாக அடையத்தக்க இடங்கள் ஐந்து. அவை வெள்ளியங் கிரி, பாற்கடல், சத்தியலோகம், அமராவதி, அயோத்தி என்பனவாம். இங்ஙனம் இடங்களைக் குறித்தது அவற்றில் எழுந்தருளி இருக்கும் தலைவர்களை எதிர்நோக்கி என்க.

சிவபெருமான், திருமால், பிரமன், இந்திரன், தசரதன் என்னும் இந்த ஐவரும் மேற்குறித்த தானங்களுக்கு முறையே அதிபதிகள் ஆதலால் அவர்களே துயர்நீக்கி உயர்நலம் அருள வல்லவர் என்பதாம்.

விசுவாமித்திரர் இப்பொழுது தசரதனிடம் வந்துள்ளது ஓர் உதவியை நாடியே: சித்தாச்சிரமம் என்னும் இடத்தில் தாம் செய்யும் யாகத்தை நிறைவேற்ற ஒட்டாமல் அரக்கர்கள் வந்து இடையூறுகள் செய்தலால் அவர்களைத் தொலைத்து அந்த வேள்வியைப் பூர்த்திசெய்தருளும்படி இராமமூர்த்தியைத் துணைவேண்டி வந்திருக்கிறார். அங்ஙனம் வந்திருப்பவர் தம் கருத்தை வெளிப் படையாக உடனே அரசனிடம் நேரே சொல்லாமல் மேருமலையி

விருந்து தொடங்கி இவ்வாறு பெரும்பீடிகையுடன் பேரணை கோலிக் காரிய சாதனையில் கண்ணூன்றி மிகவும் விநயமாகப் பேசிவருகின்றார். உள்ளே ஒன்று கருதி வந்தவர் வெளியே முந் துறப் பல பேசுகின்றார். கருதிய பலன் கைகூடும்படி உறுதிநாடி உரையாடுகின்றார் ஆதலால் விரிவாக நேர்ந்தது. முனிவரு டைய உரைகளிலுள்ள உணர்வு நலங்கள் உயிரின் இயல்பினை விளக்கி உயர்நிலையில் ஓங்கியுள்ளன.

இகல் கடந்த புலவு வேலோய்! என்றது வெற்றி வீரனே என்றவாறு. இகல்=பகை. போரில் நேர்ந்த பகைவரைநேரில் பாய்ந்து வெல்லுங்கால் அவருடைய உடல் தசையும் உதிரமும் வேலில் தோய்ந்திருக்கும் ஆதலால் அதனைப் புலவுவேல்என்றார். புலவு = புலால்: தசை, குருதி, நிணம் முதலியன என்க.

ஓரறிவுயிர்க்கும் ஊறுபுரியாமல் பேரருளோடு பெருகி நிற் பதே தவ நிலையாம்; அத்தகைய தவநிலையிலுள்ளமுனிவர் கொலை நிலையை இங்கே இப்படிக் கொண்டாடி மொழிந்தது என்னை? எனின், "* மாதிரம் பனிக்கும் மறம் வீங்கு பல்புகழ்" என்ற படி மற்றை எல்லாப் புகழ்களினும் வீரப்புகழை மன்னர் மிக வும் மேன்மையாகக் கருதுவாராதலால் அப்பான்மையில் உயர்த்தி அரசை இவ்வாறு அவர் பாராட்டினார் என்க. கேட்பவன் வேட் பக் கிளத்தலே அவன்பால் உதவியை வாய்ப்பப் பெறுதற்கு வழியாம்; ஆதலால் வெற்றிவேந்தன்முன் இங்ஙனம் வீரம் கனிய மொழிந்தார்.

இதுபொழுது தவசியாய் வந்திருக்கும் இவர் முன்னம் அர சராய் இருந்தவர் ஆகையால் அந்தச் சாதியின் வீரத்தன்மை இந்த நிலையிலும் தானாகவே விரைந்து வாய்மொழியில் வந்து எழுந்ததென இதனோடு ஈண்டுச் சிந்தனை செய்து கொள்ளவேண் டும். நிலத்தின் தன்மையை முளை காட்டுதல்போல் குலத்தின் தன்மையை மொழி காட்டும் என்க.

தாம் ஒரு இகல் கடந்து கொள்ளவே மன்னனிடம் இப் பொழுது இவர் புகல் அடைந்திருக்கிறார் ஆதலால் இகல் கடத் தலையும் புகல் இருத்தலையும் தொகையாகத் தொடுத்து மொழிந்

*பதிற்றுப்பத்து, 12. அரசர்க்கு வீரத்தால் விளைந்த புகழ் வேறு பலவற்றினும் சிறந்து திசைதொறும் பரந்து திகழ்ந்து நிற்கும் என்ப தாம். மறம்=வீரம். மாதிரம்=திசை. பனித்தல்=நடுங்கல்.

தார். இவருடைய மொழி நுட்பங்கள் மிகவும் நுனித்து நோக்கத் தக்கன.

தான் இகல் கடந்திருப்பவனே பிறரை இகல் கடத்திப் பாதுகாக்க வல்லவனுவன்; அவ்வன்மையும் தன்மையும் மன்னர் மன்னவனுகிய உன்னிடமே மன்னியுள்ளன; அவ்வுண்மையை உறுதியாக உணர்ந்தே நின்னைப் புகலடைந்து நிற்கின்றேன்; தகவறிந்தருள் என்பது குறிப்பு.

வேறு புகலிடம் இல்லை என்பது தெளிந்துள்ளமையால் உண்டோ? என்று வினவினர். உண்டாயின் சொல்லிக் காட்டும் என உரிமை காட்டித் துணிந்து கூறியபடியிது.

ட்டியுள்ள வெள்ளிமலை, பாற்கடல் முதலிய இடங்களுக்குப் போகலாகாதோ? எனின், ஆண்டெல்லாம் என் காரியம் முடியாமை கண்டே முடிவாக ஈண்டு வந்துள்ளேன்; இவ் வரவே பெரியவாஞன உனது பூரண மகிமையைப் புலப்படுத்தி நிற்கின்றது; வேறு காரணம் கூறுவது ஏன்? என்று காரிய முடிவுக்குக் கைசெய்து நிற்கின்றார். முனிவர் இப்பொழுது விரும்பி நிற்பது முத்தியை அன்று; வேறு எத்தகைய பதவிகளும் சித்திகளும் செல்வங்களும் அல்ல; தமக்கு வேண்டியது ஒரு சுத்த வீரனே; அத்தகைய ஆள் எத்திசையிலும் இல்லை; மன்னன் ஒருவனே வைத்திருக்கின்றான்; ஆதலால் அயலெங்கும் போகாமல் அவர் இங்கே அடைந்திருக்கிறார் என்க. "என் அனைய முனிவரும்" என்று எடுத்திருக்கும் எடுப்பில் இவரது தவ நிலைமையும், கம்பீரமும் தொனித்து நிற்கின்றன. தம்மை மட்டும் தனியே கூறுமல் அமரரையும் கிளைகூட்டி யுரைத்து வளமை காட்டி அரசைக் கிழமை பாராட்டி யிருப்பது உளமகிழ் வூட்ட என்க.

"இடையூறு ஒன்று உடையர் ஆனல்" என்றது அவர்க்கு அது உண்டாதல் அரிது என்பது தோன்ற நின்றது.

ஏதேனும் கொடுமையாகத் தொல்லை நேர்ந்தபோது தான் அருமையாக இவ்வாறு புகலிடம் தேடிவருவதேயன்றி, அடிக்கடியாண்டும் எளிது வரமாட்டோம் எனத் தம்வரவின் அருமையும் பெருமையும் தெரிய இங்ஙனம் அரண் செய்து மொழிந்தார்.

துயரம் துன்பம் என வேறு பேர் கூறாமல் இடையூறு என்றது என்னை? எனின், தாம் வேள்வி செய்யும்பொழுது அரக்கர் இடையே புகுந்து ஊறுவிளைக்கும் அக்கூறுபாடு தம் நினைவில் ஊறியுள்ளமையான் இவ்வாறு கூறினார் என்க. இடையூறு=இடுக்கண், தடை, துன்பம்.

பனிவரை என்றது இமயமலையை. பனிக்கட்டிகள் எங்கும் படிந்துள்ளமையால் பனிவரை என வந்தது. இமயம் என்றதும் அப்பொருள் குறித்தே நின்றது. இமம்=பனி. உலகிலுள்ள எம்மலைகளினும் இம்மலை மிகவும் சிறந்தது. பெரிதும் அதிசயம் வாய்ந்தது. பல அற்புதங்கள் நிறைந்தது. யாரும் முடிவுகாண முடியாத முடிவினையுடையது. மேலெல்லாம் வெள்ளிய சோதி வீசி விளங்கி நிற்றலால் இதனை வெள்ளிமலை என்பர். ஓரிடத்தில் பொன்மயமான செஞ்சோதி பரவியுள்ளமையால் பொன்மலைஎனவும் நின்றது. வான் முகடு கீண்டு மேலோங்கி நிற்கும் இது மேரு மலை எனவும் பேர் பெற்று யாண்டும் சீர்மிகப்பெற்றது. இமயமலை மேருமலை வெள்ளிமலை பொன்மலை எனப் பன்மலைப் பெயரும் பாடுறப் பெற்று நின்மலனுக்கு இது நிலைக்களமாயுள்

பல மலைகளும் புடைசூழ்ந்து விளங்க எங்கும் தன்னொளி பரப்பித் தலைமையுடன் நிலையோங்கி நிற்றலால், "பல்நகமும் வெள்ளி நகு பனிவரை" என்றார். நகம்=மலை. பல் நகம், பன்னகம் என வந்தது. நகுதல்=விளங்குதல், பிரகாசித்தல். பல் நகமும் நகுவெள்ளி என்ற இத்தொடர்க்குப் பலமலைகளையும் எள்ளி நிற்கும் வெள்ளிமலை எனப் பொருள் கொள்ளவும் கூடும்.

அங்ஙனம் கொள்ளின் இப்பெருமலையின் பெருந்தகைமைக்கு இழுக்காம். என்னை? தன் பெருமையைத் தானே வியந்து கொண்டு, பிறரெல்லாரையும் எள்ளி இகழ்ந்து பெருமிதம் கொள்ளுதல் பெருந்தன்மைக்குப் பொருந்தாது என்க.

தன்னை அடுத்தவற்றிற் கெல்லாம் தன்னொளி யுதவி இன்னளியுடன் பனிவரை இனிதிருந்ததெனை அதன் தனி மகிமையும் தகைமையும் தெரிய நகுமொழி தந்து நலமுற உரைத்தார்.

இங்ஙனம் தேசுமிகுந்துள்ள இது ஈசனுக்கு இருப்பிடமா யிருத்தலால் கைலாசம் எனவும் பேச நின்றது. இதன் தலைமை யையும் நிலைமையையும் வியந்து பலநூல்களும் புகழ்ந்திருக்கின் றன. சில அடியில் வருகின்றன.

“பாசம் நீக்கித் தன் பாற்படு நலநாள்
ஈசனாக்கும் இயல்பென எய்தினோர்
தேசு மாற்றிச் சிறந்தன மெய்யொளி
வீசு கின்றது வெள்ளியங் குன்றமே. (1)

[illegible] ஆடியப் பானவன
ஏறு ஊர்தியென் னேறும் அக்கணுதல
நீறு சேர்ந்த கோலமு நித்தனைத்
தேறும் அன்பர்தம் சிந்தையும் போன்றதே.” (2)

(கந்தபுராணம், திருக்கைலாசப் படலம்)

தன்னை எண்ணிய உயிரின் புன்மையை நீக்கிப் புனிதத் தன் மையை நல்கும் பரமனைப்போல் தன்னை அடுத்த பொருள்களின் நிறத்தை மாற்றித் தனது இனிய ஒளியைக் கொடுத்து வெள்ளி யங்கிரி விளங்கி நின்றதென இதில் முதலில் குறித்திருத்தலால் அதன் இயல்பும் உயர்வும் இனிது புலனும். உருவின் வெண்மை யை விளக்க அடுத்த கவியில் வந்துள்ள உவமைகளைப் பார்க்க.

பொன்னின் வெண்திரு நீறு புனைந்தெனப்
பன்னும் நீள்பனி மால்வரைப் பாலது
தன்னை யார்க்கும் அறிவரியான் என்றும்
மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை. (பெரிய புராணம்)

நிறைமதி நேரென நிறத்த வெள்ளியம்
பொறையுடைச் சிகைதொறும் பொழியும் வாணிலா
நறைமலர் இதழிசேர் நாதன் வார்சடைப்
பிறைமதி நிலவினும் பிறங்க வீசுமால. (பாரதம்)

“மாயவன் மாமணி கண்டன் வளர்சடை யாறுகடிமை
ஆயின தொண்டர் துறக்கம் பெறுவது சொல்லுடைத்தே
காய்சின வானை வளருங் கனக மலையருகே
போயின காக்கையும் அன்றே படைத்தது பொன்வண்ணமே.”

(பொன்வண்ணத்தந்தாதி)

“கருக்கமில் கேள்வித் துகள்தீர் புலவர்முன் யான்மொழிந்த
பருப்பொருள் தானும் விழுப்பொரு ளாம்பனி மால்இமயப்
பொருப்பகம் சேர்ந்தபொல லாக்கருங் காக்கையும் பொன்னிற
இருக்குமென் றிவ்வா றுரைக்குமன்றோஇவ் இருநிலமே.” [மாய்

(யாப்பருங்கலக்காரிகை)

* கண்பிசைந் தொருசேய் இன்னும் கலுழினும்
தனைக் கொடுப்பன்
மண்பிசைந் துண்ட மாயன் மறுத்திட
வலியன் அலலன்
நண்பிசைந்து இறைவனுக்கே நாம் இடன்
ஆவம என்று
பண்பிசைந்து அலைதிரண்ட பரிசினின்
றிடுமக குன்றம்.

ஒழுகுறும அருவி யீட்டம் ஒலியினால்,
நகுவெண் திங்கள்
பழகுறும் உடறகளங்கால், பாக சாதனன்
கூர்ங் கோட்டு
மழகளி றுமிழ்மதத்தால், மலர் மிசைக்
கடவுள் ஊர்தி
அழகுறு நடையால், அன்றி அறிதரப்
படாஅக் குன்றில. (பிரபுலிங்கலீலை)

பனிவரை இன்னவாறு பாராட்டப்பட்டுள்ளது. தன்னைச் சார்ந்தவற்றை யெல்லாம் தன் மயமாக்கி இன்னொளி பரப்பி இமயமலை இருந்துள்ள நிலையை இவற்றால் அறிந்துகொள்ளலாம்.

இங்ஙனம் அடுத்தவர் துயர் நீக்கவல்ல பொன்மலை முதலியனவும் என் மலைவை நீக்க முடியாமையால் அவற்றை யெல்லாம் அகலவிடுத்து மன்னர்பெரும! நின்முகம் நோக்கி வந்தேன் என் முகம் நோக்கி அருள் என்பது கருத்து.

---

* ஒரு சேய் என்றது உபமன்யு முனிவரை. அவர் பாலனைப் பசித்து அழுதபொழுது பாற்கடலை அவர்க்கு இறைவன் அளித்தான்; இனி மீண்டும் கொடுப்பார்; அங்ஙனம் கொடுக்க நேர்ந்தால் நம்மைப் பாயலாகக்கொண்டுள்ள மாயன் அதைத் தடுக்கமுடியாது; ஆதலால் ஆபத்து வராதபடி அப்பரமனுக்கே இருப்பிடமாய்ப்போய் நாம்அமர்ந்து கொள்ளவேண்டும் என்று வெள்ளப்பாற்கடல் வந்து மேவியிருந்தது போல் வெள்ளிமலை விளங்கியிருந்ததென்பதாம். மலையின் உருவ நிலையைக் கருதி வந்துள்ள இக்கற்பனை யின் அழகைக் கண்ணூன்றிப் பார்க்க. அருவி, சந்திரன், ஐராவதம், அன்னம் என்பவை வெண்மை நிறத்தன ஆதலால் வெள்ளிமலையோடு அவற்றிற்கு வேறுபாடு இன்ன வகையாலன்றி வேறு என்னவகையாலும் அறிய முடியாதென்பதாம்.

முனிவர்களுக்கும் இமையவர்களுக்கும் இனிய புகலிடமான கற்பகநாட்டணி நகரும் அயோத்தியைப் புகலடைந்து உய்ந்திருக்கின்றதெனத் தாம் வந்திருக்கும் இடத்தின் பெருமையை மன்னன் மனங்குளிர முனிவர் அடுத்த கவியில் எடுத்துரைத்திருக்கிறார். அவ்வுரை அரசின் வீரக்கொடையை வியப்புற விளக்கி நிற்கின்றது.

ஆபத்து சகாயர்களெனப் பேர் பெற்றுள்ளவர்களைத் தொகைப் படுத்திப் பொதுவாகக் குறித்துவிட்டுப் பின்பு சக்கரவர்த்தி செய்துள்ள அரிய பெரிய ஓர் உபகார நிலையைச் சிறப்பாக உரைக்கின்றார்.

இந்திரன் புகல் புகுந்தது.

வைசயந்தம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த சம்பரன் என்னும் அசுரவேந்தன் பெரிய போர்வீரன். அரியவரபலங்களை யுடையவன். மண்ணுலக வேந்தரை ஒரு பொருளாக மதியாமல் இகழ்ந்துவிட்டு விண்ணுலகம் புகுந்து தேவர்களையும் தேவராசனை இந்திரனையும் ஒருங்கே வென்று அமராவதியைக் கவர்ந்து கொண்டு பொன்னுலகமெல்லாம் தன்னுடையதாக்கி இனி என்னுடன் எதிர்ப்பார் எவரும் இல்லை என்று அவன் இறுமாந்திருந்தான். அமரர்கோன் யாதும் ஆற்றமுடியாமல் அவலமிக வுடையனாய்த் தமரொடு கவன்று தயங்கி நின்றான். அங்ஙனம் கவலுங்கால் தேவகுருவாகிய வியாழபகவான் தசரதனுடைய அருந்திறலாண்மையையும், பெருந்தகைமையையும் புரந்தரனுக்கு உணர்த்தினார். உணர்த்தவே அவன் உளமிக மகிழ்ந்து விரைந்து வந்து அயோத்தியை அடைந்து அரசனிடம் குறையிரந்து நின்றான். அவனை உவந்துபசரித்து ஆறுதல்கூறி வீறுடன் மன்னன் தேரேறிச் சென்று அசுரப்படைகளை அடியோடு தொலைத்துச் சம்பரனை வென்று உம்பருலகை இந்திரனுக்கு உதவி இம்பர் வந்தான் ஆதலால், "நீ அன்று அளித்தஅரசு அன்றோ புரந்தரன் இன்று ஆள்கின்றது?" என்று அரசை நோக்கி முனிவர் இவ்வாறு உரை செய்து நின்றார். அன்று நீ கொடுத்த பிச்சையை வாங்கி அல்லவா இந்திரன் இன்று உச்ச நிலையில் வாழ்கின்றான்' என்பது குறிப்பு.

"இன்தளிர்க் கற்பக நறுந்தேன் இடை துளிக்கும் இருக்கை இழந்து போந்து" என விளைந்து வந்திருக்கும் இக்கவி

யின் சொல்லும் பொருளும் தொடையும் நடையும் தொனியும் சுவையும் உணரும்தோறும் உவகை மிகுந்து பெருகுகின்றது.

தம்மைச் சார்ந்தவர்களுடைய துயரங்களையெல்லாம் உடனே நீக்கி உயர் சுகம் அருளவல்ல கற்பக தருக்களும் யாதும் உதவாமல் கைசேர்ந்து நிற்க, அந்தப் பேராபத்தையும் போர்த்தெறிந்து வானில் நீ பேருதவி புரிந்துள்ளாய்! அத்தகைய உனக்கு இங்கே நேரே ஓர் உதவி புரிவது அரிதா? மிகவும் எளிதாகவே இனிது செய்வாய் எனத் தம் வகைக்கு வழிசெய்துகொண்ட படியிது.

அந்நாட்டவரான இமையவரையும் ஆதரித்தருளியிருக்கின்ற நீ இந்நாட்டிலுள்ள என்போன்றவரைக் காத்தருள்வது மிகவும் உறுதியாம் எனக் கடமையும் உரிமையும் காட்டிக் காலூன்றி ஞர்.

இடையூறு நேர்ந்தபோது அதை நீக்கவேண்டி இந்திரனே வேறு எங்கும் போகவில்லையே! பனிவரையும், பாற்கடலும், பதுமபீடமும், பார்க்காமல் தன் அணிநகரைவிட்டு இம் மணிநகரமே புகலிடம் எனத் துணிவுகொண்டு அயோத்தியை நோக்கி ஓடி வந்தானே! மனிதரான என்னனைய முனிவர்களுக்கு இதைத் தவிர வேறு புகல் எங்கே இருக்கின்றது? எனச் சங்கையறச் சார்பு காட்டித் தாம் வந்திருக்கிற நிலைமையை முந்துற முனிவர் வரம்பு செய்துகொள்கின்றார்.

பொன்னுலகையும் தேவரையும் புரந்தரனையும் புரந்தருளி என்றும் நிரந்தர கீர்த்திமானாய் நிலவி நிற்கின்ற அருந்திறல் அரசே! என்று வரந்தரு முனியும் ஓர் வரம் பெறவந்து தசரதன் முன் இங்ஙனம் புகழ்ந்து நின்றார் என்றால் அவனுடைய பெருந்தகவையும், பொருந்திறலையும், அருங்கொடையையும் வரம்பு கண்டு எங்ஙனம் வரைந்து சொல்வது?

பெரியவர் இவ்வாறு உரிமையுடன் உரையாடிய பொழுது அரசன் பேருவகை அடைந்தான். அவ்வுவகையின் அளவு எவ்வளவு? எனின், அதனை உரையால் உணர்த்த முடியாது. "ஒருவராலும் கரை செய்ய அரியதொரு பேருவகைக் கடல்" என்று கம்பரே உரை செய்திருத்தலால் நாம் அதில் தலையிடுதல் வம்பே. இன்னவாறு நம் கவி மன்னர் இங்கே சொல்லியுள்ளமையால் அம்

மன்னனது மகிழ்ச்சி அங்கே என்ன நிலையில் இருந்திருக்கும் என்பதை ஊகமாயுணர்ந்து கொள்ளலாம்.

இங்ஙனம் அளவிடலரிய மகிழ்ச்சி உள்ளத்தில் உயர்ந்தோங்க இருகரங்களையும் கூப்பி முனிவரை இனிது நோக்கி, "நான் பிறந்தபேறு பெற்றேன்; இதுவரையும் அரசுபுரிந்திருந்த அரிய தவப் பயனை அடைந்தேன்; இனி யான் செய்யவேண்டியது என்ன? தேவரீர் அருள்புரியவேண்டும்" என்று அதிசய பரவசனாய் அரசன் உரை செய்ய நேர்ந்தான்.

புகழ்மொழிகள் மனிதர் உள்ளங்களை எவ்வளவு மகிழச் செய்கின்றன! ஒலி வடிவமான இனிய சொற்கள் உயிருணர்ச்சிகளை இன்புறுத்தி உயர்ந்த மகிழ்ச்சியை விளைவித்து வருதல் வியந்து நோக்கத் தக்கது. மனிதனுக்கு எப்பொழுதும் உயர்ச்சியிலேயே பிரியம் ஆதலால் தன்னைப்பற்றிய புகழ்ச்சிமொழிகள் அவனுக்கு மகிழ்ச்சியாய் வருகின்றன. புகழுரைகளெல்லாம் பெரும்பாலும் உயர்நலப் பிரியர்களையே எளிதாக வசப்படுத்தி எழுகின்றன. சுவை கெட்ட மனிதனும் அதன்கண் ஓர் சுவையை நுகர்கின்றான். புகழ் என்பது புண்ணியத்தின் சின்னம் ஆதலால் அது நண்ணியிருக்கும் கண்ணிய முடையவர்களுக்கே உண்மையில் உரிமையாகின்றது. ஆயினும் யாவரும் அதில் ஆவலுறுகின்றனர். பொன்னினும் மணியினும் இனியதாய்ப் புனிதநிலையெய்தி உயிரின்பமாய் ஓங்கியுள்ளமையால் புகழ் யாண்டும் விழைந்து போற்றப்படுகின்றது.

வீரம் கொடை முதலிய அரிய செயல்களால் தோன்றித் தன்னை ஒருகால் மருவினவனை எக்காலமும் நிலைபெறச் செய்யும் புகழைப்போல மனிதனுக்கு உயர்நலமுடையது வேறு ஒன்றும் இல்லையாதலால் அந்நலனைத் தலைமையாகப் பெற்றுள்ள அரசனை இந்நிலையில் வைத்து முனிவர் நேரே துதித்து நின்றார்.

எவ்வளவு பெரியவராயினும் பிறரிடம் ஒரு காரியம் கருதி வந்தால் அவர் மனமகிழும்படி இனிய மொழிகள் பலபேசி அவரைப் பிரியப்படுத்துவர் என்பது முனிவர்செயல் இங்கே தெரியப் படுத்தியது.

அரிய மாதவர் இவ்வாறு உரிமையுடன் உரையாட அரசன் உளமிக மகிழ்ந்து, "பொன்னும் மணியும் வாரிக் கொடுத்தாலும்

உலகைத் துறந்துள்ள இவர் உவந்துகொள்ளாரே! வேறு என்ன செய்வது?'' என எண்ணி அவரது உள்ளக் கருத்தை அறிய மிக வும் விநயமாக வினவினன். மன்னன் கேட்கவும் மாதவர் உடனே சொல்லினர். அன்று அவர் சொன்னபடியை அடியில் பார்க்க.

விசுவாமித்திரர் தசரதனிடம் விரும்பிக்கேட்டது.

"தருவனத்துள் யானியற்றும் தவவேள்விக்கு இடையூறாத்
தவம்செய் வோர்கள்
வெருவரச்சென் றடைகாமவெகுளியென நிருதரிடை
விலக்கா வண்ணம்
செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர் நால்வரினும
கரிய செம்மல
ஒருவனைத்தந் திடுதியென உயிரிரக்கும் கொடுங் கூற்றின்
உளையச் சொன்னான்." (கையடைப்படலம், 10)

தாம் கருதிவந்துள்ள காரிய நிலையை முனிவர் இவ்வாறு உரைத்திருக்கிறார். இவ்வுரை நுட்பங்கள் கருத்தூன்றி மிகவும் குறித்து நோக்கத் தக்கன. செருமுகம்=அமர்க்களம்.

நான் வனத்தில் ஒரு வேள்வி செய்கின்றேன்; அது நிறை வேறாதபடி அரக்கர்கள் அடிக்கடி வந்து இடையூறு செய்கின்ற னர்; அவரைத் தடுத்து நீக்கி நான் எடுத்த காரியத்தை முடித் தருளும் வண்ணம் உன் புதல்வருள் முதல்வனை இராமனை எனக்குத் துணையாக அனுப்பவேண்டும் என்று அவர் வேண்டி யிருக்கும் இதில் அரிய பல பொருள்கள் ஈண்டியிருக்கின்றன.

வந்தவர் இந்தவாறு உயிர்நிலையில் கைவைப்பார் என்று வேந்தன் எந்த வகையிலும் யாதும் எண்ணவில்லை; பொன்னோ, மணியோ, பசுவோ, குதிரையோ, இடமோ, ஊரோ எதுவேண்டு மாயினும் அவர் சிந்தை மகிழும்படி தந்துவிடவேண்டும் என்று உள்ளங்களித்து உவகை முகத்தனாய் அவருடைய உத்தரவை எதிர்பார்த்திருந்தான்; இன்னவண்ணம் அவர் சொன்னவுடனே மன்னன் உள்ளம் கலங்கி உயிர் துடித்து இடிவிழுந்ததுபோல் நெடிதயர்ந்து செயல் மறந்தான் ஆதலால் "கொடுங் கூற்றின் உளையச் சொன்னான்" என்றார். இங்கே தன்னை மறந்து கவி கடுங்கூற்றைத் தவசிமேல் கடுத்து வீசியிருக்கிறார். கூற்று என் பது சொல்லுக்கும் ஒரு பேர் ஆதலால் கொடிய சொல்லால்

உனையச் சொன்னான் என எளிதே கண்டு போகவும் இசைந்திருக்கிறது.

எனது யாகத்திற்குத் துணை க என்று சுருக்கமாக நேரே விரைவில் சொல்லாமல் அயலோடி இவ்வாறு ஆற்றிச் சொன்னது அரசன் உயிருளைந்துபடும் இயல்பினை எதிர் நோக்கி என்க.

முனிவர் பலகலைகளிலும் வல்லவர்; நல்ல சொல்வன்மையுள்ளவர்; சுருங்கிய சொல்லில் பெரும் பொருள் பொதிந்து எவரும் விரும்பும்படி பேசும் அரும்புலமையாளர். ஈண்டு அவர் பேசியிருக்கும் வாசகங்கள் சிறிது நீண்டுள்ளன போல் தோன்றுமாயினும் ஒவ்வொன்றிலும் நிறைந்த யோசனைகள் செறிந்திருக்

வேள்விக்குத் துணை புரிக என்றால், அதனை எந்த இடத்தில் செய்கின்றார்? என வேந்தன் ஓர்ந்து சிந்திப்பன் ஆதலால் அதை முந்துற வுரைத்தார்.

வனம் என்று மாத்திரம் கூறின் பாலை முதலிய கொடிய காடுகளோ? எனக் கருதி மிருதுமேனியனை தனது அருமைத் திருமகனை உடன் அனுப்புதற்கு அரசன் சிறிதும் இசையான் ஆதலால் அதனை எதிர்நினைந்து தருவனம் என்றார்.

பூத்துக் காய்த்துத் தளிர்ந்து குழைகளும் தழைத்துக் குளிர் நிழல் விரிந்து யாண்டும் இனிய கனிகள் சொரிந்து எழில் மிகுந்திருக்கும் இளமாக்கா என்பது தருவனம் என்றதனால் அறிய நின்றது.

மனிதன் கருதிய சுகங்களையெல்லாம் உரிமையுடன் தருகின்ற வனம் எனவும் இது பொருள் தந்துள்ளது. வடமொழியாளர் இந்த வனத்தைச் சித்தாச்சிரமம் என்பர். இதில் இருந்து செய்யும் கருமங்கள் நன்கு சித்தித்து நல்ல பலன்களை நல்கும் என்பது கருத்து.

இயற்றும் என்று மட்டும் இசைத்துவிட்டால், யார் செய்வதோ? எது குறித்தோ? என ஐயுற நேரும் ஆதலால் அது நீங்க யான் இயற்றும் என்றார். அகங்கார மமகாரங்களின்றி யான் எனது என்னும் செருக்கற்றுள்ள ஞானமுனிவரன் யான் என்று இங்கே மார்தட்டிக் கூறியது, ஓர் தட்டும் சொல்லாமல் இனமும் ஏற்றமும் தெரிந்து மன்னன் நேர்பட்டு உதவ என்க.

யான் என்றது முன்பு உன்போல் உலக முழுவதும் உடைய அரசனுயிருந்து, பின்பு அதனை அறவே துறந்து, இதுபொழுது தவநெறியில் நிற்கின்றவன் என்றவாறு.

எல்லாம் துறந்த யான் எனக்காக வேண்டியது யாதொன்றும் இல்லை; உலக நன்மையின் பொருட்டே சில புண்ணிய கருமங்களைச் செய்கின்றேன்; அந்தக் கண்ணிய நிலைமை தெரிந்து நான் எண்ணி வந்துள்ளதைத் தந்தருள் என்பது குறிப்பு.

வேள்வி என்று மாத்திரம் கூறின் மாரண வேள்வி முதலாகக் கேடு பயப்பனவும் உளவாதலால் அவற்றுள் ஒன்றோ என அரசன் ஐயுற நேரும் ஆகையால் அங்ஙனம் இது அவமானது அன்று என்பது தோன்றத் தவவேள்வி என்றார்.

தரு, யான், தவ என்னும் பதங்கள் வனம், இயற்றும், வேள்வி என்பவற்றைத் தழுவி நின்று, அவற்றின் பான்மை மேன்மைகளை விளக்கி உபகாரி ஆன்ம நேயத்துடன் விரைந்து உதவுதற்குரிய காரண சாதனங்களாய்க் கனிந்து வந்துள்ள நயங்களைக் கண்ணூன்றி உணர்ந்து கொள்க.

வேள்விநிலை, அது செய்யும் இடம், செய்பவன் திறம், எதிரிகளின் எதிர்ப்பு, அத்தடை நீக்கும் வகை முதலியவற்றைக் குறித்து வந்துள்ள முன் இரண்டு அடிகளைச் சொல்லி முடிக்கும் வரையும் முனிவர் இன்னதுதான் வேண்டி வந்திருக்கிறார் என்று மன்னனுக்கு யாதும் தீர்மானமாய் அறியமுடியவில்லை.

“ நிருதர் இடை விலக்கா வண்ணம் செருமுகத்துக்காத்தி” என்ற பொழுதுதான் வந்த காரியம் தெரிந்து சிந்தை மகிழ்ந்து உதவி செய்ய விழைந்து முகமலர்ந்து தலை நிமிர்ந்தான்.

காத்தி என்பது முன்னிலை ஏவல் ஒருமையாய் ஒருவனை நோக்கி நிற்றலால் போர்க்களத்தில் வந்து தன்னை உதவிசெய்ய வேண்டுகிறார் என்று மன்னன் எண்ணிமகிழ்ச்சிமீக்கொண்டான். போர் என வீங்கும் பொலன் தோளன் ஆதலால் நேரலர் நேர்ந்தார் என்று போராவலோடு போரில்போகப்பொலிவுற்றிருந்தான். அங்ஙனம் இருக்க முனிவர் வாயிலிருந்து என என்னும் வார்த்தை வந்தது. வரவே, நான் வயசாளி ஆதலின் என்னை விரும்பாமல் படைகளை அனுப்பச்சொல்லுகிறார் போலும்; அவ்வாறே தானைத் -- நடன் சேனைகளை அனுப்பிவிடுவோம் என்று இசை

கின்றான்; இசையவே, அவர் "நின் சிறுவர்" என்றார். இந்த வார்த்தையைக் கேட்டவுடனே அரசன் திடுக்கிட்டு வாட்டமீக் கூர்ந்தான். அருமை மக்கள் பக்கல் நெருங்குகின்றாரே! என்று மிக்க கவலையை யடைந்து இறுதியில் சத்துருக்கனனை அனுப்பி வைப்போமே என்று உறுதிசெய்கிறான்; செய்யவே அந்த வெய்ய முனிவரர், "நால்வரினும் கரிய" என்றார். இதுவரை தைரிய மாயிருந்து வந்தவன் கரிய என்றவுடனே மறுகி அயர்ந்தான். உறவுதொன்றும் தெரியாமல் உளைந்து நொந்து கோபமுனிவின் சாபநிலைக்கு அஞ்சி முடிவில் கரிய கோலத் திருமேனியர் இருவர் உளர்; அவருள் பரதனை உதவிவிடுவோமே என்று துணிவுறு கின்றான்; உறவே, பெரியவர், "கரியசெம்மல்ஒருவனைத்தந்திடுதி" என உறுதியாக ஒரே படியாய் ஓங்கி உரைத்தார். அவ்வுரை விழவும் அரசனுயிர் பரிதாபமாய் அலமந்தது. அந்த அலமரல் நிலை கொடிய எமவாதனையாயிருந்தது ஆதலால் "உயிர் இரக்கும் கொடுங் கூற்று" என முனிவர் தூற்றப்பட்டார்.

கவிக்கூற்றாக இறுதியில் வந்திருக்கும் தொடர் தசரதன் உயிர் துடித்துழல்வதை நேரில் கண்டு உள்ளம் துடித்து உருத்து உரைத்தபடியாய் உருக்கொண்டுள்ளது.

"செருமுகத்துக், காத்தி, என, நின்சிறுவர், நால்வரினும், கரிய, செம்மல், ஒருவனைத் தந்திடுதி" என இப்படி அடிப்படை யிலிருந்து படிப் படியாயுயர்ந்து மெல்ல மெல்ல நெருங்கி வாழைப் பழத்தில் ஊசியை இறக்கியதுபோல் ஆளைப் பார்த்து அவர் பேசி முடித்தது என்னை? எனின், "இராமனைத் தந்திடுதி" என்று திடீர் என்று கேட்டால், அரசன் உடனே உயிர்குலைந்து உலைந்து போவான் என்று எதிர் அறிந்தென்க. அவனது புத் திர வாஞ்சையின் நிலைமையை நன்கு தெரிந்தவர் ஆதலால் காரி யக்கேடு நேராமல் இங்ஙனம் கருத்தாக நிறுத்தி யுரைத்தார்.

முனி முடிவு சொன்னபொழுது மன்னன் உயிர்பட்ட துயர் நிலையெல்லாம் உளைய என்ற ஒன்றினால் உணரலாகும்.

அரிய தவமுடைய இனிய முனிவரைக் கொடிய எமன் என்றது அவர் சொல்லால் இங்கே விளைந்துள்ள தொல்லையைநோக்கி.

கூற்று=யமன். உயிரை உடம்பிலிருந்து பிரித்துக் கூறு படுத்துவோன் என்னும் ஏதுவான் வந்தது. கூறு=பாகம்,

பிரிவு. காலன், மறலி முதலிய வேறு பெயர்களுள் யாதும் கூறாமல் ஈண்டுக் கூற்று என்று குறித்தது என்னை? எனின், தசரதனிடத்திலிருந்து இராமனைக் கூறுசெய்து வேறே கொண்டுபோக வந்திருக்கும் நிலைமையை நினைந்தென்க.

வெறும் கூற்று என்னாது கொடுங்கூற்று என்றது அந்தப் பழைய எமனைக்காட்டிலும் இந்தப் புதிய எமனிடத்திலுள்ள அதிசயக்கொடுமைகளை அறிய என்க. என்னே அதிசயம்? எனின், பின்னே நோக்குக.

அந்த யமன் யாருடைய கண்ணுக்குந் தெரியாமல் அருவமாய் வந்து பருவம் பார்த்து உயிரைக் கவர்ந்து போவன்; இந்த முனிவர் சடையும் முடியும் தாடியும் மீசையுமாய் நேரே வந்து எதிரிலிருந்து கொண்டு ஒன்றையும் எதிர்பாராமல், "தந்திடுதி" என்று தடியடி அடிக்கின்றார். அவன் நோய் முதலிய காரணங்களை இயக்கி விடுத்துக் கரணங்களை மயக்கி உடல் அயர்ந்து கிடக்க நயமாக உயிரைக்கொண்டு செல்வன்; இவர் ஒரு சாதனமும் செய்யாமல் முரட்டுத்தனமாய் முன்னுறத் தோன்றிக் கண் விழிப்போடு மன்னன் கருத்துடன் இருக்க உன் உயிரைக்கொடு என்று அவனது உடல் பதைக்க உள்ளம் துடிக்கக் கேட்கின்றார். பிரமசிருட்டியில் இயற்கைப் பாதுகாப்புக்காக உடல்களை ஒழித்து அவன் உயிர் மறைவு செய்கின்றான்; இவர் தன்பாதுகாப்புக்காக இப்படி வன்பாடு படுத்தி அரசை மிகவும் புண்பாடுசெய்கின்றார் ஆதலால் அக் கூற்றுவனினும் இவருக்குள்ள வேற்றுமை தெரியக் கொடுமையை இங்ஙனம் ஏற்றிக்கூறினார் என்க.

இராமனைத் தா என்று கேட்டது உன் உயிரைக் கொடு என்று கேட்டதுபோல் மன்னனுக்கு மரணவேதனையா யிருந்ததென்பதாம். ஆகவே அப்பிள்ளைமேல் இவ்வள்ளல் கொண்டுள்ள உள்ளுருக்கமும் உயிர்க்காதலும் தெளிவாக உணரலாகும்.

"* ஓவிய எழிலுடை ஒருவனை அலது, ஓர்
ஆவியும் உடலமும் இலது"

* இந்நூல் பக்கம் 284 பார்க்க.

என இக்கோவினது நிலைமையைக் குறித்து முன்னம் சொல்லியிருப்பதை இங்கே அனுபவத்தில் கவி நன்கு விளக்கிக் காட்டியிருக்கிருர். ஓர் இடத்தில் தாம் சொல்லியிருக்கும் குறிப்பைப் பல இடங்களிலும் வெளிப்படுத்தி அதன் நிலைமையை அழகாக விளக்கிக் கவி தெளிவுறுத்திச் செல்லும் திறம் காவிய முழுவதிலும் கண்டு களிக்கவுள்ளது. கவிஞர்களுடைய இத் தகைய வித்தக நிலையை, "தாஅன் நாட்டித் தனுது நிறுப்பே" என்பர் இலக்கண நூலார்.

தசரதனுடைய உயிர் இராமனே என்பதை நம் நினைவில் நிலைபெறச் செய்து அவ்விருவர் நிலைகளையும் மேல்வரும் நிகழ்ச்சிகளையும் குறிப்பாக இங்கே உணர்த்தியிருக்கிருர்.

முனிவர் அரசனேடு பேசும்பொழுது உபயோகித்திருக்கும் உவமைகள் உய்த்துணரத் தக்கன. "தவம் செய்வோர்கள் வெருவரச் சென்று அடைகாம வெகுளி என நிருதர்" இடையே வந்து என் வேள்வியைக் கெடுக்கின்றனர் என்னும் இதில் தமக்கு நேர்ந்துள்ள இடையூற்றை இவர் எடை தூக்கிக் காட்டுகின்ருர். வேறு உவமைகள் கூருமல் இங்கே காமவெகுளிகளைக் கூறியது மிகவும் அதிசயமாயுள்ளது. சொல்லக் கருதிய பொருளைத் தெள்ளத் தெளிய விளக்கிப் பிறர் உள்ளங் கொள்ளச் செய்வதற்கே உவமையை அறிஞர்கள் உபயோகிப்பது. இங்கே சொல்லுகின்றவர் முனிவர்; கேட்கின்றவன் அரசன். அவனுக்குத் தெளிவாக நன்கு தெரியும்படி தம் கருத்தை அவர் விளக்க வேண்டும். காரிய சாதனையில் கண்ணூன்றித் தம் கருமம் கைகூடுமாறு பேசி வந்தவர் தமக்கு நேர்ந்துள்ள அல்லல் நிலையின் எல்லையை அளவு காட்டி அரசு ஓர்ந்துகொள்ளும்படி சொல்லுகின்ருர்.

வலியவர் மெலியவரை அடிப்பதுபோல், சிங்கம் யானையைப் பிடிப்பதுபோல், புலி பசுவை வதைப்பதுபோல், பூனை எலியைக் கொல்லுவதுபோல், நிருதர் என்னை அல்லற்படுத்துகின்ருர் என இன்னவாறு ஏதாவது வெளிப்படையாக ஒரு உவமையை எடுத்துச் சொல்லியிருக்கவேண்டும்; அங்ஙனம் யாதும் சொல்லாமல் தவசிகள் மனத்தையும், காமவெகுளிகளையும் இணைத்துக்காட்டி ...ரர். இவை மன்னனுக்கு எப்படித் தெரியும்? அவன்

தவத்தில் புகுந்து நிலைத்திருந்து அங்கே காமமும் கோபமும் வந்து தன் மனத்தை வருத்தி அலைத்த பொழுதுதான் அனுபவித்து அறியவேண்டும். அவ்வாறு அறியாத வரை தெளிவாகத் தெரியாது. கருதிய கருத்தை எளிதாகத் தெளிவுபடுத்த வேண்டும். எதிரிக்குப் பொருள் விளங்காதபடி பேசுவதால் யாது பயன்? மாதவர் இங்கே அவ்வாறு பேசியிருக்கிறார். கலைவல்லுநரான அவர் இங்ஙனம் பேசுதற்குக் காரணம் என்ன? கருதி ஆராயவேண்டும்.

மனித இயல்பையும், மனோ தத்துவங்களையும் நம் கவியரசர் அதிநுட்பமாக இதில் உணர்த்தியிருக்கிறார்.

இம்முனிவர் தவம் செய்யச் சென்ற இடங்களிலெல்லாம் காமத்தாலும் வெகுளியாலும் கலங்கி வருந்தியிருக்கிறார்; முதலில் அரசைத் துறந்துபோய் இவர் அருந்தவம் செய்துகொண்டிருந்தார்; ஒரு நாள் இவரை இந்திரன் கண்டான். இவரது அரிய தவநிலையை வியந்து அவன் அதிசயித்து நின்றான். நிலைமையைச் சோதிக்க விரும்பினான். அரம்பையர்களுள் பேரழகியான திலோத்தமையை அழைத்து இவரை மயக்கி வசப்படுத்தும்படி விடுத்தான். அவள் வந்தாள். அந்தச் சுந்தர மங்கையைக் கண்டதும் இவர் சிந்தை யுருகினார். வந்தவள் இசைந்தாள்; தம் தவநிலையை மறந்து அவளோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து இரவு பகலறியாமல் சிற்றின்பக் கடலில் முற்றும் ஆழ்ந்து இவர் மூழ்கிக்கிடந்தார். பல ஆண்டுகள்கழிந்தன. ஒரு நாள் இவர் நதியில் நீராடிவருங்கால், "காமபோகம் பின் எமபோகம் காண்" என்னும் சூத்திரம் ஒன்று நினைவிற்கு வந்தது. துடித்து நோக்கினார்; தமது நிலைமையை நினைந்து மிகவும் நெஞ்சம் கலங்கினார்; "மாதவத்தைவிட்டு மாதவத்தில் பட்டோமே!" என்று மறுகி நொந்தார். நேர்ந்துள்ளதை ஓர்ந்து சிந்தித்தார்; இந்திரன்செய்த சூழ்ச்சி என்று தம்முடைய யோக சித்தியால் உணர்ந்து கோப மீக்கொண்டு கொதித்து வந்தார். அத்தெய்வ மங்கையைச்சினந்து நோக்கினார். "நான் செய்யும் தவத்தைக் கெடுத்தாயே! நீ தெய்வ வுருவை யிழந்து, வையகத்தேபோயிருந்து உய்திகருதி வாழ்" என்று சபித்து விட்டு அந்த இடத்தை நீங்கித் தென்திசையில் போய்த் தவஞ்செய்திருந்தார். இந்த வரலாற்றைக் குறித்து வந்திருக்கும் கவிகளை அடியில் காண்க.

முனிவர் திலோத்தமையை மயங்கி முயங்கியது.

"அன்னவள் மேனி காணு அனங்கவேள் சரங்கள் பாயத்
தன்னுணர் வழிந்து காதற் சலதியில் அழுந்தி வேந்தன்
பன்னரும் பகல்தீர்வுற்றுப் பரிணிதர் தெரிந்த நூலின்
நன்னயம் உணர்ந்தோனுகி நஞ்செனக்கனன்று நக்கான். (1)

விண்முழுதாளி செய்த வினையென வெருண்டு நீபோய்
மண்மகளாதி என்று மடவரல் தன்னை ஏவிக்
கண்மலர் சிவப்ப உள்ளம் கறுப்புறக் கடிதின் ஏகி
எண்மரில் வலியனுய எமன்திசை தன்னை யுற்ருன்." (2)

(மிதிலைக்காட்சிப் படலம்)

கீழ்த்திசையை விடுத்துத் தென்திசை புகுந்து இன்னவாறு இவர் தவம் செய்திருக்குங்கால் சின்னுட் கழித்து அங்கே மேனகை வந்தாள். பேரெழிலுடைய அவ்வானக மடந்தையைக் கானகத்தே கண்டதும் இவர் கடுங்காதல் கொண்டார்; தம் நெடுந்தவம் துறந்து அவளோடமர்ந்து ஐம்புலஇன்பங்களும் ஆரத்துய்த்தார். பேரறிவாளர் ஆதலால் தம்பிழையை யுணர்ந்து விரைவில் அவளை அகன்று மேல் திசை போனுர். இவர் கலந்து நீங்கும்பொழுது அந்த அழகியிடம் ஒரு பெண் குழந்தை பிறந்திருந்தது. அப்பெண்ணைத்தான் கண்ணுவ முனிவர் எடுத்து வளர்த்தார். சகுந்தலை என்னும் பேரோடு அவள் அங்கு வளர்ந்து வருங்கால் சந்திரகுலவேந்தனுகிய துஷ்யந்தன் என்பவன் ஒரு நாள் அவளைத் தனியே கண்டான். பருவம் நிறைந்து இளமை தவழ்ந்து எழில் நலம் சுரந்துள்ள அத்தருண மங்கையைக் கண்டதும் அவன் பெருங்காதல்கொண்டு நீ யார் அம்மா? என்று ஆசைவயத்தனுய் அவளை நேரே வினவினுன். அவள் சொல்லிய பதிலை அடியில் பார்க்க.

சகுந்தலை சொன்னது.

" அண்ணலங் களிற்றினுன் ஆரை நீ எனத்
தண்ணறுங் குழலினுள் தவஞ்செய் கோசிகன்
பெண்ணெனை மேநகை பெற்றிங் கேகினுள்
கண்ணுவன்வளர்த்தனன் காதலுற்றரோ." (பாகவதம், 9, 15)

தவஞ்செய்யப் புகுந்தும் தையலார் மையலில் பட்டுக் கோசிகர் தயங்கியிருக்கும் நிலை இதனுல் அறியலாகும். இனி யான்

டும் தவறுவதில்லை என்று உறுதிசெய்துகொண்டு மேற்குத் திசையில் மூண்டு நெடிய தவத்தை இவர் நீண்டு செய்தார். ஆண்டுகள் மூன்று கழிந்த பின் ஆண்டும் ஓர் அர மடந்தை வந்து இவரை வசஞ்செய்யச் சூழ்ந்தாள். அவளிடம் இவர் அமையவில்லை. "செல்லும் இடமெல்லாம் பொல்லாத மங்கையர் வந்து என்னைச் சோழிக்கின்றனரே" என்று இவர் சீறி நோக்கி அவளைக் கல்லாகச் சபித்தார். அவ்வாறே அவள் ஆகி நின்றாள்.

" விஞ்சிய விசுவா மித்திர னாலே
அஞ்சொல் அரமபை அருஞ்சிலை யானாள் ;
தஞ்சென நீடு தவத்தவர் தம்பால
வஞ்சம் இழைத்தெவர் வாழ்ந்தவர் மண்மேல. ?"
(சேதுபுராணம்)

என்ற இதனால் மேற்குறித்த உண்மைஇனிது புலனும். சிலை=கல். இவரது கோபத்தால் பாழானவர் பலர். ஒரு முறை வசிட்ட முனிவருடைய புதல்வர்கள் இவரை இகழ்ந்து நின்றார். உடனே அவரனைவரையும் காட்டுவேடர்களாய்ப் போம்படி கடுத்துச் சபித்தார். அவ்வண்ணமே அவர் ஆகித் திரிந்தார். தம்மை அடைக்கலமடைந்த சுனச்சேபன் என்பவனைக் காத்தருளுவதாக வாக்குறுதி தந்தமையால் தம்மக்களை அவனுக்குப் பதிலாகப் போய் உதவிசெய்யும்படி வேண்டினார். அவர் மறுத்தார்; மறுக்கவே அவரை இவர் வெறுத்துச் சபித்தார். அம்மக்கள் நால்வரும் ஒக்க ஒழிந்தார். கொதித்துச் சபித்தபோதெல்லாம் தவம் குலைந்து போனமையால் மீண்டும் மீண்டும் வருந்தி ஆண்டுகள் பலவாக நோற்று அருந்தவம் புரிந்து இவர் திருந்தி உயர்ந்தார். கொடிய வெகுளியால் அரிய தவங்களை இழந்து போனமையால், "கோபத்தால் கௌசிகன் தவத்தைக் கொட்டினான்" என ஓர் அவத்தமான பேரை இவர் அடைந்து நின்றார்.

இவ்வாறு காமத்தாலும் கோபத்தாலும் பலமுறையும் இவர் வருந்தி நொந்திருத்தலால், " தவம் செய்வோர்கள் வெருவாச் சென்று அடை காம வெகுளி " எனத் தன்னை மறந்து மன்னனிடம் இன்னவாறு பேசநேர்ந்தார் என்க. தம்முடைய அனுபவத்தில் கண்டதைப் பிறர் மேல் ஏற்றி மிகவும் நயமாக உரைத்

உரைகள் உளநிலையை ஒளியாது ஒளிசெய்துள்ளன.

மனிதன் எவ்வளவு இரகசியமாக மறைத்து வைத்திருந்தாலும் தன்னுடைய குற்றங்கள் தன்னை யறியாமலே பேச்சு மூலம் பலரறிய வெளிப்பட்டுவிடும் என்பதை முனிவர் மொழிகள் இங்கே உணர்த்தி நிற்கின்றன.

கேட்கின்றவனுக்கு எளிதாகப் பொருள்விளங்கும்படி உலக நிலையில் தெளிவான உவமையை உரையாமல் மிகவும் நுணுகிய அரிதானதை உரைத்தது முனிவரது சொந்த அனுபவ நிகழ்ச்சியாதலின் மூண்டு இங்ஙனம் வந்ததென்பது தெரிந்தோம்.

இனி அந்த உவமை சுட்டி நிற்கும் பொருளையும், அதன் இயல்பையும் உய்த்து நோக்குவோம்.

வேள்விக்கு இடையூறு செய்துவருகின்ற அரக்கர்கள் பலர். அவருள் சுபாகு மாரீசன் என்னும் இருவரும் தலைசிறந்தவர். உடன் பிறந்தவர். அண்ணனும் தம்பியும்ஆகிய அவ்விருவருக்கும் காமமும் வெகுளியும் முறையே ஒப்பாய் வந்தன.

காமம் என்பது பெண் பொன் முதலியவற்றின்மேல் களித்தெழும் ஆசை. அந்த ஆசைக்கு வெகுளி அருந்துணையாகும். தன் இச்சை எங்கே தடைப்பட்டதோ அங்கே தான் மனிதனுக்குக் கோபம் உண்டாகும். ஆகவே காமமும் வெகுளியும் முன்னவனும் பின்னவனும் போல் யாண்டும் பின்னி மன்னியுள்ளன. இவ்வாறு இவை உறவுகொண்டுள்ளமையான் உரிமையான அத்துணைவர் இருவருக்கும் ஈண்டு உவமையாயின.

மடமை மலிந்த மயக்கமே காம வெகுளிகளுக்குப் பிறப்பிடம் ஆதலால் அது சுபாகு மாரீசர்களுக்குத் தாயான தாடகையைக் குறித்து நின்றது. ஆகவே காமம் வெகுளி மயக்கம் எனும் மூன்று தீமைகளும் உயிர்களுக்கு எவ்வாறு கேடுபுரிந்து வருகின்றனவோ அவ்வாறே சுபாகு மாரீசன் தாடகை என்னும் மூவரும் முனிவருக்கு இடர் புரிந்து வந்தனர் என்பது பெற்றும்.

குரோதம், பொறாமை, மதம், மாற்சரியம் முதலிய தீக்குணங்களைப்போல் தீய அரக்கர்கள் வேறு சிலரிருப்பினும் அவருள்ளெல்லாம் தலைமை வாய்ந்து கொடுமை மிகுந்திருத்தலால் தாடகை முதலிய மூவரும் ஈண்டு யாவரினும் முக்கியமாய்க்கூற நின்றனர்.

அவரது அல்லற் பாடுகளின் அவலநிலைகளை உவமைகள் மிக வும் திட்பமாகவும் நுட்பமாகவும் உணர்த்தி யுள்ளன.

"காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்." (குறள், 360)

என்றதனால் அவற்றின் தீமை நிலை புலனும்.

புறப்பகைவரின் கொடுமையை உணர்த்த அகப்பகையினை அளவுசெய்து இங்ஙனம் குறிப்பாக எடுத்துக்காட்டினர்.

வெருவர என்றதனால் இருவகைப் பகைகளாலும் முனிவர் அடைந்திருக்கும் துயர நிலை அறியலாகும். அகப்பகை உள்ளிருந்து கிளம்பி உயிரை அலைக்கின்றது; புறப்பகை வெளியிலிருந்து புகுந்து வேள்வியைக் கெடுக்கின்றது என்க. இப்பொழுது உட்பகையை இவர் வென்றுவிட்டதனால் புறப்பகைவரை வெல்ல முடியாமல் அரசனிடம் புகலடைந்திருக்கின்றார். இல்லையாயின் இடையூறு செய்கின்ற அரக்கரை அங்கேயே கொதித்துச் சபித்து அடியோடு அழித்திருப்பர். கோபம் விட்டமையால் அங்குச் சாபம் இடமுடியாமல் தாபமடைந்து அரசை இங்குத் தஞ்சமடைந்துள்ளார் என்க. இக் கருத்தை இதில் நுட்பமாக உய்த்துணர வைத்திருக்கிறார்.

முனி வொழிந்து தவநிலையில் தனியனுயுள்ள எனக்குத் துனிமிக விளைத்து நிருதர் சிலர் கெடுதி செய்கின்றனர்; அக் கொடுவினையாளரைத் தொலைத்து என்னைக் காத்தருளும்படி உன் மூத்த மகனை உதவியருள் என்பது கருத்து.

இந்த வார்த்தையைக் கேட்டவுடனே அரசன் அடைந்த அவல நிலை உரையால் அளவிடலரியது. அவன் பட்டிருக்கும் பாட்டை அடியில்வரும் பாட்டில் பார்க்க.

அருந்தவர் உரையால் அரசன் அடைந்த பெருந்துயர்.

எண்ணிலா அருந்தவத்தோன் இயம்பியசொல் மருமத்தின்
எறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையில் கனல்நுழைந்தால் எனச்செவியில்
புகுதலோடும்
உண்ணிலா வியதுயரம் பிடித்துந்த ஆருயிர் நின்று
ஊசல் ஆடக்
கண்ணிலான் பெற்றிழந்தான் எனவுழந்தான் கடுந்துயரம்
கால வேலான். (கையடைப்படலம், 11)

இராமனைத் தா என்று முனிவர் சொன்ன சொல் தசரதனுக்கு உயிர் வேதனையாய் ஓங்கியுள்ள நிலையை இது உணர்த்தியுள்ளது. முனிவர் சொல் அரசன செவியில் புகும்பொழுதே உள்ளம் துடித்து உயிர் பதைத்துத் துயர் உழந்தான் என்பது உவமையால் உணர நின்றது.

ஒருவன் மார்பில் கூரியவேல் ஒன்று பாய்ந்து கொடிதாய்த் துளைத்துப் போயது; அந்தப் படுகாயம் சிறிது ஆறிக் கொதி புண்ணைக் குழைந்திருந்தது; அப்புண்ணில் நெருப்புக்கட்டியைக் கொண்டு வந்து ஒரு மூடன் புகுத்தினால் அந்த மனிதன் எப்படித் துடிப்பானோ அப்படி முனிவன் சொல் தன் காதில் பட்ட பொழுது தசரதன் துடித்தான் என்பது, "புண்ணில் ஆம் பெரும்புழையில் கனல் நுழைந்தால் எனச் செவியில் புகுதலோடும் உயிர் துயர் உழந்தான்" என்றதனால் உணரவந்தது.

புண்ணில் ஒரு ஈ வந்து ஒட்டினாலும் வேதனை சகிக்க முடியாது. அதில் தீயைத் திணித்தால் அவ்வுயிர் என்ன பாடுபடும்? இதனைக் கொஞ்சம் ஈண்டு எண்ணி நோக்கவேண்டும்.

புண்புழை என்றதனால் மன்னன் மனத்தில் முன்னமே ஒரு இன்னல் படிந்துள்ளது என்று தெரிகின்றது.

நீண்ட காலமாக மலடிருந்து மிகவும் அருமையாகப் பெற்ற பிள்ளை ஆதலால் அந்த அழகனைக் காணுந்தோறும் உள்ளம் பூரித்து அரசன் உவகை மீக்கூர்ந்து வந்தான். வரினும் கவலையும் இடையே கனிந்து வந்தது. என்னை? ஒரு பொருளின்மீது காதல் அதிகமாயின் அதற்கு ஏதும் ஏதம் நேரா வகை ஆதரவுடன் பேணி வருவதும், அபாயங்கள் இல்லாத இடங்களிலும் ஐயமுற்று அலமருதலும் மனித இயல்பு; அந்நிலைமையில் இராமன் மேல் தசரதனுக்குப் பேராவலும், பெருங் கவலையும் பெருகி வந்தன ஆதலால் அந்த எண்ணத்தின் அவல நிலை புண்ணாகவும், முனிவரது துனிமொழி அதில் புகுந்த கனலாகவும் கருத நின்றன என்க.

## சாப நினைவின் தாப நிலை.

இன்னும் ஒரு இரகசியம் இங்கே எண்ணவுள்ளது. என்னே அது? எனின், பின்னே காண்க. தசரதன் ஒரு சமயத்தில்

காட்டிற்கு வேட்டையாடச் சென்றிருந்தான். அன்று கொடிய மிருகங்கள் ஒன்றும் இவன் எதிர்ப்படவில்லை. இன்று "வேட்டை ஓட்டையாயது" என்று கவன்று ஓர் நீர் நிலையருகே நெடிய குளிர் மரநீழலில் இவன் நின்று கொண்டிருந்தான்; அவ்வமையம் ஒரு இளைஞன் மண் கலசத்தோடு வந்து மறைவிலிருந்த ஏரியில் நீரை வாரினன். சலத்தில் நிகழ்ந்த அச் சலசலப்புத் தன் காதில் விழவும், யானை வந்து நீர் குடிக்கின்றது என்று கருதி அவ்வொலி வழியே மன்னன் ஒரு பாணத்தை விட்டான். அதுபோய்ப் பட்டது; படவே ஐயோ என்று அலறிக் கையிலிருந்த கலசத்தோடு பையன் பதைத்து உருண்டான். அக்குரலைக் கேட்டதும் இவன் கடுத்து ஓடி அடுத்து நோக்கினன்; நிலைமையைக் கண்டதும் நெஞ்சம்துடித்து அந்தோ! என அலறி "நீ யார் அப்பா?" என்று அவன் பேரைக் கேட்டான். வேந்தன் முகத்தை அவன் விழைந்து பார்த்துத் தன் பேரைச் சொல்லிவிட்டு, "என் தந்தைக்கும் தாய்க்கும் கண்கள் இரண்டும் தெரியா; அவர்களை அதோ அந்தச் சோலையில் வைத்துவிட்டு நீர் எடுத்துப்போக வந்தேன்; இங்கே இவ்வாறு நேர்ந்துவிட்டது; இதற்கு நீர் என்ன செய்வீர்! என் தலைவிதி இப்படி நிலைபெற்றுள்ளது; நீர் யாதும் வருந்தவேண்டா; என் பெற்றோர் பெருந் தாகத்துடன் இருக்கிறார்கள்; இந்த நீரை எடுத்துக்கொண்டுபோய் அவரிடம் கொடும்; அவர் * உண்ட பின்பு என் சாவைச் சொல்லும்; நான் சாகும் பொழுது அவரைத் திசைநோக்கிக் கைகூப்பிக் கும்பிட்டேன் என்று கூறும்; விரைந்து போம்" என்று சொல்லி உடனே அவன் உயிர் துறந்துபோனன். அவனது பெருந் தன்மையை நினைந்து நினைந்து அரசன் வருந்தி அழுது, அவன் கூறியபடியே கலசத்தில் நீரை எடுத்துக்கொண்டு முதியவரிடம் நேரே வந்தான். அருகே வருங்கால் வேற்றாள் என்று தெரிந்து அவர் வெருண்டு வினவினர். மன்னன் உற்றதை உரைத்தான். அப்பொழுது அவர் பட்ட துயரை யார் சொல்ல வல்லார்? தரையில் புரண்டு தவித்துத் துடித்தார். அரசன் எவ்வளவோதேற்றிப்பார்த்தான்;

* நீரைப் பருகுமுன் நிகழ்ந்ததைச் சொன்னால் அவர் தண்ணீர் யாதும் குடியாமல் மண்ணில் உருண்டு மறுகித் துடிப்பர் என்று கருதி என்க. இந்தச்சற்புத்திரனது அற்புதசரிதம் பெரிதும் பரிதாபமாய் உயிர் உருக்கம் மிக்குள்ளது. விரிவை அயோத்தியா காண்டத்தில் காண்க.

அவர் யாதும் தேருமல் புத்திர சோகத்தால் பொறி கலங்கி, "எம்மைப் போல் புதல்வனைப் பிரிந்து நீ சாகக்கடவாய்!" என்று சாபம் கொடுத்துவிட்டு உடனே உயிர் ஒழிந்துபோனுர். நிகழ்ச்சியை நினைந்து நெடுந்துயரடைந்து இவன் நெஞ்சம் கலங்கி நீங்கி வந்தான். அவரது சாப நினைவு இன்பமும் துன்பமும் இசைந்து வந்தது. அப்பொழுது மகப்பேறின்றி மலடனுய் இவன் மறுகியிருந்தான் ஆதலால் அவர் உரையால் பிள்ளைஉண்டாம் என்னும் மகிழ்ச்சியும், பின்பு பிரிவுற நேருமே என்ற கவற்சியும் உள்ளே பெருகி வந்தன. அவ்வரவில் புதல்வர் தோன்றினர்; முதல் மகனைக் காணும் தோறும் கரை காணு மகிழ்ச்சியில் களிப்புறுகின்ற இவன் பிரிவு நினைவும் இடையிடையே தோன்ற உள்ளம் உருகிவந்தான். ஆகவே அந்த உள்ளத்துயரம் மருமத்தின் எறிவேல் பாய்ந்த புண்ணுய் என்றும் இடம்பெற்றிருந்தது. இன்று வந்து முனிவர் சொன்னசொல், அந்தப்பழம் புண்ணின் புழையில் கொழுங்கனல் நுழைந்ததுபோல் மிகவும் கொடுந்துயரமாய் இவன் செவியில் புகுந்த தென்க. மருமம்=மார்பு.

அரசனது துயர நிலை தெரிய உரை செய்துள்ள இவ்வுவமை மிகவும் பயங்கரமானது. "புண்ணில் கனல் நுழைந்தது" என்பதை எண்ணும்போதெல்லாம் நெஞ்சம் எரியுற்றதுபோல் பரிவுற்று நடுங்குகின்றது.

முன்னுற முனி மொழிக்கு இன்னவாறு ஒப்பு உரைத்துப் பின்னர் அவ்வுரையால் அரசன் அடைந்த துன்ப நிலையை வேருெரு உவமையால் விளக்கியிருக்கிறுர்.

பிறவியிலேயே குருடனுயிருந்த ஒருவன் இடையே தெய்வத் திருவருளால் கண்கள் வரப்பெற்றுன்; வரவே பல்வேறு வகைப்பட்ட உலகக் காட்சிகளை யெல்லாம் கண்டு கண்டு களிப்புற்று "ஆ! இந்நாள் வரையும் இந்த இன்பப் பேற்றினை இழந்திருந்தேனே!" என்று அதிசய பரவசனுய் ஆராமை மீதூர்ந்து அக மகிழ்ந்து வந்தான்; அங்ஙனம் வருங்கால் திடீர் என்று அக்கண்கள் ஒழிந்து போனல் அவன் என்னபாடு படுவானே அன்னவாருன படுதுயரை மன்னன் அடைந்து பதறித் துடித்தான் என்பார், "கண் இலான் பெற்று இழந்தான் எனக் கடுந்துயரம் உழந்தான்" என்றுர். உழத்தல்=துன்பத்தில்அழுந்தித்துடித்தல்.

ஓரே படியாய்ப் பிறவிக் குருடனாகவே இருந்து வந்தால் அவனுக்கு யாதொரு துயரமும் தோன்றாது; இயற்கை வழக்க மாய் இசைந்துபோம்; கண்ணைக்காட்டி மறைத்த பொழுதுதான் கடுந்துயரம் உண்டாம்; அதுபோல், மலடனாகவே இருந்துவிட் டால் மன்னனுக்கு இன்னல் ஏதும் தோன்றாது; அருமை மக வைப் பெற்று உரிமை மீக்கூர்ந்து கண்குளிரக்கண்டு உளமகிழ்ந்து வருங்கால் அவனை இடையே பிரிய நேரும்பொழுது உயிர் பிரிய நேர்ந்ததுபோல் பெருந்துயரம் உண்டாயது என்க.

" கண் இலான் பெற்று இழந்தான் " என்ற இந்த வாக்கி யம் முன்னம் குறித்த கதையையும் குறிப்பாக நோக்கி நிற்றலைக் கூர்ந்து நோக்குக. அந்த அந்தகர் தம் மைந்தனை இழந்தபோது மறுகித்துடித்து உயிர் பதைத்து உலைந்து போனதுபோல் அவ ரது சாபத்தை ஏற்றுள்ள இந்த வேந்தனும் பதைத்து நொந்து பரிதபித்தான் என்பதாம். பழவினைத்துயரின் அளவு நிலை அறிக.

ஆவி அகத்ததோ ? புறத்ததோ ? என்னும்படி அரசன்உயிர் ஒரு நிலையின்றிப் பெரிதும் அலமந்து மறுகி அலைந்தது ஆதலால் " ஆருயிர் நின்று ஊசல் ஆட " என்றார்.

ஆர் உயிர் என்றது வீரம் மானம் வாய்மை வண்மை முத லிய அருமைப் பண்புகள் யாவும் நிறைந்த அரிய உயிர் என்ற வாறு. அன்ன மேன்மையுடைய அது இன்னவாறு இன்னல் உழந்ததே! என இரக்கந் தோன்ற வந்தது.

பொறுக்க முடியாத துயரம் நெஞ்சில் புகுந்தால் உடலில் உயிர் இருக்கமுடியாமல் பரதவிக்கும் ஆதலால் அப் பரிபவ நிலை மையை ஊசல் ஆட என்றதனால் உணர்த்தியருளினார். ஆயுள் முடியாமையால் வெளியே ஓரே அடியாய் ஓடிப்போகவும் முடிய வில்லை; துயரம் தள்ளுதலால் உள்ளே அமைதியாய் இருக்கவும் இடமில்லை என்பதாம். ஊஞ்சலில் தொடர்ந்து கட்டியுள்ள கயிறு அறுந்து போனாலொழிய அதன் ஆட்டம் நில்லாது; அல் லது அதனையாரும்ஆட்டாதுஇருந்தாலும் தனியேஅசையாமல் அமர்ந்திருக்கும் ஆதலால் வாழ்நாள் வலியாலும் துயரின் நலிவா லும் ஒரு நிலையுமின்றி மிகவும் தொல்லையுறும் உயிர்க்கு ஊசலாட் டம் இங்கே உவமையாகச் சொல்ல நேர்ந்ததென்க.

துயரம் உந்த, உயிர் ஆட என்றதனால் உள்ளம் துடித்து உயிர் பதைத்த பரிதாப நிலைமைகள் உணரலாகும். பிள்ளையின் பிரிவுரை செவியில் விழவே உயிர் மறுகித் துயர் தலைமீறி உடலை விட்டு வெளியே போவதும் வருவதுமாய் ஆவதொன்றும் அறியாமல் சாவதாக மன்னன் தத்தளித்துத் தவித்தான் என்பதாம்.

அல்லலை ஆற்றமாட்டாமல் இவ்வாறு அஞ்சி அயர்ந்தமையால் இவன் நெஞ்சுரம் இல்லாதவனோ? எனின், யாண்டும் எதற்கும் அஞ்சாத தீரனே ஈண்டு இங்ஙனம் ஆனான் என்க. இவனது இயற்கையான வீர நிலையை நாம் எண்ணியறியவே, "காலவேலான்" என இவனை நமக்கு இங்கே காட்டியருளினார். காலவேலான் என்றது காலன் போன்ற வேலினை யுடையவன் என்றவாறு. காலன் எழுந்தால் உயிர்கள் எவ்வாறு நாசம் அடையுமோ அவ்வாறே இவன் வேல் எழுந்தால் பகைவர் நாசம் ஆவர் என்க. கூற்றை யாரும் கடக்க முடியாது; அதுபோல் இவனது வேலை எவரும் தடுக்க முடியாதென்பதாம்.

அத்தகைய அதிசூரனானவன் இங்கே இப்படிச் சித்தம் கலங்கித் துயர் உழந்தான் என்றதனால் இவனது புத்திரவாஞ்சையின் நிலைமையும், அப்புதல்வனது தலைமையும் உய்த்துணரலாகும்.

எறிவேல், காலவேல், புண்புழை, கனல் பிழம்பு, கடுந்துயரம் எனக் கோரமான சொற்களைக் கூற நேர்ந்தது கொடுமையான துயரக் காட்சிகளை நேரே ஓர என்க. உயிர்க் குணங்களையும் துயர்க்கூறுகளையும் இதன்கண் உள்ளம் உருக விளக்கியுள்ள நயங்கள் உணர்ந்து சிந்திக்கத் தக்கன.

மனத்தில் எழுகின்ற விருத்தி பேதங்களையும், துன்பக் கூறுகளையும், மனித தத்துவங்களையும் உவமை வாசகங்களால் கவி இதில் உணர்த்தியிருக்கும் திறங்கள் கலைவல்லுநர் எவரும் வியந்து போற்றவுள்ளன.

காரணங்கள் கலங்கி மரணவேதனையாய் அரசன் மறுகி யுழந்தான் என்றதில் அவனது உள்ளத் தகவையும் பிள்ளைக் காதலையும் தெள்ளத்தெளிய விளக்கி, தம் உள்ளத்தையும் உணர்த்தி நம் உள்ளங்களைக் கவி இங்கே உருக்கியிருக்கிறார். ஊன்றியுணர்வார் உணர்வு நிலை கலங்கி உள்ளூற இரங்கி உருகி அயர்வார்.

இவ்வண்ணம் கடுந்துயருழந்த அரசன் உடனே சிறிது உணர்ந்துதேறி முனிவரை நோக்கி ஒரு துணி வுரைகூறினான். தனது மனநிலையை வெளிப்படுத்தி அன்று இவன் உரையாடி யிருக்கும் தீரமொழிகள் மிகவும் அதிசயமுடையன. அடியில் வருவன காண்க.

தசரதன் உரைத்தது.

"தொடையூற்றின் தேன்துளிக்கும் நறுந்தாரான் ஒருவண்ணம
துயரம நீங்கிப்
படையூறறம இலன்சிறியன் இவன் பெரியோய்!பணியிதுவேல
பனிநீர்க் கங்கை
புடையூறறும சடையானும் நான்முகனும் புரந்தரனும்
புகுநது செய்யும
இடையூற்றுக்கு இடையூறு யான்காபபென் பெருவேள்விககு
எழுக என்றான்.'' (கையடைப்படலம், 12)

மன்னன் உரைத்துள்ள கம்பீர வார்த்தைகளை இதில் கருத் தூன்றிப் பார்க்க. பாட்டைப் படிக்கும்போதே அஞ்சாவீரமும் நெஞ்சின் நிமிர்வும் நேரே தோன்றும்.

சாதலனைய நோதலடைந்து தவித்தயர்ந்தவன் உடனே உயிர்த்தெழுந்து இவ்வாறு வீரவுரைகள் கூறினான் என்றால் அக் குலவீரத்தின் நிலைமையை என்னவென்று சொல்வது? உத்தம சத்திரியத்தன்மை இங்கே புத்தொளி வீசிப்பொங்கி நிற்கின்றது.

அரக்கர் இடர் செய்கின்றனர் அவரைத்தொலைத்து வேள் வியைக் காத்தருளுக என்று இவ்வளவேதான் முனிவர் வேண்டி நின்றார். அதற்குப் பதில் வந்திருக்கும் வேகமும் வீரமும் அதி சயமாயிருக்கின்றன.

அற்பர்களான அரக்கர்கள் கிடக்க; அவர் எனக்கு ஒரு பொருள் அன்று; திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளே வரினும் நான் ஒரு கை பார்ப்பேன் எனத் தனது நிலையான மனவுறுதி யையும், போர்வீரத்தையும் முனிவர் உணர்ந்து கொள்ளும்படி உறுதிபெற மன்னன் இன்னவாறு உரைக்க நேர்ந்தான்.

என்னைக் கிழவன் என்று எண்ணியல்லவா என் குமரனைத் துணைவர வேண்டினீர்! அமரரும் என்னோடு அமராற்ற முடி யாதே! விரித்து விரித்துச்சொல்லுவானேன். ஊழி முதல்வனை

சிவனும், உலகுயிர் யாவும் படைத்த பிரமனும், இந்திரனும் ஒருங்கே திரண்டு இடர் செய்யவந்தாலும் அவரனைவரையும் ஒறுத்து நீக்கி யாதொரு இடரும் நேராதபடி உங்கள் யாகத்தை நான் பாதுகாப்பேன்; யாதும் ஐயுறவேண்டா ; எழுந்திருங்கள் ; இப்பொழுதே நேரே போவோம் என்று முனிவரை விரைவு படுத்துகிறார் ஆதலால், "பெருவேள்விக்கு எழுக" என்ருன்.

முனிவரை எப்படியாவது வெளியே இழுத்துக்கொண்டு போய்விடவேண்டும் ; உள்ளே இருக்க விட்டால் உயிருக்கு ஆபத்து என்று பரபரப்புடன் அவரை வெளியேற்ற அரசன் விரைந்து நின்ற நிலையை இதில் ஊன்றி உணர்ந்துகொள்க.

என்னையே முனிவரர் என்று தொடங்கியபொழுது இடையூறு ஒன்று என்று முனிவர் சொன்ன வார்த்தை நினைவில் பதிந்திருந்தமையால் அதனையே திருப்பி "இடையூற்றுக்குஇடையூரு யான் காப்பன்" என்று தடை நீக்கித்தான்காக்கும் நிலைமையைத் தகுதியாக அரசன் எடுத்துக்காட்டினன்.

எதிரிகள் என்ன என்ன இடையூறுகள் செய்வாரோ அவற்றிற்கெல்லாம் எடைக்கு எடை எதிர் செய்து அவர் தாமாகவே அஞ்சி இடைந்துபோகும்படி அடலமர்புரிந்து எனது உடலுயிர் யாவும் தங்களுக்கு உறுதுணையாக்கி உரிமை செய்வேன் துணிவுடன் விரைந்து புறப்படுங்கள் என்பதாம்.

முனிவர் நிருதரை விலக்கவேண்டினர்; அரசன் அவரளவில் நில்லாமல் அவரினும் போராற்றலுடைய அமரர்களையும் விலக்கியருள்வேன் எனத் தனது அமராற்றலை விளக்கினன்.

இந்திரன் வந்தாலும், பிரமன் ஆனலும், சிவபெருமானே ஆயினும் போரில் நேரின் நான் அவரைப் பொருதே தீர்ப்பேன் என்ற இவனது உறுதியுரை வியப்பையும் விம்மிதத்தையும் விளைத்து உயரிய வீரக்காட்சியை இங்கே உணர்த்தி நிற்கின்றது.

தேவதேவர்களை இவ்வாறு எதிரிட்டுக் கேவலமாகக் கூறலாமோ? எனின், பகையாய் வரின் அவர் எவராயினும் தவருமல் வெல்லுவேன் என்று வீரமுழக்கம் செய்கின்ருன் ஆதலால் அந்த வீரதேவதையின் ஆவேசத்தால் அரசன் இங்ஙனம் சொல்லினன் என்க. அளவிடமுடியாத ஆன்ம வீரம் இதில் ஒளிவிடுகின்றது.

இவ்வண்ணம் சொன்னது தனது அருமைத் திருமகனை அழையாமல் கைவிட்டுத் தன்னை உறுதித் துணையாக நம்பி வேள்விக்கு அவர் உரிமை செய்துகொள்ள ஆதலால், அரசின் அதிவீர நிலையும் மகவாசையும் இதில் நன்கு புலனும்.

மேலே எண்ணி யுள்ள மூவரும் புண்ணிய சீலரான கண்ணிய மூர்த்திகள்; அவர், புண்ணிய காரியமான வேள்விக்கு இடையூறு எண்ணார்; அங்ஙனம் இருக்க அவரை இங்கே மாறாக எண்ணியது என்னை? எனின், வினைமேல் வேறுபாடு இலராயினும் முனிமீது முனிவாய் ஒரு வேளை மாறுபட்டு ஊறுசெய்ய நேரின் அவரையும் நேரெதிர்ந்து நீக்குவேன் என நேரலரின் பேரெல்லையும், தனது பேராண்மையும் தோன்றப்பேசி மாதவர் மனத்தை மன்னவன் இன்னவாறு தேற்றினான் என்க.

இதில், திருமாலைச் சேராதுவிட்டது சிந்திக்கத் தக்கது. முனிவர் புகலிடம் கூறும்பொழுது பனிவரை, பாற்கடல் முதலாகத் தொடர்ந்து எண்ணி ஐவரைத் தொகுத்துச் சுட்டினார்; அரசன் இங்கே இகல் குறிக்குங்கால் திருமாலை இடையொதுக்கி விட்டு மூவரைமட்டும் எதிர் எண்ணிக்கொண்டான்.

பாற்கடற் பள்ளியானை இங்ஙனம் எதிரியாக ஏறிட்டுச் சொல்லாததற்குக் காரணம் என்னை? எனின், "பஞ்சணை பாம் பணையாகப் பள்ளிசேர், அஞ்சனவண்ணனே இராமன்" என்றபடி தனக்குப்பிள்ளையாய் வந்து பிறந்திருக்கின்றவன் திருமாலே ஆதலால் பெருமால் கொண்டுள்ள மன்னன் தன்னை யறியாமலே உரிமையுடன் அப்பெருமானை உறவு செய்துகொண்டான்; ஆகவே பிறரோடு சேர்த்து மாறாக வேறு பேசானாயினான்; அதுவு மன்றி யாகபரிபாலகனாக அரியே இனிப்போகவுள்ளான் ஆதலால் அந்த ஏகநாயகனை இங்கே எண்ணவில்லை என்க.

தெய்வம் கொள்கையில் கம்பரும் தசரதனும் கருத்தூன்றி யுள்ள நிலை இதனால் இனிது புலனும்.

"கங்கை புடைஊற்றும் சடையான்" எனச் சிவபெருமானைக்குறித்துக்கூறியிருக்கும் இந்த வாக்கியம் இன்ப ஊற்றாகவுள்ளது. கங்காதரனது திவ்விய உருவக் காட்சியைச் செவ்விபெற விளக்கி நிற்கின்ற இதனைச் சிந்திக்குந்தோறும் சிந்தையில் அந் தமிழின்பம் வந்து மிளிர்கின்றது. சடைமுடியிலிருந்து பொங்கி

கிமிர்ந்து அருகே என்றும் அமிர்த தாரைகளைக் கங்கை சொரிந்து கொண்டிருப்பதுபோல் ஓர் இன்பக் காட்சியைப் புடையூற்றும் பதங்கள் புரிந்துகொண்டிருக்கின்றன.

இங்ஙனம் கங்கையைக் குறித்தது தன் முன்னோருள் ஒருவனாகிய பகீரதன் பண்டு அருந்தவம் புரிந்து பெரும் பிரயாசையுடன் கொண்டுவந்த கங்கையைப் பூமண்டலம் பொறாது என்று கருதிக் கருணையோடு தன் சடையில் தாங்கி ஆறுதல் செய்து அளவாக இனிது ஒழுகவிட்ட அக்கெழுதகைமையை எண்ணி என்க.

உலகம் நலமுற அருளுடன் அன்று ஒழுகவிடுத்த கங்கை நீர் இன்றும் இடைபறாது ஒழுகிவருதலால், புடையூற்றும் என அந்நீரொழுக்கின் நடையூற்றம் தெரிய நிகழ்காலத்தால் குறித்தார்.

எவ்வுலகும் தாங்க முடியாமல் அமரர் முதல் யாவரும் அஞ்சி அபார ஆரவாரத்துடன் போழியாய்ப் பெருகிப் புரண்டு ஊழியாய்க் கங்கை ஓங்கி வந்ததும், அதனை மிகவும் எளிதாகப் பரமன் அளிசெய்து சடையில் அடக்கியதும், அரிய அற்புதக் காட்சிகளாய் அமைந்து நிற்கின்றன. அந்த அதிசய நிலைமையை வியந்து பலநூல்களும் துதிசெய்துள்ளன.

“உந்தி யமபுயத் துதித்தவன் உறைதரும உலகும்
இந்தி ராதியர் உலகமும நடுக்குற இரைத்து
வந்து தோன்றினள் வரநதி மலைமகள் கொழுநன்
சிந்தி டாதொரு சடையினில கரந்தனன் சேர;

“புனறுவரித்தரு பனிஎன வரநதி புனிதன்
சென்னியிற்கரந்தொளிதர வணங்கினன திகைத்து
மன்னன் சிற்றதும்வருந்தல்நம் சடையள்வான் நதியின்று
என்ன விட்டனன் ஒருசிறி தவனிபோந் திழிந்தாள்.”
(அகலிகைப் படலம் 55, 56.)

எனவரும் இதனால் வரநதிவந்த நிலையும், அதனை இறைவன் ஆற்றி ஊற்றிய வகையும் நன்கு அறியலாகும்.

கங்கையை இங்ஙனம் சடையில் அடக்கினமையால் சிவனுக்குக் கங்கை வேணியன் என்று ஒரு பெயரும் வந்தது. வேணி=சடை. “கங்கை வேணியன் கங்கை காணியன்” என்பதும் காண்க. பின்னது கம்கை என்று பிரியும். கம்=தலை.

சடைக்கரந்த இந்தக் கங்கைச் சரிதையைக் கவிஞர்கள் பல வாறாகப் பாராட்டியிருக்கின்றனர். சில அடியில் வருவன.

"விண்ணுக்கு அடங்காமல வெற்புக் கடங்காமல்
மண்ணுக்கு அடங்காமல வந்தாலும—பெண்ணை
இடத்திலே வைத்த இறைவர் சடாம
குடத்திலே கங்கைஅடங் கும்." (காளமேகம்)

அரிய பெரிய கங்கை ஒரு சிறிய குடத்திலே அடங்கி நின்றது என வெளியே தொனிக்கும்படியாகவும், உள்ளே வேறு பொருள் இனிக்கும்படியாகவும் பாடியிருக்கிறார். "குடத்திலே கங்கை அடங்கும்" என ஈற்றடி கொடுத்து ஒரு வெண்பாப் பாடும்படி வாதிகள் கேட்டபொழுது உடனே காளமேகப்புலவர் பாடிய பாடல் இது. அவரது விற்பன விரைவும், கற்பனைத் திறனும், கவிவன்மையும், சொற்சாதுரியமும் எவரும் அதிசயித்து அஞ்சத்தக்கனவாய் அந்நாள் விஞ்சியிருந்தன. யாண்டும் தட்டுத் தடங்கலில்லாமல் வேண்டினார் வேண்டிய படியெல்லாம் விரைந்து கவிமாரி பெய்து வந்தமையால் காளமேகம் என்று காரணப்பேர் பெற்றுக் கவியாட்சிபுரிந்து அவர் புவி போற்ற நின்றார். கங்கை கரந்த சடாமகுடம் கவிஞர் வாக்கில் இங்கே கரந்து நிற்கும் நிலையை அறிந்துகொள்க.

"எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும்
எழுத்தறிவார்க் காணின் இலையாம்—எழுத்தறிவார்
ஆயும் கடவுள் அவிர்சடைமுன் கண்டளவில
வீயும சுரநீர் மிகை." (நன்னெறி, 21)

இலக்கணம் வல்லுநர் முன் அந்நூல் பயிற்சி யில்லார் ஆற்றல் இழந்து அடங்கி நிற்பார் என்பதற்குச் சடை எதிர்ந்த கங்கை இங்கே உவமையாக வந்துள்ளது. இலக்கணப் புலமையில் சிவப்பிரகாசருக்குள்ள மதிப்பு இதில் வெளிப்பட்டு நிற்கின்றது.

சடையும் கங்கையும் இன்னவாறு பின்னலாடிப் பலவகை நிலையிலும் புலவர்கள் வாக்கில் பொலிவுற்றுள்ளன.

நீரின் அதிதேவதை இனிய நீர்மையுடன்மென்மையும் வாய்ந்திருத்தலால் அதன்மேல் பெண்மையை ஏற்றிக்கங்காதேவி எனப்

புராணங்கள் கூற நேர்ந்தன. அத்துடன் அமைந்து நில்லாமல் கங்கையைக் காதல் கிழத்தியாகத் தன் சடையில் சிவன் மறைத்து வைத்துள்ளான் எனவும் நூல்கள் உரைத்து நிற்கின்றன. தனது அநுபவ நிகழ்ச்சிகளையும் காதல்களிப்பையும் கடவுள் தலைமேலேற்றி மனிதன் இனிது மகிழ்கின்றான். தன் மனம் கொண்டதையே தெய்வத்தினிடமும் எளிது கண்டு அளிபுரிந்து வழிபாடு செய்கின்றான். மனிதனுடைய செயலும் மொழியும் அவனது மனநிலையை வெளிப்படுத்தி வருகின்றன.

கடவுள் கங்கை கொண்டதைத் தங்களுக்கு இதமாகக் கொண்டு கவிகள் உரிமை கொண்டாடியிருக்கும் நிலைகள் உவகைக்கு இடமாயுள்ளன. ஒன்று அடியில் வருகின்றது.

"மங்கை ஒருபால் மகிழ்ந்ததுவும் அன்றி
மணிநீள் முடியின்கண்
கங்கை தன்னைக் கரந்தருளும் காதல்
உடையீர்! அடியேனுக்கு
இங்கு நுமக்குத் திருமாலை தொடுத்தென்
உள்ளத் தொடைஅவிழ்த்த
திங்கள் வதனச் சங்கிலியைத் தந்தென்
வருத்தம் தீரும் என." (பெரிய புராணம்)

சுந்தர மூர்த்தி நாயனார் சிவபெருமானை நோக்கிக் கூறிய பாடல் இது. முதல்மனைவி ஆகிய பரவையார் இருக்கவும், இரண்டாவது தாரமாகச் சங்கிலிநாச்சியாரைத் தமக்குத் தந்தருள வேண்டும் என்று வேண்டுகின்றவர் தமது வேண்டுகோளுக்கு இணங்கும்படி ஆண்டவனை இதில் இவ்வாறு வணங்கி வேண்டியிருக்கிறார். காதல் உடையீர்! என்றது தமது காதல் நிலையை அறிந்து உடனே கருணைபுரிய என்க. இதில் குறித்துள்ள பதங்களைக் கூர்ந்து பார்த்து நயங்களை ஓர்ந்து கொள்க.

பேரழகியான உமாதேவியார் அருகிருக்கவும், அயலே வேறொரு கங்கையைக் கரந்துகொண்ட பெருமானே! என்றது தமது மறு மணத்தை மறுக்காமல் அவர் உடன்பட என்க.

தாம் இரண்டு மனைவியரை மணந்து கொள்ள விரும்பிய சுந்தரர் அந்த நிலைமையில் வைத்து இறைவனை எண்ணிப் போற்றியிருக்கின்றார். இங்கே கங்கையைச் சிவனுக்குத் தேவியாகக் கருதியிருத்தலறிக. மங்கையர் இருவரை ஆண்டவன் விழைந்து

கொண்டிருத்தலால் அந்த நிலையில் அடியவனுக்கும் அருள் புரியவேண்டும் என்பதாம்.

சடைமேல் ஒருத்தி சமைந்திருப்ப, மேனிப்
புடைமேல ஒருத்தி பொலிய—இடையேபோய்ச்
சங்கே கலையே மருதற்குத் தான்கொடுப்பது
எங்கே இருக்க இவள்.''

(திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, 23)

பட்டணத்தடிகள் பாடியது. இதிலும் கங்கையை இறைவனுக்கு நாயகியாகக் குறித்திருத்தல் காண்க. அகப்பொருள் துறையில் அமைந்து வந்திருக்கும் இக்கவியின் நுண்பொருளை நுனித்து உணர்ந்துகொள்க.

நீர்வடிவமான கங்கையைப் பெண்ணாக எண்ணியது அதன் தெய்வத் தன்மையை எதிர்நோக்கி என்க. ஒரு நோக்கில் நீராகவும், மற்றொரு நோக்கில் பேரழகமைந்த மங்கையாகவும் கங்கை கனிந்திருந்தாள் என்பதைச் சிவப்பிரகாசர் நகைச்சுவை ததும்ப வெளிப்படுத்தி யிருக்கிறார்.

ஒரு முறை உமையுடன் உல்லாசமாகச் சிவன் உவந்திருக்குங்கால் தலையில்மறைத்து வைத்திருந்த கங்கையைத் யார் கண்டு கொண்டார்; கொள்ளவே, ''இது என்ன? பெண் உருவம்!'' என்று திகைத்து வினவினார். வினவவே, பரமன் உளமிக நாணி எவ்வளவோ ஒளித்துரைத்தும் உண்மை வெளிப்பட நேர்ந்தது; நேரவே அஞ்சிப் பயந்து தன் பிழையைப் பொறுத்தருளும்படி தேவியைக் கெஞ்சி நின்றான். அந் நிலைமைக்கு இரங்கிச் சக்களத்தியாகக் கங்கையை உமை தழுவிக்கொண்டாள் என அவர் உரைத்திருக்கும் கவி ஒன்று அடியில் வருவது காண்க.

'' ஐய! நின்சென்னிமிசை உறைகின்ற மடமங்கை
யார்? என்ன உமை வினவவும்,
அன்னதொரு மடமங்கை அன்று; வெண்திரை கொழித்து
அழகொழுகு தண்புனல; எனத்,
துய்யஒளி ஆனனம் கரியவிழி காதுவாய்
தோயததில உண்டோ? எனச்,
சொலலரும் கமலமலர் காவிமலர் கொடிவள்ளை
தூயசெங் குமுதம என்னப,

பொய்என நினைத்து நற்கொங்கையும் கூந்தலும்
புனலினிடை உண்டோ? எனப்,
புற்புதம், சைவலம் எனவே மறுத்துப்
புகன்றிடுதி நங்காய்! எனத,
தையலவள் ஏன்என்ன, நாணொடு வணங்கி என்
தன்பிழை பொறுத்திடென்றே
சங்கரன் உரைத்திடத் திருவுளம் மகிழ்ந்தசிவ
சங்கரி உமைக்காககவே.'' (சிவப்பிரகாசர்)

உமையும் சிவனும் வினவும் விடையுமாக உரையாடிய வகையில் இக்கவி உருவாகி யுள்ளது. இதன் பொருளமைதியையும், உருவக உவமைகளையும் ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்க. இங்ஙனம் உரிமைகொண்டுள்ளமையால் “மங்கை பங்க! கங்கை நாயக!” எனச் சிவன் எங்கும் ஏத்த நின்றான்.

சடையில் கரந்த கங்கையைக் குறித்துச் சமய ஞானிகளும், காப்பியக் கவிகளும் கருதியிருக்கும் நிலை இதுகாறும் கூறியவாற்றால் ஒருவாறு அறியலாகும்.

இங்ஙனம் அரிய கங்கையை அடக்கிய பெரிய ஆற்றலும், தக்கன் யாகத்தை அழித்த உக்கிரவீரமும் ஒருங்கே தோற்றக் கண்ணுதற் பரமனை மன்னன் முன்னுற எண்ணினான். அமரர் அதிபதிகளோடும் அமராடி அருந்துணைபுரிவேன்; உறுந்துணையாக என்னை உவந்துகொள்க; அயலொன்று கருதி அயரவேண்டா என்பது கருத்து.

“பெரியோய்! இவன் சிறியன்; படை ஊற்றம் இலன்” என்றது இராமனை முனிவர் கருதாவகை உறுதி நாடி என்க.

தனது அருமைத்திருமகனை எவ்வகையிலும் யாண்டும் கைவிடாதிருக்கக் கண்ணூன்றி யுள்ளமையால், அவ் அண்ணலிடம் இன்ன இன்ன குறைகள் இருக்கின்றன என்று முனிவர் எண்ணம் தெளிய மன்னன் எடுத்துக் காட்டுகின்றான்.

சிறியன் என்றது பச்சைப் பசும் பாலகன் என்றவாறு.

நீர் கருதும் காரியத்திற்கு ஒரு சிறிதும் ஒவ்வாத சிறியவனைப் பெரியவராகிய நீர் பேணிக் கேட்கலாமா? வினைக்குரியாரை நினைத்துணர்ந்து தெளிந்துகொள்ள வேண்டாமா? மனக்கினிய நான் இருக்கின்றேன்; உமக்கு இனி ஒரு கேடும்வராது; உறுதியாக நம்பிப் பொறுதியாகப் புறப்படும் என்பதாம்.

ஊற்றம்=திறம், வலி. ஆன்ற பயிற்சியால் அமைந்து ஊன்று கோல்போல் உறுதிகொண்டு நிற்கும் ஆற்றலை ஊற்றம் என்பர். அவ்வூற்றம் இராமனிடம் இதுபொழுது ஏற்றமாக இயைந்திருக்கின்றது; இருந்தும் இலன் என்றது அருந்தவர் அவனை விரும்பாது விட்டுப்போக என்க.

வில் வேல் வாள் முதலிய படைக்கலப் பயிற்சியில் நன்கு தேர்ச்சி பெறவில்லையே என்று பரிந்து கூறுகின்றான் ஆதலால் பருவம் சொல்லுமுன்னமே படையூற்றம் இலன் என விரைந்து

பருவத்தின் சிறுமையும், பயிற்சியின்மையும், கருமத்தின் நிலைமையும் உரிமைத்துணைமையும் முனிவர் கருதியுணரும்படி வினயமாகக் காட்டியபடி யிது.

மகாநுபாவரே! தேவரீர் செய்யும் வேள்விக்கு அரக்கர் வந்து இடர் செய்கின்றனர்; அவர்களோ மிகவும் கொடியவர்கள்; உடல்வலி படைவலி முதலியவற்றால் சிறந்தவர்கள்; மகா மாயாவிகள்; அஞ்சா நெஞ்சமும் வஞ்சச் சூழ்ச்சியும் உடையவர்கள்; அத்தகைய தீயமூடர்களோடு சூதுவாது யாதும் அறியாத ஒரு புனிதமான இனிய இளம்பாலகனைக்கொண்டு போய் எதிர்க்கவிடலாமா? இந்த நிலைமையைச் சிறிது சிந்திக்கவேண்டும்! நானே பல போர் முனைகளிலும் புகுந்து அரக்கர் பலரைப் பொருது தொலைத்திருக்கிறேன்; அமரர்பதிகளும் எனது அமராற்றலை நன்கு தெரிவர்; எவ்வளவு பெரும்படைகள் திரண்டு வந்தாலும் நான் ஒருவனே எதிர்த்து ஒருங்கே வென்று உறுதுணைபுரிவேன்; யாதொரு தீதும் நேராதபடி நேரே வந்து பாதுகாத்து நின்று நானே உங்கள் யாகத்தைப் பூர்த்திசெய்து தருகின்றேன்; இப்பொழுதே போவோம்; எழுந்தருளுங்கள்என்று இப்படி அரசன் துணிவுரை கூறினான்; கூறி முடியு முன்னமே முனிவர் சீறி எழுந்தார்.

அன்று அவர் கொதித்தெழுந்தபொழுது அச்சமும் நடுக்கமும் எங்கும் உச்ச நிலையில் ஓங்கி யெழுந்தன. ஊழிக்காலத்து உருத்திரன்போல் அவர் உருத்து நின்ற நிலையைக் கவி திருத்தமாக விளக்கியிருக்கிறார். பாட்டின் பொருட் குறிப்பையும் உட்கருத்தையும் மெய்ப்பாடுகளையும் வார்த்தைகளால் வரைந்து

காட்டமுடியாது. பாட்டை மட்டும் காட்டுகின்றேன்; அடியில் வருகின்றது பார்த்துக் கொள்ளுங்கள்.

விசுவாமித்திரர் வெகுண்டு நின்ற நிலை.

“ என்றனன் என்றலும் முனிவோடு எழுந்தனன் மண்
    படைத்தமுனி இறுதிக்காலம்
அன்றெனா ஆமென இமையோர் அயிர்த்தனர்; மேல
    வெயில் கரந்தது; அங்கும் இங்கும
நின்றனவும திரிந்தன; மீ நிவந்த கொழுங்
    கடைப்புருவம் நெற்றி முற்றச்
சென்றன; வந்தன நகையும் சிவந்தனகண
    இருண்டனபோய்த் திசைகள் எங்கும.”

(கையடைப்படலம், 13)

கோசிகரது கோபநிலைமையை நமது கவிஞர்பிரான் இக்கவிப் படத்தில் நன்கு தீட்டிக் காட்டியிருக்கிறார்; உள்ளத்துடிப்பையும் உருவக்காட்சியையும் கண்ணூன்றி நோக்கிக் கருத்துக்களை அறிந்துகொள்ளவேண்டும்.

முனிவர் இங்கே கொதித்து எழவும் உலகம் எங்கணும் பயங்கரமான பெருங்குழப்பங்கள்மிகுத்தெழுந்தன; மண்ணுலகமட்டுமன்று, விண்ணுலகமும் வெருவி நின்றது. யாரும் நேரே அறிய முடியாத ஒரு பேரச்சம் திடீர் என்று புகுந்து எல்லார் உள்ளங்களையும் பிடித்தலைத்தது. “இது என்ன! யுக முடிவு வந்து விட்டதா?” என்று அமரரும் ஐயுற்று யாதும் தெரியாமல் அவலமீக் கூர்ந்தனர் ஆதலால், “இறுதிக்காலம் அன்று என, ஆம் என இமையோர் அயிர்த்தனர்” என்றார்.

சூரியன் பயந்து மறைந்து கொண்டான்; அவ்வுலகத்திலும் இவ்வுலகத்திலும் உள்ள சராசரங்களெல்லாம் நிலை குலைந்தன; பிரளய காலத்தில் உயிர்கள் என்ன பாடு படுமோ? அன்ன பாட்டை அன்று யாவும் அடைந்தன, என இன்னவாறு இதில் இன்னல் நிலைபைக் குறித்திருக்கிறார்.

ஒரு மனித முனிவன் கோபம் கொள்ள உலகமெல்லாம் இப்படிக் கலங்கி மயங்கக் காரணம் என்னை? எனின், அதுதான் பரம தத்துவமாய் இங்கே நாம் நன்கு உய்த்துணர வுள்ளது.

அருமையான தவத்தின் மகிமையையும், உண்மையான உயிரின் உயர்வையும் நம் கவியரசர் இதில் தெளிவாக விளக்கி யிருக்கிறார்.

மனிதன் தெய்வ பிண்டம்; அவன் புனித நிலையடைந்து ஒரு படி உயர்ந்தால் மகாத்துமா ஆகின்றான்; மனிதன் ஈன நெஞ்சனாய் ஒரு படி கீழிறங்கினால் துராத்துமாவாயிழிக்கப்படுகின்றான்; பின்னும் ஒரு படி கீழிழிந்தால் அதமாத்துமாவாய் அவலமடைந்து அதோ கதியில் வீழ்கின்றான். ஆகவே மேலுயர்ந்து மேன்மையாய்ப் பேரின்பம் நுகரவும், கீழிழிந்து கீழ்மையாய்க் கெடுநிலை யடையவும் மனிதன் வல்லனா யுள்ளான்.

" நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்,—நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிறுப்பானும், தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்." (நாலடியார், 248)

என்னும் இந்த அருமைப் பாடலை இங்கே ஆய்ந்து சிந்திக்க வேண்டும். நாளும் நினைந்து உயிர்கள் உயர்வுறத்தக்க நிலையினை யுடையதாய் இக் கவி நிலைபெற்றுள்ளது.

கோசிகன் என்னும் பெயருடன் முன்னம் ஒரு சாதாரண மனிதராயிருந்தவர் இப்பொழுது அரசரெவரும் அடி பணிந்து வணங்கவும், அகிலவுலகங்களும் வியந்து போற்றவும், அமரரனைவரும் பயந்து பார்க்கவும், உயர்ந்து நிற்கின்றார். இந்நிலை இவர்க்கு எதனால் வந்தது? யார் அள்ளிக் கொடுத்தது?

தாமே முயன்று தவம் புரிந்து வானும் வையமும் வணங்க இஞ்ஞான முனிவரர் உயர்ந்து இங்ஙனம் மேன்மை எய்தினார். கடவுள் அருள் கைவரப்பெற்று ஆன்ம சத்தி மேன்மையாய் மிஞ்சி யிருத்தலினால் இவர் உள்ளம் திரிய உலகம் திரிந்தது. இவர் சினந்தெழுந்தவுடனே யாவரும் நடுங்கினர்; தேவரும் அஞ்சினர்; ஓரறிவுயிர் முதலியன யாவும் குலைந்தன; வெயிலும் காந்தது; விண்ணும் மருண்டது; மண்ணும் வெருண்டது; திசைகளும் இருண்டன என்றதனால் இவரது சாபவேகமும் தவ மகிமையும் நன்கு புலனாம்.

இவருடைய சினக் கொதிப்பினால் உலகில் நிகழ்ந்த அதிர்ச்சிகள் வியக்கத்தக்கன. இவற்றுள் ஒரு தத்துவ நுட்பமும் தனியே

தொனித்துநிற்கின்றது. ஒரு சீவான்மா, தவநிலையில் தழைத்துப் புனிதம் எய்தி நின்றால் அது பரமான்மா போல் பேராற்றலை யடைந்து சீராற்றி விளங்கும். எண்ணிய எவற்றையும் அது எளிதில் முடிக்கும். பிறர் நினைத்தற்கும் அரிய வினைத்திறங்கள் யாவும் அதன்கண் மேவியிருக்கும்; உலகுயிர்கள் யாவும் அதனை வியந்து பணிந்து பயந்து வணங்கும்; நிலம் நீர் தீ வளி வான் என்னும் ஐம்பெரும்பூதங்களும் அதன் அருள்வழி அடங்கி ஒழுகும்; சித்த சுத்தி வாய்ந்து உத்தம தவத்தில் ஊன்றி நின்ற பொழுது மனிதனது ஆத்துமசத்தி அளவிடலரியதாய் ஓங்கி அமரரும் கைதொழ விமலன் எதிர் ஒளிரும் என்னும் தத்துவ உண்மைகள் இவ் வித்தக முனிவர்பால் விளங்கி யிருக்கின்றன.

தாம் கருதிய எதையும் உறுதியுடன் முடித்துத் தம்மைச் சரணடைந்து நின்ற திரிசங்கு மன்னனுக்காகத் தனியே ஒரு சுவர்க்கத்தை நியமித்துக் கொடுத்தார்; அதனை எதிர்த்துத் தடுத்த இமையவரை யாவரையும் இவர் கடுத்து நீக்கினார்; பிரம சிருட்டியையே மாற்றிப் புதிதாக வேறொரு உலகினை இவர் அதியாகச் சிருட்டித்தார்; ஆதலால் அந்த அற்புத நிலைகள் யாவும் தெரிய மண்படைத்த முனி என இவர்க்கு ஒரு புதிய பெயரை நம் கவி இங்கே படைத்துக் கூறினார். தம்மைச் சரண் புகுந்து சார்ந்தவரை அருள்புரிந்து காத்தும், முரண்மிகுந்து மூண்டவரை முனிந்து தொலைத்தும், உலகுக்கெல்லாம் ஓர் அரிய மித்திரராயும், மற்றொரு வகையில் அமித்திரராயும் அமைந்து நின்றமையால் இவர் விசுவாமித்திரர் என விளங்கி நின்றார்.

விசுவம் = உலகம். இவர்க்குச் சிறப்பாக வழங்கிவரும் பெயர்க் காரணத்தின் பூரணநிலையை ஈண்டும் இவர் காட்டி நிற்கின்றார். முன்னம் மன்னன்முன் மிகவும் மித்திரராய் அமர்ந்திருந்தவர் இப்பொழுது அமித்திரராய் எழுந்து ரௌத்திராகாரமாய்க் கதித்து நிற்றலால் குறித்த பெயர்க்குப் பொருத்தமாயினர்.

ஊழிக்காலத்து வடவாமுக அக்கினிபோல்இவரதுகோபத் கொதித்தெழுந்தது; அதனால் அமரரும் அஞ்சி அலமாலாயினர் என்பது இமையோர் அயிர்த்தனர் என்றதனால் அறிய நின்றது.

இவர் கொண்ட கோபத்தால் அண்டத்தொகுதிகளும் அஞ்சி நடுங்கின என்றது இவரது தவத்தின் ஆற்றலையும் தகுதியையும் நாம் கண்டு கொள்ள என்க.

ஒருவனிடம் அருந்தவம் நிறைந்திருந்தபொழுது அப்பெருந் தகையின் பேராற்றல் எவரும் வியந்து போற்ற விரிந்து விளங்கு

" தவத்தினில் அமர்புரி சமனை வெல்லலாம் ;
தவத்தினில் எழுகடல தனையும் உண்ணலாம் ;
தவத்தினில் வடவரை களைந்து தாங்கலாம் ;
தவத்தினில் அனலமும தரிக்க லாகுமே."
(திருக்கூவப் புராணம்)

" தவமே மேலா நெறியாகும் ; தவமே சிவனார் தமைக் காட்டும்;
தவமே துறக்கம் அடைவிக்கும் ; தவமே நரனைத் தேவாக்கும்;
தவமே வலாரி திசைக்கிறைவர் சார்ங்கன் அயனும்-ஆக்குவிக்கும்;
தவமே கிடைப்பிற் கிடையாத துண்டோ என்று சாற்றினனால."
(காஞ்சிப்புராணம்)

எனவரும் இவற்றால் தவத்தின் பெருமையும், உயிர்களுக்கு அது உறுதி பயந்து நிற்கும் அருமையும் நன்கு அறியலாகும். வலாரி = இந்திரன். சார்ங்கன் = திருமால்.

இத் தகைய தவநிலையில் சிறந்துள்ளமையால் கோபமுற்ற போதும் யாவரும் வியக்கத் தேவரும் திகைக்க இவர் தேசுற்று நின்றார். புருவம், நெற்றி முற்றச் சென்றன ; நகை வந்தன ; கண் சிவந்தன; என்றது கோபச்சின்னங்களாய்வெளிப்பட்டுள்ள வற்றை விளக்கி நின்றது. புறத்தே புலனான இக்குறிப்புக்களால் அகத்தே கொதித்தெழுந்த கோபத்தின் உச்ச நிலையை உணர்ந்து கொள்ளலாம்.

வாய மடிததல, மீசை துடித்தல், கண்சிவத்தல், கைபுடைத் தல் முதலிய கோடக்குறிகளுள் புருவம் குனித்தலை முதலில் குறித்தது நுதலில் ஏறும் தலைமையான அதன் நிலைமை தெரிய.

" வெகுண்டோன் அவிநயம் விளம்புங் காலை
மடித்த வாயும், மலர்நத மார்பும்,
துடித்த புருவமும், சுட்டிய விரலும்,
கன்றின உள்ளமொடு கைபுடைத் திடுதலும்
அன்ன நோக்கமோடு ஆய்ந்தனர் கொளலே." (அவிநயம்)

எனவரும் இதனால் சினநிலை புலனாம். மனிதனுள்ளத்தே வெகுளி மூண்டபொழுது வெளியே மூளும் அடையாளங்கள் பல ஆதலால், "அன்னநோக்கமோடு ஆய்ந்துகொள்" என்று முன்னேசொன்னவற்றோடு மேலும் சூழ்ந்துகொள்ளவுரைத்தார்.

காம வெகுளிகள் தவத்தைக் கெடுக்கும் எனச் சிறிது நோத்துக்கு முன்னதாக மன்னன்முன் இகழ்ந்து சொன்னவர் தம்மையறியாமலே வெகுண்டு வெம்மை மீக்கூர்ந்தார். இதனால் அதனை அடக்குவது அரியவற்றுள்ளெல்லாம் அரிய செயல் என்பது எளிது அறியலாகும். அனுபவமும் காணலாம்.

சாபமுனிவரது கோப வருணனை இதில் குதிகொண்டுள்ளது. நகை அழுகை வீரம் முதலிய கலைச்சுவைகள் ஒன்பதனுள் இது வெகுளிச் சுவை யாம். வடநூலார் நவரசங்களுள் இதனை ரௌத்ர ரசம் என்பர்.

இவ்வாறு சினந்து நின்ற முனிவர் அரசனைச் செயிர்த்து நோக்கி, "ஏ தசரதா! உன்னை ஒரு மன்னன் என்று மதித்து வந்தேன்; என்னை இன்னார் என்று நீ தெரிந்துகொள்ளவில்லை; வழி வழியே சிறந்துவந்துள்ள உயர்ந்த அரசமரபில் பிறந்திருந்தும் உபகரிக்கும் முறைமையை இன்னும் நீ உணர்ந்துகொள்ளவில்லை; புண்ணிய வேள்விக்குத் துணைபுரிக என்று நான் எண்ணி வேண்டியதை உடனே கண்ணியமாக உதவியருளாமல் எதிரே புகல்மொழி கூறி ஏதேதோ பிதற்றுகின்றாய்! நான் கேட்டபடியே உன் மூத்த மகனை என்னுடன் துணை அனுப்புக; இல்லையேல் இதோ செல்கின்றேன்; மரியாதை தெரியாதவரிடம் உதவி நாடி வருவது பரிதாபம் என்பதை இன்று அறிந்தேன்; இனி நின்று பயன் என்? உள்ளவற்றையெல்லாம் அள்ளிக் கொடுப்பவன்போல் உதடு இனிக்கப் பேசினாய்! வழித்துணைகூட அனுப்ப மறுத்து அழுத்தி நிற்கின்றாய்! நன்று நின் நிலைமை? வள்ளல் என்னும் பெயருடன் எள்ளலின்றி நீ சுகமாக வாழ்ந்திரு!" என்று கனன்று மொழிந்து அவர் கடுத்துத் திரும்பினார்.

அருந்தவர் அவ்வாறு திரும்பவே அருகிருந்த வசிட்டர் விரைந்து எழுந்துபோய் அவருடைய கைகளைப் பிடித்துக்கொண்டு, "ஐயனே! பொறுத்தருளுங்கள்; பிள்ளைக் காதலால் உள்ளம் கலங்கி வள்ளல் உரைத்ததை ஓர்ந்து மன்னியுங்கள்;

அவருடைய மனநிலையைத் தாங்கள் அருள்புரிந்து அறியவேண்டும். உயிரையும் உவந்து கொடுக்கும் உயர்கொடை வள்ளல். நெடுங்காலம் மலடிருந்து அருந்தவங் கிடந்து அரிதாகப் பெற்றமையால் அவ்அருமைக் குமரனைப் பிரிய மனமில்லாமல் இங்ஙனம் பேதுற்று மொழிந்தார். தம் பிள்ளை என்று உள்ளங்கொண்டுள்ளாரே யன்றி, அம்மான வீரனை நானும் நீங்களும் அறிந்துள்ளபடி அவரால் அறிய முடியவில்லை; ஆதலால் அமர்ந்தருளுங்கள்; நான் அனுப்பி வைக்கின்றேன்.'' என்று அம் முனிவரை அமர்த்திவிட்டு, அரசன் திருமுகத்தை உரிமையுடன் நோக்கி உரைகள் பல கூறினன்.

அரசன் மீண்டும் மறுகினன். குருவினை வேண்டி மறுபடியும் பணிமொழி பகர்ந்தான்.

தசரதன்: குருநாதரே! நமது கோசிக முனிவரர் வேள்வியின் பூர்த்தியைத் தானே விழைந்து நிற்கின்ருர்; நானே நேரில் போய் அது நன்கு முடிவுற நின்று துணைபுரிகின்றேன்.

வசிட்டர்: உம்மை அவர் விரும்ப வில்லையே.

தசரதன்: அப்படியானல் அரக்கரை என்னல் வெல்ல முடியாது என்பது கருத்தா?

வசிட்டர்: மன்னர் பெரும! என்ன இது? வந்தவர் விரும்பியதைத் தந்தருளவேண்டுமே யன்றி, வேறு மாறுபேசுவது வீர வள்ளலான உமக்கு அழகா?

தசரதன்:—படைவலியில் மிகவும் கைதேர்ந்துள்ள கொடிய அரக்கர்களோடு அடுபோர் புரியும்படி பதினறு வயதுகூட நிரம்பாத எனது இனிய புதல்வனை எவ்வாறு அனுப்புவேன்? எல்லாம் தெரிந்த பெரியோர்களாகிய நீங்களே இவ்வாறு சொன்னல் நான் என்ன செய்வேன்?

இன்னவாறு மன்னன் மறுகி யுரைக்கவே, கோசிகர் மீண்டும் மனங் கனன்ருர். அவரது மன நிலைமையைக் குறிப்பாலறிந்த வசிட்டர் அரசை மிகவும் கடுத்து நோக்கி, "புத்திரவாஞ்சையால் பித்துப்பிடித்துப் பேசுகின்றீரே யன்றி, வந்துள்ள முனிவர் பெருமானை நீர் நன்கு தெரிந்துகொள்ளவில்லை; தமக்கு ஊதியம் கருதி அவர் இங்கே வரவில்லை; உமது மகனுக்கு அளவிடலரிய பெரிய நலங்களை உரிமையுடன் அருள வந்திருக்கின்ருர்; உடனே உதவி

விடுக" என்று உறுதிமொழி பகர்ந்தார். வந்தவர் கருத்தை இருந்தவர் இந்தவாறு வலிந்து உணர்த்தவே அரசன் இசைந்து கொடுத்தான். குரு மொழிந்த திறத்தையும், மறுமொழி கூறு மல் மன்னன் கொடுத்த நிலையையும் கவி இனிது விளக்கியிருக்கி ருர். அடியில் வருவன காண்க.

வசிட்டன் உரைத்தது.

" கறுத்த மாமுனி கருத்தை உன்னிநீ
பொறுத்தி என்றவற் புகன்று, நின்மகற்கு
உறுத்த லாகலா உறுதி எய்துநாள்
மறுத்தி யோஎன வசிட்டன் கூறினன். (1)

பெய்யு மாரியால பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்
அய்ய! நின்மகற்கு அளவில் விஞ்சைவந்து
எய்து காலம் இன்று எதிர்ந்த தென்னவே. (2)

தசரதன் இசைந்தது.

குருவின் வாசகம் கொண்டு கொற்றவன்
திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
வருக என்றனன் என்ற லோடும் வந்து
அருகு சார்ந்தனன் அறிவின் உம்பரான். (3)

அடைக்கலம் தந்தது.

வந்த நம்பியைத் தம்பி தன்னொடும்
முந்தை நான்மறை முனிக்குக் காட்டிநல
தந்தைநீ தனித் தாயும் நீயிவர்க்கு
எந்தை தந்தனன் இயைந்த செய்கென்ருன்." (4)

(கையடைப்படலம், 14-17)

இந்த நான்கு கவிகளுள் ஆன்ற சீருடைய மூன்று பேர்கள் தோன்றி நடிக்கின்றனர். அவர்களுடைய பேச்சும் நடிப்பும் ஆச்சரியமுடையன. உணர்வு நலம் சுரந்து உரைகள் கனிந்து சுவை நிறைந்து தெளிவமைந்து அனிமிருந்துள்ளன.

கறுத்த மாமுனி கருத்து என்றதில் முனிவருடைய சின மும் மனநிலையும் தெரியவந்தன. கறுப்பு=கோபம்.

"கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள" (தொல்காப்பியம்) என்ருர் ஆசிரியர் தொல்காப்பியனர். கறுப்பு என்பது சினக்

குறிப்பை யுணர்த்திப் பழைய காலத்தில் பெருவழக்காய் வந்துள்ளது. இக்காலத்தில் அது அருகியிருக்கிறது.

கறுத்த, கருத்து என்பன வன்மையும் மென்மையுமாய்ச் செயலும் நினைவும் தெரிய நயனொடு வந்துள்ளன.

விசுவாமித்திரர் கருதிவந்துள்ளதை வசிட்டர் தெளிவாகத் தெரிந்துகொண்டார் என்பது கருத்தை உன்னி என்றதனால் தெரியவந்தது. அது என்ன கருத்து? என்று வெளிப்படையாக விவரித்துக் கவி இங்கே விளக்கவில்லை.

அம்முனிவர் உளத்தில் உருத்தரித்துள்ள கருத்தை இம்முனிவர் தமது ஞானக்காட்சியால் உன்னி உணர்ந்துகொண்டார்; நாம் அங்ஙனம் உணர முடியாமையால் முன்னுற நமக்கு இங்கு அது நன்கு புலனாகவில்லை.

ஆயினும் பின்னே நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளைக்கொண்டு அது இன்னதாகத்தான் இருக்கும் என்பதை முன்னதாக நாம் உணர்ந்து கொள்ளலாம். என்னே உணர்வு? எனின், பின்னே காண்க.

திருமாலே உலகம் நலமுற இராமன் என உருவாகி வந்துள்ளான். அப்பெருமானைத் தன் பிள்ளையாகவே கருதி யாண்டும் பெயரவிடாமல் பேரபிமானத்துடன் தசரதன் பேணி வருகின்றான். இராமனும் தான் எடுத்த மானுட வேடத்திற்கு இசையத் தன்னை மறந்து அரசிளங் குமரனாகவே நினைந்து அயலொன்றும் நாடாமல் சுகபோகங்களை நுகர்ந்து கொண்டிருக்கின்றான். வந்த காரியம் பாராமல் இந்த நிலையில் இருக்கின்ற அந்தச் சுந்தரனை எந்தவாறாகவாவது வெளியேற்றி ஒளியேற்ற வேண்டும் என்று கோசிகர் ஆசைமீக்கொண்டார். முதலில் அவனது போராற்றலையும், பேராற்றலையும் உணர்த்தி, திருமகளின் அவதாரமாய் எதிர் நோக்கி வந்துள்ள சீதையை அவனுக்குத் திருமணம் புணர்த்தி, அவதார பூர்த்திக்கு மேல் ஆகவேண்டியவற்றையெல்லாம் ஏகமாய் வழிசெய்து வைக்க முனிவர் இதுபொழுது அணிசெய்து வந்துள்ளார்; அவ்வுண்மை பின்வரும் நிலைகளால் நன்கு புலனாம். இங்ஙனம் உரிமையுடன் இதம்புரிய வந்திருக்கும் அவரது குறிப்பையும் கருத்தையும் வசிட்டர் உணர்ந்து கொண்டார் ஆதலால், "முனி கருத்தை உன்னி, நின் மகற்கு

உறுத்தலாகலா உறுதி எய்தும் நாள் மறுத்தியோ?'' என்று அரசை நோக்கி ஆர்வமும் வருத்தமும் தோன்ற உணர்த்தியருளி ஞர். அவரது உணர்வுறுதி எதிர்கால நிலையைத் தெளிந்து வந் துள்ள தென்க.

உறுத்தல் ஆகலா உறுதி என்றது யாரும் கொடுக்கமுடியாத அரிய பெரிய உறுதிநலங்கள் என்றவாறு.

நின்மகன் என நேரே அழுத்திச் சொன்னது, உலகமெல் லாம் அடிதொழக் கருவிலேயே திருவமைந்துசக்கரவர்த்தித் திரு மகனுய்ப் பிறந்திருக்கின்ற இராமனுக்கு என்ன குறை? அவனு க்கு யார்! என்ன வகையான பொருளை அதிசய புதுமையாகக் கொடுத்துவிடப்போகின்றார்? என்னும் இன்னவாறன இறுமாப் பெண்ணம் ஏதேனும் நின்னிடம் இருப்பின், அதனை அறவே ஒழிய விடுக; பிறப்பினாலும் சிறப்பினாலும் இதுவரையும் உன் மகன் அடையாத அரிய பெரிய நன்மைகள் இம்முனிவர் மூல மாய் இனிமேல் அவனுக்கு வரவுள்ளன என்று வரவின் உறுதி நலங்களை வலியுறுத்தி யுணர்த்துகின்றார் ஆதலால், "நின்மகனுக்கு உறுத்தலாகலா உறுதி எய்தும்" என முன்னிலையில் அழுத்தி மன்னனிடம் இன்னவண்ணம் மொழிந்தார் என்க.

வசிட்டர் இராமனுக்கு இளமையிலிருந்தே பல கலைகளைக் கற்பித்து வந்திருக்கின்றார்; அவை யாவும் பெரும்பாலும் அறிவு நூற்கலைகளே; அமர்க்கலைகள் அல்ல; இனி அருமையான தனு வேதத்தையும், அத்திர சத்திரங்களின் அற்புத வித்தைகளையும் கோசிகர் கற்பித்தருளுவர்; அவற்றை இதுகாறும் யாரும் அறி வுறுத்தவில்லையாதலால், "உறுத்தலாகலா உறுதி'' என அவற் றின் அருமையும் புதுமையும்தெரிய இவ்வாறு தெளிவுறுத்தினர்.

குலகுருவாகிய என்னாலும், வேறு எவராலும் தர இயலாத வர பலங்களை இவ்வர முனிவர் தரவந்துள்ளார் என உறவுரிமை யுடன் உணர்த்திய படியிது. கோசிகரைத் தவிர யாரும் தெரி யாத அரிய அமர் மறை உனது குமரனை நாடி வருகின்ற தென் பதாம். வீரத்திருவிழைந்து வருவதை உணர்ந்தருள் என்பது கருத்து. மேலேவரும் சீதேவி நிலையும் தெரியவந்தது.

ஊதியத்தின் பெருமையை இங்ஙனம் பொதுவாக வுரைத்த வர் அவ்வளவோடமையாமல் அதன் நிலையையும் அளவையும் தெளிவாக விளக்க அடுத்த கவியில் ஓர் உவமை கூறியிருக்கின் ருர். அவ்வுவமை நயம் உணர்வு நலம் சுரந்துள்ளது.

2. வான் மாரி பொழிய வெள்ளம் பெருகி ஓடிக் கடலினை அடைதல்போல் கோசிகர் நூல்மாரி சொரியக் கலைவளம் பெருகிக் கடிது வந்து இராமனை இனிதடைந்திருக்கும் என்பதாம்.

மேகம் விசுவாமித்திரருக்கும், வெள்ளம் கலைப்பெருக்குக் கும், கடல் இராமனுக்கும் உவமைகளாய் இங்கே உய்த்துணர வந்தன. "பெய்யும் மாரியால் பெருகுவெள்ளம்" என்றது உலகம் உய்யுமாறு இராமனிடம் கலைகள் பெருகி நிற்கும் நிலைகள் தெரிய

எவ்வளவு வெள்ளங்கள் திரண்டு வந்து புகுந்தாலும் அவ் வளவையும் தன்னுள் அடக்கி இவ்வளவு என்று யாராலும் எவ் வகையிலும் அளவு காணமுடியாமல் கடல் அமைந்திருத்தல் போல், கலைகள் பலவும் எளிதமைந்து யாண்டும் எவரும் எதிலும் நிலைகாணமுடியாதபடி தலைமை எய்தி இராமன் நிலவி நிற்கின்றுன் என்பதாம்.

மொய்கொள் வேலை என்றது என்றும் கலங்காமல் எதற்கும் நிலைகுலையாமல் நிற்கும் அதன் நிலைமை நோக்கி. மொய்=வலி. இந்த உவமை யடை உவமேயமாகிய இராமனை நினைந்து வந்தது.

வெள்ளங்கள் கடலினை நோக்கி விரைந்து ஓடி வருதல் போல் கலைகளெல்லாம் இராமனை நோக்கிக் கடிது வந்தடைந்தன என்பதுமுடுகி என்றதனல் உணர வந்தது. முடுகுதல்=விரைதல்.

நீர் நிலைகளுக்கெல்லாம் கடலே ஆதாரம்; அந்தக் கடலில் இருந்துதான் மேகங்களும் நீரை முகந்துகொண்டுபோய் வானில் படர்ந்து மண்ணில் பொழிகின்றன; அங்ஙனம் பொழிந்த நீர் வெள்ளமாய்த் திரண்டு மீண்டும் கடலையே வந்தடைகின்றது; அதுபோல் கலைகளுக்கெல்லாம் ஆதாரமாயுள்ள திருமாலிடம் ஞான முனிவரர் சில விஞ்சைகளை உணர்ந்து கொண்டுபோய் உவந்து நல்க அவை அவனது அவதாரமாகிய இராமனிடம் மீள வும் உரிமையுடன் வந்து அடைந்தன என ஒரு தத்துவக் காட்சி

யும் இதில் உய்த்து நோக்க வுள்ளது. உரியகலைகள் உடையவனி டம் பிரியமுடன் வந்து சேர்ந்தன என்பதாம்.

தெய்வப் படைக்கலங்களை அவற்றின் அதி தேவதைகளு டன் மந்திர முறையில் முனிவர் உபதேசித்தபொழுது அவை இராமன்பால் வந்து சேர்ந்த நிலையைக்குறித்து உரைத்திருக்கும் கவிகளுள் ஒன்று அடியில் வருகின்றது.

கலைகள் இராமனைக் கருதி வந்த நிலை.

"ஆறிய அறிஞன் கூறிஅளித்தலும் அண்ணல தன்பால
ஊறிய உவகை யோடும உம்பர்தம் படைகளெலலாம
தேறிய மாதவதான் செயத நலவினைப் பயன்கள் எல்லாம
மாறிய பிறபபில தேடி வருவபோல் வநத வன்றே."
(வேள்விப்படலம், 2)

அளவில் விஞ்சைகள் உளமகிழ்வோடு இராமனை உரிமை யுடன் தேடி வந்திருக்கும் திறனைக் கவி இதில் அழகாக விளக்கி யிருக்கிறார். உவமையைக் கூர்ந்து நோக்கிப் பொருள் நயங்களை ஓர்ந்துகொள்க. ஒருவன் செய்த நல்வினைப் பயன்கள் அவனைத் தேடி வருவனபோல் படைகள் இராமனை நாடிவந்தன என்றத னால் அவற்றின் நாட்டமும் தேட்டமும் நன்கு புலனும்.

இங்கே விஞ்சை என்றது மந்திரமுறையோடு கூடிய அத்திர சத்திர வித்தைகளை. அவை, யாராலும் அளவிட முடியாமல் அதிசயங்கள் மிகுந்து எல்லையற்ற ஆற்றல்களுடன் தேவரும் வியந்து துதி செய்யச் சிறந்து நின்றன ஆதலால், "அளவில் விஞ்சை" என வந்தன.

கொடுப்போன் திறம், கொடுக்கப்படும் பொருளின் வகை, கொள்வோன் நிலை என்னும் இவற்றை மேகம், வெள்ளம், கடல் என்ற சொற்களால் காட்டியிருக்கும் காட்சி கண்ணூன்றி நோக்கத்தக்கது.

விசுவாமித்திரர் இராமனுக்குப் படைக்கலங்கள் அருளி யிருக்கும் இந்நிலையோடு கண்ணன் அருச்சுனனுக்கு உதவி யிருக்கும் இயல்பும் எதிர் கண்டு ஈண்டு எண்ண வருகின்றது.

கரிய புயலின் அரிய செயல்.

" அரியதண் கலைவாண் மதியமும கொதிகொள்
ஆலமும் தனதிடத் தடக்கி
உரியஒண் கங்கா நதிக்கொரு பதியாய்
உரைபெறும் உயர்மகோததியில
பரியதிண் சிலையோடு அடபெலாட முகந்து
பற்குனப பொருப்பிடைப பொழியும
கரியபைம் புயலைக் கைதொழும அவரே
கருவிலே திருவுடையவரே."
(பாரதம், பதினான்காம் போர், 1)

வில்லியாழ்வார் கடவுள் துதியாகப் பாடிய பாடல் இது.

சிவபெருமானாகிய கடலில், வில் அம்புகளை முகந்து, அருச்சுனனாகிய மலைமேல் பொழிந்த கரிய பைம்புயலைத் தொழுபவர் கருவிலே திருவுடையராய் அரியபேறுகளை அடைவர் என்பதாம்.

மகோததி=பெருங்கடல். இங்கே அது சிவனைக் குறித்து நின்றது. பற்குனன்=விசயன். பங்குனி உத்திரத்தில் பிறந்தவன் என்பதாம். புயல்=மேகம். கரிய பைம்புயல் என்றது கண்ணனை. உருவக அணியில் வந்திருக்கும் இக்கவியின் பொருள் நிலைகளை ஊன்றி உணர்ந்து கொள்க.

விசுவாமித்திரர் இராமனுக்குத் தெய்வ அத்திரங்கள் அருளியதும், கண்ணன் விசயனுக்குப் பாசுபதம் முதலியன நல்கியதும், கடல் மேகங்கள் இடைதழுவி இனம் ஒத்திருத்தலால் ஈண்டு உடன் வைத்து எண்ண நேர்ந்தன.

இராமன் அருச்சுனன் என்னும் இந்த இரண்டு வில் வீரரையும் ஒருங்கு சேர்த்து உலகம் என்றும் நினைந்து வருகின்றது.

3. தனது அருமை மகனுக்கு வர நேர்ந்துள்ள உறுதி நலங்களை வசிட்டர் இவ்வாறு உரைக்கவே தசரதன் மனம் இசைந்து அரண்மனையில் இருக்கின்ற இராமனை அரசவைக்கு அழைத்து வரும்படி அமைச்சரை நோக்கினான். அவர் போய் மொழியவும் குமரன் விரைந்து வந்து சபையுள் புகுந்தான். புகவே அங்கிருந்தவ ரனைவரும் உவகை மீக்கூர்ந்து உரிமையுடன் விழைந்து நோக்கினர். புகுந்தவன் அருந்தவர் இருவரையும் பெருந்தகவுடன் பணிந்து தந்தையின் அருகே மிகவும் விநயமாக வந்து அமர்ந்தான். அந்த அமைதியில் மகிமையும் இன்பமும் மருவியிருந்தன. அப்பிள்ளை இருப்பு உள்ளம் உருக்கி நின்றது.

நம் கவியரசர் இராமனுக்கு இங்கே புதிதாக ஒரு பெயர் வைத்திருக்கிறார். அறிவின் உம்பரான் என்னும் இப்பேர் ஓர் தனி நயம் உடையது. மேலான அறிவினையுடையான் என்று மேலெழுந்தபடியாகப் பொருள்படினும், எவர் அறிவுக்கும் எட்டாத உயர் பரன் எனவும் உள்ளுற இது சுட்டி நிற்கின்றது "*எங்கள் நான் மறைக்கும் தேவர் அறிவிற்கும் பிறர்க்கும் எட்டாச் செங்கண்மாலே" அங்கண்மா ஞாலமுய்ய இங்ஙனம் வந்துள்ளவன் என்பதாம்.

"பேரறிவும் பேர் அறிவாப் பெருகி நின்றான்" என்றபடி நூலறிவாளர் எவரும் கால்விழுந்து தொழ மேலறிவாளனாய் இவன் மேன்மையுற்றுள்ளான் என்பது கருத்து.

இப்பெயரைக் காவியத்துள் பின்னும் சில இடங்களில் இன்னும் தெளிவாகக்குறித்திருக்கிறார். ஒன்று அடியில் வருகின்றது.

"நெறிதரு மாருதி என்னும் நேரிலா
அறிவனை நோக்கினன் அறிவின் மேலுளான்."

(விபீடணன் அடைக்கலப்படலம், 86)

விபீடணனைச் சேர்த்துக்கொள்ளலாமா? சேர்க்கக்கூடாதா? என்று ஆலோசனை செய்த பொழுது வானரத் தலைவர்களெல்லாரும் சொல்லி முடிந்தபின் இறுதியில் அறுதியான உறுதிதெரிய அனுமானை இராமன் நோக்கிய நிலையைக் குறித்தபடியிது.

மாருதி நிகர் அற்ற அறிவன் என்றும், இராமன் அவ் அறிவின் மேலுள்ளவன் என்றும் இதில் கூறியிருக்கும் குறிப்பையும் நயத்தையும் கூர்ந்து நோக்கவேண்டும். முன்பு "அறிவின் உம்பரான்" என்றார்; எந்த அறிவுக்கு உம்பர்? என்பதை இங்கே துலக்கி யருளினர்.

மனிதனுயினும் தெய்வமும் காணமுடியாத திவ்விய காட்சியை யுடையவன் என்பதாம்.

உருவில் இம்பரான், அறிவில் உம்பரான் என்க. கம்பரால் இங்கே காட்டியிருக்கும் அறிவுக் காட்சிகள் கண்ணூன்றி நோக்கி மகிழத் தக்கன.

* பாலகாண்டம், வேள்விப்படலம், 16.

இராமனைத் திருவின் கேள்வன் என்று தசரதன் இதில் குறித்திருப்பது வியப்பாக வுள்ளது. திரு=இலக்குமி. கேள்வன்=கணவன். இலட்சுமி நாயகனாகிய திருமாலே தனக்கு மகனாய் வந்திருத்தலைத் தெரிந்துதான் இந்தவாறு உரைத்தான் எனின், அது அவ்வளவாகப் பொருந்தாது. தெய்வ வுண்மை தெரியின் பின்பு யாதும் செய்ய இயலாது. புத்திர வாஞ்சையும் உள்ளுருக்கமும் இல்லாமல் போய்விடும். இயற்கை அமைப்பைத் தழுவியே மனித இயல்புகள் இனிமை பயந்து வருகின்றன. இறுதி வரையும் தன் பிள்ளை என்று கருதியே உள்ளக்காதலுடன் மன்னன் உருகியிருக்கிறான். பின்னர் இங்கே திருவின் கேள்வன் என்றது என்னை? எனின், தனது இராச்சிய லட்சுமிக்குத் தலைவன் என உரிமைகனிந்து உரைத்தவாறாம். திருவன், சீமான் என அருமையும் செல்லமும் மரியாதையும் தோன்றக் குறிப்பது போல் விருப்பமுடன் அழைத்தபடியிது. அன்றியும் இராமனுக்குச் சீதையின் திருமணம் அடுத்துவர வுள்ளமையான் அந்தத் திருவின் கேண்மை மங்கல சூசகமான இனிய வாசகமாய் மன்னன் வாயில் இங்ஙனம் வந்ததெனவும் கொள்க.

4. இளமை ஒளி தவழ்ந்து எழில் நலஞ் சுரந்து இனிது வந்து சார்ந்த தனது அருமை மகனை உழுவலன்புடன் மன்னன் உளமுருகத்தழுவி உச்சிமோந்து குருவின் உரையால் உறுதி மீக்கொண்டு கோசிக முனிவரை நோக்கி, "அருதவக் குரிசிலே! இதோ என் உயிரினும் இனிய இந்தச் சுந்தரனை இன்று உங்களிடம் அடைக்கலமாகத் தந்திருக்கின்றேன்; இவன் தம்பியும் உடன் வருகின்றான்; இவர்க்குத் தந்தையும் நீரே! தாயும் நீரே! தெய்வமும் நீரே!" என்று கண்ணீர் மல்கக் கையில் தந்தான். முனிவர் உவந்து கொண்டார்.

இதில் தாயை முதலில் கூறாமல் தந்தையை முந்துறக் குறித்துள்ளமையான் மன்னன் சிந்தையின் ஆர்வநிலை தெரியலாகும். உள்ளக் காதல் உரைக்குமுன் துள்ளுகின்றது.

தனித்தாய் என்றது செவிலித்தாய், கைத்தாய், முதலிய இளைத்தாயர் போலல்லாமல் பத்துமாதமும் பரிந்து சுமந்து பெற்றெடுத்த பேரன்புத்தாயாய்ப் பேரருள்புரிந்து பேணிவரவேண்டும் என்று முனிவர் காணவேண்டி என்க.

தனது செல்ல மகனுக்கு எல்லா நலங்களையும் பருவம் தவ ருமல் ஓர்ந்து உரிமையுடன் செய்துவரும் உயர்ந்த பிதா என் பான் நல் தந்தை என்றான்.

ஒப்புக்குப் பெற்றுவைத்து ஒரு நலமும் செய்யாமல் தம் பிள்ளைகளைப் பரிதாபமாகவிட்டுப் பராமுகமாயிருக்கும் விருதாத் தந்தைகளும் உலகில் உண்டு ஆதலால் அந்தப் பொல்லாதவரை விலக்க இந்த நல்ல அடை தந்து அரசன் இங்கே ஆர்வமாய்ச் சொல்ல நேர்ந்தான்.

தாய் தன் பிள்ளையை அன்புரிமையுடன் ஆதரித்து வருவள்; தந்தை அவன் அறிவுநலம் பெற உறுதிசெய்து அருளுவன்; உட லும் உயிரும் போல் ஒரு முகமாய் நின்று பெற்றோர் இருவரும் தம் புத்திரனுக்கு இங்ஙனம் உரிமை செய்து வருவர். மாதா இனிமை செய்வள்; பிதா இதஞ்செய்வன்; ஒருவர் செய்வதை ஒருவர் செய்ய இயலாது. அத்தகைய அருமையுடைய அவ் இருவர் நிலையிலும் ஒருமை எய்தி நின்று தன் புத்திரனை முனி வர் போற்றி வரவேண்டும் என்பான், "தந்தை நீ, தாயும் நீ" என்று சொந்த உரிமை தோன்ற வந்தனையுடன் உரைத்தான். மன்னனுடைய புத்திரவாஞ்சையும் நெஞ்சுருக்கமும் மொழிக்கு மொழி துளித்து நிற்கின்றன.

இன்னது செய்து கொள்க என்று தெளிவாகக் கூறுமல் "இயைந்த செய்க" என்றது வியந்துகொள்ள வுள்ளது. உமக்கு வேண்டிய யாக பரிபாலன முதலிய அனுகூலங்களைச் செய்து கொள்வதோடு இவர்க்கு வேண்டிய எல்லா நன்மைகளையும் விரை ந்து செய்தருள வேண்டும் என்று விழைந்துள்ளமையான், இயைந்த எனப் பன்மையில் வைத்து இருபாலும் இயைந்துவர இனிது மொழிந்தான்.

மகவாசை தலை மண்டி நிற்றலால் மறுகி மறுகி உறுதிபெற இவ்வாறு உரை செய்யலானன். எந்தை! என்றது முனிவரை இன்புறுத்த அன்புவாசகமாய் வந்தது.

அடைக்கலமாக இங்ஙனம் கொடுத்த மைந்தரை விசுவா மித்திரர் உவந்து பெற்றுக்கொண்டு, அரசனை நோக்கி முகமலர்ச்சி யுடன் ஆசிமொழிகள் பல புகன்று, வசிட்டரிடம் விடைபெற்றுப் புறப்பட எழுந்தார்.

அதனை அறிந்ததும் பிரயாணத்திற்குரிய ஆயத்தங்களைச் செய்துகொண்டு வரத் தன் தம்பியுடன் இராமன் அரண்மனைக்குப் போனான். போனவன் அங்கே ஆயுதசாலையுள் புகுந்து வீரக் கோலம் புனைந்து வில்லுங் கையுமாய் இளவலோடு வெளிவரலானான். அன்று அவன் கொண்ட காட்சி கண்டவரெவர்க்கும் கழிபேருவகை யூட்டியது. அந்த அற்புதக் கோலத்தைக் கம்பர் கவியில் அழகுறச் சித்திரித்துக் காட்டியிருக்கிறார். அன்று நேரில் காணாதவரெவரும் என்றும் இனிது கண்டு மகிழும்படி அஃது ஓர் இன்பக் காட்சியாயுள்ளது. அடியில் வருகின்றது காண்க.

இராமன் போர்க் கோலம் புனைந்தது.

"வென்றி வாள்புடை விசித்து, மெய்ம்மை போல
என்றும தேய்வுறாத் தூணி ஆர்த்திரு
குன்றம போனறுயர் தோளில கொறறவில
ஒன்று தாங்கினன் உலகம தாஙகினான்."
(கையடைப்படலம், 19)

உடைவாளை இடையில் வரிந்து கட்டி, அம்புப்புட்டிலைத் தோளில் மாட்டி, வில்லை இடது கையில் ஏந்தி, ஒரு புதிய கந்தருவ குமாரன்போல் திவ்விய தேசுடன் வந்த அந்த அழகனது செவ்விய கோலத்தை இதில் எவ்வளவு சுவையாக விளக்கியிருக்கிறார்! ஊன்றி நோக்கி உறுசுவை நுகர்க.

தந்தை முனிவரிடம் மைந்தனை அடைக்கலம் தந்தாரேயன்றி, வேறு யாதும் சொல்லவில்லை; முனிவரும் போர்க்கோலம் பூண்டு வருக என்று தூண்டவில்லை; தானாகவே இராமன் இங்ஙனம் அமர் உருவமைந்து வந்தான். தவசி வந்திருக்கும் குறிப்பையும் நிகழ்ச்சிகளையும் கூர்ந்து நோக்கி அவரது வேள்விக்கு இடர் செய்யும் வெம்பகை நீக்க அம்பு வில் முதலியன அவசியம் என்று கருதி யுத்த சன்னத்தனாய் இந்நம்பி இவ்வாறு உரிமையுடன் வந்தான் என்க.

இவனது கூர்த்த மதியும் போர்த் திறனும் சீர்த்தி மிகப் பெற்று வார்த்தைகளால் வரைந்து காட்ட முடியாதபடி யாண்டும் உயர்ந்தோங்கி எவரும் வியந்து போற்ற ஒளி செய்துள்ளன.

"வில் ஒன்று தாங்கினன், உலகம் தாங்கினன்."
என்றதில் உள்ள நயம் காண்க. சொல் நயமும் பொருள் நயமும் வளமுற நிறைந்து இதில் உளம் மகிழ வுள்ளன.

காப்புத் தெய்வமாய் நின்று என்றும் உலகம் காத்துப், பிரளய காலத்திலும் அதனைப் பிரளாமல் பேணி வருகின்ற திருமாலே இப்பெருமானாய் இன்று நாமெல்லாரும் நேரே காணும் படி வில்லைத் தாங்கி ஈங்கு வெளியே வந்தான் என்பது உலகம் என்றதனால் உணர வந்தது.

அன்றியும் மனுக்கள் இன்புற அரசனாய் நின்று உலகம் தாங்கும் உரவோன் எனவும் இதற்குப்பொருள் கொள்ளலாகும்.

தாங்கினன் என இறந்த காலத்தில் வந்திருத்தலால் முந்தின பொருளே இங்கு நன்கு அமைந்ததாகும்.

உலகம் தாங்குதல், அரசு தாங்குதல் என்னும் இருவகை நிலைகளையும் ஒருங்கே நோக்கின் தெய்வச் சிறப்பும் அரசப் பிறப்பும் தெரியலாகும்.

உலகம் தாங்கிய ஒருவன் இன்று ஒரு வில்லைத் தாங்கினன் என்றது, உல்லாச விநோதமாய் அவனது அருமை பெருமை அடுத்தவரைத் தாங்கும் உரிமை முதலியன உணர நின்றது.

இராமன் இப்பொழுதுதான் முதல் முதலாக அமர் நிலை கருதி வில் எடுத்திருக்கிறான்; வெற்றி ஒன்றும் பெறுமுன்னரே அதனைக் கோற்றவில் என்றது என்னை? எனின், அந்தச் சுத்த வீரன் கையில் பற்றியவுடனே கொற்றம் முழுவதும் அதில் குடி புகுந்து நின்றது என்னும் படிதெரிய என்க. "காசில் கொற்றத்து இராமன்" எனத் தொடக்கத்தில் கூறியது போலவே யாண்டும் மேலான வெற்றி வீரனாய் அவன் விளங்கியுள்ளமை யான், அவனது வாளும் வில்லும் எங்கும் வெற்றியும் கொற்றமும் உடையனவாய்க் குறிக்க வந்தன.

வில்லுக்கும் வாளுக்கும் சொல்லியுள்ள அடைமொழிகளினும் அம்புத்தூணிக்குக் குறித்திருப்பது மிகவும் சிந்திக்கத் தக்கது. தூணி=அம்புகள் வைக்கும் கூடு. எப்பொழுதும் அம்புகள் தங்கியிருத்தற்கு இடமாயிருத்தலால் இதனை அம்பறாத்தூணி என்பர். புட்டில், ஆவம் என வேறு பெயர்களும் உண்டு.

"தூணி புட்டில் அம்பறாத் தூணி" என்றது பிங்கலந்தை. எடுக்க எடுக்கக் குறையாமல் மந்திர மரபுடன் தெய்வத் தன்மை வாய்ந்த அற்புதப் பகழிகள் எப்பொழுதும் நிறைந்திருந்தமையால், "என்றும் தேய்வுறாத் தூணி" என்றார். தேய்வின்மைக்கு வாய்மை இதில் உவமையாய் வந்து.

சத்தியம் நித்தியமானது; என்றும் நிலைகுலையாமல் நின்று நிலவுவது; எதையும் வென்று விளங்குவது; அத்தகைய உத்தம தருமத்தை ஓர் அம்புக்கூட்டிற்கு உவமை குறித்தது, அது பெற்றிருக்கும் பொருட் பெற்றியை உய்த்துணர என்க.

யாண்டும் குறிதப்பாமல் எதிர்த்தன எவற்றையும் எய்து வீழ்த்தி, யாதும் நிலை தவறாமல் என்றும் வென்றியுடன் விளங்கி நிற்கின்ற இராமபாணங்களை மேவியுள்ளமையான் மெய்ம்மை எதிர் வைத்து மேன்மையோடு அது பேச நின்றது.

நல்ல நீதிகளையும், தரும நெறிகளையும் உலகினுக்கு உறுதியாக உணர்த்துவதே காவியத்தின் குறிக்கோள் ஆதலால் இங்கே சத்தியம் இங்ஙனம் உரைக்க வந்தது.

இராமனுடைய வில் அம்பு தூணி வாள் முதலிய வீர ஆயுதங்களைக் குறித்துக்கூறும்போது கூட யாரும் எளிதே தெளிந்து கொள்ளத் தக்க உறுதி நலங்களை மக்களுக்கு நம் கவிஞர் பிரான் மிக்க ஆவலுடன் உணர்த்தி வருகிறார்.

அம்பறாத்தூணியைக் குறித்து இன்னும் ஓர் இடத்தில் சொல்லியிருக்கும் கவி ஒன்று அடியில் வருகின்றது.

"பல்லியல் உலகுறு பாடை பாடமைந்து
எல்லையில் நூற்கடல் ஏற நோக்கிய
நலலியல நவையறு கவிஞர் நாவரும்
சொலலெனத் தொலைவிலாத தூணி தூக்கினான்."
(உயுத்தகாண்டம், முதற்போர்ப்படலம், 114)

இராவணனோடு போர்புரிய முதல்நாள் மூண்டு எழுந்த பொழுது இராமன் பூண்ட அம்புப்புட்டிலைக் குறித்துக் கூறிய படியிது. மெய்ம்மைபோல் தேய்வுறாத் தூணி என முன்னம் சொன்னார்; இங்கே கவிஞர் சொல் எனத் தொலைவிலாத் தூணி

என்ருர். தேயாமைக்கும் தொலையாமைக்கும் நிலையான உவமைகள் நிலவி வந்துள்ள நிலை நினைந்து மகிழவுள்ளது.

கலைவல்லுநருக்கு இதில் கொடுத்திருக்கும் விசேடணங்கள் கூர்ந்துநோக்கத் தக்கன. நல் இயல் கவிஞர் என்றது புல்லியரைப் புறந்தள்ளி நின்றது. மனநலமும் மதிநலமும் கலைநலமும் குண நலமும் ஒருங்கே வாய்ந்த உயர் தனிக் கவிஞரைக் குறித்தபடியிது.

அங்கே சத்தியத்தோடு ஒத்தெண்ணநின்ற தூணி, இங்கே கவிஞர் சொல்லோடு வைத்தெண்ண வந்தது.

இராமன், வில், அம்பு, தூணி, என்பன கவிஞர், நா, சொல், வாய் என்பவற்றிற்கு முறையே ஒப்பாய் உய்த்துணர நின்றன. நல்லியற் கவிஞர்களிடம் கம்பர் கொண்டிருக்கும் ஆர்வமும் மதிப்பும் இதனல் நன்கு புலனும்.

இராமனுடைய வில்லிலிருந்து வருகின்ற அம்புபோல் தமது நாவிலிருந்து வருகின்றசொல்லும் எல்லாவற்றையும் வெல்லவல்லதாய் வீறுகொண்டு யாண்டும் மேன்மையுற்றுள்ள தென்பதைக் குறிப்பாகக் கம்பர் இதில் குறிப்பித்திருக்கிருர். இந் நுட்பம் நுனித்து நோக்கவுள்ளது.

இராமபாணத்தைக் கவிஞர் சொல்லோடு நேர் வைத்துக் காவியத்தில் பல இடங்களில் நம் கவியரசர் பாராட்டியிருக்கிருர். ஓரிடத்தை மட்டும் பார்த்துவிட்டு மேலே போய்விடுவோம்.

"நல்லியற் கவிஞர் நாவிற பொருள் குறித்
தமர்ந்த நாமச்
சொலலெனச், செய்யுட் கொண்ட தொடையெனத்,
தொடையை நீகி
எல்லையில் செல்வம் தீரா இசையெனப்,
பழுதிலாத
பல்லலங்காரப் பண்பே காகுத்தன்
பகழி மாதோ." (கும்பகருணன்வதைப்படலம், 22)

இராமனேடு முதல் நாள் போர்புரிந்து தோல்வியடைந்து மீண்டு வந்து மனம் புழுங்கியிருந்த இராவணன் மாலியவானிடம் உரைத்தபடியிது. காகுத்தன் பகழிகள் கவிஞர் சொல் எனப் பல்வகையாக விரிந்து எல்லையில்லாத ஆற்றல்களுடன் எங்கும்

பார்த்து நின்றன என்று அவன் வியந்து புகழ்ந்திருக்கும் தன்மை நயந்து நோக்கவுள்ளது.

இக்கவியின் பொருள் நிலைகளைக் கருத்தூன்றி உணர்ந்து கொள்க. உரை வரையின் விரியும்.

வில்லியல் அம்பை நல்லியல் கவிஞர் வாக்கோடு ஒப்ப வைத்துத் தம் கருத்தைப் பற்பல வகையில் நம் கவிஞர்பிரான் இவ்வாறு வெளிப்படுத்தி

இங்ஙனம வில அமபுகளுடன போாகககாலம புனைநது வந்த இராமனைப் போலவே இளையவனும் பூண்டு வந்தான். வந்த இருவரைத் தந்தை தழுவி நெஞ்சம் துணிந்து முனிவரிடம் தஞ்சம் என்று தந்தான். அவர் உவந்து வாழ்த்தி விரைந்து விடை பெற்றுக் குமாரை அழைத்துச் சென்றார். ஞான முனிவருடன் அம்மான வீரர் போன நிலையைக் குறித்துக் கவி நயமாக விளக்கி யிருக்கிறார். அடியில் வருகின்றது காண்க.

“ அன்ன தம்பியும் தானும் ஐயனும
மன்னன் இன்னுயிர் வழிக்கொண் டாலெனப்
சொன்ன மாதவற் றொடர்ந்த சாயைபோல
பொன்னின் மாநகர்ப் புரிசை நீங்கினன்.”

(கையடைப்படலம், 20)

இராமனைப், போலவே உடைவாள் இடைவரிந்து, தூணி யமைந்து, வில் ஏந்தி இலக்குவன் வந்தான் ஆதலால் அன்ன தம்பி யும் என்றார். என்ன வகையிலும் எந்நிலையிலும் அம்முன்ன வன் என்னவே இப்பின்னவன் மன்னியுள்ளான் என்பது, அன்ன என்னும் சுட்டால் அறியநின்றது. சொற் செட்டாகச் சுட்டி யிருக்கும் இதில் அரிய பலபொருள்களை உய்த்துணருமாறு கவி விட்டு வைத்திருக்கிறார்.

முனிவர் இராமனை மட்டும் உதவிக்குக் கேட்டாரேயன்றி வேறு யாரையும் கேட்கவில்லை; அப்படியிருக்க இங்கே இலக்கு வனையும் உடன் அனுப்பியது என்னை? எனின், உருவும் நிழலும் போல இராமனை யாண்டும் இவன் பிரியாதிருப்பவன் ஆதலால் தானாகவே பிரியமுடன் அவன்பின் போனான் என்க. பிரியாதான், பின்னவன் எனப் பெயர்களும் பெற்று முன்னவனோடு பிரிவின்

மையில் எங்கும் இவன் உயர்வுற் றிருக்கின்றான். "இராமன் பின்பு பிறந்தானும் உளன் என்னப் * பிரியாதான்." என இவனது பிரியாமையை விழைந்து பாதனும் புகழ்ந்திருக்கின்றான்.

இந்த அருமைத் தம்பியை உரிமையுடன் அழைத்துக் கொண்டு இராமன் மாதவர்பின் தொடர்ந்து போனான். அப்போக்கு தசரதன் உயிர் ஓர் இனிய வடிவுகொண்டு முனிபின் தனியே வழி நடந்து போனதுபோலிருந்தது ஆதலால் "மன்னன் இன்னுயிர் வழிக்கொண்டால் என நீங்கினார்" என்று உள்ளுருக்கம் தோன்ற உரைத்தருளினார்.

தசரதனுக்கு இராமன் உயிர் என முன்பு குறித்த அன்புரிமையை இடங்கள் தோறும் தொடர்ந்து இங்ஙனம் உணர்த்தி வருகிறார். இந்த இடத்தையும் உவமையையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்; இதற்கு எண்ணூறாவது பாட்டில் என்ன செய்திருக்கிறார் என்பதை இனிமேல் பார்க்கலாம்.

கோசிகர் இவ்வாறு குமாரர்களை அழைத்துக்கொண்டு வேள்வி நிலையை நோக்கி விரைந்து போனார்.

தசரதன் இங்கே தனது அருமைத் திருமகனைக் கண்ணெதிரே காணாமல் கவலையுற்றாலும் மாதவர் கொண்டுபோயுள்ளமையால் மகிமையுண்டாம் என்று கருதி மனம் துணிந்திருந்தான்.

முனிவர் வந்து போயுள்ள இந்தப்பாகத்திற்குக் கையடைப் படலம் என்று பெயர். தன் பொருளை ஒருவன் மற்றொருவனிடம் பாதுகாத்தருளும்படி அடைக்கலமாகத் தந்து வைப்பதற்குக் கையடை என்று பெயர். கையில்அடைத்திருப்பதால் கையடை என வந்தது. கையடை = அடைக்கலம். முந்திய பாகம் இராமன் பிறப்பைக் கூறியுள்ளமையால் அதற்குத் திரு அவதாரப் படலம் என்று பெயர். இதில் அவனை முனிவர் கையில் ஒப்பித்ததைக் குறித்திருத்தலால் இப்பெயர் பெற்றது. இது இருபத்து நான்கு பாடல்களை யுடையது. இதன்கண் சிறந்த சிந்தனைகள் பல நிறைந்திருக்கின்றன.

1. உலகத்தில் அரச பதவி சிறந்தது; அதனினும் தவநிலை உயர்ந்தது அது தனி மகிமை யுடையது.

---

* அயோத்தியா காண்டம், நகர்ப்படலம், பாடல் 68.

2. தவமுடையார் ஆன்ம ஒளியுற்று மேன்மை மிகப்பெற் றிருத்தலால் அவர் முன் அரசரும் அடி பணிவர்; அமரரும் அவரை வியந்து போற்றுவர்.

3. உயிரினங்கள் யாண்டும் உயர்வையே நாடும் இயல்புடை யன. அந்நாட்டமே அவற்றின் தேட்டமாம்.

4. மனிதன் இன்பத்தை விரும்புகிறான்; துன்பத்தை வெறுக்கின்றான். இன்பம் நல்வினையிலிருந்து விளை கின்றது; துன்டம் தீவினையிலிருந்து தோன்றுகின் றது; ஆதலால் இன்பம் விளைபவன் எவ்வுயிர்க்கும் இனியனாய் யாண்டும் இதம்புரிந்து வரவேண்டும். பிறர்க்குச் செய்யும் இதங்களெல்லாம் தனக்கே ிமையாய் மிகவும் பெருகி மீண்டு வருகின்றன.

பினும் கொடியது; தீ, தொட்ட இடத்தே தொட்டபொழுதுதான் சுடும்; தீவினையோ, உயிர் புக்குழி யெல்லாம் புகுந்து அதனை அல்லற்படுத்தி அடுதுயர் செய்யும்.

6. தீய நினைவுகளைச் சிறிதும் கருதாதிருப்பவன் எவனோ அவனே பிறந்த பயன் பெற்ற பெரும்பாக்கியவான்.

7. மனிதன் புனித எண்ணங்களை யுடையனாய் இனிது ஒழுகிவரின் மன்பதைக்குள் அவன் தனியே உயர் ந்து பேரின்ப நிலையை அடைகின்றான்.

8. புண்ணிய கருமங்களை மனிதன் எண்ணிய இன்பங் களை யெல்லாம் இனிது உதவி வருகின்றன.

இன்னவாறான உறுதிநலங்கள் பல இப்பகுதியில் கருதி யுணரத்தக்கனவாய் மருவியுள்ளன. முனிவர் வாவில் மனித னது புனித நிலைமையும் தனி உயர்ச்சியும் இனிது விளங்கி நிற் கின்றன. நிலைமை யுணர்ந்து தலைமை பெறவேண்டும்.

தசரதனுடைய அரசியல்பு, வாழ்க்கை வகை, வண்மை திண்மைகளின் உயர்ச்சி, மக்கட் பேற்றின் மகிழ்ச்சி, மன முதலியன தனி நிலையில் இது வரை நேரே அறியவந்தன.

ழும்மன்னனது தன்மை முழுவதும் இராமனுடைய சரித நிலையைத் தழுவியே தெரியவுள்ளது.

இராமன் முனிவர் பின்போய் வேள்வியைக் காத்து, வினை முடித்து, வியத்தகு செயல்கள் சில புரிந்து, மிதிலை புகுந்து, வில்லை வளைத்தான்; வளைக்கவே சீதையை அவ்வீரனுக்குத் திருமணம் செய்துதர சனகன் முதல் அனைவரும் உரிமையுடன் இசைந்தார். அந்த மங்கலச் செய்தியைத் தசரதனுக்கு அறிவிக்கும்படி கோசிகர் தூண்ட அவன் பேராவலோடு நேரே உரிமையாளர் இருவரை உணர்த்தி விடுத்தான். தூதுவர் விரைந்து வந்து திருவயோத்தியை அடைந்து அரண்மனை முன்றிலை அணுகினர். அங்கே நிகழ்ந்த அதிசய நிலைகளைக்கண்டு அஞ்சி அயர்ந்தனர். அப்பொழுது சிற்றரசரும், பேரரசரும் சக்கரவர்த்தியைத் தரிசிக்க விழைந்து சமையம் நோக்கித் தாழ்ந்திருந்தனர்; அந்த அமைதியைப் பார்த்ததும், "அரசர்களே இவ்வாறாயின், நாம் எந்தவாறு போய் ஏந்தலைக் காண்பது!" என்று வந்தவர் திகைத்து மறுகி நின்றனர். அவரது நிலைமையை அங்கே ஒரு காவலாளன் கருதி நோக்கி அருகு நெருங்கி வினவி யறிந்து அவரை உரிமையுடன் உள்ளே விடுத்தான். அவர் வந்து மன்னர்பிரான் முன் திருமண ஓலையுடன் தொழுது நின்றார். அரியணையிலிருந்த அரசன் அயலே நின்ற மதிமானொருவனை நோக்க, அவன் அந்த ஓலையை வாங்கி இனிது வாசித்தான். அதனைக் கேட்டபொழுது இவனது உள்ளமும் உயிரும் துள்ளி உவகை மீக்கூர்ந்தன. இந்த நிகழ்ச்சிகளை விளக்கியிருக்கும் கவிகள் அடியில் வருகின்றன.

### மிதிலைத் தூதுவர் வந்தது.

"கடுகிய தூதரும் காலில் காலிற் சென்று
இடிகுரல் முரசதிர் அயோத்தி எய்தினார்;
அடியிணை தொழுமிடம் அன்றி, மன்னர் தம
முடியொடு முடிபொரும் வாயில் முன்னினார். (1)

### அரண்மனைக்குள் புகுந்தது.

புகுந்தனர் திருவருள் முறையின் எய்தினார்
திகழ்ந்தொளிர் கழலிணை தொழுது செல்வனைப்
புகழ்ந்தனர் அரச! நின் புதல்வர் போயபின்
நிகழ்ந்தவை இதுவென நெடிது கூறினார். (2)

திருமண நிருபம் தந்தது.

கூறிய தூதரும் கொணர்ந்த ஓலையை
ஈறிலவன் புகழினாய்! இதுவது என்றனர்
வேறொரு புலமகன் விரும்பி வாங்கினான்
மாறதிர் கழலினான் வாசி என்றனன். (3)

மன்னர் பிரான் மகிழ்ந்தது

இலைமுகப் படத்தவர் எழுதிக் காட்டிய
தலைமகன் சிலைத் தொழில செவியில சார்தலும்
நிலைமுக வலயங்கள் நிமிர்ந்து நீங்கிட
மலையென வளர்ந்தன வயிரத் தோள்களே." (4)

(எழுச்சிப்படலம், 1-4)

மிதிலையி லிருந்து தூதுவர் வந்ததும், தசரதனை வணங்கித் மண ஓலை தந்ததும், அச்செய்தியை அறிந்து அரசு மகிழ்ந்ததும் இவற்றுள் அறியநின்றன. நிகழ்ச்சிகளை விளக்கியிருக்கும் உரைகள் உணர்ச்சி ததும்பி யுள்ளன.

1. முதலில் தூதுவர் வரவு சிந்திக்க வுரியது. அக்காலத்தில் தந்தி தபால்கள் இல்லை. செய்திகளை ஆள்கள் மூலமே அனுப்பி வந்தனர். அரச காரியங்களை அறிவித்தற்குத் தகுந்த சாரணர்கள் அமர்ந்திருந்தனர். அவர் எங்கும் விரைந்து செல்லும் இயல்பினர். அதனால் அவர்க்கு ஓட்டக்காரர் என்று ஒரு பெயரும் உண்டு. மிதிலையிலிருந்து திருவயோத்தி வெகுதூரம் இருத்தலால் அவர் வேகமாய் வந்தனர். "காலில் காலின்சென்று" என்றது கால் நடையாய்க் காற்றைப்போல் விரைந்து என்றவாறு. கால்=காற்று. காற்றுக்குக் கால் இல்லை; அவர்க்குக் கால் உண்டு; இவ்வளவே வேற்றுமை. தேக நிலையை விட்டு வேகநிலையை நோக்கின் அவர் ஓர் புதிய காற்று என்னும் அதிசய நிலையினர் என்பதாம்.

அத்தகைய தூதுவர் ஓடிவந்து அயோத்தியைஅடைந்தனர். அப்பொழுது சக்கரவர்த்தியின் சந்நிதி இன்ன நிலையில்இருந்தது என இதில் எழுதிக் காட்டியிருக்கும் அழகைப்பார்க்க.

மன்னர் பெருமானைக் காண வந்திருக்கின்ற மணிமுடி அரசர்கள் அரண்மனை முன் மிகவும் நெருங்கி நின்றனர் என்பது

"முடியொடு முடிபொரும் வாயில்" என்றதனால் அறிய வந்தது. இந்தக் காட்சி மன்னனது திவ்விய மாட்சியை விளக்கி எவ்வளவு அதிசயமா யுள்ளது.

2. இந்த அற்புதக் காட்சியைக் கடந்து தூதுவர் உள்ளே புகுந்து அரசர் பிரான் முன்வந்து அடிதொழுது நின்று புகழ்ந்து போற்றி இராமலட்சுமணர்கள் மிதிலை நகரில் எழுந்தருளி யிருக்கும் நிலைமையை விழைந்து கூறினர். பின்பு திருமணம் குறித்துள்ள நிருபத்தை எடுத்து நிருபன் எதிர் மரியாதையாக நீட்டினர்.

3. அந்த மங்கல நிருபத்தை அருகே நின்ற அறிஞன் விரும்பி வாங்கினன். வாங்கிய அதனை இருகாங்களிலும் இனிது ஏந்தி ஏந்தலை எதிர் நோக்கினன். இங்கே காரியம் நிகழ்கின்ற சீரிய நிலைகள் கருதி மகிழவுள்ளன. புலமகன் என்றது மதிமான் என்றவாறு. புலம்=அறிவு. வார்த்தை யாதும் பேசாமல் பார்த்த மாத்திரத்திலேயே அரசின் குறிப்பறிந்து யாவும் செய்யும் கூர்த்த மதியுடையான் என்பது புலமகன் என்றதனால் உணர வந்தது.

அரசமரியாதையும் அறிவமைதியும் பெருமிதமும் சமுகத்தில் நடக்கும் சதுரப்பாடுகளும் இக் கவிகளில் கதிர்வீசி நிற்கின்றன. கம்பர் ஓர் அரசராயிருந்திருக்கவேண்டும், அல்லது பேரரசரோடு அவர் நேரே அடிக்கடி பழகியிருக்கவேண்டும் என்பதை அவருடைய வாக்குகள் யாண்டும் நன்கு காட்டி வருகின்றன. அரச கம்பீரங்கள் உரைகளில் உயிர்பெற்று ஒளிர்கின்றன.

4. நிருபத்தை வாசிக்க, இராமனுடைய திருமணச்செய்தி தெரியவந்தது அந்த வார்த்தையைக் கேட்ட அளவில் தசரதனுக்கு உண்டான உவகைக்கு அளவே இல்லை. அம் மகிழ்ச்சி நிலையை வார்த்தைகளால் அளந்து சொல்லமுடியாது. அவனுடைய உள்ளக்களிப்பையும் உயிர்ப்பூரிப்பையும் உடலில் நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றால் கவி இங்கே தெளிவாக விளக்கியிருக்கிறார். அவ்விளக்கம் வியப்பை விளைத்து நின்கின்றது.

வாகுவலயம் என்பது அரசர்க்குரிய அணிவகைகளுள் ஒன்று. அது தோளில் அணியப்படுவது. சிறந்த இரத்தினங்

கள் இழைத்துத் தங்கத்தால் வட்ட வடிவமாகச் செய்யப்பட்டிருக்கும் அந்த அணிக்கு அங்கதம் எனவும் பெயர். வளையமாயிருத்தலாலும், தோளில் அணிவதாலும் அது வாகுவலயம் என வந்தது. வாகு=தோள். வலயம்=வட்டம். அவையில் அமர்ந்திருக்கும் பொழுதும், பவனி வருங்காலத்தும், உற்சவ தினங்களிலும் அரசர் அதனை விசேடமாக அணிந்துகொள்வர். மிதிலையிலிருந்து தூதுவர் வந்த அன்று அரசர் பலர்க்கும் தசரதன் ஒருங்கே காட்சி கொடுக்கும் சமையம் ஆதலால் பூரண அலங்காரங்களுடன் பொலிவுற்று அரியணையில் வீற்றிருந்தான். அங்ஙனம் இருக்குங்கால் மங்கலச் செய்தி வந்தது. தனது அருமைத் திருமகனுடைய சோபன உரை காதில் விழவும் உள்ளம் களித்து உடல்பூரித்தது ஆதலால் தோளில் பூட்டியிருந்த வாகுவலயங்கள் வாய்விரிந்து கீழே வீழ்ந்தன. பெருமகிழ்ச்சியால் நேர்ந்த இந்த ஆச்சரிய நிகழ்ச்சியை, "வலயங்கள்நிமிர்ந்து நீங்கிட, வயிரத் தோள்கள் மலை என வளர்ந்தன" என்று கவி வரைந்து காட்டியிருக்கிறார். இக் காட்சி காணும் தோறும் ஓர் அதிசய நிலையமாய் மதிநலம் சுரந்துள்ளது.

அரசன் உள்ளங்கொண்ட உவகை நிலையை உலகம் அறியச் சொல்ல வந்தவர் இவ்வண்ணம் சொல்லியிருக்கிறார். கருத்துக்களை விளக்குவதில் கவி காட்டும் உரைத் திறங்கள் மிகவும் குறித்து நோக்கத் தக்கன.

இவ்வாறு மகிழ்ச்சி மீக்கூர்ந்த மன்னன் சோபனம் கொண்டு வந்த தூதுவர்க்குப் பொன்னும் மணியும் அணியும் ஆடைகளும் வாரிக் கொடுத்தான். உடனே மிதிலை நகர்க்கு எழுந்தருளத் துணிந்தான். பிரயாணத்திற்கு வேண்டிய எல்லாவற்றையும் விரைந்து ஆயத்தம் செய்யும்படி அமைச்சரிடம் பணித்தான். உள்ளியதை அறிவிக்கும் வள்ளுவனை நேரே அழைத்து மிதிலை எழுச்சியைக்குறித்துக் குறுநில மன்னர் முதல் குடி சனங்களெல்லாருக்கும் தெரிவிக்கச் சொன்னான். அன்று அவன் சொன்ன படியை அடியில் பார்க்க.

திருமணச் செய்தியைத் தேச மக்கட்குத் தெரிவித்தது.

"வானவன் குலத்தெமர் வரத்தி னுல்வரும்
வேனில்வேள் இருந்தவம் மிதிலை நோக்கிநம்
சேனையும அரசரும் செல்க முந்தெனு
ஆனைமேல் மணமுரசு அறைகென் றேவினான்."

சூரிய குலத்தோன்றல்களாகிய என் முன்னோர் செய்திருக்கும் பெரும் புண்ணியத்தின் பயனாக என்னிடம் வந்து பிறந்துள்ள இராமன் இப்பொழுது மிதிலையில் இருக்கின்றான். அவனது கலியாண கோலத்தை அனைவரும் போய்க் கண்டு மகிழ வேண்டும்; அதனை ஊரும் நாடும் அறியும்படி உணர்த்துக என்று சாக்கையனிடம் அரசன் இதில் உரைத்திருக்கின்றான். வேனில் வேள் என்றது வசந்த கால மன்மதனை. இங்கே இராமனை இங்ஙனம் குறித்திருக்கின்றான். "எமர் வரத்தினால் வரும்" என்றதனால் தனக்கு வாய்த்துள்ள பிள்ளையைக் குறித்து இவ்வள்ளல் கொண்டுள்ள மதிப்பும் மாண்பும் இனிது புலனாம். வந்த என்னாமல் வரும் என்றமையான் அவ்வரவு என்றும் புதிதாய் இன்புறுத்தி வருகின்றமை தெரிய நின்றது. அவனது பருவ நிலையினும், உருவ அமைதியினும் உள்ளம் பறிபோயுள்ளமையால் வேனில்வேள் என வேட்கை மீதூர்ந்து கூறினான்.

இங்ஙனம் வேணவாவுடைய மன்னன் அவனைக் காணலாம் என்னும் காதல் ஈர்த்தெழக் கடுகி எழுந்தான். படை குடி பரிவாரங்களெல்லாரும் முன்னுற எழுந்தனர். இராம விவாகத்தைக் காண விழைந்து கோசல தேசத்து மக்கள் மிதிலையை நோக்கி எழுந்த வைபவம் கண்கொள்ளாக் காட்சிகளாய்க் காவியத்தில் கனிந்து நிற்கின்றன. உவகை மலிந்த அந்த உல்லாசச் செலவில் பலவகைச் சுவைகளைக் கவி அதிசாதுரியமாகக் காட்டியிருக்கிறார். அதில் சிருங்கார ரசங்கள் எங்கும் தேம்பியுள்ளன. சிற்றரசர்களும் சேனைகளும் சென்றபின் அந்தப்புரத்திலிருந்து தேவிமார் எழுகின்றனர். அதன்பின் வசிட்டர் பரதன் சத்துருக்கன் எழுந்தருளுகின்றனர். இம்மூவர் புறப்பட்ட நிலைமையை அடியில் வரும் பாவில் பார்க்கலாம்.

## வசிட்டர் புறப்பட்டது.

" செவியயின் அமிர்த கேள்வி தெவிட்டினார், தேவர் நாவின்
அவிகையின் அளிக்கும் நீரார், ஐயிரு கோடி சூழக்
கவிகையின் நிழற் கற்பின் அருந்ததி கணவன் வெள்ளைச்
சிவிகையின் அன்னம் ஊரும் திசைமுகன் என்னச் சென்றான்.

பரத சத்துருக்கனர் எழுந்தது.

பொருகளி றிவுளி பொற்றேர் பொலங்கழற் குமரர் முந்நீர்
அருவரை சூழ்ந்த தென்ன அருகுபின் முன்னும் செலலத்
திருவளர் மார்பர் தெய்வச் சிலையினர் தேரர் வீரர்
இருவரும் முனிபின் போன இருவரும் என்னப் போனார்.''
(எழுச்சிப்படலம் 71, 72)

குலகுருவும், குமரரும் புறப்பட்ட சீர்மையைக் குறித்து வந்திருக்கும் இக்கவிகளைக் கூர்மையாகக் கவனிக்க வேண்டும். பாத்திரங்களுக்குத் தக்க வார்த்தைகளை வழங்கிப் பார்த்தவரெ வரும் வியந்து மகிழ ஒளியும் உணர்வும் கொடுத்துக் கவி அவற்றை வெளிவிடுகின்றார். ஒரு சிறிய நிகழ்ச்சியைச் சொல்லுருவில் தீட்டி நம் உள்ளம் பதித்து உணர்வை விளக்கி உவகை விளைத்து வரும் கவியின் அற்புத சத்தி அரிய கலையின் தத்துவ நிலையமா யுள்ளது. பதங்கள் தோறும் குறிப்புப்பொருள்கள் பதிந்து கிடக்கின்றன. உணர்ந்து மகிழவேண்டும்.

இப்பொழுது வசிட்டர் பின் செல்லும் பரத சத்துருக்கன ருக்கு முன்பு விசுவாமித்திரர் பின் சென்ற இராம இலக்குவரை ஒப்புரைத்திருக்கும் நயம் உரிமை கனிந்து உவகை சுரந்துள்ளது.

இவ்வண்ணம் உரிமையாளரனைவரும் சென்றபின் இறுதி யில் அரசன் எழுந்தான். அவ் எழுச்சி வியத்தகு நிலையில் விளங்கி நின்றது. தனது அருமைத் திருமகனுக்கு நன்மை யுண்டாகும்படி தெய்வத்தைச் சிந்தித்துத் தானங்கள் பல சொரிந்து நல்ல ஓரையில் அவன் எழுந்தருளினான். அரிய ஆடம்பரங்களுடன் வெளிவந்து அழகிய இரதத்தில் அவன் ஏறும்பொழுது புடை சூழ்ந்து நின்ற அரசரனைவரும் உரிமை யுடன் தொழுது உவந்து போற்றினர். மற்ற மன்னவர் கை கூப்பித் தத்தம் வாகனங்களில் சார்ந்து வர இந்த வெற்றி வேல் வேந்தன் தேர் ஏறிச் சென்றான். அந்த அற்புதக்காட்சி யைக் குறித்துக் கவி ஒரு கற்பனை செய்திருக்கிறார்.

"கொற்றவேல் மன்னர் செங்கைப் பங்கயக் குழாங்கள் கூப்ப
மற்றொரு கதிரோன் என்ன மணிநெடுந் தேரில் போனான்."

என்னும் இதில் தசரதன் சூரியனோடு நேர் எண்ணப் பெற் றுள்ளான். கதிரோனைக் கண்டவுடன் தாமரை மலர்கள் விரி யும்; காணாதபொழுது குவியும்; இந்தக் கதிரோனைக் காணாத

போது விரிந்திருந்த அரசர்களுடைய கைகளாகிய தாமரைகள் கண்டவுடனே குவிந்து நின்றன ; ஆதலால் மற்றொரு கதிரோன் என்றார். இவ் வுருவகத்தால் இவனது திருவின் பெற்றியும் தேசும் தெரியலாகும். இராதாருடனும் மிதிலை நோக்கி இவன் செல்லும்பொழுது உடன் நிகழ்ந்து சென்ற காட்சிகள் பெரு மாட்சிமைகளுடையனவாய் வியப்பும் விம்மிதமும் விளைத்து நின்றன. சில அடியில் வருவன காண்க.

## தசரதன் மிதிலை சென்ற வைபவம்.

" சங்கமும் பணையும் கொம்பும் தாளமும் காளத்தோடு
மங்கல பேரி செய்த பேரொலி மழையை ஓட்டத்,
தொங்கலும் குடையும் தோகைப் பிச்சமும் சுடரை ஓட்டத்,
திங்கள்வெண் குடைகண் டோடத் தேவரும் மருளச்சென்றான்.

மந்திர கீத ஓதை, வலம்புரி முழங்கும் ஓதை,
அந்தணர் ஆசி ஓதை ஆர்த்தெழு முரசின் ஓதை,
கந்துகொல் களிற்றின் ஓதை, கடிகையர் கவிதை ஓதை,
இந்திர திருவன் செல்ல எழுந்தன திசைகள் எல்லாம். (2)

நோக்கிய திசைகள்தோறும் தன்னையே நோக்கிச் செல்லும்
வீக்கிய கழற்கால் வேந்தர் விரிந்தகை மலர்கள் கூப்பத்
தாக்கிய களிறும் தேரும் புரவியும் படைஞர்தாளும்
ஆக்கிய தூளி விண்ணும் மண்ணுலகு காக்கப் போனான். " (3)

(எழுச்சிப்படலம் 78-80)

மேலே வந்துள்ள இந்த மூன்று கவிகளையும் கண்ணூன்றி நோக்கவேண்டும். இராச கம்பீரங்கள் எவ்வளவு அதிசயங்களை யுடையனவாய் இவற்றுள் குதிகொண்டு நிற்கின்றன. கவியின் மானசக் காட்சியில் தோன்றிய தோற்றங்கள் யாவும் அவர் வாக்கில் ஒளிபெற்று வந்து நம்முடைய உள்ளங்களில் தெளிவாய் எழில்பெற் றொளிர்கின்றன. இந்திரதிருவன் என்று நம் மன்னனுக்குச் சுந்தரமான பெயரை இங்கே தந்திருக்கின்றார். ஓசையும் பொருளும் உட்கருத்துகளும் இவற்றுள் உணருந்தோறும் உவகையும் வியப்பும் ஒருங்கே விளைத்து உணர்ச்சி நலம் சுரக்கின்றன.

யானை குதிரை முதலிய நால்வகைச் சேனைகளும் பல்வகைக் குழாங்களும் நடந்து செல்லுங்கால் இப் பூமியிலிருந்து மிடைக்

தெழுந்த தூளிகள் வானம் படர்ந்து எங்கும் மண்டிநின்றன ஆத லால், "விண்ணும் மண்ணுலகு ஆக்கப் போனான்" என்றார். ஆகவே அப்போக்கின் பெருங் காட்சி இதனால் ஒருங்கே புலனாம்.

இங்ஙனம் சென்ற படைகள் முதல்நாள் மாலையில் வழி யிடையே யிருந்த சந்திரசைலம் என்னும் மலையில் தங்கின. சக்கரவர்த்தி குடி சனங்களோடு அன்று மலைவாசம் செய்த நிலை மையைக் கம்பர் கலைவாசம் கனியக் காட்டி யிருக்கிறார். அக் காட்சிகளையெல்லாம் காண நேர்ந்தால் காலம் பெரிதும் கழிய நேரும் ஆதலால் மிதிலைக்கே நாம் விரைந்து போவோம். மாதிரிக் காக இங்கே ஒன்றை மட்டும் பார்த்து விடுவோம்.

சிறந்த பூஞ்சோலைகளும், பரந்து விரிந்த சமவெளிகளும், இனிய பல நீர் நிலைகளும் இயற்கையாக அமைந்திருந்த அம்மலை யில் மன்னர்பிரான் ஓர் அழகிய குளிர்மென் காவுள் தங்கிய பொழுது உடன் வந்த அரசர் முதலனைவரும் அவரவருக்கு ஆன இடங்களில் அயலே புடைசூழ்ந்து தமருடன் அமர்ந்திருந்தனர். எல்லாரும் செல்வச் சிறப்பினர் ஆதலால் உல்லாசமாகப் பல் வகைக் காட்சிகளையும் பார்த்து வந்தனர். அப்பார்வைகள் பல திறப்பட்டன. சில அரசிளங் குமரர்கள் தமது அழகிய சிறிய இரதங்களைச் சாரலின் சமவெளிகளில் சதுருடன் ஊர்ந்து புதுமை கள் ஓர்ந்து மகிழ்ந்தனர். அந்தச் செல்வத் தேர்கள் ஓடி உலா விய சீர்மையை அடியில் வரும் பாடலில் பார்க்க.

தேர் சென்ற சீர்.

"தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும் அவர்தம்
மருண்ட தன்மையை மாற்றுவர் எனுமிது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுருள் உரைத்துரைத்தோடி
இருண்ட கல்லையும் தன்னிறம் ஆக்கிய இரதம்."

(வரைக்காட்சிப்படலம், 8)

இரத உருளைகளின் தலைப்பு வட்டங்கள் பொன் தகட்டால் புனையப்பட்டிருந்தன. அவை, இக்காலத்து வண்டிச் சக்கரங் களில் காணப்படுகின்ற இரும்புப் பட்டைகள் போல்வன. இன்று கரும்பொன் மிகுந்திருப்பது போல் அன்று செம்பொன் இருந் தது. கால நிலையால் ஞாலநிலை மாறி நின்றது. குழைகொண்டு கோழி எறியும் வாழ்க்கையில் பண்டு இந்நாடு குலாவியிருந்த தென்பதைப் பழைய நூல்களில் நாம் கண்டு வருகின்றோம்.

பெருந் திருவுடைய இளங்குமரர்கள் பொன்னுருளைகள் புனைந்த தம் நன்னயத் தேர்களை அம்மலைச் சாரல்களில் ஊர்ந்து செல்லுங்கால், அங்கே வாய்ந்திருந்த கருங்கற் பாறைகளில் தோய்ந்து சென்றன. அங்ஙனம் செல்லும் தோறும் பொன் பொடி தேய்ந்துபடுதலால் அக் கற்கள் தம் பழைய கரிய நிறம் மாறிப் புதிய செந்நிறம் பெற்றுப் பொன்னொளி மிக்குப் பொலிந்திருந்தன என்பதாம். தன்நிறம் என்றது பொன்னிறத்தை.

இந்நிகழ்ச்சியைத் தழுவி ஓர் உறுதி நலனைக் கவி இதில் உணர்த்தி யிருக்கிறார்.

சிறந்த குணநலமுடைய பெரியோர்கள் ஒரோ வழிச் சிறியோர்களைச் சேர நேர்ந்தால் அவரது இயல்பான சிறுமையை நீக்கிஅவர்க்குப்பெருமையைக்கொடுத்தருளுவர்; உலகில்என்றும் அனுபவ சாரமாயுள்ள இவ் வுண்மையை இன்று இந்த அயோத்தியர் இரதங்கள் நன்று காட்டி நின்றன என்பார் இரண்டையும் சேர்த்து இங்கே நமக்குக் காட்டியருளினர்.

மேலவர் இரதத்திற்கும், அவர் வாய்ச்சொல் பொன் உருளைக்கும், சிறியவர் கல்லுக்கும் ஒப்பாம்.

மடமை வன்மை முதலிய புன்மைகளை நோக்கி இருண்ட கல் எனச் சிறியவரை சுண்டு எண்ணலாயினர். சேரினும் என்றது அச்சேர்க்கையின் அருமை அறியவந்தது.

மேலோர் கீழோரை எளிதில் சேரார்; ஒருவேளை அரிதாகச் சேர நேரின் அவர்தம் கீழ்மையை நீக்கி அவரை மேன்மையாக்கி வைப்பர் என்பது கருத்து. இதனல் அம்மேன்மையாளரது மேலான பான்மை புலனும். தெருண்ட என்றது அவரது உள்ளத் தெளிவும் உயிர்ப் பண்பும் உணர நின்றது.

மனக்கண் குருடுபட்டுச் செய்வன தவிர்வன தெரியாமல் சிறியவர் மறுகியுழல்வர் ஆதலால் மடமை மலிந்த அம்மறுக்கம் மருண்ட தன்மை என வந்தது. தெளிந்த பெரியவர் இழிந்தவரோடு கூடினும் இழிந்துபோகார்; அடுத்தவரெவரையும் உயர்த்தி என்றும் அவர் உயர்ந்தே நிற்பர் என்பதாம். அவரது பெற்ற தலைமையும், நிலைமையும் இதனல் இனிது புலனும்.

திருவயோத்தியிலாயின் வீதிகள் இனிய தளவரிசையாய் மிகவும் செப்பம் செய்யப் பெற்றிருக்கும். செவ்விய அந்த இராச வீதிகளில் ஊர்தற்குரிய திவ்விய இரதங்கள் வழியிடையே எதிர்ந்த மலைச்சாரலில் ஊர நேர்ந்தமையால் இருண்ட கல்லோடு இங்ஙனம் புரண்டு சேர நேர்ந்தன என்க.

தெருண்ட மேலவர் சிறியவரோடு சேர்தலும் இவ்வாறு எதிர்பாராத ஓர் அரிய சம்பவமாம் என்பது குறிப்பு. தேரோட்டத்தோடு பிணைத்துப் பாரோட்டத்திற்கு ஓர் நீதியை இதில் விளக்கியிருக்கும் திறம் நுனித்து நோக்கத்தக்கது.

இரதம் படிந்த இந்தக் கவியோடு எதிர்வைத்துச் சிந்தனை செய்யும்படி கந்தபுராணத்திலிருந்து கவி ஒன்று இங்கே தந்து காட்டுதும். கருத்து நிலை காண்க.

"துருளை மான்பிணித்து இளஞ்சிறார் ஊர்ந்திடும கொடித்தேர்
உருளை ஒண்பொனை மணித்தலம் கவர்ந்துகொண் டுறுவ
வெருளின் மாக்களை வெறுப்பதென்? முனிவரும் விழைவார்
பொருளின் ஆசையை நீங்கினர் யாவரே புவியில்?"

(கந்தபுராணம், நகர்புகு படலம், 53.)

சூரபன்மனுடைய இராசதானி நகரமாகிய மகேந்திரபுரியில் இராசவீதிகள் யாவும் பளிங்குப் பாளங்களால் தளவரிசைகள் செய்யப்பட்டிருந்தன. அங்கே இளங்குமரர்கள் மான்கள் பூண்ட அழகிய இரதங்களை அவ்வீதிகளில் ஊர்ந்து சென்றனர். பொன்மயமான அத்தேர் உருளைகள் படிகத் தலத்தில் படிந்துசெல்லுங்கால் அப் பசும்பொன் நிறத்தைக் கவர்ந்துகொண்டு செஞ்சோதி வீசி அது சிறந்து திகழ்ந்தது; ஓர் அறிவுமில்லாத சடமான மண் தலமே இங்ஙனம் பேராசையோடு பொன்னைக் கவர்ந்துகொண்டதானல் ஆறறிவுடைய மக்களது பொருளாசையைக் குறித்துக் குறை கூறலாமா? முற்றத்துறந்த முனிவர்களும்கூடப் பொருட்பற்றைவிடமுடியாமல் புலையாடுகின்றனரே! உலகில் பொருளாசையை நீங்கினவர் மிகவும் அரியர் என்பதாம்.

நகரின் செல்வச் செழிப்பு, வீதிகளின் விளக்கம், ஊர்திநிலை, குமாரர்களின் குதூகலம் முதலியவற்றைக் குறித்து வந்திருக்கும் இது உயிர்களின் ஓர் அனுபவத்தையும் உணர்த்தி நிற்கின்றது.

" உருண்ட வாய்தொறும் பொன் உருள் உரைத்துரைத்து ஓடி,"
"உருளை ஒன்பொன்னை மணித்தலம் கவர்ந்துகொண்டு உறுவ"

என்னும் இவ் இரண்டும் ஒரே நிகழ்ச்சியில் உதித்துவந்தன; ஆயினும் இவற்றிலிருந்து கிளைத்திருக்கும் நீதிகள் இருவேறு நிலையில் பிரிந்து நிற்கின்றன. முன்னது பெரியோரின் தன்மையை உணர்த்தி வந்தது; பின்னது பொருளாசையின் வன்மையை விளக்கி நின்றது.

பொதுவாக வரும் கதை நிகழ்ச்சிகளில் உலக அனுபவங்களையும், உறுதி நலங்களையும், மனித இயல்புகளையும் கவிகள் எவ்வாறு இடையிடையே உரிமையுடன் உணர்த்தி வருகின்றார் என்பதை இவற்றால் அறிந்துகொள்ளலாம்.

வாய்த்த இடந்தோறும் மக்களுக்குத் தக்க உணர்ச்சிகளை நினைப்பூட்டி வருவதே உத்தம கவிகளின் குறிக்கோளாகும்.

செல்வப் பெற்றியை ஒத்த நிலையில் வியப்பாக விளக்கி உறுதி நலனை அறிவுறுத்தி வந்திருக்கும் இக்கவிகளின் இயல்பும் இசையும் உய்த்துணர்ந்து சிந்திக்கத்தக்கன.

மனிதன் சார்ந்ததன் வண்ணமாம் தன்மையன்; நல்ல பழக்கங்களையும், நல்லோரையும் சாரின் அவன் நல்லவனாகின்றான்; தீயவழக்கங்களையும் தீயோரையும் சேரின் தீயவனாகி அவன் சிறுமை படைகின்றான். ஆகலான் மேன்மையை விரும்பும் பான்மையையுடைய மனிதன் தூய அறிவுடைய மேலோரையே என்றும் நேயமாகப் பேணிக்கொள்ளவேண்டும் என்பது இங்கே காணத்தக்கதோர் உறுதியாகும்.

தெருண்ட மருண்ட என்பன தெளிவையும், மயக்கத்தையும் முறையே குறித்து அவற்றை யுடையவரது உயர்வையும் இழிவையும் ஒருங்கே உணர்த்தி நின்றன. தெருண்ட மேலவர் தம்மை அடுத்தவரது மருண்ட புன்மையை மாற்றி மாண்பு மிகச் செய்வர் என்றதனால் அவரது இயல்பும் உயர்வும் உணரலாகும்.

" விடமும் வந்து ஈசன் கோல மிடற்றினின் நீல வண்ண
வடிவுபெற்று அணியதாக வயங்கிற்றுப் பெரிதும் என்றால்
கொடியரும் பெருமையோரைக் கூடின்வெங் கோது நீங்கி
ஓடுவறு நலம்பெற் றுய்தல் உரைப்பதென் உலகின் அம்மா."
(பாகவதம், 8, 3, 24)

சிவபெருமானுடைய கண்டத்தைச் சார்ந்தமையால் நஞ்சும் கூட நீலமணி என ஞாலம் துதி செய்ய நின்றது. ஆகவே பெரியவரைக்கூடின் கொடியவரும் குற்றம் நீங்கிப் பெருமையடைவர் என்பதை இங்கே வேறு நான் விதந்து சொல்லவா வேண்டும்? என இக்கவி சொல்லியிருக்கும் அழகைப்பார்க்க. தம்மைச் சார்ந்தவரது கீழ்மையை நீக்கி மேன்மை ஆக்கி வைப்பதே மேலோர்தன்மையாம் என்பதை நூலோர் இங்ஙனம் பலவகை நிலையிலும் நலமுற விளக்கியிருக்கிறார். அவ்விளக்கங்கள் கவிகளுடைய பழக்கங்களையும் பயிற்சிகளையும் பார்வைகளையும் பான்மைகளையும் விளக்கி வெளி வருகின்றன. அடியில் வருவது காண்க.

"வெளிறு நீரரும் பெரியரை மேவிடின் அவர்தம்
ஒளிறு நீரெலாம் உறுவரென் பதுதிடம்; உவரி
குளிரு நீரும் வண்ணமும் குரூஉத தழலும்பேர் ஒலியும்
துளிசெய் மாட்சியும் பெற்றன தோய்ந்தவெண் மேகம்."
(விநாயக புராணம், நாட்டுப் படலம், 10)

வெண்மையான மேகம் கடலோடு தோய்ந்தமையால் அதன் தண்மை தகைமை நிறம் ஒலி முதலியன யாவும் பெற்று மேலோங்கி நின்றது; அதுபோல் வெளிற்றுத் தன்மையரான சிறியரும் தெளிவுடைய மேலோரைச் சேரின் அவர்தம் சிறுமைநீங்கிப் பெருமை பெறுவர் என்பது திண்ணம் என்னும் இதுவும் ஈண்டெண்ண வுரியது. இன்னும் ஒன்று அடியில் வருகின்றது.

மேலோர் இயல்பு.

"பாலோடு அளாயநீர் பாலாகும் அல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாம்—தேரின்
சிறியார் சிறுமையும் தோன்றாதாம் நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து." (நாலடியார் 177)

பெரியாரோடு சிறியார் சேரின், அவர் சிறுமை மாறிப் பெருமை பெறுவர் என்பதற்குப் பாலொடு கலந்த நீர் இதில் உவமையாய் வந்துள்ளது. பால் பெரியார்க்கும், நீர் சிறியார்க்கும் ஒப்பாம். பொருள் நிலைகளை உய்த்துணரும்படி வைத்திருக்கும் இவ்வுவமைகளின் நயங்களை ஊன்றி யுணரவேண்டும்.

பெரியோர் பெற்றியைக் குறித்து வந்திருக்கும் இந்த நீதிக் கருத்தை நினைந்துகொண்டுதான், தெருண்ட மேலவர் என்னும்

கவியைக் கம்பர் பாடியிருப்பாரோ?என்று நாம் நினைந்துகொள்ளும் படி அது நிலவி நிற்கின்றது. "சிறியவர் மருண்ட புன்மையை மேலவர் மாற்றுவர்" என்றதில் இது வழக்கே என்றது இயற்கை நிகழ்ச்சியாய் உலகறிந்த வழக்கமாய் எங்கும் அது வழங்கி வருகின்றதென்பது விளங்க என்க. மருட்சி நீங்கித் தெருட்சியடைந்து எல்லோரும் மேலோராயிருக்கவேண்டும் என்பது கருத்து.

இரதங்களைப் பற்றிச் சொல்ல நேர்ந்த இடத்தில் இங்ஙனம் ஒரு நல்ல நீதியையும் நயமாகச் சொல்லி யருளினர்.

இவ்வண்ணமே யானை குதிரை ஒட்டகம் முதலியனவும், ஆடவர் மகளிர் எல்லோரும் அங்கே அமர்ந்திருந்த நிலைமைகளையும், உவந்து புரிந்த உல்லாசங்களையும், இடையிடையே நிகழ்ந்த சல்லாபங்களையும், உணர்வு நலம் ததும்ப நம் கவியரசர் உரைத்திருக்கிறார். அப்பாடல்கள் யாவும் பெரும்பாலும் சிருங்கார ரசமாய் உவகைச் சுவைக்கு இடமாயுள்ளன. சந்திரசைலத்தில் அன்று தங்கி யிருந்து மறுநாள் எழுந்து சேனைகள் நடந்து சோணை நதி என்னும் அழகிய பெரிய ஆற்றங்கரையை அடைந்தன. குளிர் பூம்பொழில்களும், இளமரக்காவுகளும், நறுமலர்ப் பொய்கைகளும், புடைசூழ்ந்துள்ள அந்த இனிய இடத்தில் ஆறுதலாக அரசர்பிரான் தங்க நேர்ந்தான்.

மாலைவரவும் மகளிரும் மைந்தரும் சோலைகளில் புகுந்து பூக்கள் பறித்துப் பொழிலாட்டயர்ந்து பூம்புனலாட ஏம்பலோடெழுந்தனர். பரிமளம் கமழ்ந்த அக்குளிர் பூங்காவுள் எழில் வளர் மகளிர் நளிர்மலர் கொய்ய இடங்கள்தோறும் பரந்து நெருங்கினர். தருண மங்கையர் இங்ஙனம் சார்ந்தபோது அங்கே நேர்ந்த அதிசயங்களை மதிநலங் கனியக் கவி மிகவும் நயமாகக் கூறியிருக்கிறார். சுவை நிறைந்த அந்த இனிய காட்சிகள் பலவகை நிலைகளில் பரவி நிலவியுள்ளன. சில அடியில் வருவன காண்க.

சோலைக்குயில்கள் சோர்ந்து நின்றன.

பாசிழைப் பரவை யல்குல் பண்தரு கிளவி தண்தேன்
மூசிய கூந்தன் மாதர் மொய்த்தபே ரமலை கேட்டுக்
கூசின வல்ல பேச நாணின குயில்க ளெல்லாம்
வாசகம் வல்லார் முன்னின்று யாவர்வாய் திறக்கவல்லார்?

பனிமலர்க் கோம்புகள் பாதம் பணிந்தன.

நஞ்சினும் கொடிய நாட்டம் அமுதென நயந்து நோக்கிச்
செஞ்சவே கமலக் கையால் தீண்டலும் நீண்ட கொம்பர்
தஞ்சிலம் படியில் மென்பூச் சொரிந்துடன் தாழ்ந்த என்றால்
வஞ்சிபோல் மருங்குலார் மாட்டு யாவரே வணங்கலாதார் ?

வண்டுகள் கண்டு மயங்கி வந்தன.

நதியினும் குளத்தும் பூவா நளினங்கள் குவளையோடு
மதிநுதல் வல்லி பூப்ப நோக்கிய மழலைத் தும்பி
அதிசயம் எய்திப்புக்கு வீழ்ந்தன அலைக்கப் போகா
புதியன கண்டபோழ்து விடுவரோ புதுமை பார்ப்பார் ?

(பூக்கொய்படலம், 6, 7, 9)

இந்த மூன்று கவிகளில் மூவகைக் காட்சிகள் மேவியுள்ளன.

1. மகளிர் சோலையுள் புகுந்தனர் ; புகவே, அங்கே உல்லாசமாய் உலாவியிருந்த குயில்கள் அஞ்சி ஒடுங்கின ; கிளைக்குக் கிளை தாவிப் பறந்து கூவிக்குலாவிக் குதூகலித்து வந்த அப் புள்ளினங்கள் இம்மங்கையர் வரவும் கூவுதல் ஒழிந்து காவினுள் அடங்கி அங்ஙனம் ஒடுங்கி நின்றமைக்குக்காரணம் அச்சமேயாம். ஆளரவம் கேட்டவுடனே பறவைகள் இயற்கையாகப் பயப்படும் ஆதலால் அங்கே குதிப்பொடு கூவாமல் பதுங்கியிருந்தன.

இந்த இயற்கை நிகழ்ச்சியைத் தம் இச்சைப்படியே செயற்கையாக மாற்றித் தக்க ஏது ஒன்றை எடுத்துக்காட்டி உலகமெல்லாம் உவந்துகொள்ளுமாறு கவி இதில் ஓர் அழகிய கற்பனையைச் செய்திருக்கிறார்.

“அதி மதுரமான இனிய மொழிகளைப் பேசுகின்ற இந்தச் சுந்தரிகள் நமது குரலோசையைக் கேட்டால் நிந்தனை புரிவர் ; நல்ல மெல்லிசை பயின்ற இச்சொல்லழகிகளுக்கு நம் வல்லோசை புல்லிதாய்த் தோன்றும் ஆதலால் இவர் போகும் வரையும் நாம் யாதும் வாய் திறக்கக்கூடாது” என்று குயில்கள் நாணி ஒடுங்கி இருந்தன என்பார் பேச நாணின என்றார்.

மனிதரைக் கண்ட அச்சத்தால்தான் அவ்வாறு அடங்கி நின்றன என உலகம் இயல்பாக எண்ணும் ஆதலால் அதனை எதிர் மறுத்துக் கூசின அல்ல என்று குறிப்போடு கூறினர்.

கூச்சமும் நாணமும் பேச்சைத் தடைப்படுத்தும் ஆகலான் பேசாமைக்கு ஏதுக்களாக அவை ஈண்டுப் பேச நேர்ந்தன.

பறவைகளுள் குயிலினங்கள் குரலினிமைக்குப் பெயர்பெற் றவையாதலால் இனிய சொல்லுக்கு உறவுரிமையாகக் காவியங் களில் அவை மிகவும் பாராட்டப்பட்டுள்ளன.

இனிய கீதத்தைப்பற்றிப் பேசுங்கால் கோகில கானம் என்பர். கோகிலம்=குயில். இசையில் இங்ஙனம் இசைபெற் றுள்ள குயிலோசையினும் இனிய மொழியுடையராய் அம்மங் கையர் சிறந்திருந்தனர் என்பதாம். அவரது பேச்சினிமையைக் குறித்துக் கவி கற்பனை செய்து பேசியிருக்கும் இனிமை பேரு வகைக்கு இடமாயுள்ளது.

தாம் புனைந்து குறித்ததைத் தெளிவுபடுத்தி வலியுறுத்தற்கு உலக நிகழ்ச்சியில் அனுபவசாரமான ஓர் இனிய பொருளை முடிவில் எடுத்துக்காட்டி முடித்திருக்கிறார்.

"வாசகம் வல்லார் முன்நின்று யாவர்வாய் திறக்கவல்லார்?" என்னும் இந்த வாசகம் யாவரும் நேசமுடன் நினைந்து மகிழ வாசம் கமழ்ந்து வந்துள்ளது.

சொல்லினும் பொருளினும் பல்வகை நலங்கள் படிந்து எல் லாரும் விழைந்து கேட்கும்படி விளைந்து வருகின்ற உயர்ந்த பேச்சாளிகள் முன்னே பிறர் எழுந்து பேச நாணுவர் ஆதலால் அந்த மானுட அனுபவம் பறவைகளாகிய குயில்களிடமும் கூடி யிருந்தது என்று இங்ஙனம் பாடியிருக்கிறார். பிறர் வாயடங்க வீறுகொண்டுள்ள கவியின் வாசக வன்மையும் ஊகமா யிங்கே உணர வந்தது.

2. மலர்கள் மலர்ந்து நிலவியிருந்த மெல்லிய பூங்கொடி களை வளைத்து மங்கையர் பூப்பறித்தனர்; அங்ஙனம் பறிக்குங் கால் அவர் காலடியில் பூக்கள் பல உதிர்ந்தன; மலர் கொய்யும் பொழுது நந்தனவனத்தில் நேர்ந்த இந்த நிகழ்ச்சியில் மனிதர் அனுபவமான இனிய ஒரு நிலையை இடைப்புகுத்திக் கவி இங்கே ஓர் இன்ப ஆடல் புரிந்திருக்கின்றார். "தீண்டலும் நீண்ட கொம்பர் அடியில் மென்பூச்சொரிந்து தாழ்ந்த" என்றது அங்கே

நிகழ்ந்த நிலையோடு மைந்தர் நிலைமையும் ஓர்ந்துகொள்ள வந்தது. உலகக் காட்சியில் இயல்பாகக் கண்டதை உள்ளக் காட்சியில் நயமாக உணரவைத்தது நகையும உவகையும் தொகையாய் வர நவினமாக இவண் ஓர் வகை செய்திருக்கிறார். அந்தக் கற்பனைச் சித்திரம் அற்புதமான அனுபவமுடையது.

காதல் நிலை யாதும் தெரியாத செடிகொடிகளே பெண்களைக் கண்டவுடன் இந்தப்பாடு பட்டன! என்றால், காதல் நலம் கனிந்துள்ள ஆடவர்கள் அவர்பால் என்னபாடுபடுவர்? என்பதை ஈண்டு எண்ணிக்கொள்ள வேண்டும் என்பதாம்.

வஞ்சிபோல் மருங்குலார் என்றது உடல் ஒல்கி ஒசிய உலாவித் திரிந்த அம்மெல்லியலாரின் இனிய உருவக் காட்சியை உணர்த்தி நின்றது. வஞ்சி=கொடி. "யாவரே வணங்கலா தார்?" என்பதில் வினா உலகறிதேற்றமாய்த் துணிவு தோன்ற வந்தது. தேவர் உள்பட யாவரும் பாவையரிடம் பணிந்து கிடப்பர் என்பதாம்.

"வணங்கலா வயிரத் திண்டோள் மணிமுடி மன்னர் வானோர்
மணங்கமழ் மலரோன் மாலோன் மதிமுடி புனைந்தோன்மாதர்
பிணங்கிட நேர்ந்த போது பேதுற வடைந்து பேணி
இணங்கிட வணங்கி யன்றோ இன்பமீ தூர்ந்து நின்றார்."

என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது.

பூக்கொய்து வரும்போது பூங்கொடிகளிடம் நிகழ்ந்ததை உலகப் பாங்கில் வைத்து மகளிர் மாண்பை இவ்வாறு உரைக்க லானார். இவரைப் பின்பற்றிப் பரஞ்சோதி முனிவரும் இந்த வகையில் வந்திருக்கிறார். அடியில் வருவது காண்க.

"இம்பர்வீ டளிக்கும் தெய்வம் மகளிரே என்பார் கூற்றம்
வம்பல; மெய்யே போலும், வளைக்கையார் வளைப்பத் தாழ்ந்து
கமபமுற் றடிப்பூச் சிந்தி மலர்முகம கண்ணீர் சோரக்
கொம்பரும் பணிந்த தென்றால உலகியல் கூறற் பாற்றோ?"
(திருவிளையாடல், தருமி, 33)

தம் சிலம்பு அடியில் மென்பூச் சொரிந்து கொம்பர் தாழ்ந்த எனக் கம்பர் கூறியுள்ளதையே முழுவதும் அடியொற்றி இது வந்திருத்தல் அறிக. இக்கவியின் கருத்தைக் கண்ணூன்றி நோக்கிப் பொருள் நிலைகளை அறிந்துகொள்க. நம் கவியரசர்

குறிப்பை மனத்தில் வாங்கிக்கொண்டு முனிவர் இங்ஙனம் இனிமையாக வேலை செய்திருக்கிறார். காவியக் கவிகளின் மனநிலைகள் அவர்தம் பாவினங்களில் படிந்து வருகின்றன. கலாவினோதங்கள் பலவிதங்களாய்ப் பிரிந்து அற நலங்கள் சுரந்து அறிவுலகில் பரந்து நிற்கின்றன. தம் கண்ணில் கண்டதை உலகம் என்றும் எண்ணிக்கொண்டு இன்புறும்படி எழிலுற எழுதிக்காட்டுகின்றனர். அவரது எழுத்தை மன்பதைகள் வழுத்திவருகின்றன.

3. மலர் கொய்து உலாவிய மகளிர் முகங்களில் வண்டுகள் வந்து படிந்த வகையினை இதில் வரைந்து காட்டியிருக்கிறார்.

தாமரையும் குவளையும் நீர்ப்பூக்கள். அவற்றுள் வண்டுகள் மது உண்டு செல்லும். அம்மலர்களோடு அடிக்கடி பழகியுள்ள வண்டுகள் கோசல தேசத்துப் பெண்களைக் கண்டன; காணவே அவர்தம் முகங்கள் தாமரைகள்போல் தோன்றின; கண்கள் நீலமலர் போல் நிலவின. நீர் நிலைகளில் இதற்குமுன் தாம் பார்த்தனபோலல்லாமல் ஓர் வல்லிக்கொடி புதுமையாகப் பூத்துள்ளனபோல் அவை பொலிவுற்றிருந்தன; ஆகவே அப்புதுமையில் மயங்கி வந்து இப்பாவையர் முகங்களில் அவை ஆவலாய் மொய்த்தன; மொய்க்கவும் இவர் கைகளை வீசி அலைத்து முடுக்கினர்; அவ்வாறு கலைத்து முடுக்கியும் அவை யாதும் கலைந்து போகாமல் மேலும் மேலும் தொடர்ந்து படிந்தன ஆதலால், "தும்பி அதிசயம் எய்திப்புக்கு வீழ்ந்தன; அலைக்கப் போகா;" என்றார்.

நதியினும் குளத்தும் பூவா நளினங்கள் என்றது மகளிர் முகங்களை. குவளை என்றது கண்களை. வல்லி என்றது உடலமைதியை. நளினம்=தாமரை. தும்பி=வண்டுகள்.

வல்லிக்கொடிபோன்ற இனிய மெல்லிய அழகிய உருவமும், குவளை மலர்ந்த தாமரைகள்போல் கண்களும் முகங்களும் கவினுற அமைந்து அப்பெண்கள் இருந்தனர் என்பதாம்.

அப்பொழுதுகளுடைய அவயவ அமைதியும், சமுதாய சோபையும் இதனால் எளிது தெளியலாம்.

பூஞ்சோலையில் வண்டுகள் இயல்பாகப் பறந்து திரியும் நிலையினைக் கவி இவ்வாறு அற்புதமாகக் கற்பனை செய்திருக்கிறார்.

இயற்கை நிகழ்ச்சிகளில் கவியின் இருதயம் புகுந்து வேலை செய்யும் திறங்கள் மிகவும் அதிசயமாயுள்ளன.

அவர் கருதிய கருத்துகள் சொல்லுருவில் வெளி வந்து எல்லையில்லா இன்பங்களை மன்பதைக்கு என்றும் இனிது உதவி வருகின்றன. அவ்வரவில் உணர்வு நலங்கள் ஒளிபெற்று உயர்

1. வாசகம் வல்லார் முன்நின்று யாவர் வாய் திறக்கவல்லார்?
2. வஞ்சிபோல் மருங்குலார் மாட்டு யாவரே வணங்கலாதார்?
3. புதியன கண்டபோழ்து விடுவரோ புதுமை பார்ப்பார்?

என்னும் இம்மூன்று வாசகங்களும் உலகம் தெளிந்த பழமொழிகளாய், வேற்றுப் பொருள் வைப்பு என்னும் அணிநலம் அமைந்து, மேலே வந்துள்ள மூன்று கவிகளிலும் முதல் மூன்று அடிகளில் குறித்துள்ள பொருள்களை முறையே ஆதரித்து, ஏதுவை வலியுறுத்தி இனிது விளக்கியுள்ளன.

உலக அனுபவங்களைப் புலவர் வாயிலாகக் காணும்பொழுது அவை புதுமையும் இனிமையும் பொருந்தி மிளிர்கின்றன.

கண்ணும்பூச்சி என்னும் விளையாட்டு ஒன்று பண்டுதொட்டு இன்றும் இந்நாட்டில் நிகழ்ந்து வருகின்றது. இளஞ்சிறார்கள் இதனை விரும்பி விளையாடுவர் ஆயினும் காதலர்களிடையே இது மிகவும் கனிந்து விளங்கும்.

மறைவாகப் பின்னே வந்து ஒருவர் கண்ணைப் பொத்திக் கொண்டு மற்றொருவர் வாய்பேசாது நிற்பர். பொத்தப்பட்டவர் பொத்தி நிற்பவர் இன்னாரென்று இனந்தெரிந்து சொல்ல வேண்டும்; சரியாகச் சொல்லிவிடின் ஆட்டத்தில் வென்றவராவர்; தவறுயின் ஏமாந்தார் என்று அயலவர் இகழ்ந்து சிரிப்பர்.

செல்லமான இந்த உல்லாச ஆடல் பூக்கொய்து உலாவி வருகின்ற பொழுது காதலர்களிடையே ஆதாவுடன் நிகழ்ந்தது. அந்தக் காட்சியை அடியில் வரும் கவிப்படத்தில் காண்க.

காதலர் கண் பொத்தி ஆடல்.

"போர்என்ன வீங்கும்பொருப்பன்ன பொலங்கொள்திண்டோள்
மாரன அனையான் மலர்கொய் திருந்தானை வந்தோர்
கார்அன்ன கூந்தற் குயிலன்னவள் கண்புதைப்ப
ஆரென்ன லோடும் அனலென்ன அயிர்த்துயிர்த்தாள்."

(பூக்கொய்படலம், 18)

தன் காதலனை வந்து ஒரு காதலி உரிமையுடன் கண்ணைப் பொத்தியதும் அங்கே நிகழ்ந்ததும் காட்டிய படி யிது. காதற் சுவை கனிந்து, ஓதற்கு இனிதாய் உருவமைந்து, உணர்தற்கரிய தோர் பொருள் பொதிந்து, உவகைச் சுவையாய் வந்திருக்கும் இந்த அருமைக் கவி ஆய்ந்து மகிழத்தக்கது.

இருவருடைய உருவநிலைகளும் உள்ளப் பான்மைகளும் உரைகளில் ஒளிர்கின்றன. உரைத்திறங்கள் உணருந்தோறும் உவகை சுரந்தருள்கின்றன.

சண்டை என்று கேட்ட அளவிலேயே திண்டோள்கள் வீங்கும் என்றதனால் அமரில்

போர் என்று வேறு ஒன்றை வழிப்போக்கர் யாரேனும் சொன்னாலும் தோள்பூரிக்கும் என அவனது வீரநிலையை விளக்கி யிருக்கும் நயம் வியந்து நோக்கவுள்ளது.

மாரன அனையான் என்றது என்றவாறு.

மாரன்=மன்மதன். வீரமும் அழகும் மேலான நிலையில் அவனிடம் மேவி யிருந்தன என்பதாம். ஆடவன் என்றால் ஆண்மையில் சிறந்திருக்கவேண்டும் என்பதைக் கவி யாண்டும் அறிவுறுத்திவருகிறார். மனிதருக்கு உரிய வீரமாட்சியைத் தமது பாரகாவியத்தில் பெரிதும் பாராட்டியிருத்தலால் இவரது உரனுடைமையும் உள்ளப் பான்மையும் உணரலாகும்.

அந்தச் சுந்தரவீரன் மலர்கொய்துகொண்டிருக்கும்பொழுது அவனுடைய காதலி பின்புறம் வந்து விநோதமாக அவன் கண் களைப் பொத்தினாள். பொத்தவே அவன் அந்தக் கையைப் பிடித்துக்கொண்டு, "யார்?" என்று கேட்டான். அங்ஙனம் கேட்டவுடனே அவள் உள்ளங்கொதித்துக் கைகளை வெடுக்கென்

றெடுத்து வெய்துயிர்த்தாள். அந்த மூச்சுக் காற்றில் நெருப்புச் சுவாலை வீசி நின்றது ஆதலால்,

"ஆர் என்னலோடும், அனல் என்ன அயிர்த்து உயிர்த்தாள்" என்றார். அவளுடைய வெப்பமும் விம்மலும் இதனால் அறியலாகும். சொன்னவுடனே இன்னவாறானாள் என்பதாம்.

இவ்வாறு கோபங்கொண்டு இவள் கொதித்து அழும்படி கொடுமையான வார்த்தைகள் இங்கே என்ன நிகழ்ந்தன? ஆர்? என்று மிகவும் இதமாகக் கேட்டதைத் தவிர வேறு ஒன்றும் அவன் கடுமையாகச் சொல்லவில்லையே! அப்படி இருக்க இப்படிக் கொடுமூச்செறிந்து இவள் கொதிப்பானேன்? கொஞ்சம் சிந்தித்து நோக்கவேண்டும். அவளது நெஞ்சு நிலை நேரே தெளிவாய் எவரும் எளிதாக அறியமுடியாதபடி நுணுகியுள்ளது.

"யார்?" என்று அவன் வினவியதே இவள் மனநிலையை மாற்றிச் சினம் மிகச் செய்தது. "நான் வந்து கண்ணைப் பொத்தினேன்; இவர் யார் என்று கேட்டாரே! அப்படியானால் வேறு பல மகளிரும் இவரோடு இப்படிமுன்புவிளையாடியிருக்கிறார்கள்; இல்லையானால் இவ்வாறு இவர் கேட்டிரார்; நம்மைத் தவிர வேறு எவரையும் தீண்டி அறியாத ஆண்டகை என்று எண்ணியல்லவா இதுவரை ஏமாந்திருந்தேன்; என் எண்ணம்மண்ணாய்ப்போனது; மறுமுகம் பாராத உத்தமர் என உரைகள் பல பிதற்றி என்னை வஞ்சித்து வந்திருக்கும் வனப்புத்தான் என்னே! இவர் ஒழுங்கு இன்று வெளிப்பட்டது; இப்படியா சங்கதி!" என இவ்வண்ணம் பற்பல எண்ணி வெப்பம் மிகுந்து வெய்துயிர்த்து விம்மினாள். இந்த உள்ளக் கிடைக்கைகளெல்லாம் "அயிர்த்துஉயிர்த்தாள்" என்ற சொல்லால் உணர்த்தியிருக்கும் கவியின் சித்திரம் விசித்திரமாக உள்ளது. அயிர்த்தல்=சந்தேகித்தல். இந்த ஐயுறவே அகநிலை திரிந்து வெய்துயிர்த்தமைக்குக் காரணம் ஆதலால் முந்துற வந்தது. அயிர்ப்பிலும் உயிர்ப்பிலும் அனல் தழுவி யுள்ளமையால் அவற்றின் கொடுமையும் கொதிப்பும் உணரலாகும்.

கள்ளம் யாதும் இல்லாமல் உள்ளபடியே இயல்பாக யார்? என்று அவன் கேட்டதை இவள் இவ்வாறு மாறாக எண்ணிக்

கொண்டு மறுகி மயங்கி அழுது நின்றது உழுவலன்பான உள்ளக் காதலால் என்க. நுட்பமான ஊடல் இதில் உறைந்திருத்தலால் இங்ஙனம் வருவதைப் புலவி நுணுக்கம் என்பர்.

* "யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று." (குறள், 1314)

என்ற தேவர் வாக்கை அடியொற்றி இது வந்திருக்கின்றது. அன்பு நலம் கனிந்த உயர்ந்த காதலிகள் தம்பதியினிடம் கொண்டுள்ள ஆர்வமும், சபலமான அவாது நெஞ்சு நிலையும், சரச மொழிகளும், ஊடல் ஆடல்களும் காவியத்தில் பல இடங்களிலும் சுவை மலிந்து சுரந்து நிற்கின்றன.

பூக்கொய்தல், நீர்விளையாடல், உண்டாடல்களில் மக்களுடைய பல்வகையான உல்லாசங்களையும் சல்லாபங்களையும் எல்லாரும் இன்புற

இங்ஙனம் களிப்புற்றிருந்த மன்பதைகளோடு சக்கரவர்த்தி இன்புடனெழுந்து இனிது நடந்து மிதிலையை அடைந்தார்.

தன்னகர் அருகே மன்னர்பிரான் வந்ததை யறிந்ததும் சனக மன்னன் பெருமகிழ்ச்சியடைந்து உரிய படைகள் புடைசூழ அரிய மரியாதைகளுடன் எதிர் அழைக்க வந்தான். அந்த அழைப்பு அதிசய நிலையில் தழைத்து நின்றது.

சக்கரவர்த்தி இப்பொழுது தனக்குச் சம்பந்தியாய் வாய்த்திருக்கும் பேற்றை நினைந்து சனகன் பேரார்வ மீதூர்ந்திருந்தானாதலால் அவனது படைபரிவாரங்கள் யாவும் ஒருங்கே திரண்டு முதிர் காதலோடு எதிர்காண வந்திருந்தன. அந்தச் சந்திப்பைக் குறித்து வந்திருக்கும் கவிகள் அடியில் வருவன.

---

* யாரினும் என்றது உலகிலுள்ள காதலர்கள் எவரினும் என்றவாறு. ஆண் பெண் என இருபாலாய்த் தோன்றி உரிமை பூண்டு உழுவலன்புடன் மருவியுள்ள காதலர் யாவரினும் நாம் இருவரும் மிகவும் உயர்ந்த காதலுடையேம் என்று நாயகன் உவந்து சொன்னான். நாயகி அதை மாறுகக் கருதிக்கொண்டாள்: வேறு காதலிகளினும் உன்மீது நான் பெரிதும் காதலுடையேன் என்று அவன் உறுதி கூறியதாக எண்ணிப் பொறுதியின்றி இங்ஙனம் அவள் ஊடினாள் என்க.

சனகன் எதிர்கொண்டது.

'வந்தனன் அரசன் என்ன மனத்தெழும் உவகை பொங்கக்
கந்தடு களிறும் தேரும் கலினமாக் கடலும் சூழச்
சந்திரன் இரவி தன்னைச் சார்வதோர் தன்மை தோன்ற
இந்திர திருவன் தன்னை எதிர்கொள்வான் எழுந்து வந்தான்.

படை பரிவாரங்கள் வந்தது.

கங்கைநீர் நாடன் சேனை மற்றுள கடல்க ளெல்லாம்
சங்கினம் ஆர்ப்ப வந்து சார்வன போலச் சாரப்
பங்கயத் தணங்கைத் தந்த பாற்கடல் எதிர்வ தேபோல்
மங்கையைப் பயந்த மன்னன் வளநகர் வந்த தன்றே.''

(எதிர்கோட் படலம், 4, 5)

சம்பந்தி இருவரும் சார்ந்து சந்தித்திருக்கும் பெருமை கூர்ந்து சிந்திக்க வுரியது. சூரியனைக் காண வந்த சந்திரனைப் போலத் தசரதனைச் சனகன் காண வந்தான் எனக் கவி இங்கே காட்டியிருக்கிறார். இரண்டு பேர்களுடைய தலைமையையும் நிலைமையையும் உணர்ந்து கொள்ளும்படி இங்ஙனம் வரைந்து மொழிந்திருக்கிறார்.

சக்கரவர்த்தியின் படை பரிவாரங்களோடு மிதிலைப் படைகள் எதிர்சென்று சேர்ந்தது, பெரும்புறக் கடல்களுடன் பாற் கடல் வந்து படிந்தது போலிருந்தது என்பதாம். ஆகவே அக் கூட்டத்தின் காட்சியும் மாட்சியும் நன்கு புலனும்.

கங்கை நீர் நாடன் என்றது தசரதனை. நாட்டின் சீர்மையும் நீர்மையும் காட்டி நின்றது.

பஙகயத்து அணங்கு=இலட்சுமி. பங்கயம்=தாமரை. மங்கை என்றது இங்கே சீதையை. மணப் பருவம் குறித்து வந்தது. திருமகள் வந்து தன்னிடத்தே பிறந்திருத்தலால் மிதிலா நகரம் திருவுக்குத் தாயகமாகிய பாற்கடலோடு நேர் எண்ணவந்தது. நகரின் பரப்பு சிறப்பு அழகு இனிமை வளமை முதலியன இதனால் அறியலாகும். நகர் கடலுக்கும், சனத்திரள் வெள்ளப்பெருக்கிற்கும், குணங்கள் பாலுக்கும் ஒப்பாம்,

சூரியன் சந்திரன் சாகரம் பாற்கடல்களை எடுத்துக்காட்டி இருபேரரசுகளின் எதிர்சந்திப்பைக் கவி விளக்கியிருக்கும் வித்தகத் திறம் வியந்து நோக்கவுள்ளது.

கவிகளைக் கண்ணூன்றி நோக்கினால் இனிய பல மானசக் காட்சிகள் எண்ணூன்றி யெழுந்து இன்பம் பயக்கும்.

குடை கொடி விருதுகளும் படைகளும் இடை யெதிர் மிடையப், பொன்னணிகளும் மணியணிகளும் எங்கும் மின்னிப் பொலிய, சந்தனம் குங்குமம் புனுகு சவ்வாது முதலிய வாசனைகள் யோசனை வீச, மங்கல ஒலிகள் எங்கணும் பெருக இங்ஙனம் பொங்கி வந்த சேனைகள் எதிர் புகுந்தபொழுது முதிர் காதலுடன் மூண்டுவந்த சனகன் தசரதனைக் கண்டதும் தேரை விட்டுக் கீழிறங்கிப் பாதசாரியாய் ஆதரமீதூர்ந்து அருகடைந்தான். கையுறைகளுடன் கால் நடந்துவந்த அந்த ஐயனை அரசர்பிரான் ஆர்வமுடன் கண் குளிர்ந்து நோக்கி, "வருக, வருக" என்று உள்ளம் உருக உரைத்து உவந்து தழுவி உறவு நலம் உசாவினன். வீர உருவமும் ஞான உருவமும் சேர மருவியதுபோல் அம்மான மன்னர் இருவரும் அன்று மருவி நின்ற காட்சி வானகமும் வியப்ப வயங்கி நின்றது. அந்நிலைகளை அடியில் வரும் கவிகளில் காண்க.

### சனகன் வந்தது.

கந்தையே பொருகரிச் சனகனும் காதலோடு
உந்தலை தரியதோர் தன்மையோ டுலகுளோர்
தந்தையே அனையவத் தகவினன் முன்புதன்
சிந்தையே பொருநெடுந் தேரிலவந் தெய்தினான். (1)

### தசரதன் சனகனைத் தழுவி நின்றது.

எய்தவத் திருநெடுந் தேரிழிந் தினையதன்
மொய்கொள் திண் சேனைபின் நிற்கமுன் சேறலும்
கையில்வந் தேறெனக் கடிதின்வந் தேறினன்
ஐயனும் முகமலர்ந் தகமுறத் தழுவினான். (2)

### சேமம் விசாரித்தது.

தழுவிநின் றவனிருங் கிளையையும் தாரையும்
வழுவில்சிந் தனையினன் வரிசையின் அளவளாய்
எழுகமுந் துறவொடு இனிதுவந் தெய்தினான்
உழுவைமுந் தரியனன் எவரினும் உயரினன். (3)

தசரதனும் சனகனும் உளமலி அன்புடன் அளவளாவி நின்ற அழகமைதிகளை நளினமாக விளக்கி நிற்கும் இக் கவிகளின் உரை நலங்கள் உணர்வொளி சுரந்துள்ளன. ஊன்றி உணரின் உளநயங்கள் தெளிவாம்.

உலகுளோர் தந்தையே எனத் தசரதனைக் கவி இங்கே சுட்டியிருக்கிறார். "தாய் ஒக்கும் அன்பில்" என்று முன்பு குறித்தார். தேசமக்கள் எல்லாருக்கும் ஒரு தாயும் தந்தையும் போல் நேசம் புரிந்து மன்னன் நெடிது பேணி வந்துள்ளமையை

தகவினன் என்றது யாண்டும் நீதி முறை கோடாத நெறியுடையான் என்றவாறு. தகவு=மனச்செம்மை.

ஒரு நாட்டுக்கு மட்டும் அரசனா யுள்ளவனை உலகிலுள்ளோர்க்கெல்லாம் தந்தை என்றது பரந்து விரிந்துள்ள அவனது சிந்தையின் பெருந் தகைமையை நோக்கி.

எந்தை என்று உலகமெல்லாம் உவந்து போற்றும் திருமாலே இவனைத் தந்தை எனக்கொண்டு தனையனாய் வந்து பிறந்திருக்கின்றான் ஆதலால் உலகுளோர் தந்தைக்கும் தந்தையாய் இவன் தழைத்து நிற்கின்றான். இதனால் இவனது தலைமைத் தன்மை இனிது புலனும். அகில மங்கள குணகண சொரூபியான இராமனை மகவெனப் பெற்றிருக்கும் மகிமையை நினைந்து தகவினன் என்றார்.

ஒருவனுடைய உத்தமமான தகுதி அவனது புத்திரப் பேற்றால் அறியலாம் என்பது நித்திய வுண்மை யாதலால், சித்த சுத்தி வாய்ந்துள்ள இவனது தகவும் தன்மையும் மகவால் அறியவந்தன.

"மனம் தூயார்க்கு எச்சம் நன்றாகும்" (குறள், 456)

என்றது பொய்யாமொழி. எச்சம்=மகன். உச்சமான ஒரு தத்துவ உண்மை இதில் உய்த்துணர வுள்ளது. வழி வழியே பெருகி வருகின்ற மனிதசாதியுள் தகுதியானவரை மிகுதியாக அறிந்துகொள்ளத்தக்க கருவி ஒன்றைத் தேவர் உணர்த்தியிருக்கிறார். யாவரும் ஒருமுகமா யூன்றி யுணர்ந்து உறுதிகாணும்படி அது உருவாகியுள்ளது. அருகே வருகின்றது காண்க.

* "தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தால் காணப்படும்" (குறள் 114.)

என்றபடி புதல்வர்ப்பேற்றில் முதன்மை எய்தியுள்ள தசரதன் இங்கே தகவினன் என நின்றான்.

இத்தகைய மாண்பினையுடைய மன்னர் பிரானை முதிரன்போடு எதிர்கொண்டழைக்க வந்த சனகன் அருகே வரவும், "ஏறுக ஏறுக" என்று ஆர்வமீதூர்ந்து தேரிலிருந்தபடியே இரு கைகளையும் அரசு எதிரே நீட்ட அவன் இனிது வந்து ஏறினான். ஏறவே ஆரத் தழுவி அருகிருத்தி உறவுமுறை பாராட்டிக் குசலம் விசாரித்தான்.

முன்பு உரோமபதன் வந்த பொழுது தேரிலிருந்து இறங்கிக் காட்சி தந்த தசரதன் இதுசமயம் சனகனைத் தனது தேரிலேயே வரவேற்றுப் பக்கம் வைத்துப் பண்பு கூர்ந்து அளவளாவியிருந்தலால் சம்பந்தியினிடம் கொண்டுள்ள உரிமையும் அன்பும் உய்த்துணர நின்றன.

உழுவை=புலி. அரி=சிங்கம். இருவர் நிலைமையும் முறையே அறிய உழுவை அரிகள் உரிமையாய் வந்தன. தசரதனது கம்பீரம் பெருமிதம் வீரபராக்கிரமங்கள் யாவும் உணர அவனை இங்கே சிங்கம் என்று குறித்தார். மிருக வர்க்கத்துள் அரியேறு எவ்வாறு தலைசிறந்திருக்கிறதோ அவ்வாறே மனித வர்க்கத்திலும், மன்னர்வகையுள்ளும் இம்மன்னர் பிரான் முன்னணியில் நிற்கின்றான் என்பதாம்.

இவ்வாறு உறவுரிமை கொண்டாடியபின் இருபெரு வேந்தரும் பொருவரும் படைகள் புடைசூழ மிதிலையை நோக்கி எழுந்தருளினர்.

நகரயல்வரவும் இராமன் இளையவனோடு தன் தந்தையை எதிர்கொண்டு காண வந்தான். அக்காட்சி அன்பு நலம் சுரந்து அதிசயம் மிகுந்திருந்தது. தாதையைக் கண்டவுடனே ஆதரம் மீதூர்ந்து இராகவன் விரைந்து முன்வந்து அடிபணிந்து தொழு

* பிள்ளைகளுடைய நன்மை தீமைகளால் பெற்றோர்களுடைய உண்மையான உயர்வு தாழ்வுகளை உணர்ந்துகொள்ளலாம் என்றவாறு. "பழியின்மை மக்களால் காண்க" (நான்மணிக்கடிகை 63.), "மகன் அறிவு தந்தை அறிவு" (நாலடியார் 367) "தாயைப்போல பிள்ளை நூலைப்போல சேலை" என்னும் பழமொழியும் ஈண்டு எண்ணத்தக்கது.

தான். அந்த அழகன் பணிந்தபொழுது உழுவலன்புடன் வாரி யெடுத்து மார்போடணைத்து உள்ளமும் உயிரும் உருகித் தன்னை மறந்து மன்னன் உவந்து நின்றான். அந்நிலையினை அடியில்வரும் காண்க.

இராமன் வந்தது.

'காவியும் குவளையும கடிகொள் காயாவும ஒத்து
ஓவியம சுவைகெடப் பொலிவதோர் உருவொடே
தேவரும் தொழுகழற சிறுவன்முன் பிரிவதோர்
ஆவிவந் தெனனவநது அரசன்மா டணுகினான்.

தந்தையைப் பணிந்தது.

அனிகமவந் தடிதொழக் கடிதுசென றரசர்கோன்
இனியபைங் கழல்பணிந் தெழுதலும தழுவினான்
மனுவெனுந் தகையன்மார் பிடைமறைந்தனமலைத்
தனிநெடுஞ் சிலையிறத் தவழ்தடங் கிரிகளே.''

(எதிர்கோட்படலம், 22, 23)

இராமன் வந்து தசரதனைப் பணியவும் அந்தச் சுந்தரனை அத் தந்தை அள்ளியணைத்து உள்ளங்குழைந்து தழுவி நிற்கும் காட்சியை இதில் கண்ணூன்றி நோக்குக.

1. ஒரு உத்தம சற்புத்திரனும் விற்பனத் தந்தையும் பொற்புறத் தழுவியுள்ள அற்புத நிலைமையை அறிவுலகம் பரவசமடையும்படி கவி இங்கே உரை செய்திருக்கிறார்.

அன்பு நலம் கனிந்து உள்ளுருக்கமிகுந்து உரிமை வளர்ந்து உயிர்க்காதல் ஓங்கி இதில் உவகை மலிந்துள்ளது.

ஓவிய எழிலுடை ஒருவன் என இராமனை முன்பு குறித்தார்; இங்கே ஓவியம் சுவைகெடப் பொலிவது ஓர் உருவு என்றார். முன்னதற்கு மெலிவு தோன்ற இன்னவாறு பொலிவை ஊன்றியது உருவின் ஒளிவளர் வனப்பை உள்ளுற உணர்ந்து கொள்ள என்க.

பருவம் வளர வளர உருவ எழில் சுரந்து கொழுந்தோடி வளர்ந்து கிளர்ந்து வருவதால் முன்னம் அதனோடு நிறை ஒத்திருந்த ஓவியம் இதுபொழுது சுவை கெட நேர்ந்தது.

சிறந்த ஓவியப் புலவன் மிகவும் கண்ணூன்றி முயன்று எண்ணியபடியெல்லாம் எழுதிப் புனைந்த உயர்ந்த வண்ண ஓவியமும்

இவ்வண்ணல் மேனிமுன் அவமடையும் என்றதனால் இதன் நவ மும் நயமும் நன்கு புலனும்.

சித்திரப் பதுமை எத்துணை உயர்வுடையதாயினும் அதனி டம் உய்த்துணர்வில்லை. அதுவுமன்றி நேரே கண்டபொழுது மட்டும் சிறிது காட்சிக்கு இனிமையாய்க் கதித்து நிற்கும். இந்த உத்தம உருவமோ உய்த்துணர்வு மிகுந்து நாளும் புத்தொளி வளர்ந்து எத்திறத்தும் கண்டவர்களுடைய கண்ணும் மனமும் கவர்ந்து, எண்ணுந்தோறும் இன்பம் சுரந்து எழில்வளர்ந்து வரு கின்றது; ஆதலால் எந்த ஓவியமும் இதன் எதிர் இழிந்துபட நேர்ந்த தென்க.

இராமபிரானுடைய வடிவழகில் நம் கவிஞர்பிரான் சுவை கண்டு களித்து உவகை மண்டி நிற்கும் நிலைமையை உரைகள் தோறும் சுவைத்து எவரும் உணர்ந்து கொள்ளலாம்.

இனிய ஓவியமும் இன்னுதாக எழில் நலம் சுரந்து ஒளி தவழ்ந்து அப்புனித மேனி பொலிவுற்றிருந்த தென்பதாம்.

தேவருந் தொழுகழல் சிறுவன் என்றது அவனது பரமபத நிலையை யாவரும் தெளிவாக உணர்ந்துகொள்ள என்க. தேவ ரும் என்றதில் உம்மை அவரது திவ்விய நிலைமையைக் குறித்து நின்றது. வானவரும் பணியவுள்ள அவன் நான் உன் மகன் என நடித்து ஒருமானவன் கழல் பணிய வந்தான் என அவனது தலைமை காணத் தந்தபடி யிது.

சிறுவன் என்றது சக்கரவர்த்தித் திருமகனாய் வந்திருக்கும் உரிமை கருதி. அமரரும் அடிதொழ நின்ற அப்பெருமான் நமர்களுக்கிரங்கி மனித வடிவம் தாங்கி இனிய பாலனாய் இக் கோலங்கொண்டு இப்படி நிற்கின்றான் என்பது குறிப்பு.

எழிலும் இயல்பும் இதுவரை உரைத்தார். பின்பு அவன் வந்த நிலைக்கு ஒரு உவமை தந்திருக்கிறார். அது தான் இங்கே மிகவும் சிந்திக்க வுரியது.

ஓர் உடம்பைவிட்டுப் பிரிந்துபோன உயிர் மீண்டு திரும்பி வந்து அதனை அடைந்ததுபோல் தசரதனை இராமன் அடைந் தான் என்பதாம். பிள்ளையிடம் பிதா பெரிதும் காதலாய் உரிமைகொண்டு உவந்துள்ள அருமையும் ஆதரவும் தெரிய உயிரையும் உடலையும் எங்கும் எதிர்காட்டி வருகிறார்.

வேள்வியைக் காக்கும் பொருட்டு முன்னம் கோசிகரோடு இராமன் போன பொழுது, "*மன்னன் இன்னுயிர் வழிக்கொண்டால் என நீங்கினான்" என்றார். தசரதன் உயிர் தனியே பிரிந்து போனதுபோல் முனிபின் இராமன் போனான் என அங்கே கூறியதைஞாபகத்தில்வைத்திருந்து எண்ணூறு பாடல்களுக்குப் பின்னர் இங்கே அங்ஙனம் போன உயிர் மீள வந்தது எனக் கூறலானார். கதைத் தொடர்புகளையும் காரிய வளர்ச்சிகளையும் கால நிகழ்ச்சிகளையும் யாண்டும் விருத்தம் நேராதபடி திருத்தமாகக் கவி உரைத்து வரும் திறம் உவப்பும் வியப்பும் ஒருங்கே விளைத்து வருகின்றது.

பிரிந்ததோர் உயிர் என இறந்த காலத்தால் கூறாமல் பிரிவது ஓர் உயிர் என்றது பொதுவான நிலையில் ஓர் புதுமை காண நின்றது. அன்றியும் இப்பிரிவினை பின்னும் நிகழவுள்ள தென்னும் உண்மையும் இதில் உடனுணர வந்தது.

தசரதனுடைய உள்ளக் காதலும் உயிர் நிலையும் பிள்ளைப் பேறுடன் பிணைத்து நம்முள்ளம் தெளிய இங்ஙனம் தொடர்ந்து கவி உணர்த்தி வருகின்றார்.

இவ்வாறு உரிமையுடன் வந்த இராமனைக் கண்டதும் சேனை தளங்கள் யாவும் ஊனும் உயிரும் உருகி உவந்து தொழுதன. அங்ஙனம் தொழுவாரெவரையும் ஒருவி, உழுவலன்புடன் விரைந்து வந்து தந்தையின் காலில் அவன் விழுந்து பணிந்தான். பணியவே அந்த அழகனை அள்ளி யெடுத்து மார்போடணைத்து உள்ளங்களித்துத் தசரதன் உவந்து நின்றான்

தன் அருமைக் குமரனைத் தழுவிக்கொண்டு அந்த உரிமைத் தந்தை நின்ற நிலை பிள்ளைப்பேறுடையார் எவரையும் உள்ளம் உருக்கி என்றும் உவகை நிலையமாயுள்ளது.

"மனுஎனும் தகையன் மார்பிடை மறைந்தன மலைத்
தனி நெடும் சிலையிறத் தவழ்தடங் கிரிகளே."

என்ற இதில் அன்புநலம் கனிந்த இன்பக் காட்சி மிகவும் கம்பீரமாய் விளைந்திருக்கின்றது. உரைகளில் உணர்வொளிகள் ததும்பி நிற்கின்றன.

---

* கையடைப் படலம் 20. இந்நூல் பக்கம் 347 பார்க்க.

நீதி நிலையிலும் நெறிமுறைகளிலும் சிறந்து அரசினங்கள் யாவரும் பரசிவர வுள்ளமையால் தசரதன் இங்கே மனு என நின்றான். மனுக்குலத்திற்கெல்லாம் இனித்த நீதிகளை வகுத்து இனியனாய் நின்ற ஆதிமனுவோடு நேர் ஒத நின்றமையான் இவனது மேதகவுகள் யாவும் நன்கு தெளிவாம். இத்தகைய நீதிமான் ஆனதால் உத்தமமான புத்திரபாக்கியத்தை யடைந்திருக்கின்றான் என ஈண்டு உரிமையுடன் ஒத்தெண்ண வந்தது.

கெழுதகைமையோடு அவனை தழுவியபொழுது இராமனுடைய தோள்கள் அவன் மார்புள் அழுந்தி முழுதும் அடங்கியிருந்தன ஆதலால், "கிரிகள் மார்பிடை மறைந்தன" என்றார். கிரி=மலை. இங்கே தோள்களைக் குறித்து நின்றது. திரண்டு உருண்டு யாண்டும் நிலை குலையாமல் நிற்கும் திண்மையான அந்த வீரத்தோள்களுக்குக் கிரிகள் உவமையாய் வந்தன. உவமை தோன்ற உரையாமல் உருவகம் செய்துள்ளமையால் அவற்றின் பொருவரும் தன்மை புலனும்.

அத்திண்டோள்களின் வீரச்செயல்களை விளக்கியிருக்கும் அழகை ஆய்ந்து பார்க்க.

சீதையின் திருமணம் குறித்துப் பந்தயமாக வைத்திருந்த பாரவில் யாரும் அருகே நெருங்க முடியாத பேராற்றல் உடையது. சிவபரம்பொருளின் திருவருள் தோயப்பெற்றது. தெய்விகம் வாய்ந்த அந்தத் திவ்விய வில்லை எளிதில் வளைத்து ஒடித்த செவ்வியும் திறனும் தெரிய, "மலைச்சிலை இறத் தவழ்தடம் கிரி" என்றார். தனி, நெடும் என்னும் அடைமொழிகளால் அதன் உயர்வும் உறுதியும் இயல்பும் உணரலாகும். சிலை=வில்.

அரிய வில்லை வளைத்த பெருமையை இங்கே உரிமையாக உரைத்தது மன்னன் மகளை மணமகனுக்கு வைத்திருக்கும் அதன் தகைமை தெரிய. வீர மணத்திற்குரிய இந்த வில்லின் வெற்றியே தந்தையையும் மைந்தனையும் இங்ஙனம் ஒன்று சேர்த்து வைத்துள்ளமையான் அந்த உறவுரிமையும் உணர வந்தது.

உலகநிலையில் ஒரு விழுமிய தந்தை தனது அழகிய குமரனைக் கெழுதகைமையுடன் தழுவி நிற்கக் கண்டால் எவர்க்கும் அது ஓர் இனிய காட்சியாய்க் கனிவு செய்து நிற்கும். அந்நிலை

யில் அதிசயமான இன்பக் காட்சியை அன்பு நலம் கனியக் கம்பர் தமது காவிய வுலகில் காட்டியிருக்கிறார். இக்காட்சியில் தோன் றும் உணர்ச்சிகள் வியனிலையில் விளங்கி நயனமைந்துள்ளன.

மார்பும் தோள்களும் உத்தம சாமுத்திரிகா இலக்கணங்கள் முழுதும் வாய்ந்து பரிசுத்தமான சத்திரிய வீரவுருவங்கள் ஈண்டுப் பொலிவுற்றுள்ள நிலைகளைப் புலப்படுத்தி நிற்கின்றன.

இவ்வாறு இராமன் பணிந்தெழுந்த பின் இலக்குவன் வந்து தொழுகின்றான். அவனையும் தந்தை ஆரத் தழுவி அன்பு கூர் கின்றான். அதன்பின் இராமன் பெற்ற தாயையும், சிறிய தாயரையும் பணிகின்றான். அவர்கள் இக்கட்டழகனைக் கண் குளிரக்கண்டு கழிபேருவகை கொள்கின்றார்.

பெற்றோரைத் தொழுது நின்ற இராமனைப் பரதன் வந்து பாதம் பணிகின்றான். அப்பேரன்பாளனை ஆர்வமீதூர்ந்து தழுவி இராமன் அகமிக மகிழ்கின்றான். இலக்குவன் பரதனையும், சத் துருக்கன் இராமனையும் முறைமுறை பணிந்து உழுவலன்புடன் உரிமை மீக்கூர்கின்றனர்.

பெருந் தன்மை நிறைந்த இந்த அரச குடும்பம் அன்பு ததும்ப அளவளாவி நின்ற காட்சியைக் கம்பர் கவிப்படங்களில் இன்ப நிலையமாக் காட்டியிருக்கிறார். அடியில் வருவன காண்க.

இலக்குவன் தந்தையைப் பணிந்தது.

" இளையபைங் குரிசில்வந் தடிபணிந் தெழுதலும்
தளைவரும் தொடையன்மார் புறவுறத் தழுவினன்
களைவரும் துயரறக் ககனமெண் திசையெலாம
விளைதரும புகழினன் எவரினும் மிகுதியான். (1)

இராமன் தாயரைத் தொழுதது.

கற்றைவார் சடையினன் கைக்கொளும் தனுவிறக்
கொற்றநீள் புயநிமிர்த் தருளுமக் குரிசில் பின்
பெற்றதா யரையுமப பெற்றியில் தொழு தெழுந்து
உற்றபோ தவர்மனத்து உவகையார் உரைசெய்வார் ? (2)

பரதன் இராமனை வணங்கியது.

உன்னுபே ரன்பினமிக்கு ஒழுகி யொத்து ஒண்கணீர்
பன்னுதா ரைகளதரத் தொழுதெழும் பரதனைப்
பொன்னின்மார் புறவணைத்து உயிருறப் புல்லினன்
தன்னைஅத் தாதைமுன் தழுவினல் என்னவே. (3)

### இலக்குவன் பரதனையும், சத்துருக்கன் இராமனையும்

*கரியவன் பின்புசென் றவனருங் காதலிற்*
*பெரியவன் தம்பியென்று இனையதோர் பெருமையப்*
*பொருவரும் குமரர்தம் புனைநறுங் குஞ்சியால்*
*இருவர்பைங் கழலும்வந்து இருவரும் வருடினர்.* (4)

### குமரர் நால்வரும் குலாவி நின்ற நிலை.

*கோல்வரும் செம்மையும் குடைவரும் தண்மையும்*
*சால்வரும செல்வமென்று உணர்பெருந் தாதைதன்*
*மேல்வரும் தன்மையான் மிகவிளங் கினர்கள்தாம்*
*நால்வரும் பொருவினன் மறையெனும் நடையினர்.* (5)

### இராமனை முன் செல்லும்படி தசரதன் சொன்னது.

*சான்றெனத் தகையசெங் கோலினன் உயிர்கள்தாம்*
*ஈன்றநற் றயெனக் கருதுபே ரருளினன்*
*ஆன்றவிச் செல்வமித் தனையுமொய்த் தருகுறத்*
*தோன்றலைக் கொண்டுமுற் செல்கெனச் சொல்லினன்.* (6)

### குடி சனங்கள் மகிழ்ந்த நிலை.

*காதலோ அறிகிலம் கரிகளைப் பொருவினர்*
*தீதிலா உவகையும் சிறிதரோ பெரிதரோ*
*கோதைசூழ் குஞ்சியக் குமரர்வந் தெய்தலும்*
*தாதையோ டொத்தத் தானையின் தன்மையே.* (7)

### தம்பியர் புடைசூழ இராமன் சென்றது.

*தொழுதிரண் டருகும்அன் புடையதம் பியர்தொடர்ந்து*
*அழிவில்சிந் தையினுகந்து ஆடன்மா மிசைவரத்*
*தழுவுசங் குடனெடும் பணைதழங் கிடஎழுந்து*
*எழுதருந் தகையதோர் தேரின்மேல் ஏகினன்."* (8)

(எதிர்கோட் படலம் 24-31)

**இந்தக் கவிகளை** முழுவதும் கண்ணூன்றி நோக்கிக்கருத்துக் **களைத் திருத்தமாகத் தெரிந்து கொள்ளவேண்டும்.**

தாயரும் தந்தையும் மக்களும் ஒக்க மருவி மிக்கமகிழ்வுடன் மேன்மை புரிந்து நின்ற ஆர்வ நலங்கள் ஆருயிர்க்கு இனிமை யாய் இவற்றுள் சீர்மை பயந்துள்ளன. மேன்மையான இக்குடிப் பிறப்பின் அடியாகப் பல படிப்பினைகளைக் கவி இங்கே காட்டி யிருக்கிறார். ஒழுக்க முறைகள் விழுப்பமுற்று நிற்கின்றன.

இராமனைக் கண்டவுடனேயே களிப்புற்று நின்ற கோசலை அவன் வந்து தனது அடி தொழுதபொழுது அளவிடலரிய பெரு மகிழ்ச்சியுடையளாய்ப் பரவசமடைந்து நின்றாள் ஆதலால் "அவர் மனத்து உவகை உரை செய்வார் யார்?" என்றார். தாயின் உள்ளமும் சேயின் பணிவும் நேயமிகுந்து நிலை நிமிர்ந்துள்ளன. சிறிய தாயரும் பெரியதாய்போல் பிரியமாக மருவி நின்றனர். அந்நிலைதெரிய ஒரு முகமா உரிமைகனிய உரைத்தார்.

பேரன்புடைய பரதன் கண்ணீர் தாரை தாரையாக ஒழுகி ஓட அண்ணன் அடி தொழுதலும், அவனை அள்ளித் தழுவி அவ் அண்ணல் நின்றதும் கண்ணூன்றிக் காணின் எவரும் உள்ள முருகி உயர் நிலை காண்பர்.

தந்தை தாயரிடமும், தம்பியர் மருங்கும், தமர்கள் பாலும் ஒருவன் ஒழுகவேண்டிய முறைகளையும் மரியாதைகளையும் இராமன் ஒழுகிக் காட்டியிருக்கிறான். அன்புரிமையான அந்த அருமைக் காட்சிகள் பண்பும் பயனும் நிறைந்து யாண்டும் இன்ப நிலையமாய் இனிதமர்ந்திருக்கின்றன.

உணர்வு நலங்களும் குணகணங்களும் ஒழுக்க நெறிகளும் மனித சமூகத்தில் புனித நிலையில் புத்தொளி பெற்றொளிரும்படி போந்துள்ள இவ்வுத்தம குமரனைத் தம்பியருடன் முன்னுற அழைத்துக்கொண்டு போகுமாறு அங்கே நின்ற மன்னர்க்குப் பணித்துப் பின்னுறச் சனகனுடன் தசரதன் பெருமையோடு வந்தான். அவனது செயலும் இயலும் நயனும் நலனு முடையன.

"ககனம் எண் திசையெலாம் விளைதரும் புகழினான்" என இம் மன்னர் பிரானைக் கவி இங்கே விளக்கியிருக்கிறார். புகழை அவன் விழையாமல் அது தானாக விளைந்து வருகின்றது என்பதாம். கொழுந்தோடிப் படர் கீர்த்தி என்றபடி நாளும் நாளும் புதிது புதிதாய் மேலும் மேலும் வளர்ந்து வருதலால் "விளை தரும் புகழ்" என நிகழ் காலத்தால் கூ;

புகழும் புண்ணியமும் ஒருவன் விரும்பியபடி வருவனவல்ல. பிறவுயிர்கட்கு இதமான புனித காரியங்களைச் செய்தால் அவை தாமாகவே உருவாகிப் பெரிகிவரும். ஆகவே சக்கரவர்த்தியின்

புகழுக்குரிய பூரண காரணங்கள் புலனாய் நின்றன. புகழின் விரிவால் அவனது கருமநலங்களும் தரும குணங்களும் தெரியலாயின.

அவன் புகழ் இம்மண்ணுலகில் மட்டுமன்று, விண்ணுலகிலும் திகாந்தங்களிலும் எண்ணடங்காமல் விரிந்து பரந்து நின்றது ஆதலால், "ககனம் எண் திசை எலாம்" கவனமுற வந்தன.

இங்ஙனம் உயர்ந்த கீர்த்திமானான தசரதன் தனக்குச் சம்பந்தியாய் மிதிலைக்கு எழுந்தருளியதை நினைந்து சனகன் பெருமகிழ்ச்சியடைந்து அரியஉபசாரங்கள் புரிந்து ஆர்வமீதூர்ந்தான். அவனது உவகையும் உபசரிப்பும் உயர் நிலையில் ஓங்கி அரசர்பிரானைப் பரவசப்படுத்தின.

சிறந்த மணி மாளிகையில் அமர்த்தி உயர்ந்த பூசனை புரிந்து மந்திரி பிரதானிகளுடன் சனகன் மாண்பு செய்து வந்தான். அவ்வரவில் அன்பும் பணிவும் அணி செய்து நின்றன.

மன்னர் புடைசூழ இம்மன்னர் பெருமான் அங்கே மன்னியிருந்தது நட்சத்திரங்கள் இடையே சந்திரன் சொலித்திருந்தது போல் துலங்கி நின்றது. அந்தச் சுந்தரச் சோதி மணி மண்டபத்தில் இவன் எழுந்தருளியிருந்த காட்சியைக் கண்டு இந்திரனும் நாணினான். வானவர் அதிபதியே இம்மானவர் பதி எதிர் மாழுவன் எனக் கவி அடிக்கடி குறித்து வருகிறார். இங்கே அவனும் முகம் நாண இவன் காட்சி கதித்திருந்தது என்கின்றார்.

" அந்தணாளர்கள் ஆசியொடு ஆசனம்
இந்திரன் முகம் நாணுற ஏறினான்."

எனக் கவி கூறியிருக்கிறார். இங்ஙனம் நாணுதற்குக் காரணம் என்ன? மண்ணுலகில் உயர்ந்த வேந்தர் எவ்வளவு சிறந்திருந்தாலும் விண்ணுலகில் ஒரு தேவனோடு எதிர்மேவலாளர். அங்ஙனமிருக்கத் தேவராசனே வியந்து நோக்கி வெட்கமுறும்படி தசரதன் உயர்ந்திருந்தான் என்கின்றார். அவன் நாணியது இவனது அரச கம்பீரங்களை மட்டும் கண்டு அன்று; எவர்க்கும் முதல்வனைத் தனக்குப் புதல்வனாகப் பெற்றுத் தழைத்திருக்கும் அச் சுகுதியை நினைந்து நினைந்து அவன் தயங்கி மயங்கினான் ஆதலால் அகமும் முகமும் மிகவும் நாண நேர்ந்தன என்க.

எல்லாத் தகுதிகளும் தமக்கே உரியன என்று இயல்பாகவே தருக்கியிருப்பவர் புதிதாக வேறொருவரிடத்தே தகுதியின் மிகுதி காண நேரின் தமது தலைமை தொலைந்தது போல் நெஞ்சம் குலைவர் ஆதலால் அந்நிலைமையில் இந்திரன் இங்கே நினைவுற வந்தான்.

அமரர்கோனும் அவ்வியமடையும்படி திவ்விய நிலையில் இச் செவ்விய வேந்தன் இங்ஙனம் சிறந்து வீற்றிருந்தான். இவனது கொலுவின் காட்சி உவகை நிலையமாய் அங்கே உயர்வுற்றிருந்தது. இருமருங்கினும் நின்று இனிய சாமரைகள் வீசப், பாவையர்கள் பல்லாண்டுபாட, யாவரும் வியந்து போற்ற, வெண்கொற்றக் குடையின் கீழ் இவன் விளங்கியிருந்தான். ஞான சீலனான சனக மன்னனுடைய மாளிகையில் இம்மான வேந்தன் மருவியிருந்த மாட்சியைக் கவி இனிதாக வரைந்து காட்டியிருக்கிறார். அக் காட்சிகள் அடியில் வருவன காண்க.

### கன்னியர் கவரி வீசல்

“ திங்க ரும்பினும் தித்திக்கும் இன்சொலார்
தாங்கு சாமரை மாடு நயந்துவ
ஓங்கி ஓங்கி வளர்ந்துயர் கீர்த்தியின்
பூங்கொ ழுந்து பொலிவன போன்றவே.

### பாவையர் பல்லாண்டு பாடல்.

சுழலும் வண்டும் மிஞிறும் சுரும்புஞ்சூழ்ந்
தழலும் வாச மதுமலர் ஓதியர்
குழலி னொடுறக் கூறுபல் லாண்டொலி
மழலை யாழிசை யோடு மலிந்தவே.

### வெண்குடை விளங்கியது.

வெங்கண் ஆனையி னுன்தனி வெண்குடை
திங்கள் தங்கள் குலக்கொடி சீதையாம்
மங்கை மாமணம் காணிய வந்தருள்
பொங்கி ஓங்கித் தழைப்பது போன்றதே.

(உலாவியற்படலம், 50-52)

மூன்று கவிகளையும் ஊன்றிப் பார்த்துப் பொருள் நயங்களையும்அரசுக்குரிய மரியாதை முறைகளையும்ஓர்ந்துகொள்க.

1. அழகிய இளமங்கையர் தசரதன் அயல்நின்று சாமரை வீசிய காமர் நிலையை முதலில் காண்கின்றோம். சாமரை என்பது மெல்லிய மயிர்த்தொகுதியாலானது. கவரி என்னும் ஒரு வகை மான்மயிரினால் செய்யப்படுவதால் கவரி எனவும் அது கூறப்படும்.

சாமரை வந்த வரலாறு.

அரசர் முகத்தெதிர் ஈ முதலியன ஊடாடாதபடி மெல்லிய ஆடையால் முதலில் வீசி வந்தனர். அவ்வழக்கம் வலிதாய் காளடைவில் மயிர்த் தொகுதியால் வீச நேர்ந்தது. முடிவில் அது ஓர் அரச மரியாதையாய் முடிவு பெற்று நின்றது. தெய்வ சந்நிதியிலும் இன்று அதனை வீசி வருகின்றனர். கண்ணாடி முரசு முதலிய எண்வகை மங்கலப்பொருள்களுள் ஒன்றாய்ச், சிறந்த அரச சின்னமாய்ச் சாமரை மதிக்கப்பட்டுள்ளது. வெள்ளி பொன்களால் செய்த கைப்பிடியுடன் அது விளங்கியிருக்கும். தருணமங்கையரே அரசனயல் எதிர் எதிர் நின்று அதனை வீசி வருவர்.

"காசின் மாமணி சாமரை கன்னியர்
வீச மாமக ரக்குழை வில்லிட
வாச வான்கமழ் நீர்பிடித் தாங்கரி
யாசனத் திருந்தானடல மொய்ம்பினான்."

(சிந்தாமணி, 429)

சிங்காசனத் தருகு நின்று கன்னியர் சாமரை வீசியுள்ள மையை இதில் காணலாகும். அரச சமூகம் இனிய காட்சியாய் எழில்பெற வேண்டி இங்ஙனம் மகளிர் வீசுதல் மரபாய் வந்தது.

சக்கரவர்த்தியின் பக்கம் நின்று கவரி வீசிய காரிகையாரின் சீரிய பண்புகள் தெரிய அவர்தம் சொல்லினிமை கூறினார்.

கரும்பில் இனிய சுவையில்லாததும் உண்டு ஆதலால் அதனை நீக்கத் தீங்கரும்பு என்றார். அந்தக் கரும்பின் சுவையும் கசப்பு என்று சொல்லும்படி அதிமதுரமான இனிய மொழிகளை இயல்பாகவுடைய உயர் கன்னியர் என்பார், தீங்கரும்பினும் தித்திக்கும் இன்சொலார் என்றார்.

சொல்லின் இனிமையால் அம்மெல்லியலாருடைய நல்லியல்புகள் யாவும் நன்கு புலனும். மன்னன் பணிப் பெண்களை

இன்னபடி இருப்பின் அவனுடைய இன்ப நலங்கள் என்னபடியா யிருக்கும் என்பதை எண்ணி நோக்கும்படி இசைத்த படி யிது.

இருபுறமும் முறையே கவிழ்ந்து நிரலே எழுந்து அயல சைந்து, ஒயிலுடன் கவரிகள் நிலவிய அழகிய நிலைமை தெரிய "மாடு தயங்குவ" என்றார். மாடு=பக்கம். தயங்குதல்=அழகுற விளங்குதல்.

வெண்ணிறமான சாமரைகள் மன்னன் முன்னிலையில் மொய்த்தெழுந்த தோற்றம் அவனுடைய கீர்த்தியின் பூங் கொழுந்துகள் மூர்த்திகரித்து வந்து முகனெதிர் உலாவுதல் போல் ஒளி செய்துநின்றது என்பதாம்.

இந்த அருமைக் காட்சி அறிவுக் கண்ணால் அறிந்து மகிழத் தக்கது. கலைநலமுடையார் கருத்தும் காட்சியும் பலநலங்களை விளைத்துப் பண்பாற்றி வருகின்றன.

புகழை வெண்மையாகவும், பழியைக் கருமையாகவும் உரு வகம் செய்வது கவி மரபாகும்; ஆகவே வெண்சாமரை புக ழோடு எதிர்வைத்து ஈண்டு எண்ண வந்தது.

புகழை அடிக்கடி கம்பர் வியந்து பாராட்டி வருதலால் அதன் பால் அவர் கொண்டுள்ள ஆர்வமும் மதிப்பும் அறியலாகும்.

மனிதனுடைய பிறப்பின் சிறப்பெல்லாம் புகழ் ஒன்றினா லேயே பூர்த்தி செய்யப்பட்டுள்ளது. புகழ் இல்லையானால் அவன் பிறப்பு மணம் இல்லாத மலர்போலவும், உயிர் இல்லாத உடல் போலவும் இழிக்கப்படுகின்றது.

*"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று" (குறள், 236)

* புகழுக்குரிய குணநலங்கள் ஒருவனிடம் இல்லையானால் அவன் இகழப்படுவன். மனிதனைப் பிறந்து, அவ்வாறு இளிவைச் சுமந்து இழிந்துழல்வதினும் வேறோர் உருவில் மறைந்து கிடப்பது நல்லது ஆதலால், "தோன்றாமை நன்று" என்றார். தோன்றலும் தோன்றாமை யும் இவன் கையில் இல்லையே! அங்ஙனம்இருக்க இங்ஙனம் உரைத்தது என்னை! எனின், தோன்றியவன் ஊன்றி உணர்ந்து ஒழுகவேண்டிய உறுதி நலனை இவ்வாறு உணர்த்தினார் என்க. அரிய பிறவிக்கு உரிய பயன் புகழே என்பதாம். அதனை உறுதியுடன் பெறுக என்பது கருத்து.

என்றதனால் ஒருவனது தோற்றத்தின் ஏற்றம் புகழின் ஊற்றத்தாலேயே போற்றப் பெற்றுள்ளமை தேற்றம். இங்ஙனம் பிறப்பின் பயனைச் சிறப்புற்றுள்ள சீர்த்தியை மன்னன் ஆர்த்தியுடன் ஈட்டியுள்ளமையால் அவனது வாழ்க்கையின் பண்பும் பயனும் நன்கு புலனும்.

உயர் கீர்த்தி என்றது வானும் வையமும் பரந்து வளர்ந்திருக்கும் அதன் வளந் தெரிய வந்தது. பூங்கொழுந்து என்னும் சொல் ஈங்கு மிகவும் இனிமை கனிந்துள்ளது. புகழின் வளர் நிலையையும், உவமையின் உருவ அமைதியையும் உணர்த்தி நின்றது.

2. மிஞிறு, சுரும்பு என்பன வண்டின் வகைகள். அரசன் அருகே அணிஅணியாய் நின்று மங்களம் பாடிய மங்கையர் கூந்தலில் பரிமளமிகுந்த மலர் மாலைகள் இனிதாகச் சூடியிருந்தனர் ஆதலால், "வாச மதுமலர் ஓதியர்" என்றார். ஓதி=கூந்தல்.

நிலம் புரந்து, நலம் பல புரிந்து ஆண்டுகள் பலவாக நீண்டு வாழ்ந்து வரவேண்டும் என்னும் பொருள் பொதிந்த மங்கலப் பாடல்களை மகளிர் அங்கே இனிமையாகப் பாடினர் ஆதலால், "பல்லாண்டு ஒலிமலிந்த" என்றார். பல்லாண்டு=மங்கலவாழ்த்து. பாடகிகளுடைய குரலோசை குழலோசையினும் இன்சுவையுடையதாய் இசைபரந்திருந்த தென்பதாம். வேணு கானமும் நாணி ஒளிய அப்பாவையர் பாடல் தேவகானமாய்ச் சிறந்து நின்றமையால் குழலும், யாழும் மழலைகளாய் அயலே உழலலாயின.

"அண்டர்தம் அமிர்தென அவர்தம் கண்டத்தின்
பண்டரு பாட்டொலி பரவிக் கேட்டவர்
மண்டல மறந்திட மருவி நின்றதால
உண்டவர் உயிர்தளிர்த் தும்ப ராயினர்."

என்படி அன்றவர் இசைப்பாட்டு இன்ப மூர்ந்து நின்றது.

பணிபுரிகின்ற அணியிழையாரின் உருவும் இசையும் இங்ஙனம் உயர்ந்திருந்தமையால் சக்கரவர்த்தியின் இன்பச் சிறப்பின் ஏற்றம் தெரியலாம்.

3. அருகே கவிந்து நின்ற வெண் கொற்றக்குடையில் கவி ஓர் உருவகம் புரிகின்றார். தனது மரபில் உதித்துள்ள சனகி

யின் திருமணத்தைக் கண்டு களிக்க விரும்பிச் சந்திரன் அங்கே மூந்துற வந்திருப்பதுபோல் அந்தச் சுந்தர வெண்குடை துலங்கி நின்ற தென்பார், "திங்கள் வந்து தழைப்பது போன்றதே" என்றார். தங்கள் குலக்கொடியாகச் சீதையைத் திங்கள் கருதினான் என்றதனால் சனகன் சந்திரகுல வேந்தன் என்பது புலனாயது. தங்கள் என்று பன்மையில் குறித்தது சனக பரம்பரையிலுள்ள அரசர் பலரையும் நினைந்தென்க.

தசரதன் சூரிய குலத்தோன்றல். ஆகவே பிள்ளை மரபும் பெண்ணின் குலமும் இன்னவாம் என எண்ணுற வைத்தார்.

சந்திர குலத்தார்க்குச் சூரியகுலத்தாரிடம் சம்பந்தம் செய்துகொள்ளும் பாக்கியம் கிடைத்துள்ள மகிழ்ச்சியால் அக்குல முதல்வன் உளம் மிக விரும்பி இங்ஙனம் குடை வடிவமாய் நின்று இடையே காணவந்தான் என்பதாம்.

சந்திரன் தேவன் ஆனதால் மானுடர் கண் காண நேரே வாராமல் தனக்கானதோர் வடிவில் இவ்வாறு அமைந்து வந்தான் என்பது கருத்து.

அயோத்தி மன்னன் குடைக்கு மிதிலை மன்னன் குலத் தலைவனை ஒப்புரைத்து அவனது நிலைமையையும் தலைமையையும் உய்த்துணர வைத்தார்.

குடைக்குத் திங்கள் எங்கணும் உவமையாய் வந்திருப்பினும் சமய சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப இங்கே சம்பந்தப்படுத்தி அன்புரிமையுடன் அமைதி செய்திருப்பது அதிசய முடையது.

சாமரை வீசுதல், பல்லாண்டு பாடுதல், குடை கவித்தல் ஆகிய இயல்பான அரச மரியாதைகளில் இனிய கருத்துக்களை இணைத்துப் புனித நலங்களை யுணர்த்திக் கவி சுவை மிகச் செய்திருக்கிறார். இவரது கற்பனைத் திறங்கள் விற்பனநலம் கனிந்து அற்புத நிலையில் விளைந்திருக்கின்றன.

இவ்வண்ணம் சகல வைபவங்களுடன தசரதன் மிதிலையில் தங்கியிருந்தான். கலியாணம் கருதி அரசர் பலரும் பல திசைகளிலு மிருந்து அங்கே வந்திருந்தனர். மிதிலா நகரம் எங்கணும் நலம் பல மலிந்து சிறந்தஅலங்காரங்கள் துலங்கியிருந்தன.

பங்குனி மாதம் உத்தர நாளில் காலையில் திருமணச்சடங்குகள் தொடங்கினர். கலியாண மண்டபம் தேவரும் வியப்பத் திவ்விய நிலையில் சிறந்திருந்தது. அரச குமாரங்கள் நெருங்கியிருந்தனர். வசிட்டர் விசுவாமித்திரர் முதலிய முனிவர்களோடு தசரதன் அங்கே இனிதமர்ந்திருந்தான். மணமக்கள் இருவரையும் தனித்தனியே வைத்து அலங்கரிக்கலாயினர். குறித்த காலம் வரவும் சீதையை அழைத்துவரும்படி சனகனிடம் வசிட்டர் பணித்தார். இளங்குமரிகள் புடைசூழ அந்த எழிலுருவம் வந்தது. சனகியைக் கண்டவுடனே அனைவரும் வியந்து, " இது தெய்வத்திருவே ! "என்று மெய்ம்மறந்துதொழுதார். மாதவர் புகழ்ந்தார். வசிட்டர் மகிழ்ந்தார். தனக்கு வாய்த்துள்ள அருமை மருமகளைக் கண்டபொழுது தசரதனுக்கு உண்டான மகிழ்ச்சி அளவிடலரியது. அவன் கொண்ட உவகை நிலையை அடியில் வரும் கவியில் காண்க.

தசரதன் சனகியைக் கண்டு உவகை மீக்கொண்டது.

" துன்றுபுரி கோதையெழில் கண்டுலகு சூழ்வந்து
ஒன்றுபுரி கோலொடு தனித்திகிரி யுய்ப்பான்
என்றும் உலகேழும அரசு எய்தியுளன் ஏனும்
இன்றுதிரு எய்தியதே என்வயம தென்றான். "

(கோலங்காண் படலம், 33)

மன்னர் மன்னவனும் உலகமுழுவதும் அரிய பெரிய திருவினை இதற்குமுன் நான் அடைந்திருந்தாலும் இன்று தான் உண்மையான உயர் திருவை எய்தப் பெற்றேன் என்று தசரதன் இதில் மனமிக மகிழ்ந்து வாய்திறந்து மொழிந்திருக்கின்றான்.

மன்னனது இம் மகிழ்ச்சி மணமகளின் மாட்சியை விளக்கி நிற்கின்றது. காட்சியுற்றபோதே கருத்தில் உண்மை இங்ஙனம் கனிந்து தோன்றியது.

எல்லாச் செல்வங்களுக்கும் அதிதேவதையான திருமகளே தனக்கு மருமகளாய் வந்திருத்தலால் அந்தப் பரமபாக்கிய நிலையை வியந்து, " இன்று திரு எய்தியது "என்று தன்னையறியாமலே மன்னன் இன்னவாறு அதிசயபரவசனாய்ச் சொன்னான் என்க.

நல்ல உத்தம இலக்கண முடையவள் ஒருவனுக்கு மனைவியாக வாய்க்கப் பெற்றால் அவன் சீரும் செல்வமும் பெற்றுப்

பேரும் புகழும் பெருகி யாரும் போற்ற இனிது வாழ்வன் ஆதலால் தன் செல்ல மகனுக்கு வந்துள்ள திருவின் பெற்றியை நினைந்து அவ்வள்ளல் இவ்வண்ணம் உள்ளங் களித்துரைத்தான்.

" சுந்த ரத்திரு மணமகள் சுகுணம் வாய்ந்திருந்தால
அந்த நன்மனை அமரரும் புகழ்ந்திடச் சிறந்து
தந்தை தாயர்க்கும் தனைமணம் புணர்ந்தவன் தனக்கும்
அந்த மிலலதோர் இன்பவீ டாமென அறைவார "

என வரும் இதனால் மனை நலம் புலனும்.

மனித வாழ்வின் இனிமை யெல்லாம் மனைவாழ்க்கையைப் பொறுத்துள்ளது. அவ்வாழ்க்கை நன்மனைத்தும் மனைக்கு உயிராதாரமாயுள்ள மனைவியிடம் மருவியிருக்கின்றது. ஆதலால் அவள் மாண்புடையளாயின் அவ்வாழ்வு யாண்டும் மாட்சிமையுடையதாய் நீண்டு நிலவும்; அவளிடம் மாண்பில்லையாயின் அவ்வாழ்க்கை எவ்வளவு செல்வங்களையுடையதாயினும் அவ்வளவும் ஈனமாய் இழிந்துபடும் என்க.

* " இலலதென் இல்லவள் மாண்பானால உள்ளதென்
இலலவள் மாணுக்கடை." (குறள் 53)

என்ற அருமைத் திருவாக்கு ஈண்டு அறியத் தக்கது.

தன் கையில் ஒன்றும் இலனாயினும், தனக்கு வாய்த்த இல்லாள் நல்லளாயின் அவன் எல்லாச் செல்வங்களையு முடையனாய் இன்பமீக்கூர்வான் என்றதனால் மணமகளின் அருமையும் பெருமையும் அறியலாகும்.

" திருமகள் இவளைச் சேர்ந்தான் தெண்டிரை யாடைவேலி
இருநில மகட்கும் செமபொன் நேமிக்கும் இறைவனாகும். "
(சீவக சிந்தாமணி, 744)

இது, காந்தருவதத்தை என்னும் பேரழகியைக் குறித்துக்

---

* மாண்பு என்றது நல்ல குணங்களையும் நல்ல செயல்களையும். உயிர்களை அவை மாட்சிமைப்படுத்தும் ஆதலால் மாணு என வந்தன. இனிய குண நலங்களையுடைய மனைவியே ஒருவனுக்கு எல்லாச் செல்வமுமாய் இன்பம் பயந்தருளும். அந்நலம் அவள் பால் இல்லையாயின் அவன் என்ன செல்வங்களையுடையனாயினும் ஈனமேயாம். குணக்கேடுடைய மனைவியுள்ள வீடு பிணக்காடாம் என்பது குறிப்பு.

கூறியது. அவளைச் சீவகன் மணம் புரிந்துகொண்டான். பின்னர் மன்னர் மன்னவனாய் அவன் மாண்புற்று வாழ்ந்தமையான் மூன்னுற இன்னவாறு குறிப்புடன் கூற நேர்ந்தான்.

இங்ஙனம் தன் பிள்ளைக்கு வரவுள்ள இல்லக் கிழத்தியின் நல்லியல்பை நோக்கி எல்லாச் செல்வப்பேறும் அன்றே தனக்கு வந்ததாக அரசர் பிரான் உவகை மீக்கூர்ந்தான். அந்நிலைமையை நம்கவிஞர் பிரான் உரைத்திருக்கும் நயம் உணர்ந்து மகிழவுள்ளது.

மன்னனுக்கு வாய்த்துள்ள மருமகள் திருமகளேயாமென வசிட்டர் முதலிய முனிவரனைவரும் மகிழ்ந்தார். நல்ல ஓரையில் இராமனுக்கும் சீதைக்கும் திருமணம் நடந்தது. இச் சதிபதிகளுடைய உள்ளப்பண்பும் ஒருவர்பால் ஒருவர் கொண்டிருந்த உழுவலன்பும் அதிசய நிலையில் துதிசெய்ய நின்றன. இத்தம்பதிகளை நோக்கி உம்பரும் உவந்தனர். கலியாண வைபவங்கள் கண்கொள்ளாக் காட்சியாய் எங்கணும் இன்பநலங்கள் சுரந்திருந்தன. சனகனுடைய இளைய மகளாகிய ஊர்மிளையை இலட்சுமணனுக்கும், அவன் தம்பி குசத்துவன் புதல்வியர் மாண்டவி சுருதகீர்த்தி என்னும் இருவரை முறையே பரத சத்துருக்கனருக்கும் மணம் புரிந்து தந்தார். திருமணம் இனிது நிறைவேறியது கண்டு சனகன் ஆனந்த பரவசனாய்ச் சீர்வரிசைகள் பல சிறப்புறச் செய்தான். தேவாமிர்தம் என நாவாரப் புகழ யாவருக்கும் விருந்து அன்புடன் புரிந்தான்.

தனது அருமை மகனுடைய மணவினையை நினைந்து மனமகிழ்ந்து தசரதன் தானங்கள் பல வாரிச் சொரிந்தான். மிதிலை நகரிலிருந்து நாளும் நாளும் இவன் கொடுத்துவந்த கொடைகள் அளவிடலரியன. விதேக நாடு முழுவதும் இவ்வள்ளல் உதவிய நிலை உள்ளம் வியப்ப ஓங்கி நின்றது. மன்னர் பிரான் அங்கே ஈந்து வந்த நிலையைக் கவி இனிமை கனிய உரைத்திருக்கிறார். அடியில் வருவது காண்க.

தசரதன் வழங்கி யிருந்த வகை.

“வேட்டவர் வேட்டபின் வேதனும மேனாள்
கூட்டிய சீர்த்தி கொடுத்திலன் அவலால
ஈட்டிய மெய்ப்பொருள் யாவுள எலலாம்
வேட்டவர் வேட்டவை வேண்டளவு ஈந்தான்.

ஈந்தளவில்லதோர் இன்பம் நுகர்ந்தே
ஆய்ந்துணர் கேள்வி அருந்தவ ரோடும்
வேந்தனும் அந்நகர் வைகினன் மெள்ளத்
தேய்ந்தன நாள்சில செய்ததுரைப்பாம்.''(கடிமணப்படலம்)

கொடுத்துவந்த தசரதனிடம் கொடாமையும் ஒன்று இருந்தது என்று கவி இதில் கொடுத்திருக்கும் நயத்தைக் கூர்ந்து பார்க்க.

உள்ளபொருள்களையெல்லாம் உவந்து கொடுத்து யாண்டும் உயர் கொடை வள்ளலாயுள்ள தசரதனை இங்கே கோடுத்திலன் என்று குறித்து அவனது பரிபூரணமான கொடை நிலையை விளக்கியிருக்கும் விசித்திறம் வியந்து மகிழவுள்ளது.

பொருளைக் கொடுக்குந் தோறும் புகழ்வந்து குவியும்; கொடாது நின்ற பொழுதுதான் அது குன்றியழியும். தசரதன் ஓயாது கொடுத்துக்கொண்டேயிருக்கின்றான்; ஆதலால் புகழ் அவனிடம் குவிந்துகொண்டேயிருக்கிறது. குன்றாத கொடையால் குன்றென வளர்ந்து ஓங்கிக்கொண்டே யிருக்கின்ற அந்தப் புகழை மட்டும் அவன் கொடுக்கவில்லை; ஏன் என்றால், பொருட் கொடையை அவனால் நிறுத்தமுடியவில்லையாதலால் அதனைக் கொடுக்கமுடியாது போயதென்க.

மன்னனது கொடைச் சிறப்பையும் புகழ்ப்பெருக்கையும் ஒருங்கே யுணர்த்தியிருக்கும் உரைத் திறம் உவகைக்கு இடமாயது.

கொடையினாலே தான் உயர் புகழ் உண்டாம்; அதுவே ஒருவனுக்கு உயிராதாரமான சொந்த வுடைமையாம் என்பதை இதனால் அறிந்துகொள்ளலாம்.

-லோடு உடனே அழியும் பொருளைக்கொடுத்து உயிரோடு என்றும் அழியாத புகழைப் பெறுபவனே பெரும் பாக்கியவான் என்பது கருத்து.

மன்னனிடம் மருவியுள்ளது தலை சிறந்த உயர்ந்த புகழ் ஆதலால் சீர்த்தி என்னும் வார்த்தையால் நயமாக அதனைத் தெளி ரியருளினர். சிறந்த கீர்த்தியைச் சீர்த்தி என்பர்.

"சீர்த்தி மிகுபுகழ் மாலை யியல்பே." (தொல்காப்பியம்).

என ஆசிரியர் தொல்காப்பியனார் அருளியிருத்தலறிக.

இவ்வண்ணம் புகழ்க்குரிசிலான தசரதன் சனகனுடைய வேண்டுகோளுக்கு இணங்கி அவனது அருமை விருந்தினனாய் அங்கே மூன்று வாரம் தங்கியிருந்தான்.

கலியாணம் முடிந்தவுடன் விசுவாமித்திரர் இராமனிடம் உவகை யுரையாடி யாவரிடமும் விடை பெற்றுத் தவம் கருதி இமயம் நோக்கிச் சென்றார். கையடையிலிருந்து தொடர்ந்து வந்த முனிவர் இவ்வளவோடு பிரிந்தார். அவரைப்பற்றி இனிமேல் தனியே கூறநேருங்கால் அரிய பல நலங்களை அங்கே காண்போம்.

திங்கள் ஒன்று கழிந்த பின் சக்கரவர்த்தி அயோத்திக்குப் புறப்பட ஆயத்தமானான். சனகனிடம் விடை கேட்டான். அந்த ஞான சீலன் இந்த மான வீரனைப் பிரிய மனமில்லாமல் மறுகி நின்றான். அவனிடம் அரிதின் விடைபெற்று மக்களும் மருகிகளும் ஒக்கலும் சேனைகளும் புடை சூழ அரசர் பிரான் இரதத்தில் எழுந்தருளினான். சனகன் மந்திரிமார்களுடன் சிறிது தூரம் உடன் தொடர்ந்து வந்தான். மிதிலைவாசிகளனைவரும் சீதையையும் இராமனையும் ஆசையுடன் தொழுது நோக்கி ஆர்வமீதூர்ந்து நின்றார். மன்னர் பிரான் பிரயாணமானபொழுது அங்கே நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் குறித்துவரும் கவிகளுள் சில அடியில் வருவன.

### தசரதன் அயோத்திக்கு எழுந்தது.

தன்மக்களும மருமக்களும நனிதன்கழலை தழுவ
மன்மக்களும் அயல மகக ளும வயின்மொய்த்திட மிதிலைத்
தொன்மக்களும் மனமுக்குயிர் பிரிவென்பதொர் துயரின்
வன்மைக்கடல் புகவுய்ப்பதொர் வழிபுக்கனன் உரவோன்.

### இராமன் சீதையுடன் சென்றது.

முன்னேநெடு முடிமன்னவன் முறையிற்செல, மிதிலை
நன்மாநகர் உறைவார் மனம் நனிபின்செல, நடுவே
தன்னேர்புரை தருதம்பியர் தழுவிச்செல, மழைவாழ்
மின்னேபுரை யிடையாளொடும் இனிதேகினன் வீரன்.(2)

சகுனத் தடை நேர்ந்தது.

ஏகும்மள வையின் வந்தன வலமும் மயில் இடமும்
காகம் முதலிய முந்திய தடைசெய்வன கண்டான்
நாகம்மனன் இடையிங்குளது இடையூறென நடவான்
மாகம்மணி யணிதேரொடு நின்றான்நெறி வந்தான். (3)

நிமித்திகன் சொன்னது.

நின்றே நெறி யுணர்வானொரு நினைவாளனை அழையா
நன்றோ பழுதுளதோ? நடு வுரைநீ நயம்என்னக்
குன்றே புரை தோளான்எதிர் புள்ளினகுறி கொள்வான்
இன்றேவரும் இடையூறது நன்றாய்விடும் என்றான். (4)

(பரசுராமப்படலம், 3-6)

தசரதன் குடும்பத்துடன் புறப்பட்டதும், மிதிலா நகரத்துச் சனங்கள் பிரிவாற்றாமல் வருந்தி நின்றதும், பொருந்தா நிமித்தங்கள் இடையே புகுந்ததும், நிமித்திகன் நினைந்து சொன்னதும் இவற்றால் அறியலாகும். கவிகளை முந்துறச் சந்தத்துடன் படித்துப் பார்க்கவேண்டும்.

1. இராமன் முதலிய புதல்வர் நால்வரும் புது மணம் புணர்ந்து துணைவியருடன் இனிமை சுரந்து வருதலால் அவர் தம் தகைமையும் வகைமையும் தெரியத் தன் மக்களும் மரு மக்களும் என்றார். சுற்றம் சூழக் கொற்றவன் வருகின்ற குதூகலம் குறித்துக் கூறியபடி யிது.

கழல் பரவ என்றது அவ்விழுமிய தம்பதிகளுடைய பணிவும் பண்பும் உணர வந்தது.

கலியாணமானவுடனே களிப்பு மீதூர்ந்து தந்தை தாயரை மதியாது நிந்தையில் நிமிர்ந்து பிழைபட்டொழியும் இளவட்டங்கள் இக்குல மக்களுடைய குணநலங்களை யுணர்ந்து நலமடைய வேண்டும். மணம் புரிந்தவுடனே பெற்றோரிடம் மனம் பிரிந்து மாறுபடலாகாது. படின் தெய்வம் சீறிவிடும் என்க.

மன்மக்கள என்றது உடன் வந்திருந்த அரசர்களை. அயல் மக்கள் என்றது சேனை தளங்களை. அக் கூட்டத்தின் மிகுதியை உய்த்துணர்ந்து கொள்ளும்படி "வயின் மொய்த்திட" என்றார். வயின்=இடம். பக்கம் எங்கும் நிறைந்திருந்ததென்பதாம்.

சனகன் முதலாக மிதிலை மக்கள் எல்லாரும் இவரைப் பிரிய மனமில்லாமல் பெருந்துயரடைந்து வருந்தி நின்றனர் ஆதலால் “பிரிவு என்பது ஓர் துயரின் கடல் புக” என்றார். கடல் என்றதனால் அன்று அவர் உயிரும் உடலும் உருகி நின்றமை உணரலாகும். தசரதன் வரவில் எவ்வளவு பேரின்பம் அடைந்தார்களோ, அவ்வளவினும் அதிகமாகப்பிரிவில் நேர் துன்பம்கண்டார் என்பதாம். ஆகவே வந்தவரது அருமையும் பெருமையும் அறிய நின்றது. தலைப்பட்ட சம்பந்தி காரியம் முடிந்தபின் ஊருக்குத் திரும்பும் நீர்மையில் உலகவழக்கத்தின் சீர்மையும் இங்கு நினைவுற நேரும்.

பிள்ளைவீட்டார் பெருமையை நம் உள்ளம் வியப்பக் கூறி உறவுரிமைகளின் உயர்வினை இங்ஙனம் உணர்த்தி யிருக்கிறார்.

2. புது மணக் கோலத்துடன் சீதா சமேதனைப் பவனியாக அழைத்துச்
சென்ற நிலைமையைத் தலைமையாக இதில்

சக்கரவர்த்தியின் தேர் முன்னே சென்றது. அதன் பின்னே பரதன் முதலிய தம்பிமார்கள் தங்கள் மனைவிமார்களுடனமர்ந்த இரதங்கள் புடை சூழ்ந்து வரச் சானகி ராமன் இரதம் இனிது நடந்தது என்க. மணம்புரிந்து இனிய மனைவியுடன் மங்களமாச் செல்கின்ற இராமனை இங்கே அழகன் என்றது வீரன் என்றது அடுத்து வரவுள்ள அரியபோரையும் பெரிய வெற்றியையும் முன்னதாக நாம் உன்னி யுணர இன்னவாறு சொன்னார் என்க.

3. இங்ஙனம் செல்லுங்கால் இடையே சகுனத்தடை நேர்ந்தது. காகம், வலமிருந்து இடம் பாய்ந்தது; மயிலும் வலப் புறமிருந்து இடப்புறம் பறந்தது. முன்னது அசகுனம். பின்னது சுப சகுனம். இவற்றைக் கண்டவுடனே தசரதன் தேரை நிறுத்திக்கொண்டு கலைக்குழாத்திலிருந்து நிமித்திகனை வரும்படி பணித்தான். அவன் வந்து வணங்கி நின்றான். நேர்ந்ததை மன்னன் நேரே கூறினான். அவன் ஓர்ந்து நோக்கி உறுவதை உரைத்தான்: “அரசர் பெரும! அரை நாழிகைக்குள் எதிரே ஒரு பெரிய இடையூறு வருகின்றது; ஆனால் அது உடனே நீங்கி நமக்கு உயர் நன்மையுண்டாம்” என்று அவன் உறுதி மொழி தந்தான். அவனது உரை விரைவுடன் வந்தது.

இன்றே என்றது இப்பொழுதே என்றவாறு.

புள்ளின் குறி கொள்வான் = சகுனம் பார்த்துச் சொல்வோன். சகுனத்தைப் புள்ளின்குறி என்று குறித்திருக்கிறார். சகுனம் = பறவை. பறவைகளுடைய ஒலிகளையும் போக்குவரவுகளையும் நுனித்து நோக்கிப் பலாபலன்களைக் குறிப்பாகச் சொல்ல வல்லவனை நிமித்திகன் என்பர். நிமித்தம் என்னும் சொல் சோதிட சோதனைகளைக் குறித்துவரும். ஆதலால் அவற்றில் தேர்ந்தவன் நிமித்திகன் என நின்றான்.

"சோதனம் சோதிடம் நிமித்தச் சொல்லே." (பிங்கலந்தை)

என்றதனால் நிமித்திகன் நிலையும் கலையும் அறியலாகும். "புட்கூற்றுளனை உட்கூற்றுக்கி" என்று கொங்குவேளிர் கூறியிருத்தலால் நிமித்திகனது உரைப்பொறுப்பு உணரலாகும்.

ஒவ்வொரு துறையிலும் கைதேர்ந்த கலைவல்லுநரான கலைஞர் பலர் அரசுடன் வந்திருந்தனர் ஆதலால் அங்கே நேர்ந்ததை உரைக்க நிமித்திகன் முன் நின்றான். மனத்தால் ஆராய்ந்து வருங்கால பலனை வழுவாமல் மொழிபவனை நினைவாளன் என்றார். உள்ளுணர்வால் புள்ளியல் புணர்ந்து சொல்பவன் என்பதாம். "புள்ளுணர் மதிமகன் தெள்ளிதில் தேறி" (பெருங்கதை) என்பதும் காண்க.

காகம் முதலிய என்றதனால் வேறு சில சகுனத் தடைகளும் இடை நேர்ந்தன என்று தெரிகின்றது.

காக்கை கொக்கு கிளி நாரை கோழி ஓணான் நரி புள்ளிமான் என்னும் இவை இடமிருந்து வலம் போனால் நலம்; மயில் கருடன் குயில் கிளி வலியன் கழுகு காடை உடும்பு கீரி குரங்கு என்னும் இவை வலமிருந்து இடம் போதல் நலமாம் என்க. இவை மாறுபடின் அபசகுனமாம்.

காகம் இங்கே இடம் பாய்ந்தமையால் அது தீயசகுனமாய்த் தடையுற நேர்ந்தது. மயில் வலமிருந்து உடனே இடமானமையால் அது ஒல்லையில் நல்ல சகுனமாய் நலம் பயக்க வந்தது.

இங்கே சில சிந்தனைகள் வருகின்றன.

சிறந்த பகுத்தறிவுடைய மனிதன் இழிந்த பறவை விலங்குகளை எதிர்நோக்கிக் காரியங்களை நடத்தல் வீரியமாகுமா? சகு

னம் என்பது ஒன்று உண்டா? இயல்பாகக் குறுக்கே பறந்து போகின்ற பறவைகளைக் குறித்து மயலாக மனிதர் மறுக்கமடைகின்றனர். மூடநம்பிக்கையில் மூண்டெழுந்து நீண்டகாலமாக மனிதரை இது ஆண்டு வருகின்றது; இதனால் நமது ஆண்டகைமை குன்றிவிடுகின்றது; அடிமை மனப்பான்மை குடிகொள்கின்றது; ஆதலால் சகுனம் என்னும் இச்சனியனை யாண்டும் நம்பலாகாது என்று தக்கநம்பிக்கையில் நம்பிக்கையுடைய நவீன ஆராய்ச்சியாளர் சிலர் துணிந்து கூறுகின்றனர். சகுனத்தடைகளைக் கண்டு சஞ்சலப்படாதிருக்கும்படி தடைசெய்து வருகின்ற அவரது வாவிலும் ஓரளவு உறுதி காணவேண்டும்.

கடவுள் படைப்பில் மனிதன் எவ்வளவோ படைப்புகளைப் படைத்துப் பரவவிட்டிருக்கின்றான். பேர் ஊர் உருவங்கள் யாதும் இல்லாத கடவுளுக்கே பேரிட்டு ஊரிட்டு உருவிட்டு உலகில் விட்டிருக்கின்றான். கல்லிலும் செம்பிலும் மண்ணிலும் கூடக் கடவுளைப் படைத்து அவற்றுள் கண்டு மகிழ்கின்றான். மனிதன் தேவனிடமிருந்து வந்துள்ளவன் ஆதலால் அவன் தனியே ஒரு காலத்தில் கண்ட காட்சிகள் காலாந்திரத்தில் மாட்சிமையடைகின்றன. சனசமுதாயமும் அவற்றை நம்பிக் கையாண்டு வருகின்றன. அவற்றால் பலனும் நலனும் கண்டு மகிழ்கின்றன.

இவ்வாறான வழிபாடுகளை ஆதியில் வெளியாக்கின மூலபுருடர் யார்? என்பதை யாராலும் அறியமுடியாது. உலக வழக்கம் இறைவன் ஆணையால் உருவாகி ஒளிர்கின்றது. புள்ளின் குறியை உள்ளியுணர்ந்து முதலில் சொன்னது யார்? அது உலகில் எவ்வாறு பரந்து இவ்வாறு வந்தது? பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே சகுனப் பார்வை இந்நாட்டில் இருந்து வருகின்றதென்பதைத் தசரதன் உரை இங்கே காட்டி நிற்கின்றது. ஒரு வேளை கம்பரே இதனைப் படைத்து இடைப் புகுத்தியிருக்கிறாரோ? எனின், மூல நூலாசிரியராகிய வால்மீகியார் ஆண்டுச் சொல்லியுள்ளதையே ஈண்டு இவர் அழகுபடுத்திச் சொல்லியிருக்கிறார். அங்கே தசரதன் வசிட்டரிடம் கேட்க, அவர் சகுன நிலை தெரிந்து சொன்னதாக வுள்ளது; இங்கே அதனை நிமித்திகன் உரைத்ததாக மாற்றியிருக்கிறார்; இவ்வளவே வேற்றுமை. அரிய முனிவரிடம் இச் சிறிய காரியத்தை உசாவுதல்

உசிதமாகாதே என்று கருதித் தக்க கலைஞன் ஒருவனைப் பக்கம் வைத்துக் கதை நிகழ்ச்சியை நம் கவியரசர் இங்ஙனம் சுவைசெய்

பண்டைக்காலத்திலிருந்தே இந்நாடெங்கும் சகுனப்பார்வை பரவியிருக்கின்றதென்பது இதனால் நன்கு அறியலாகும். சங்க நூல்களிலும் இது இடம் பெற்றுள்ளது.

"நாளன்று போகிப் புள்ளிடை தட்ப" (புறம் 124)

என்றதில் புள்ளின்குறி யுள்ளமை காண்க. புள் இடை தட்ப என்றது புள் நிமித்தம் இடையே நின்று தடை செய்ய என்றவாறு.

"புலரிவிடியல் புள்ஓர்த்துக் கழிமின்" (மலைபடு கடாம்) விடிந்த பின்பு நிமித்தம் பார்த்துப் போவீராக என்பார் புள் ஓர்த்துக் கழிமின் என்றார். பிரயாணத்தில் சகுனம் பார்த்துப் போகவேண்டும் எனப் பெருங்கௌசிகனார் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

"நாளும் புள்ளும் கேளா ஊக்கமொடு
எஙகோன் ஏயினன்." (தகடூர் யாத்திரை)

"புள்ளும் நிமித்தமும் பொலலா வாக" (பெருங்கதை)

"நாளும் புள்ளும் நயத்தகு நன்னிலைக்
கோளும் ஓரையும கொண்ட நிமித்தமும்
ஆளும மாநதரின் ஆய்ந்துகொண டாயிடைத்
தாளி னூக்குபு சாத்தொ டெழுந்தவே" (சீவகசிந்தாமணி)

புள்ளின் நிமித்தம் இவற்றுள் வந்துள்ளமை காண்க.

பறவைகளிடமே யன்றி விலங்குகளிடையும் சகுனம் பார்ப்பது உண்டு. கழுதை கத்துதல் நல்லது; அதனைக் காண்பது தீது. நரியைப் பார்ப்பது நலம்; அதன் ஊளையைக் கேட்பது தீமை. பசு எதிர்வரின் இனிது; காளை வருதல் இன்னாதாம்

மதுரையில் கோவலன் சிலம்பை விற்கும் பொருட்டு வீட்டைவிட்டு வெளியே வரும்பொழுது காயடியாத கடியஎருது எதிரே வந்தது; அது ஒரு தீய நிமித்தமாய்ப் பின்பு அவன் கொலையுண்டு மாய நேர்ந்ததென்பதை இளங்கோவடிகள் தெளிவாகக் குறித்திருக்கிறார். அடியில் வருவது காண்க.

"வல்லா நடையின் மறுகிற் செல்வோன்
இமிலேறு எதிர்ந்தது இழுக்கென அறியான்
தன்குலம் அறியும் தகுதியன் றாதலின்
தாதெரு மன்றம் தானுடன் கழிந்து" (சிலப்பதிகாரம், 16)

ஏறு எதிர்ந்தது அபசகுனம் என்று கோவலன் அறியாது போனான் என இதில் இரங்கி மொழிந்திருத்தலறிக. இமில்= காளை முதுகில் புடைத்துள்ள தசைத்திரள். இது திமில், திமிள் என இக்காலத்தில் வழங்கப்படுகின்றது.

பாண்டவர்கள் வேத்திரகீயம் என்னும் நகரிலிருந்து திரௌபதியின் சுயம்வரத்திற்குச் செல்லும் பொழுது வழியிடையே கண்ட சுபசகுனங்களைக் குறித்து உவகைகொண்டாடி யிருக்கின்றனர். அவை அடியில் வருவன.

"வண்டுறை மருங்கின் ஆங்கோர் மாங்கனி வீழ்தல் கண்டே
தண்டுறை மீன்களெல்லாம தத்தமக்கு இரையென்று எய்த
விண்டுறை கிழியவோடி வென்றெரு வாளை தன்வாய்க்
கொண்டுறை வலிமை நோக்கிக் குறிப்பினால் உவகை கூர்ந்தார்.

வெறிபடு முளரி மொக்குள் விரிபதம் நோக்கிச் சுற்றும்
பொறிவரி வண்டினீட்டம புறத்திருந் திரங்க வண்டொன்று
இறகரால் வீசி உள்புக்கு இன்மது நுகர்தல் கண்டு
நெறியின் நன்னிமித்தம் ஆக நெஞ்சுற நினைந்து சென்றார்."
(பாரதம், திரௌபதிமாலையிட்ட சருக்கம்)

நெறியிடை நேர்ந்த நிமித்தங்களை நோக்கி நல்ல சகுனங்கள் என்று தருமர் முதலிய ஐவரும் உள்ளம் உவந்துசென்றிருத்தலை இவற்றுள் சொல்லியிருத்தல் காண்க. நிமித்த நிலைகளையும் பொருட் குறிப்புக்களையும் உற்ற பலன்களையும் உறுதிநலங்களையும் ஊன்றியுணர்ந்து பழைய கால நிலைமையைத் தெளிந்து கொள்க.

தேவாரம் முதலிய சமய நூல்களிலும் சகுனம்பரவியுள்ளது. உலகநிலையை மறந்து பரனருளையே பரவியுள்ளவர்களும் தங்கள் பிரயாணங்களில் நாளும் கோளும் நலமாகப் பார்த்திருக்கின்றனர். நூல்களிலேயன்றி உலக வழக்கிலும் சகுனப் பழமொழிகள் பல வந்திருக்கின்றன. இன்றும் யாண்டும் வழங்கி வருகின்றனர்.

" செந்தலைக் கருடன் வந்திடம் பாய்ந்தால்
அந்தமில் ஊதியம் நம தலைக்கடையாம்."

என இன்னவாறு தோன்றியிருக்கும் முதுரைகள் இன்னும் பல உள்ளன. ஆங்கில இலக்கியங்களில் இந்தச் சகுனம் ஓமன் Omen என்று வழங்கப்படுகின்றது. ஆகவே மேல் நாட்டிலும் இது கால் நாட்டியுள்ளமை தெளிவாம்.

இது வரை கூறியவாற்றால் நிமித்த வகையும் நம் நாட்டில் அது நிலவியுள்ள நிலையும் அறியலாகும்.

இத்தகைய புள்ளின் குறியை நன்றாகத் தேர்ந்துள்ள அத் தெள்ளியோன் உள்ளதை ஓர்ந்து சொன்னவுடனே மன்னன் உள்ளம் கவன்று "உறுவது யாதோ?" என்று உளைந்துநின்றான்.

அந்நிலையில் பயங்கரமான ஒரு பேரொலி வையமும் வானமும் அதிர ஒய்யென முழங்கி யெழுந்தது. அவ் அதிர்ச்சியை வியந்து திகைத்து அரசன் அயலே நோக்கினான்.

வடகீழ்த்திசையிலிருந்து சடைமுடிபுடைவீசப் பள பள என்று மின்னுகின்ற கொடிய மழுவாயுதத்தைக் கையில் ஏந்திக் கொண்டு, கண்களில் நெருப்புப் பொறிபறக்க உக்கிரவீரத்துடன் பரசுராமர் ஓடி வந்தார். அவரது வருகை யாவரும் நடுங்கும் படி அதிகோரமாய் அடல் கொண்டு நின்றது.

அரசகுலத்தைக் கருவறுத்து வருகின்ற அந்தப் பரசுபாணியைக் கண்டதும் தசரதன் உள்ளம் கலங்கினான். தன் பொருட்டு யாதும் அஞ்சவில்லை; தனது அருமைத் திருமகனுக்கு ஏதேனும் அபாயம் விளைத்துவிடுவாரோ என்று அலமரலடைந்து தேரை விட்டு விரைந்து கீழிறங்கினான். அதற்குள்ளாக அவர் இராமனது இரதத் தருகே முதிர் கோபத்துடன் மூண்டு நெருங்கினர். மன்னன் இருகரங்களையும் எதிர் கூப்பிக்கொண்டு இடையே முடுகிப் புகுந்து அவர் அடியில் நெடிது விழுந்து பணிந்தான்.

முடி மன்னன் அடிவிழுந்து தொழுததையும் மதியாமல் அம்மழுவாள் வீரன் கோதண்ட வீரனை நோக்கி, "ஏ இராமா! நீ மிதிலையில் வில்லை வளைத்த அவ் வல்லமையை நான் அறிவேன்; உன் தோள்வலியை இங்கே கொட்டி அளந்து பார்க்க வந்திருக்கிறேன்; இதோ இந்த மழு ஆயிரக்கணக்கான அரசர் தலைகளை

வெட்டி எறிந்தது; இன்று உன்னையும் நோக்கி வந்திருக்கின்றது" என்று இன்னவாறு உரையாடவே தசரதன் உயிர் பதைத்து உள்ளம் துடித்துப் பரசுராமர் எதிரே வணங்கி நின்று, "வீர முனிவரே! கோபம் ஆறி யருளுங்கள்; தேவ தேவர்களும் தேவரீர் எதிர் நிற்கமுடியாதே; சிறிய மானுடராகிய நாங்கள் ஒரு பொருளா? இவன் நான் மலடிருந்து பெற்ற மகன்; மிகவும் இளையவன்; யாதொரு தீமையும் அறியாதவன்; இப்பொழுது தான் மணம் புரிந்துவருகின்றான்; இவன் உங்களுக்கு அபயம்; நீங்கள் கொடுத்த பிச்சையாக நான் எப்பொழுதும் கருதுவேன்; யாதொன்றும் நினையாமல் கருணைசெய்து அனுப்பியருளுங்கள்" என்று பலவாறாகப் பன்னி வேண்டினான். புத்திர வாஞ்சையால் மறுகி நின்று மன்னன் அன்று மன்றாடியுள்ளதைக் கவி நன்றாகக் காட்டியிருக்கிறார். அடியில் வருவன காண்க.

### தசரதன் பரசுராமரிடம் மறுகி மொழிந்தது.

" அவன்அன்னது பகரும்மள வையில் மன்னவன் அயர்வான்
புவனம்முழு வதும்வென்றொரு முனிவற்கருள் புரிவாய்
சிவனும்மயன அரியுமஅலர்; சிறுமானிடர் பொருளோ?
இவனுமஎன துயிருமஉன தபயமமினி என்றான். (1)

### எளியன் என இரங்கி நின்றது.

விளிவார்விளி வதுதீவினை விழைவாருழை அன்றோ?
களியால்இவன் அயர்கின்றன உளவோ? கனலுமிழும
ஒளிவாய் மழுவுடையாய்! பொரவுரியாரிடை அல்லால்
எளியாரிடை வலியார்வலி என்னாதவ தென்றான். (2)

### முனிவு நீங்கி அருள்க என்றது.

தனிமாதவ முடையாயிது பிடிநீயென நல்கும்
தனிநாயகம் உலகேழையும் உடையாயிது தவிராய்!
பனிவார்கடல் புடைசூழ்படி நரபாலரை அருளா
முனிவாறினை முனிகின்றது முறையோ என மொழிவான். (3)

புறனின்றவர் இகழும்படி நடுவின்றலை புணராத்
திறனின்றுயர் வலியென்னதொர் அறனின்றரு செயலோ?
அறனின்றதன் நிலைநின்றுயர் புகழொன்றுவ தன்றோ
மறன் என்பது மறவோய்! இது வலியென்பது வலியோ? (4)

சலத்தோ டியை விலனென்மகன் அனையானுயிர் தபுமேல்
உலத்தோ டெதிர் தோளாய்! என துறவோடுயிர் உகுவேன்
நிலத்தோ டுயர் கதிவானுற நெடியாய்! உனதடியேன்
குலத்தோடற முடியேலிது குறைகொண்டனன் என்முன். (5)

என்றுஅடி விழுவானையும் இகழா எரி விழியாப்
பொன்றார்கலை அணிவானெதிர் புகுவானிலை உணராத்
தன்றாலஒரு செயலின்மையை நினையாவுயிர் தளரா
மின்றாலயர் வுறும்வாளர வெனவெய்துறல் உற்றான்.'' (6)

(பரசுராமப் படலம் 19-24)

மன்னர்பிரான் இன்னவாறு மறுகி மன்றாடியிருக்கிறான்.

மகாவீரனான தசரதன் பரசுராமனைக் கண்டவுடனே இவ் வண்ணம் அலமாலடைந்து, நிலமிசைவிழுந்து, நெடிது பணிந்து, பொறுதி செய்தருளும்படி பலபல மொழிந்து பரிதபித்துள்ள மையால் அந்த வீரமாமுனியின் கோரநிலைமையும் கொலைவன் கொடுமையும் நன்கு புலனாம்.

1. தமது தந்தையாகிய சமதக்கினி முனிவரைக் கார்த்த வீரியன் மைந்தர் காந்து வந்து கொன்றதிலிருந்து கோபமீக் கொண்டு அரசர் குலத்தைத் தலையெடுக்க ஒட்டாமல் கருவறுத்து நிலையடக்கி வந்தமையால் சத்திரிய வயிரி என்று பரசுராமரை இத்தரை முழுவதும் அஞ்ச நேர்ந்தது. அஞ்சா நெஞ்சராகிய அவ் ஆண்டகை நீண்ட மழுவாயுதத்துடன் யாண்டும் திரிந்து அரசு நிலையழித்து முடிவில் உலக முழுவதையும் காசிப முனிவருக்குத் தானமாக வழங்கவிட்டு ஆறுதலடைந்து போய் மகேந்திர மலையில் தவம்புரிந்திருந்தார் ஆதலால், "புவனம்முழுவதும் வென்று ஒரு முனிவற்கு அருள்புரிவாய்!" என அவர் முனிவாறியுள்ள தனிநிலையைத் தலைமையாக எடுத்துக் காட்டினான். உலகைப் பிறர்க்கு உதவிய பெருவள்ளலாகிய தேவரீர் எங்களுக்கு உயிர்ப் பிச்சை தந்தருளவேண்டும் என்பது குறிப்பு.

"இவனும எனது உயிரும் உனது அபயம்" என்றதனால் உபயநிலைகளையும் அறியலாகும். தன் உயிரினும் இராமனை மிகவும் அருமையாக மன்னன் கருதியிருந்தான் ஆதலால் இவனும் என அவனை முன்னுற வைத்துத் தன்னைப் பின்னதாக உரைத்தான்.

அபயப்பிரதானத்தில் பிரதானமாக அருள வேண்டிய படியைப் பரிதாபத்துடன் அறிவுறுத்திய படி யிது. தன் காதலன்பால் காதல் மீறியுள்ள உண்மை நிலை மன்னன் ஓதுந்தோறும் உரை மீறி வருகின்றது. தன்னுயிர்க்கு இன்னுயிராயுள்ளது இன்னது என்பதை முன்னதாக உணர்த்தினன்.

எவனைக் காணுதலால் உள்ளமும் உயிரும் உவகை மலிந்து உடல் தளிர்த்துள்ளதோ அவன் இவன் என அபயம் கூறி அவனைக் கண்டு களிக்கும் பொருட்டுத் தன்னையும் விட்டருளும் படி உபயம் குறித்தான்.

என்னை என்னுது எனது உயிரும் என்றது அரசர் குலகாலனாய் உலக மன்னர் பலரையும் முன்னம் அவர் கொன்று தொலைத்திருக்கும் கொலை நிலை தெரிந்து வந்தது.

யாதொரு வெம்மையும் செய்யாமல் தம்மை அருள் புரிந்து விடும்படி தஞ்சமடைந்து கெஞ்சி வேண்டுகின்றான் ஆதலால் அப் பணிவு நிலை தெரிய அபயம் என்றான். பயம் இல்லாதது அபயம் என்க. தஞ்சம் என்று தம் அடி சார்ந்தவனை அஞ்சாதே என்று உறுதிமொழி கூறிப் பயம் நீக்கிப் பாதுகாத்து உயர்ந்தோர் புரியும் அந்த அருளாண்மைக்கு அபயம் என்று பெயர். இது அடைக்கலத்தினும் உயர்ந்தது. அடைந்தவரை ஆதரிக்கும் இவ்வுயர் நிலை கடவுள் ஒருவருக்கே தனியுரிமையாக நிலைத்துள்ளமையான், "அபயமும் வரதமும் இறைவனது உபய விபூதிகள்" என்பர். உற்ற உயிர்களின் உறுபயம் நீக்கி உயர் வரம் அருள்வதால் வரதம் என வந்தது.

அபயம் என்னும் இந்த உயர்ந்த பதத்தைத் தசரதன் உரை;

அமரரும் அஞ்ச அடுபோராற்றும் பெருவீரனை தசரதன் பரசுராமனிடம் அடி பணிந்து இவ்வாறு அபயம் புகுந்து அலமந்தது என்னை? எனின், அவர் அருந்திறலோடுபெருந்தவமு முடையவர். சாகாவரம் பெற்றவர். சத்திரியர் மீது கொண்டுள்ள கோபத்தால் அரசரெவராயினும் தமது பரசினல் அழித்துப் பழி வாங்கி வரும் வீறுடையவர்; அவரிடம் அளி வாங்கி உய்ந்தாலன்றி வேறு வழியில்லை ஆதலால் அமராடலை அறவே ஒழிந்து அடி வணங்கி இங்ஙனம் அடைக்கலம் ஆனன் என்க.

சிவன் அயன் அரிகளோடு சமரில் சமமானவர் என அவ ரது உயர்வீர நிலையைப் புகழ்ந்தது அவர் உவந்தருளும்படி என்க. தங்கள் இருவரையும் இகழ்ந்துவிடும்படி திரிமூர்த்திகளை எதிர் காட்டி மன்னன் இப்படி மன்றாடியிருக்கின்றான்.

பரசுராமருடைய தவமகிமை, வரபலம், தெய்வத்தன்மை வீரபராக்கிரமம், வெற்றித்திறம் முதலியவற்றை நன்கு தெரிந் திருத்தலால் மன்னன் இங்ஙனம் பணிந்து பரிந்து வேண்டினான்; அவ்வேண்டுகோளுடன் அமையாமல் மேலும் சில தரும நெறி களை உரிமையுடன் உணர்த்தி உறுதி நாடியிருக்கின்றான்.

2. தலைமை நிலையுடையார் பிறரைத் தண்டிக்க நேரின் அந்தத் தண்டனைக்குத் தகுதியான தீயசெயல்களைப் புரிந்தவரை யே தண்டித்து அடக்குவர்; தூயவர்கள்பால் நேயம்புரிந்தருளு வர்; யாதொரு தீவினையும் அறியாமல் எவ்வுயிர்க்கும் இனியனா யிருக்கும் இப் புனித இராமனிடம் முனிவர் தலைவரான நீர் முனிவு கொள்ளலாமா? என்று உள்ளம் கனிவு தோன்ற இதில் கூறுகின்றான்.

"விளிவார் விளிவது தீவினை விழைவார் உழை அன்றோ?" என்றது நல்வினைகளையே விழைந்துள்ள நல்லோருழை வல்லோர் பொல்லாதது புரியலாகாதென்பது குறிப்பு. உழை=பக்கம். விளிவு=சாவு, கேடு. இங்கே அது கோபத்தைக் குறித்து வந் துள்ளது. பழைய நூல்களில் இறத்தலையே அது பெரிதும் உணர்த்தி நிற்கின்றது.

* "விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில
தீமை புரிந்தொழுகு வார்." (குறள், 143)

என்னும் இதில் விளிவு குறித்து நிற்கும் பொருளை யறிக.

---

* தம்மை நல்லவர் என்று நம்பியுள்ளவருடைய மனைவியை விரும்பிச் சோரம் செய்தவர் உயிரோடு இருந்தாலும் செத்தவரே யாவர் என்பதாம். இதன் வேகத்தை உய்த்துணரவேண்டும். தீமை என்றது அவரது காமநுகர்ச்சியின் கடுங்கேட்டினை. இருமையையும் இழப்பிக்கும் அதிபாதகம் ஆதலால் அதனைத் தெளிவாக விளக்கிச் சொல்லாமல் உள்ளம் கூசி ஓர்ந்து கொள்ளச் சுட்டினார். உருவுடன் உலகில் திரியினும் பழியும் பாவமும் அடைந்து அவர் அடியோடு அழிந் தார் என்பது விளிந்தார் என்றதனால் உணர்ந்து கொள்ள நின்றது.

இங்ஙனம் பெரும்பாலும் இறப்பினையே உணர்த்திவரும் விளிவு என்னும் பதத்தைக் கம்பர் வெகுளிப் பொருளில் உபயோகித்திருக்கிறார். அடியில் வரும் இடங்களிலும் இதனை அறியலாம்.

" சுளியும் மென்னடை தோற்க நடந்தவர்
ஒளிகொள் சீறடி ஒத்தன வாமென
விளிவு தோன்ற மிதிப்பன போன்றன
நளினம் ஏறிய நாகிள அன்னமே "

(நீர்விளையாட்டுப்படலம், 26)

தாமரைமேல் அன்னம் தங்கி இருக்கும் தன்மையை வருணித்தபடி யிது. நடையழகில் தம்மை வென்றுள்ள கோசல தேசத்துப் பெண்களின் பாதங்களை ஒத்து இருக்கின்றன என்று தாமரை மலர்களை அன்னங்கள் தம் கோபம் தோன்ற மிதித்திருந்தன என்பதாம். கவியின் கற்பனைபோயிருக்கும் நுட்பம் நோக்குக.

பலவான் ஆயின் அவனை யாதும் செய்யமாட்டாமல் அவனோடு தொடர்புடையவர் தம்மிடம் வந்து அகப்பட்டால் தம் வெம்மை தீரப் பகைமையாளர் அவரை நலிவர் என்னும் இயல்பு இதில் அறிய நின்றது. விளிவு தோன்ற என்றது உள்ளத்தே புதைந்து புகைந்து கிடக்கின்றபகைமை யுணர்ச்சி புறத்தே நன்கு தெரிய என்க. இதில் விளிவு சுட்டிநிற்கும் பொருளை அறிக.

" விரத வேடமற் றுதவிய பாவிமேல் விளிவு
சரதம் நீங்கல தாமென்றான் தழீஇயகை தளர "

(மீட்சிப்படலம், 130)

இது தசரதன் இராமனிடம் சொன்னது. விளிவு என்னும் சொல் வெகுளிமேல் வந்திருத்தலை இதன்கண்ணும் காண்க.

விளிவார் விளிவது என்றது சினம் உடையார் தம் சினம் தீர்த்துக்கொள்ளச் சீறி எழுவது என்றவாறு. சத்திரிய குலத்தவர் மீது கறுவுகொண்டு நிற்கும் பரசுராமரது கருத்தை நோக்கிக் குறித்தபடியிது.

செல்வச்
செய்யும் பாவகாரிகளை அல்லவா கோப மீறியுள்ள தாங்கள்

கொன்று தொலேப்பது? யாதொரு செருக்கும் இல்லாமல் யாண்டும் நல்லவனுயுள்ள இச் செல்ல மகனிடம் இன்று நீர் சீறி வந்தது ஏன்? செல்வம் கல்வி அதிகாரம் வலி அழகு முதலியவற்ருல் களிப்பு மீறி ஏதாவது குற்றம் குறைகள் செய்திருக்கிருனு? இருந்தால் எடுத்துக் காட்டுங்கள் என்பான், "களியால் இவன் அயர்கின்றன உளவோ?" என்ருன். உளவாயின் நீர்விளிவோடு வந்தது நியாயமாம். இல்லாத இடத்தில் இப்படி வல்லோடி வந்தது அநியாயம் அல்லவா? ஒரு பழுதுமின்றி இனிய குண சீலனுயுள்ள புனித இராமன் எதிர் நீர் முனிவுகொள்ளுதல் முழுதும் பழுதாம் என்பதாம்.

கனல் உமிழும் ஒளிவாய் மழு என்றதனல் அந்தக் கொடிய ஆயுதத்தின் கொலே நிலே புலனும். பல தலேமுறைகளாக அரசர் குலத்தை நிலேயழித்து வருதலால் அதன் கொடுமையை நினேந்து இங்ஙனம் கூறலானன். படுகொலேயில் நிமிர்ந்து பகுவாய் திறந்துள்ள அப் படைக்கலங் கண்டே இவன் அடைக்கலமாகி அபயம் புகுந்தான் என்க.

கனல் உமிழும் மழு என்னும் பொழுது மன்னன் புனல் உமிழும் கண்ணனுய் மறுகியிருக்கிருன்.

நல்ல சுத்த வீரர்கள் தம்மை ஒத்த வல்லவர்களோடு எதிர்த்துப் போராடுவரேயன்றி மெலியர் மேல் சென்று நலிவு செய்ய மாட்டார்; செய்யின் வீரத்துக்கு இழுக்காம்; அதுவுமன்றிப் பழியும் பாவமும் உண்டாம் என விளேவினே எடுத்துக் காட்டி விலகிப்போம்படி விநயமாய் வேண்டியிருக்கின்ருன்.

வலியார் வலி எளியார் இடை என் ஆகுவது? என வினவி நிறுத்தியது அவர் தாமாகவே எண்ணித் தெளிந்து இரங்கியருள என்க. ஒரு எதிர்ப்பும் செய்யாமல் ஒங்கி அடித்தால் ஏங்கிக் கையேந்தும் நிலேமையில் இருக்கின்ற எளியவரை வலியவர் காய்ந்தால் அது வசையேயாம்; ஆகவே ஏழை பங்காளனை தேவ தேவனது கோபத்திற்கு உள்ளாகவேண்டிவரும் என்பதுகுறிப்பு.

"வலியவனிடத்தும் ஒத்தான் மாட்டினும் வெகுளிகாத்தல்
பொலிவுசெய் அறமதென்னப் பொருந்துறுது; அனேயர் தம்பால்
நலிவுறுவெகுளி செல்லாது; ஆதலால் நலியல் ஆற்ரு
மெலியவனிடத்திற் காக்கும் வெகுளியே அறமதென்பர்."
(பிரபுலிங்கலீலே)

வலியார் வலியை எளியார் மேல் செலுத்தலாகாது என இது உணர்த்தி நிற்றலறிக. தன்னிலும் வலியவன், தன்னை ஒத்தவன் என்னும் இன்னவர் மாட்டு எதிர்ப்பின் ஒருவனது ஏற்றத் தாழ்வுகள் எளிது தெரியும்; என்ன வகையிலும் எளியரோடெதிர்ப்பது இளிவேயாம் ஆதலால் அதனை ஒழிக என்பதாம்.

3. அரசர்மீது கறுவுகொண்டு நிலையழித்து வந்து பின்பு ஆறுதலடைந்து யாவையும் துறந்து தவம்புரிந்திருந்தீர்; அத்தகைய இனிய தவநிலையிலுள்ள அடிகள் இந்தக் கொடிய அவநிலையில் புகலாமா? என்பான், "முனிவா றினை முனிகின்றது முறையோ?" என்றான். அருந்தவ நிலையை நினைவுறுத்தியது அவர் திருந்தியருள என்க.

4. சினந்து வந்தவரது நிலைமை தலைமை எதிரியின் இயல்பு எதிர்ப்பின் திறம் முதலியவற்றை இதமாக எடுத்துரைத்துப் பின்பு உண்மையான வீரநிலையை உணர்ந்தருளுமாறு உறுதியுடன் உணர்த்துகின்றான். மறவோய்! என்றது வீரசிகாமணியே! என்றவாறு. பரசுராமரை இங்ஙனம் விளித்தது அவரது மறத் தன்மையைத் தெளிந்து மாட்சி புரிய என்க.

நடுவு நிலையின்றிக் கொடிய வழியில் நின்று அடலமர் புரிவது வீரமாகாது; கோரமேயாம். தமக்குப் படைவலியும் தோள் வலியும் உள்ளன என்று களிப்பு மீக்கொண்டு பிறரை அழிக்க நேரின் அதனால் பழியும் பாவமுமே விளையும் என மேல் விளைகின்ற பலனை எடுத்துக் காட்டி வெகுளி நீங்கியருளும்படி வேண்டுகின்றான். புறன் நின்றவர் இகழாதபடி நீதியோடு நின்று உயர்கின்ற திறனே உயர்வீரமாம்; அல்லாதது ஈனமாயிழிக்கப் படும் என்பதாம்.

" அறன் நின்று அதன் நிலை நின்று உயர் புகழ் ஒன்றுவது அன்றோ மறன்? " என்ற இதில் வீரத்தின் உண்மையான உயர் நிலையை உணரலாகும். நீதி நெறி கோடாமல் தரும நிலை தழுவி உறுதியுடன் பொருது வெல்வதே சுத்தவீரமாம்; அந்த உத்தம வீரனே புகழ் புண்ணியங்களையடைந்து உயர்வான் என்பதாம். மறன்=வீரம். தமக்குக் கிடைத்துள்ள வலிமையைத் தக்க வழியில் உபயோகிக்க வேண்டுமேயன்றித் தகாத வகையில்

செலுத்தலாகாது. செலுத்தின் உலகம் பழிக்கும்; பாவமும் ஆகும்; ஆதலால் ஒரு பாவமும் அறியாத இராமன்மீது கோபம் செய்யாது அருள் புரிந்து போகவேண்டும் என்பதாம்.

இவ்வாறு வீரர்களுடைய நெறிகளையும் முறைகளையும் நிலைகளையும் உறுதிபெற உரைத்து இறுதியில் தனது நிலைமையை அறுதியிட்டு உரிமையுடன் உணர்த்துகின்றான்.

5. தனது அருமைத் திருமகனுடைய நிலைமையைப் பாரசுராமர் நெஞ்சங்கொண்டு நன்றாக நினைந்தருளுமாறு மன்னன் பரசி நின்று பரிந்து பேசுகின்றான்.

உலத்தோடு எதிர் தோளாய்! என்றது மனிதருள் அவரோடு எதிர்க்க வல்லார் எவரும் இல்லை என்பது தோன்ற என்க. உலம்=திரண்டு உருண்ட கல். யாண்டும் எண்மையின்றித் திண்மையுற்றிருக்கும் திறமை குறித்து வந்தது. கல்லோடு எதிர்த்து மல்லாடும் தோள் என்றதனால் அவரது உடல் வலியின் நிலைமை யுணரலாகும். தோளைப்போல் உள்ளமும் கல்லாயிராமல் நான் சொல்வதைக் கேட்டருளவேண்டும் என்பது குறிப்பு.

நீர் சினந்து செய்தற்குரிய கொடுமையான குறைபாடுகள் யாதொன்றும் இல்லாத இனிய பண்பினன் என்பான் சலத்தோடு இயைவு இலன் என்றான். சலம்=கோபம், பகை, வஞ்சகம்.

இராமனுக்கு ஏதேனும் இடையூறு நேர்ந்தால் எனது உறவினரும் நானும் ஒருங்கே இறந்துபடுவோம்; படின், ஒரு பெரிய குடி அடியோடு அழிந்தபடியாம்; ஆகவே குலநாசம் செய்த கொடும்பழி நிலையாய் உமக்கு உண்டாகிவிடும் ஆதலால் யாதொரு இடரும் நினையாமல் உடனே ஒதுங்கி அருள்க என உயிருருகி அரசன் உளைந்து வேண்டினான்.

"அனையான் உயிர் தபுமேல், எனது உறவோடு உயிர் உகுவேன்" என்றது இராமன்பால் தசரதனுக்கு இயல்பாகவுள்ள உயிர் உருக்கத்தையும் உயர் காதலையும் உணர்த்தி நின்றது. எதிரியினுடைய உள்ளம் இரங்கி இதம்புரியுமாறு தன் உள்ள நிலைமை உள்ளபடி இங்ஙனம் உரைக்கலானான். தபுதல்=அழிதல்.

"நெடியாய்! உனது அடியேன், குலத்தோடு அறமுடியேல்" என்னும் பொழுது மன்னனது இன்னல் நிலை எல்லை மீறி இரங்கத்தக்கதாயுள்ளது.

பரசுராமரிடம் அபயம் புகுந்து அவரது உயர்வினைப் புகழ்ந்து தனது பணிவுடைமையை விளக்கி யாதொரு இடையூறும் செய்யாதகலும்படி தசரதன் பரிந்து வேண்டியிருக்கும் இந்தப் பகுதியில் சிறந்த உறுதிநலங்கள் சில சுரந்துவந்துள்ளன. கவிகளைக் கவனமாகக் கண்ணூன்றிப் படித்துக் கருத்துக்களைத்

இன்னவாறு மன்னன் மறுகி வேண்டியும் அம் மழுவாள் வீரர் யாதும் இரங்கியருளாமல் இகழ்ந்து தள்ளிவிட்டு இராமன் எதிரே போய்ச் சீறி நின்று வீரவாதம் கூறினர்.

அவர் அங்ஙனம் போக அரசன் சாக நேர்ந்தது போல் தத்தளித்து மூச்சடங்கிப் பேச்சின்றி வீழ்ந்து கிடந்தான். தன் பிள்ளையைக் கொன்றே விடுவார் என்று குலைதுடித்து இவன் நிலை குலைந்து கிடக்க அவர் பேராரவாரத்துடன் நேரே சென்று போர் மூண்டு நின்றார்.

தன் முன்னே வந்து மூர்க்கமாய் நிற்கின்ற அவரைப் பார்த்தவுடனே இராமன் வார்த்தை ஒன்றும் பேசாமல் புன்னகை புரிந்து இன்னளியுடன் எதிர்நோக்கினன். அந்த அழகனது இளமுறுவல் வந்தவருக்கு அளவிடலரிய வெகுளியை மூட்டியது. மூட்டவே அவர் மூண்டு கொதித்தார்.

"நீ மிகவும் சின்னவன் ஆதலால் என்னை இன்னார் என்று தெரிந்துகொள்ளவில்லை. உன் இறுமாப்பு இன்று தொலைந்தது; இராமன் * இராமன் ஆயினன் என்று உலகம் சொல்லும்படி என் நிலைமையை நிலை நிறுத்துவேன்; முதலில் இந்த வில்லை வளை பார்ப்போம்" என்று தம் தோளில் மாட்டியிருந்த பாரவில்லை எடுத்து நேரே நீட்டினர். இவன் புதிய முறுவலுடன் இடது கையைக் காட்டித் தருக என்றான். அவர் தந்தார். வாங்கிய

* இராத ஒருவன் என்பதாம். அதாவது உலகில் உருவுடன் இராதவன் எனச் செய்வேன் என்பது கருத்து. கொல்வேன் என்பது குறிப்பு. செருக்கூர்ந்து வந்த இச் சொல் அவரது செருக்கழித்துநின்றது.

சிலையை உடனே வளைத்து அதில் ஒரு பகழியையும் பூட்டி அவரது தலை எதிரே நீட்டி, "நிலை என்னே?" என்றான். இந்த வீரனது அற்புத நிலைமையை நோக்கி அச்சமீக்கூர்ந்து அவர் அதிசயித்து வணங்கித் துதிகள் பல செய்து தொழுதுபோனார். அவர் தொலைந்து போகவே இராமன் வந்து தந்தையை நோக்கினான். ஐம்புலன்களும் ஒடுங்கி அயர்ந்து கிடத்தலைக் கண்டு அவலமீக் கொண்டு, "அப்பா! அப்பா!" என்று ஆரத்தழுவி அகமிக வுருகி அடி வருடி நின்றான். அவன் தொட்டவுடனே அமிர்த சஞ்சீவி பட்டதுபோல் கதிதெளிந்து கண் விழித்து நோக்கினான். தன்னை அடி தழுவியுள்ள அந்த அருமைக் குமரனைக் கண்டபொழுது அவன் உள்ளங்கொண்ட உவகை நிலையை யார் சொல்லவல்லார்? ஆனந்த பரவசனாய் விழிநீர் சொரிந்து ஆசை மீறித் தழுவி நின்று உவகை மொழிகள் பல உரிமையுடன் உரைத்து உள்ளங் களித்தான். அன்று அவன் களித்து மொழிந்துள்ள உரைகள் உயிர் உருக்கத்துடன் உதித்து வந்துள்ளன. அடியில் வருவன காண்க.

### தசரதனை இராமன் தொழுது தேற்றியது.

அழிந்தவன் போனபின் அமலன் ஐயுணர்வு
ஒழிந்தனன் உயிருலைந் துருகு தாதையைப்
பொழிந்தபே ரன்பினால் தொழுது முன்புபுக்கு
இழிந்த வான் துயர்க்கடற் கரைநின் றேற்றினான். (1)

### தெளிந்தெழுந்த மன்னன் சிந்தை களித்தது.

வெளிப்படும் உணர்வினன் விழுமம் நீங்கியே
தளிர்ப்புறு மதகரித் தானை யானிடை
குளிப் பருந் துயர்க் கடற் கோடு கண்டவன்
களிப்பெனும் கரையிலாக் கடலுள் ஆழ்ந்தனன். (2)

### மைந்தனை உச்சி மோந்து உருகி நின்றது.

பரிவறு சிந்தையப் பரசு ராமன் கை
வரிசிலை வாங்கிஓர் வசையை நல்கிய
ஒருவனைத் தழுவிநின்று உச்சி மோந்துதன்
அருவியங் கண்ணெனும் கலசம் ஆட்டினான். (3)

உள்ளம் பூர்த்து உவகை யுரைத்தது.

*பொய்ம்மையிற் சிறுமையிற் புரிந்த ஆண்தொழில்*
*மும்மையின் உலகினுல் முடிக்க லாவதோ ?*
*மெய்ம்மை இச் சிறுவனே வினைசெய் தோர்களுக்கு*
*இம்மையும் மறுமையும் ஈயும என்றனன.* (4)

(பரசுராமப்படலம், 41-44)

இந்த நான்கு கவிகளையும் ஊன்றி நோக்கினுல் நேர்ந்துள்ள நிகழ்ச்சிகளும் நிலைகளும் நேரே தெரியலாம். சொற்கள் உயிருணர்ச்சிகளைவிளக்கிக் காலபேதங்களையும் கடந்து காண்பவரெவர்க்கும் காட்சியை விரித்துக் களிபேருவகை செய்து வருகின்றன. மொழிகள் இயங்கி விழி களிப்ப நின்று உயிர்களுக்கு ஒளி வழங்கி வரும் திறம் மிகவும் அதிசயமாயுள்ளது.

பரசுராமன் பாடழிந்து போன பின் தசரதராமன் தந்தையைத் தேற்ற, அவன் அம்மைந்தனைத் தழுவி நின்ற நிலையை இப் பாட்டுகள் காட்டி நிற்கின்றன. இவற்றிலுள்ள மெய்ப்பாடுகள் நுனித்து நோக்கத்தக்க நுட்பங்கள் மிகவுடையன.

1. வீர வெறியோடு விரைந்து வந்த பரசுராமரை வேறு பெயரால் கூருது அழிந்தவன் என்றது அவருடைய வலிகளும் வர பலங்களும் ஒருங்கே யிழந்து உடைந்துபோயுள்ள அவ்வுளவும் இழவும் தெரிய என்க. அழிந்து அவன் எனப் பிரித்தால் இராமனை அழித்துவிடவேண்டுமென்று களித்து வந்த அவர் தாமே அழிந்து போனுர் என்று கொள்க.

அழியாத நெடிய வாழ்நாளையுடையவரை அழிந்தவன் என்றது அவர் பிறந்து வந்துள்ள குறிக்கோள் முழுவதும் அன்று முடிந்துபோயுள்ளமையான் என்க.

இந்தப் பரசுராம பங்கம் மிகவும் இரசமுடையது. பரம இரகசியம் வாய்ந்தது. அவரது வரலாற்றைத் தனியே கூறுங்கால் அவற்றைக் காணலாம்.

இராமனை இங்கே அமலன் என்றது அவனது பரமநிலையை நினைந்து. அரசமரபுக் கெல்லாம் நெடிய பகையாய் நின்ற கொடிய மாசை அன்று அடியோடு நீக்கியுள்ளமையையும் அது நோக்கி வந்தது. மலம்=குற்றம். மலம் யாதும் மருவா வகை தன் குலமரபுக்கும் உலகிற்கும் நலமிகச் செய்தவன் என்பதாம்.

தசரதன நிலைமை இங்கே மிகவும் பரிதாபமாயுள்ளது. தன் செல்ல மகனிடம் அப்பொல்லாத பரசுராமர் தன்னை மீறிச்செல் லவே அந்தோ! கொல்லவே போகின்றார் என்று உள்ளம் குலைந்து உயிர் துடித்து உணர்வு ஒழிந்து கிடந்தான் ஆதலால் ஐயுணர்வு ஒழிந்தனன் என்றார். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் இந்த ஐவகை யுணர்ச்சியும் மெய்யறியாது கிடந்தான் என்ப தாம். கண்கள் பொருள்களைக் காணா; செவிகள் ஒலிகளைக் கேளா; மூக்கு வாசனை யறியாது; நாக்கு சுவை தெரியாது; உடல் பரிசம் உணராது என்க. ஐம்புலன்களும் இங்ஙனம் முழுவதும் ஒடுங்கிப் போயிருந்தன என்றதனால் அவன் அடைந் திருக்கும் கொடுந் துயரத்தின் அளவு நிலை அறியலாகும்.

இராமனுக்கு இடையூறு நேர்ந்ததே என்று எண்ணிய வுட னேயே அவன் உயிர் இவ்வாறு உலைந்து குலைந்தது என்றால் அப்பிள்ளையினிடம் அவன் உள்ளம் பதிந்திருக்கும் நிலைமையும் உயிருறைந்திருக்கும் தலைமையும் உரைகளால் எவ்வாறுஉணர்த்த முடியும்?

மன்னனுக்கு மகன்மேல் உள்ள ஆசையை என்ன என்ன வகையில் கவி இடங்கள் தோறும் விளக்கி வருகிறார் என்பதைக் காவியம் எங்கணும் கருத்தூன்றி மிகவும் காணத்தக்கது.

இவ்வண்ணம் உணர்வொழிந்து கிடந்த தந்தையை வெற்றித் திருவுடன் விளங்கிநின்ற இராமன் வந்து விரைந்து கண்டான். நிலைமையை நோக்கி நெஞ்சம் துடித்து, "அப்பா! அப்பா!" என்று அன்பு கனிந்து கூவி அடிகளைத் தழுவினான். அந்த ய ஒலியைக் கேட்ட வுடனே அமிர்தம் உண்டவன் போல் சிறிது உணர்வுவந்து கண்களை மெல்ல விழித்து மேலே நோக் கினான். இராமனைக் கண்டான்; உள்ளம் களித்துத் துள்ளி யெழுந்து அள்ளி அணைத்து, "ஐயா! மழுவுடைய அக்கழுவன்" எங்கே! என்று விழி நீர் ததும்ப வெருவிக்கேட்டான். நிகழ்ந் ததை இராமன் உவந்துரைத்தான். பரசுராமர் ஒழிந்துபோனார் என்றதை அறிந்தபொழுது தசரதன் அடைந்த அதிசயமும் ஆனந்தமும் அளவிடலரியபடி நிலை மீறி நின்றன. உள்ளம் களித்தது; உடல் பூரித்தது; மயிர் சிலிர்த்தது; உயிர் ஆனந்த

பரவசமாய் அவச மெய்தி நின்றது. அந்த இன்ப நிலைமையைக் கம்பர் வரைந்து காட்டியிருக்கும் காட்சி வியந்து நோக்கவுள்ளது.

2. கொடிய பகைவனால் மகனுக்கு இடையூறு நேர்ந்ததே என்று உள்ளங்குலைந்து உணர்வொழிந்து கிடந்த தசரதன் நிலைமைக்குத் துன்பக் கடலையும், பகைவன் தொலைந்தான் என்றதைக் கேட்டவுடன் அவன் அடைந்த உவகைக்கு இன்பக் கடலையும் கவி இங்கே உவமை கூறியிருக்கிறார். கடல்கள் என்றதனால் துன்பமும் இன்பமும் ஆகிய அந்த இரண்டு நிலைகளும் அளவிடலரியபடி நிலைமீறியிருந்துள்ளன என்பதை அறிந்துகொள்ளலாம். முன்பட்ட துன்பத்தினும் பின்பெற்ற இன்பம் பெரிதாம் என்பது, “துயர்க்கடற் கோடு கண்டவன், களிப்பெனும் கரையிலாக் கடலுள் ஆழ்ந்தனன்” என்றதனால் தெரியவந்தது. அளவு கடந்த மகிழ்ச்சியைக் குறித்தபடி யிது. கோடு=கரை.

அடைந்த துன்பம் அடியோடு நீங்கிப் போனமையால் “கரை கண்டவன்” ஆனான்; இப்பொழுது எய்திய இன்பம் எல்லையின்றி உள்ளுந்தோறும் உவகையை விளைத்து மேலும் மேலும் ஓங்கி யுள்ளமையால், கரையிலாக் கடலுள் ஆழ்ந்தனன் என்றார். ஆனந்த பரிபூரணனாய் உள்ளம்பூரித்து உயிர் தளிர்த்து நின்றான் என்பதாம்.

மனிதனது துன்ப நிகழ்ச்சிகளும் இன்ப [illegible] அவனுடைய எண்ணத்தையே பற்றுக்கோடாகக்கொண்டுள்ளன; இடையூறு நேரவும் உணர்வொழிந்து கிடந்தான்; அது தீரவும் உணர்வு வெளிப்பட்டு உளங்களித்து நின்றான் ஆதலால் இந்த இன்ப அனுபவம் எல்லையின்றி யெழுந்த தென்க.

பரசுராமர் நிலைமீறிச் சென்றவுடனே மன்னன் தன்னை மறந்து கிடந்தான் ஆதலால் இடையே நடந்தது யாதும் தெரியாது போயது; இராமன் வந்து சொல்லவே உண்மை தெரிந்து உள்ளம் பூரித்து உவகைமீக் கூர்ந்தான்; அந்த உவகைப் பெருக்கால் உரைத்திருக்கும் உரைகள் பரவசப்பட்டு வந்துள்ளன.

3. “வரிசிலை வாங்கி ஓர் வசையை நல்கிய ஒருவன்” என இராமனை இதில் நமக்கு அறிமுகம் செய்திருக்கும் அழகைப் பார்க்க. ஒன்றை வாங்கிக்கொண்டு அதற்கு ஈடாக மற்று

ஒன்றைக் கொடுத்தான் எனப் பண்டமாற்று முறையில் நயமாகக் கிண்டல் செய்திருக்கிறார். அரசர் குலத்தையெல்லாம் தலை படக்கி வந்த நிலைமை தெரிய வரிசிலை என்றார்.

யாண்டும் தோலா வலியராய் மேலோங்கி நின்ற பரசுராமர் ஈண்டுக் காலோய்ந்து கைச்சிலையை இழந்து கடும்பழியடைந்து உடைந்துபோயிருத்தலால் அவரது ஒழிவினை இவ்வாறு உணர்த்தி

இசை யெடுத்து வந்த விசய வில்லை எதிரியிடம் விடுத்து வசையெடுத்துப் போனார் என்பதாம். ஆகவே அந்த வில்லை வாங்கிய வீர மகனது வெற்றியும் புகழும் எத்துணைய என்பது உய்த்துணர நின்றது.

மயக்கம் நீங்கி எழுந்த தசரதன் தனது அருமைத் மகனை மார்புறத் தழுவி உச்சி மோந்து உள்ளம் உருகி உவகை மிகுந்து கண்ணீர் சொரிந்து நின்றான் ஆதலால், "அருவியம் கண் எனும் கலசம் ஆட்டினான்" என்றார்.

துக்கம் மிகுந்தபொழுது மக்கள் அழுவதுபோல் மிக்க இன்பத்திலும் கண்ணீர் வரும் ஆதலால் இது ஆனந்தக் கண்ணீர் என்க. கண்ணீர் தாரை தாரையாய் ஒழுகி இராமனது திரு மேனி முழுவதையும் நனைத்து நின்றதென்பது அருவி என்றதனால் அறிய வந்தது. இன்னவாறு கண்ணீர் பெருகியதனால் அவ னது உண்ணீர்மையும் உயிருருக்கமும் என்னவாறு இருந்திருக் கும் என்பதை இங்கே எண்ணவேண்டும்.

உச்சி மோத்தல் என்பது பிரியத்தின் உச்சநிலையை உணர்த்தி வரும். பிரியம் மிகுந்தபொழுது பசு கன்றை நக்குவது போல் பெற்றதாய் தன் பிள்ளையின் உச்சியை மோப்பள் என்க. பரிவு நலங் கனிந்த அவ்வுயரிய உயிர் உருக்கம் இத்தந்தையின்கண் பெரி தும் தழைத்திருந்த தென்பதாம்.

4. இவ்வண்ணம் ஆனந்த பரவசனாய் நின்ற தசரதன் இராமன் புரிந்துள்ள வீரப் பிரதாபத்தை நினைந்து நினைந்து விம் மிதமடைந்தான்.

"இந்த அதிபாலியத்தில் இக்குல மகன் செய்துள்ள வீரத் மூன்று உலகத்தவரும் சேர்ந்து செய்யமுடியுமா? ஆ!

என்ன ஆச்சரியம்! இவனை ஒரு மகன் என்று எண்ணுவது மடமை; தேவதேவனே இவ்வுருவோடு வந்து இங்கு மேவி யிருக்கிறான்; வினையின் அளவறிந்து உயிர்களுக்கெல்லாம் பர கதி அருளும் பரமபதியே இவன்" எனப் பரவசமடைந்து இராமனைத் தழுவியகை தளராமல் மன்னன் உழுவலன்புடன் உளமுருகி நின்றான்.

மீதலம் பூதலம் பாதலம் என்னும் மூவகை உலகங்களிலும் உள்ள பெரிய போர்வீரர்களெல்லாரும் ஒருங்கே திரண்டு ஊக்கி முயன்றாலும் ஆற்ற முடியாத அரிய செயலைச் சிறிய பருவத்தில் ஒருவனாகவே தனியே நின்று இராமன் செய்திருக்கிறான் என்று வியந்து புகழ்ந்து தசரதன் இங்ஙனம் மகிழ்ந்திருத்தலால் அடைந் துள்ள வெற்றியின் அருமையும் பெருமையும் அறியலாகும்.

வஞ்சனையாதுமின்றி நெஞ்சறிய நேர்நின்று சீரிய முறை யில் வீரியம் புரிந்துள்ளான் என்பான், "போய்ம்மையில் ஆண் தோழில்" என்றான். ஆண்மைத் திறத்தால் ஆற்றும் அரிய வீரச் செயல் ஆண் தோழில் என வந்தது.

மும்மையின் உலகினால்முடிக்கல்ஆவதோ? என்றதனால் பரசு ராமருடைய வெய்மையும் விறலும் விளங்கி நின்றன. பலகால மும் அவரது வீர நிலைமையை நேரே தெரிந்து வந்திருத்தலால் இங்ஙனம் உலகங்களைத் தூக்கிக் காட்டி உரைசெய்யலானான்.

அமரரும் வெல்லமுடியாத அரிய பெரிய போர்வீரனை இள மையில் நேர் நின்று எளிது வென்ற இந்த அழகனை உலகுயிர்கள் உய்யவந்த முதல்வன் என்று கருதாமல் எனது புதல்வன் என்று எண்ணுதல் பிழையாம் என்பதாம். குமரனது அமராற்றலை நினைந்து அரசன் உளம் உருகியிருக்கும் நிலை அவனுடைய உரை களால் உணரலாகும்.

பரம்பரையாக அரசர் குலத்துக்கெல்லாம் வசையை வளர்த்து விசயவயிரியாய் வீறுகொண்டு நின்ற பரசுராமர் தனது குலமகனால் அபசயமடைந்து போனதை நினைந்து நினைந்து தசரதர் உவகை பொங்கி யிருத்தலைக் கவி இடங்கள் தோறும் நமக்கு உணர்த்தியிருக்கிறார்.

பரசுராமர் வந்து புகுந்ததும், தசரதன் பரிந்து மொழிந்ததும், அயர்ந்து கிடந்ததும், அவர் பங்கமடைந்து போனபின் இராமன் வந்து எழுப்பியதும், எழுந்தவன் நிகழ்ந்ததை யறிந்து நெஞ்சம் களித்ததும், உச்சிமோந்து பட்சமிகுந்து மகனைப் புகழ்ந்து பாராட்டி அவன் போற்றி நின்றதும் ஓர் இனிய நாடகக் காட்சியாய்க் காவியத்தில் கனிவமைந்துள்ளன.

இங்ஙனம் அரியவெற்றியைக் கண்டு ஆனந்தமடைந்து அளவளாவி நின்ற தசரதன் அமரர் புகழத் தமருடன் எழுந்து உவந்து நடந்து திருவயோத்தியை யடைந்தான்.

திருமகள் களிநடம் புரியப் பெருநலம் பழுத்திருந்த அப் புனித நகரம் புதிய மணமக்கள் வரவும் மேலும் அதிசய வளங்கள் மலிந்து யாண்டும் துதிகொண்டு நின்றது.

மக்களும் மருகிகளும் ஒக்கலும் குடிகளும் உவந்து வாழ உலகமெங்கணும் உயர் புகழ் ஓங்கத் தசரதன் முறைபுரிந்து வந்தான். வருங்கால் கேகய தேசத்து மன்னன் மகன் அங்கே முன்னதாக வந்திருந்தான். அவன் பெயர் யுதாசித்து. கைகேசியோடு உடன் பிறந்தவன். கைகேசியின் தந்தையான அசுவபதி என்பவன் பரதனைக் கண்டு மகிழவேண்டும் என்று காதல்கொண்டிருந்தமையால் அவனை அழைத்துவரும்படி தன் மைந்தனை அனுப்பியிருந்தான். அவன் வந்த வகையைத் தசரதனிடம் உரைத்தான். உரைக்கவே பாட்டனைப் போய்ப் பார்த்துவரும்படி பரதனை அரசன் பரிவுடன் அனுப்பிவைத்தான். அவன் இராமனை வணங்கி விடைபெற்றுத் தம்பி சத்துருக்கனையும் உடனழைத்துக்கொண்டு தாய் மாமனோடு கேகய தேசம் போயினான்.

இந்த அளவில் பாலகாண்டம் முடிவுறுகின்றது.

இது வரையிலும் தசரதனுடைய சரித நிகழ்ச்சி என்ன என்ன வகையில் இடம் பெற்றுள்ளது என்பதை ஈண்டு எண்ணி நோக்கி மீண்டும் சிந்தித்துக்கொள்ளவேண்டும்.

இந்த மூலபாத்திரம் முதன்மையாக ஆராயப்படுதலால் வேறு பாத்திரங்களை இடையே விரிக்க முடியவில்லை.

பரதனைப் பாட்டனாருக்கு அனுப்பிவிட்டு, வேட்டவர் இன்டம் விரும்பி நுகர, நாட்டு நலங்கள் யாவும் நன்கு நாடி, நெறி முறை திறம்பாமல் தசரதன் முறை புரிந்து வந்தான்.

மேலே கதையைத் தொடுத்து நடத்தக் கம்பர் எடுத்திருக்கும் எடுப்பு வியப்பு மிகவுடையது. அடியில் வருவது காண்க.

கவியின் கருத்துரை.

"ஆனவன போனபின் அரசர் கோமகன்
ஊனமில பேரரசு உய்க்கும நாளிடை
வானவர் செய்தமா தவமஉண் டாதலான்
மேனனி நிகழ்ந்தன விளம்பு வாமரோ."

(பரசுராமப்படலம், 50)

இது, பாலகாண்டத்தின் முடிவில்உள்ள பாட்டு. இதில் பூட்டி வைத்திருக்கும் பொருள் நலங்கள் அறிவு என்னும் அஞ்சனம் தீட்டிய அருமைக் கண்களுக்குமட்டும் புலப்படுவனவாய்ப் புதையுண்டிருக்கின்றன. புதையல் உதயமாகும் போது உவந்து காண்போம். முடித்துவைத்த காண்டத்தை அடுத்துவரும் காண்டத்தோடு இவ்வாறு தொடுத்து மடுத்திருக்கிறார்.

கவி கதையை நடத்திக்கொண்டு போகும் திறம் அதி விசித்திரமாயுள்ளது.

அதிசயமான இனிய மானச வுலகத்தை அருமையாகப் படைத்து அலகிலாத விளையாடல்களைத்தனிமுதல்வன் நிலையாகச் செய்து வருதல் போல் நம் கவி நாயகர் ஈண்டு யாண்டும் இளையாத கலையாடல்களைச் செய்து உல்லாசமாய் உலாவி நிற்கின்றார்.

"வானவர் செய்த மாதவம் உண்டு ஆதலால் மேல் நனி நிகழ்ந்தன விளம்புவாம்" என்று அயோத்தியா காண்டத்திற்குத் தோற்றுவாய் செய்துகொண்டு கவி தொடங்கி யிருக்கிறார்.

தேவர்களுடைய மாதவத்தை முதலில் மேவ வைத்தது, இனி நிகழும் கதை வினையின் நிலைமை முழுவதும் நேரே தெரிய என்க.

சக்கரவர்த்தி தன் மகனுக்கு முடி சூட்ட விரைவது, கூனி தடை செய்வது, இராமன் வனம் போவது, சீதை தொடர்வது, இடையே பிரிவது முதலியன அரக்கர் அழிவுக்குக் காரணமாகி

அமரர் வாழ்வுக்கு ஆதாரவாயமைதலால் வானவர் மாதவம் மோன மாக முன்னுற வந்தது.

வானவர் தவம் எனக்கு உண்டு ஆதலால் நான் அவர் கதை யைப் பாடுகின்றேன் என்று கம்பர் நன்றியறிவு காட்டித் தொடங்கியிருப்பதாகவும் இதில் இடங் கிடக்கின்றது.

அமரர் தவம் இல்லையானால் சக்கரவர்த்தித் திருமகனாகவே அரசு புரிந்துகொண்டு இராமன் திருவயோத்தியில் இருந்து விடு வன்; இருப்பின் கதை விரியாது; ஆகவே அதனைத் தான் பாட முடியாது போம்; அங்ஙனம் யாதும் அருகிப் போகாதபடி இங் ஙனம் பெருகிப் பாடச்செய்தது தேவர் செய்த மாதவமே ஆத லால் அதனை நினைந்து போற்றி முந்துறப் புனைந்து குறித்தார்.

தவம் எனது மாதவம என்றது அமரர் குலத்தொடு உலக மெல்லாம் நலனடையும்படி பலனடைவு செய்த அதன் என்க.

தெய்வ சிந்தனையுடன் தவசிந்தனையும் செய்துகொண்டு கவி கதை செய்திருக்கிறார்.

இராமனுடைய பாலிய நிகழ்ச்சிகளைக் கூறிய பாகத்திற்குப் பாலகாண்டம் என்று பெயர். அவனது அவதாரம் உலகம் அடங் கலும் உயர் நலமடையும்படி ஓங்கி யெழுந்ததற்கு முதலில் அடி கோலியது முடிசூட முனைந்ததே யாம். அந்நிலைமைகள் யாவும் அயோத்தியில் தலைமையாக நடந்தன ஆதலால் அவற்றை உரைக் கும் பகுதி அயோத்தியா காண்டம் என வந்தது. காண்டத் தொடர்பும் வைப்பு முறையும் கதை யிணைப்பைக் கவினுறுத்தி நிற்கின்றன.

கலியாணமாகி வந்தபின் புதுமண வைபவங்களுடன் சதி பதிகளிருவரும் காதல் நலங்கனிந்து ஐம்புல இன்பங்களும் ஆர நுகர்ந்து ஆர்வமுற்றிருந்தனர். திருமாலும் இலட்சுமியும் என இராமனும் சீதையும் பெருமால் கொண்டு ஒருவரை ஒருவர் காதலித்து உள்ளமும் உயிரும் ஒன்றாய் உருகி நுகர்ந்து உவந்து வந்தார். பருவங்கள் பல கடந்தன.

இளவரசாயுள்ள அத் தலைமகனுக்கு முடி சூட்டிவைத்து விட்டுத் தான் உலக பாரத்தில் நின்று ஒதுங்கியிருக்கவேண்டும்

என்று தசரதன் உறுதி பூண்டான். பூண்டு நின்ற எண்ணம் மூண்டு வந்தது. ஒருநாள் காலையில் எழுந்தான். வழக்கப்படியே கண்ணாடி பார்த்தான். கன்னத்தின் அருகே நரைமயிர் இடை விரவியிருந்தது. அதனைக் கண்டதும் கிழமையின் இளமையை நினைந்து உளமிகக் கவன்றான். "ஆ! இவ்வளவு வயதாகியும் உலக பாசத்தை விட்டு நீங்காமல் ஆசையில் உழன்று கொண்டிருந்தால் மேலே மறுமையில் என்ன செய்வது? எடுத்த பிறப்பின் பயன் அடுத்த பிறவி அடையாமல் என்றும் அழியாத இன்பப் பேறடைவதல்லவா? அதற்கான அருந்தவம் புரியவேண்டும்; இனி யாதும் அயர்ந்திருக்கலாகாது" என இன்னவாறான உறுதி நலங்களை எண்ணி மன்னன் விரைந்து எழுந்து உடனே அரச சபைக்கு வந்தான். இந்தச் சம்பவங்களைக் குறித்திருக்கும் கவிகள் அடியில் வருவன.

நரைமயிர் உபதேசித்தது.

மன்னனே! அவனியை மகனுக்கு ஈந்துநீ
பன்னருந் தவம்புரி பருவம ஈதெனக்
கன்ன மூலத்தினில கழற வந்தென
மின்னருங் கருமைபோய் வெளுத்தது ஓர்மயிர். (1)

நரை நிலை.

தீங்கிழை இராவணன் செய்த தீமைதான்
ஆங்கொரு நரையதா அணுகிற றுமெனப்
பாங்கிலவந் திடுநரை படிமக் கணணடி
ஆங்கதில் கண்டனன் அவனி காவலன். (2)

தசரதன் ஆலோசனை மண்டபம் அடைந்தது.

மணணுறு முரசினம மழையின் ஆர்பபுறப்
பண்ணுறு படர்சினப் பருமயானையான்
கண்ணுறு கவரியங் கற்றை சுற்றுற
எண்ணுறு சூழ்ச்சியின் இருக்கை எய்தினன். (3)

புக்கபின் யாருபரும் பொருவில சுற்றமும்
பக்கமும பெயர்கெனப் பரிவின் நீக்கினன்
ஒக்கலின் றுலகளித்து யோகின் எய்திய
சக்கரத்தவன் எனத் தமியன் ஆயினன். (4)

(அயோத்தியா காண்டம், மந்திரப்படலம் 1-4)

இராமனுக்கு முடி சூடுவதைக்குறித்து மந்திரிகளுடன் தசரதன் அளவளாவி ஆலோசனை செய்யும் நிலைகளைக் கூறியிருத்தலால் இது மந்திரப்படலம் என வந்தது மந்திரம்=ஆலோசனை.

இதில் முதலில் குறித்திருக்கும் இரண்டு பாடல்களும் சில ஏட்டுச் சுவடிகளில் மட்டும் உள்ளன. இவை கம்பர் பாடியனவா? அல்லது இடைச் செருகலாயிருக்குமோ? என்று அறிஞர் சிலர் ஐயுறுகின்றனர். ஐயுறவாயிருப்பினும் இச்செய்யுள்கள் கதை எழுச்சிக்கு மிகப் பொருத்தமாய் நகைச் சுவையுடன் வியப்பும் வாய்ந்திருத்தலால் ஈண்டு உவப்புடன் தழுவ வந்தன.

தசரதனுடைய காதின் அடியில் ஒரு மயிர் வெளுத்திருந்தது. மயிர் இயல்பாகவே கருமை நிறமுடையது. மனிதனது பருவம் முதிர முதிர அது உருவம் மாறி வெளியே வெளிறும்; வயதின் முதிர்ச்சியை உணர்த்தி நிற்கும் அவ்வெள்ளை மயிர் நரை என வந்தது. நரை=வெண்மை.

நரை மயிரைக் குறித்துக் கவி இங்கே கற்பனை செய்து வருணித்திருக்கிறார். தசரதனுக்கு அது ஞான உபதேசம் செய்திருப்பதாகப் பெய்திருப்பது மிகவும் இரசமாயிருக்கிறது.

"அரசர் பெருமானே! நீர் இப்பொழுது கிழவனாகிவிட்டீர்; இனிமேல் உலகபாசத்தில் உழலலாகாது; உமது தலைமைப்புதல்வனை இராமனிடம் அரசுரிமையைத் தந்துவிட்டு உமது உயிர்க்கு உறுதியான மறுமை யின்பத்தை நாடி அரிய தவத்தைச் செய்யும்; உரிய பருவம் இதுதான்; ஒரு நிமிடமும் இனித்தாமதிக்கலாகாது; உடனே செய்யவேண்டும்" என்று ஒரு உரிமைத் தோழன் காதருகே வந்து மிகவும் இரகசியமாக ஓதியதுபோல் நரை மயிர் ஒன்று மன்னன் கன்னத்தயலே மருவியிருந்ததென்பதாம். கன்னம்=காது. மூலம்=அடி. காதின் ஓரம் குறித்தது உபதேசம் எல்லாம் அயலறியாவகை மறைமுகமாக ஓதுவர் ஆதலால் அந்த மரபும் உரிமையும் தெரிய என்க.

பேசாத மயிர் பேசியதாகக் கவி பேசியிருக்கும் சாதுரியம் இதில் பெரிதும் மாதுரியமாயுள்ளது.

அரிய உயிர்க்கு உறுதி ஒரு சிறிய மயிரினிடமும் உண்டு என்பதும் ஈண்டு உணர வந்தது. கள்ளம் கறுப்பில்லாமல்

வெள்ளைத்தன்மையும் உள்ளத்தூய்மையும் அடைந்தபோதுதான் ஒருவன் உபதேச குருவாதற்கு உரியவனுவன் என்பது கருமை போய் வெளுத்தது என்ற குறிப்பால் விளங்கி நின்றது.

மயிர் பேசாது; கவிதான் இப்படி அற்புதமாகக் கற்பனை செய்திருக்கிருர் என்பது நமக்கு நன்கு தெரியும்; தெரிந்தும் மெய்ம்மறந்து அப்பேச்சில் மயங்கி வியந்து நிற்கின்றேம்.

தன்னை மறக்கச் செய்யும் தன்மையில் கவிகள் மிகவும் முன்னேறியிருக்கின்றனர். ஆகவே அவரது அதிசய நிலைமை அறியலாகும். மயிரும் அவர் தொட்டவுடன் உயிர்பெற்று உயர்கின்றது.

2. இவ்வாறு உரையை மருவியதோடு அமையாமல் அந் நரையில் வேறெரு வகையும் வரைகின்றார்.

இராவணன் செய்த தீமைதான் அவ்வண்ணம் நரை மயிர் வடிவம் கொண்டு மன்னனது கன்னமூலத்தில் தோன்றியது போல் ஊன்றி நின்றது என்கின்றார்.

தசரதனது கன்ன நரைக்கும் இராவணன் தீமைக்கும் என்ன சம்பந்தம்? எனின், இந்த நரைதான் இராமனுக்கு முடிசூட்டும்படி தசரதனை விரைவுபடுத்தியது; அவன் விரைந்து செய்தான்; அது பிழைபட்டது; படவே இராமன் நாடு நீங்கிச் சீதையுடன் வனவாசம் போய் முடிவில் இலங்கை புகுந்து இராவணனை அடியோடு அழிக்க நேர்ந்தான். ஆகவே அவனது அழிவுக்கு மூல காரணமாயுள்ளமையான் மன்னன் கன்னமூல நரையை இராவணன் தீமை என இன்னவாறு உருவகஞ்செய்து சொன்னர் என்க. கதை விளைவுகளை முன்னும் பின்னும் இணைத்து உணர்ந்து கொள்ளும்படி கவி இங்ஙனம் உரைத்துப்போகின்றார்.

இந்தக் காண்டத்தில் இராமனது மகுடாபிடேகமே பிரதானமாகப் பேசப்படுவதால் அதன் பலாபலன்களை ஆரம்பத்திலேயே குறிப்பாக விளக்கியிருக்கிருர். சாதன முறைகளைக் குறித்திருக்கும்திறம் ஆதியந்தங்களை ஓதி யுணர்ந்து உவகை மீக்கூரவுள்ளது.

தீமை செய்யற்க; செய்யின், செய்தவனை அது அல்லல் பல செய்து அடியோடு அழித்துவிடும்; வினைவலியையாரும் வெல்லல் அரிது என்னும் உறுதி நலனும் இங்கே உய்த்துணர நின்றது.

3. தசரதன் நரையைக் கண்டபொழுது தன்னுள் முன்னம் எண்ணியிருந்த முடிசூடுதலைக் கடிது செய்ய முடிவு செய்து அரண்மனையை விட்டு விரைந்தெழுந்து சபா மண்டபத்தை அடைந்தான். அரச காரியங்களைக் குறித்து அமைச்சர்களுடன் கலந்து அரசன் ஆலோசனை புரியும் அவையைச் சூழ்ச்சியின் இருக்கை என்றார். மந்திராலோசனைச் சபைக்குக் கவி கொடுத்திருக்கும் பெயரைக் கருதிப் பார்க்க. சூழ்தல்=பலதுறைகளையும் நலமுற ஆழ்ந்து ஆராய்ந்து முடிவு செய்தல். சிந்தனைகளில் திளைத்திருக்கும் இந்த மந்திரசபைக்கு அரசன் தனக்குரிய ஆடம்பரங்களுடன் வந்து சேர்ந்தான்.

4. உடன் வந்த உரிமைச் சுற்றத்தாரையும் சிற்றரசரையும் வெளியே போகும்படி அளிபுரிந்து அன்புடன் உரைத்தான் ஆதலால் பரிவின் நீக்கினன் என்றார். பரிவு=அன்பு. தான் சக்கரவர்த்தியாயிருந்தும் அதிகாரத் தொனியோடு கட்டளையிடாமல் மிருதுவாக இனிது மொழிந்தான் என்றதனால் அவனது கனிவும் விநயமும் பெருந்தன்மையும் காண வந்தன. ஒவ்வொரு செயலிலும் அரசர்பிரானுடைய உயரிய பண்பை நம் கவினர் பிரான் உரிமையுடன் உணர்த்திவருகிறார். ஒரு உத்தம அரசன் ஒழுகி வரவேண்டிய உயர்நலங்களை யெல்லாம் இத்தலைமைப் பாத்திரத்தில் நிலை செய்திருக்கிறார்.

ஆணையின்படியே யாவரும் அகன்றனர். தசரதன் மட்டும் தனியே இருந்தான். அந்தத் தனி யிருக்கையைக் குறித்து உரைத்திருக்கும் உரையும் உவமையும் உணர் வொளி வீசி உயர்

உலகங்களை யெல்லாம் நெடிது நின்று இனிது காத்து வருகின்ற திருமால் இடையே சிறிது ஆறுதலாகத் தனியே யோகத்தில் அமர்ந்திருத்தல் போல் தசரதன் தனிமையாக இருந்தான் என்பார்,

> "ஒக்க நின்று உலகு அளித்து யோகின் எய்திய
> சக்கரத்தவன் எனத் தமியன் ஆயினன்."

என்றார். சக்கரம் என்னும் ஆயுதத்தைத் தனக்குத் தனியுரிமையாகக் கொண்டிருத்தலால் திருமாலைச் சக்கரத்தவன் என்றார். சக்கரபாணி என்று அவருக்கு ஒரு பெயரும் உண்டு.

இந்தச் சக்கரவர்த்திக்கு அந்தச் சக்கரதரனை ஒப்புக் கூறியது உலக பரிபாலன முறையிலும், சக்கரம் தாங்கி நிற்கும் நிலையிலும், அசுரரைத் தொலைத்து அமரரை ஆதரித்த வகையிலும், அறநலங்கள் பேணுந்துறையிலும் ஆம் என்க.

அவனது திவ்விய சக்கரம் போல் இவனது செவ்விய சக்கரமும் தீயோரைத் தேய்த்து நல்லோரைக் காத்து நிலம் புரந்து நலம் பல புரிந்து வருதலால் அந்த ஆழியின் ஏற்றமும் ஊற்றமும் தெரியச் சக்கரவர்த்தி என எங்கும் இவன் போற்ற நின்றான். இவனுடைய திருவும் தேசும் தெய்வ நிலையின என்பதாம்.

அரசர் உலகம் காக்கும் இயல்பினர் ஆதலால் காப்புத்தெய்வமாகிய திருமாலை அவர்க்கு ஒப்புக்கூறுவது மரபாய் வந்தது.

"திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்" (திருவாய்மொழி 4, 4-8)

இதில் மன்னரும் மாலும் நேர் மன்னியிருத்தல் காண்க.

இங்ஙனம் பொதுவகையில் மாலோடு நேராயினும் அச் சக்கரத்தவனை தனக்கு மகவென வந்து மருவியிருக்கும் பெருமையுமுடையனாய்ப் பெருகி யிருத்தலால் இவனது தரும நிலையும் தவமகிமையும் இருமையுயர்வும் அறியலாகும்.

மன்னனது மாட்சியைக் கவி என்ன நிலையில் எண்ணியிருக்கிறார் என்பதும் ஈண்டு எண்ண நின்றது.

அரிய பெரிய காரியங்களைக் குறித்துச் சிந்திக்கப் புகுபவர் சந்தடியின்றித் தனி ஒதுங்கி யிருப்பது சகசம் ஆதலால் அந்த இயற்கையின்படி அரசன் தனியன் ஆயினன்.

ஆனவன் தனது ஆலோசனைக் குரிய மந்திரிகளை வரும்படி பணித்தான். முதலில் குல குருவாகிய வசிட்டர் வந்தார். மற்ற மந்திரிகளனைவரும் வந்து மரபுடன் அமர்ந்தனர். முந்துற வந்த வசிட்ட முனிவரைக் குறித்திருக்கும் கவி அடியில் வருவது.

வசிட்டர் வந்தது.

"பூவரு பொலங்கழற்பொருவில் மன்னவன்
காவலின் ஆணையின் கடவுள்ஆ மெனத்
தேவரும் முனிவரும் உணரும் தேவர்கள்
மூவரில் நால்வனும் முனிவன் எய்தினன். (மந்திரப்படலம், 7)

தசரதனுடைய அரசுகாவலின் அதிதேவதையாக வசிட்டரை இதில் குறித்திருக்கிறார். இக் குறிப்பு மிகவும் வியப்புறத் தக்கது.

அரசன் உலகம் காக்கும் முறையில் யாதொரு குறையும் நேராமல் நீதியும் தருமமும் நிலைத்துவர உடனிருந்து உறுதி புரிந்து வந்த உரவோன் என்பார் ஆணையின் கடவுள் என்றார். அரசுக்கும் குடிகளுக்கும் நாட்டுக்கும் யாதொரு தீதும் சேராமல் காப்புத் தெய்வம் போல் நின்று காத்து வந்தார் என்பதாம். ஆகவே உலக காவலனை அரசனுக்கு உறுதித்துணையாய் நின்று உரிமையுடன் இவர் உதவியிருக்கும் அருமையும் பெருமையும் அறியலாகும். தசரதனுடைய காரிய கருமங்கள் யாவும் இவரது கண்ணோட்டம் படிந்தே மண்ணோட்டம் புரிந்தன என்க.

மன்னனது ஆட்சிக்கு இங்ஙனம் இன்னுயிராத் துணையாயிருந்து வந்த அப் பெருந்தகையின் அருந்தவ நிலையை இறுதியடியில் உறுதிபெற உணர்த்தியிருக்கிறார்.

சிவன் திருமால் பிரமன் என்னும் இம் மும் மூர்த்திகளோடு ஒரு வரிசையில் வைத்து உடன் எண்ணத்தக்க பெருமான் என்பார், "மூவரில் நால்வனும் முனி" என்றார். இது வியந்து நோக்க வுள்ளது. இதனால் அவரது இயல்பும் உயர்வும் இனிது புலனும்.

டன ஒரு மூர்த்தியாக எண்ணத் தக்க இத்தகைய பெருந் தவப் பெரியானைத் தனக்கு உறுந் துணையாகக் கொண்டு உலகு புரந்துவரும் அரசனது நிலைமை தெரிய, "பொருவில் மன்னவன்" என்றார். பொருவு=ஒப்பு. அறிவு ஆற்றல் கொடை வீரம் முதலியவற்றில் எவரும் தனக்கு நிகர் இல்லாதவன் என்பதாம். பொருகின்ற வில்லையுடைய மன்னவன் எனவும் இது பொருள்படவுள்ளது.

கழல் என்பது காலில் அணியும் ஓர் உயர்ந்த அணி. வீரம் கொடை என்னும் இத்தன்மைகளில் மிகவும் சிறந்திருப்பவர் அச்சிறப்பிற்கு அடையாளமாக இது அணியப்படும்.

"ஆடவர் கோடை வீரத்தால் அணிவது கழல்" (நிகண்டு) என்றதனால் இந்த அணியின் மாட்சி அறியலாகும்.

சிறந்த பசும் பொன்னில் மணிகள் இழைத்துச் செய்யப் படுவது ஆதலால் பொலங்கழல் என்றார். பொலம்=பொன்.

"பொன்என் கிளவி ஈறுகெட முறையின்
முன்னர்த் தோன்றும லகார மகாரம
செய்யுள மருங்கில தொடரியலான." (தொல்காப்பியம்)

என்னும் இயல்விதியின்படிபொன்கழல் இங்ஙனம் புணர்ந்து வந்தது. அணி அடைகளால் தசரதன் ஒப்பற்ற உயர் வீரன் என்பதை உய்த்துணர வைத்தார். முனிவர், மூவரில் நால்வரா யினர்; மன்னனே யாவரினும் மேன்மையாயினன் என்பதாம்.

குருவும் மந்திரியுமாய்த் தலைமை எய்தியுள்ள முனிவர் முத லில் வந்தார். அடுத்து மற்ற மந்திரிகளும் தொடுத்துவந்தனர்.

அவருடைய மன நிலைகளையும் குண நலங்களையும் கவி நன்கு விளக்கி யிருக்கிறார். அடியில் வருவன காண்க.

மந்திரிகளின் மாண்புகள்.

குலமுதல தொன்மையும கலையின் குப்பையும்
பலமுதற கேள்வியும் பயனும எய்தினர் ;
நலமுதல் நலியினும நடுவு நோககுவார் ;
சலமுதல அறுததருந தருமம தாங்கினர். (1)

உற்றது கொண்டு மேல்வந் துறுபொருள் உணருங கோளார்
மற்றது வினையின் வந்த தாயினும் மாறறல ஆற்றும்
பெற்றியர் ; பிறப்பின் மேன்மைப் பெரியவர் ; அரிய நூலும
கற்றவர் ; மான நோக்கின் கவரிமா அனைய நீரார். (2)

காலமும் இடனும ஏற்ற கருவியும தெரியக் கற்ற
நூலுற நோக்கித் தெய்வ நுனித்தறம குணிதத மேலோர் ;
சீலமும் புகழ்க்கு வேண்டும் செய்கையும் தெரிந்துகொண்டு
பால்வரும் உறுதியாவும் தலைவற்குப் பயக்கும் நீரார். (3)

தம்முயிர்க்கு உறுதி எண்ணார் ; தலைமகன் வெகுண்டபோதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கும் வீரர் ;
செம்மையில் திறம்பல் செல்லாத் தேற்றத்தார் ; தெரியும்காலம்
மும்மையும் உணரவல்லார் ஒருமையே மொழியும் நீரார். (4)

நல்லவும் தீயவும் நாடி நாயகற்கு
எல்லையில் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்;
ஒல்லைவந் துறுவன உற்ற பெற்றியில
தொல்லைநல் வினையென உதவும் சூழ்ச்சியார். (5)

அறுபதி னாயிரர் எனினும் ஆண்டகைக்கு
உறுதியில் ஒன்றிவர்க்கு உணர்வென் றுன்னலாம்
பெறலருஞ் சூழ்ச்சியர் திருவின் பெட்பினர்
மறிதிரைக் கடலென வந்து சுற்றினர். (6)

(மந்திரப் படலம், 8-13.)

மந்திரிகளைக் குறித்து வந்திருக்கும் இந்த ஆறு கவிகளையும் ஊன்றி நோக்கி உள்ள நயங்களை உணர்ந்து கொள்ளவேண்டும். அமைச்சுக்குரிய இயல்புகளைத் தொகுத்துச் சுட்டியிருக்கிறார்.

1. நல்ல குலத்தில் பிறந்தவர்; பலகலைகளிலும் வல்லவர்; நிறைந்த கேள்விகளை யுடையவர்; ஒழுக்கத்தில் சிறந்தவர்; என்ன கேடு நேர்ந்தாலும் உள்ளம் கோடாத ஒள்ளிய நிலையினர்; கோப முதலிய கொடிய குணங்கள் இல்லாதவர்; எண்ணிய எதையும் இனிது முடிக்கும் திண்ணிய திறலினர்; கண்ணியமுள்ளவர்; புண்ணிய சீலர்கள் என மந்திரிகளுடைய மாண்புகளை முந்துறக்

வழி வழியே சிறந்து வருகின்ற உயர்ந்த குடிப்பிறப்பு எல்லாக் குணநலங்களுக்கும் அடிப்படையாயிருத்தலால், குல முதல் தொன்மையும் என அதன் நிலைமை தெரிய முதலில் உரைத்தார். தொன்மை=பழமை. முடிப்பிறப்புக்கு உறு துணையாகக் குடிப்பிறப்பு முதன்மையுடன் குறிக்க வந்தது.

பரம்பரைக்குணம் வாசனை வயத்ததாய் உரம்பெற்று வரம்புடன் வரும்; வரவே அதில் தோன்றுவோர் இயற்கையாகவே ஆன்ற நலனுடன் அமைவார் என்க.

*" இற்பிறந்தார் கண்ணல்ல திலலை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு." (குறள், 951)

* பழிபாவங்களுக்கு நாணுதலும், மனச் செம்மையும் உயர்குடிப் பிறப்பாளரிடமே இயல்பாக இனிதமைந்து இருக்கும் என்பதாம்.

என்னும் இத்தெய்வ வாக்கால் நல்ல மரபின் நன்மையும் தன்மையும் நன்கு புலனும். "யாம் உயர்ந்த பிறப்பினேம்" என்று இறுமாப்புறுபவர் தம்பால் இப் பண்புகள் உளவா? என்று பரிசோதனை செய்துகொள்ளவேண்டும்.

தன் நாட்டு மக்களுக்கு வேண்டிய நலங்கள் முழுவதையும் நாடிச் செய்யும் தகைமை நல்ல குலனுடையானிடமே கூடியிருக்கும் ஆதலால் அமைச்சு நிலை கூற வந்த கவி முதன்மையாகக்

"வலம்புரி முத்திற குலம்புரி பிறப்பும்,
வான்யா றன்ன தூய்மையும், வானயாறு
நிலம்படர்ந் தன்ன நலம்படர் ஒழுக்கமும,
திங்கள் அன்ன கலவியும், திங்களொடு
ஞாயிறு அனன வாய்மையும், யாவதும
அஃகா அன்பும், வெஃகா உள்ளமும்,
துலைநா வன்ன சமனிலை உளப்பட
எண்வகை யுறுப்பினர் ஆகித், திண்ணிதின்
வேளாண் வாழ்க்கையும, தாளாண்மையும்,
உலகியல் அறிதலும், நிலைஇய தோற்றமும்,
பொறையும் நிறையும் பொச்சாப் பின்மையும்
அறிவும் உருவும ஆற்றலும் புகழும்
சொற்பொருள் உணர்த்தும் சொலவன் மையும்
கற்போர் நெஞ்சம் காமுறப் படுதலும்
இன்னோர் அன்ன தொன்னெறி மரபினர்."

(ஆத்திரையனார்)

என முன்னோர் கூறியதை அடியொற்றிக் கம்பர் இநதப்பாட்டைப் பாடியிருக்கிறார் என்று தெரிகின்றது குல முதல் என்னும் கவியைக் கண்ணூன்றி நோக்கிக் கருத்துக்களை யறிந்துகொள்க.

அரசுடன் அமர்ந்து அரச காரியங்களை ஆற்ற வல்ல சிறப்புடையாரைப் பிறப்புடைமை முதலாகப் பேணிக் கூறியது அவரால் உலகம் அடைய நிற்கும் பயனிலையை ஓர்ந்து என்க.

"குடிப்பிறப் புடுத்துப், பனுவல் சூடி,
விழுப்பேர் ஒழுக்கம் பூண்டு, காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையின்
காதலின்பத்துத் தூங்கித் தீதறு

நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை அவாவின்மை என்றாங்கு
இருபெரு நிதியமும் ஒருதாம் ஈட்டும்
தோலா நாவின் மேலோர் பேரவை
உடனமர் இருக்கை ஒருநாள் பெறுமெனின்,
பெறுகதில் அம்ம ! யாமே வரன்முறைத்
தோன்றுவழித் தோன்றுவழிப் புலவுப் பொதிந்து
ஞாங்கர் ஞாங்கர் நின்றுழி நில்லாது
நிலையழி யாக்கை வாய்ப்பஇம்
மலர்தலை யுலகத்துக் கொட்கும பிறப்பே.''

(ஆசிரியமாலை)

குடிப் பிறப்பு, கல்வி, ஒழுக்கம் முதலிய குணநலங்களை யுடைய மேலோர் கூடியிருக்கும் சபையில் ஒரு நாள் உடனமர்ந் திருக்க நான் பெறுவேனாயின், நிலையற்ற இம்மனிதப் பிறப்பு எனக்கு நிலையாக வருக என்று இப்பெரியார் உளமுருகி உரை செய்திருத்தலால், நம் கவிஞர்பிரான் மேலே கூறியிருக்கும் அறிஞர் அருமையும், அவர் கூடியிருந்த அவையின் பெருமை யும் நன்கு அறியலாகும்.

நலம் முதல் நலியினும் நடுவு நோக்குவார் என்றது தம்மு டைய சொந்த நலங்கள் பாதிக்கப்படினும் நடுவு நிலை தவறி நட வார் என்றவாறு. உடல் வருத்தம் நேரினும் பொருட்கேடு சேரினும் நெறி வழுவாமல் நிலைத்து நின்று நீதிபுரிவர் என்பதாம்.

சலம் முதல் என்றது கோபம் பொறாமை குரோதம் கோள் வஞ்சனை முதலிய சஞ்சலங்களை. இச்சிறுமைகள் தம்மிடம் சாரா மையோடு குடிகளிடத்தும் கூடாமல் நீக்கி யாண்டும் அறநலங்கள் ஓங்க ஆட்சியை நடாத்துவர் என்பதாம். ஆகவே குடிகளுக்கு நலனும், அரசுக்குப் பலனும், தமக்குப் புகழும் தழைத்து வரும் படி அவர் உழைத்து வந்தனர் என்பது உணர வந்தது.

"Men in great place are thrice servants; servants of the Sovereign or state, servants of fame, and servants of business.'' (Bacon).

"அதிகாரிகளாய் உயர் பதவியிலிருப்பவர் தமது புகழும் அர சின் நலமும் கரும நிலையும் கருதிவினையாற்றும் கடப்பாடுடையர்''

என ஆங்கிலப் பேராசிரியராகிய பேக்கன் (Bacon) என்பவர் கூறியிருப்பதும் ஈண்டு நோக்கத்தக்கது.

அரசுரிமையான உன்னத பதவியிலிருப்பவரது உழைப்பும் பொறுப்பும் உலக நோக்கமும் இதனால் உணரலாகும். தாங்கினர் என்றது அறம் தழைக்க உரிமையுடன் அரச பாரத்தை அவர் ஆற்றி நின்ற அருமை தெரிய வந்தது.

" குடிமகிழ்ச்சியே கோனுடை உயர்ச்சி என்றுணர்ந்து
நெடிய ஊழியம் செயவந்த நிலையென நினைந்து "

(வீரபாண்டியம்)

தமது அமைச்சுத் தொழிலை அவர் நடாத்தி வந்திருத்தலால் நாட்டுக்கும் அரசுக்கும் அவர் காட்டியிருக்கும் நன்மையும் தன்மையும் நன்கு புலனும்.

உலக பாலரான மன்னருக்கு மந்திரிகளாய் வரத் தக்கவர் நிலைகளில் இனிது அமைந்திருக்கவேண்டும் என்பதாம்.

2. நேர்ந்த ஒரு நிகழ்ச்சியைக் கொண்டு மேல் நேர இருக்கும் நிலைகளையும் ஓர்ந்துகொள்ள வல்லவர். ஒரு கேடு வினை விளைவினால் வந்ததாயினும் அதனையும் தம்மதி நுட்பத்தால் நீக்கத் தக்க பேராற்றலுடையவர். பல்வேறு வகைப்பட்ட நூல்களையும் பழுதறக் கற்றவர். நல்ல மாணிகள் என அமைச்சரைக் ...ல் சொல்லியிருக்கிறார்.

உற்றது கொண்டு உறுவதை உணரும் கோளார் என்றது மதியூகத்தையும் குறிப்பறியும் திறத்தையும் உணர்த்தி நின்றது. விதியை மதியால் வெல்லமுடியாதே அங்ஙனம் இருப்ப, " வினையின் வந்ததாயினும் மாற்றல் ஆற்றும் பெற்றியர் " என இங்ஙனம் உரைத்தது என்னை ? எனின், அவருடைய மன நலம், மதி நலம், சூழ்ச்சித் திறம், கருதியதை உறுதியுடன் முடிக்கும் ஊக்கப்பாடு, உலையா முயற்சி என்னும் இந்நிலைகளை விளக்க இவ்வாறு குறித்தார் என்க.

தெய்வத் தடையையும் தம் செய் தவ முயற்சியால் இடையொதுக்க வல்ல உயர் இயல்பினர் என்பார் பெற்றியர் என்றார். பெற்றி=வெற்றி பெறுந் தன்மை.

* "ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்." (குறள், 620)

என்னும் இந்த அருமைத் திருக்குறளின் கருத்தைக் கவி
|தில்

அரிய நூல் என்றது எவரும் எளிதில் அறியமுடியாத நுட்பமான பெரிய நூல்களை. இலக்கணம் தருக்கம் சாங்கியம் யோகம் வேதாந்தம் முதலிய யாவும் நன்கு தெளிந்தவர் என்பதாம். நுண்ணிய நூலறிவோடு எண்ணிடலரிய உலகிய லறிவும் ஒருங்கே யுடையவர் என்பது நூலும் என்ற உம்மையால் உணர வந்தது. உயர்வு சிறப்பும், எச்சமும் உம்மையில் உச்சமாயுள்ளன.

"மானம் நோக்கில் கவரிமா அனைய நீரார்" என்றது அவரது மன நிலையையும், மறுப்படாத வாழ்க்கை யியல்பையும் உணர்த்தி நின்றது. தம் நிலைமைக்கு ஏதேனும் ஊனம் நேரின் உடனே உயிரைவிட்டுவிடுவார் என்பார் கவரிமானை உவமையாகக் குறித்துக் காட்டினர்.

"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்." (குறள், 969)

என்ற தேவர் வாக்கை எடுத்துக் கவி இங்கே தொடுத்திருக்ர். மானம், உயிர், மா, மயிர் என்பன ஈண்டு ஆராயவுள்ளன.

கவரிமா என்பது மான் இனத்தைச் சேர்ந்த ஓர் அழகிய மிருகம். அசுணமாவைப் போல் இதுவும் ஒரு அதிசய இயல்புடைய அற்புதப் பிராணி. செரிந்து நெறிந்து கருமை கனிந்த அருமையான மயிர்த் தொகுதியுடையது. வனத்தில் திரியுங்கால் தன் மயிர்த் திரளில் ஒரு மயிர் செடி கொடிகளில் சிக்கிக் கொண்டால் உடனே அந்த இடத்திலேயே நின்றுவிடும். அதை விட்டு யாதும் அசையாமல் நின்றபடியே நிலையாய் நின்று பட்டினி கிடந்து பரிந்து இறந்துபடும்.

---

* தளராது முயல்பவர் ஊழையும் வென்று உயர் பயன் காண்பர் என்பதாம். விதி வலியதே என்று அஞ்சி அயராதே; யாண்டும் நெஞ்சம் துணிந்து ஊக்கி முயல்க என உறுதி கூறியபடியிது. விடாமுயற்சியால் வியத்தகுபயன் விளையும் என்பது கருத்து,

ஒரு மயிரை நீக்கச் சகியாமல் தன் உயிரை நீக்கும் இயல்பினது ஆதலால், தம் குண நலங்களுள் ஏதேனும் ஒரு சிறிது குன்ற நேரினும் உடனே உயிர் பொன்றிவிடும் இயல்பினரான மேன்மக்களுக்கு இங்கே கவரிமா உவமையாக வந்தது.

"மான மாமணி வீழ்த்துயிர்க்கு
ஊன மாமென ஓடுவீர்
ஈன ஓர்மயிர்க்கு ஏதமாம்
கானமாவது காணுமே" (சூளாமணி, அரசியல், 227)

மயிர் நீப்பின் கவரிமா உயிர் வாழாது என்பதும், மானம் பேணுதற்கு அதனை மேல்வரிச் சட்டமாக நூலோர் குறித்து வந்துள்ளமையும் இவற்றால் அறியலாகும்.

"மானம் கெட வாழ்வந்து, உருக்கு எனின் சாமரைமானை உன்னல் ஏம கண்டனே" (விநாயகபுராணம்) எனப் பின்னோரும் இன்னவாறே இதனைக் குறித்து வந்திருக்கின்றனர்.

மானநிலைக்கு இனமாய் இங்ஙனம் மருவி யிருத்தலால் இக் கவரியை மானமா என்பர்.

"மானமாக் கவரி வெண் மயிரின் வேய்ந்தன." (சிந்தாமணி, 1201)
"ஏகினம் மானமா பட்டம் கவரிமா." (பிங்கலந்தை 8-185)

இதன் ஆணை ஒருத்தல் என்ப; பெண்ணைப் பிணை என்பர்.

"புல்வாய் நவ்வி உழையே கவரி
சொலவாய் நாடின் பிணை எனப் படுமே."(தொல்காப்பியம்)

இதனுடைய மயிர் முடியை மகளிர் கூந்தலுக்கு ஒப்பிடுவர்.

"கவரி முச்சிக் கார்விரி கூந்தல்
ஊசன் மேவற் சேயிழை மகளிர்." (பதிற்றுப்பத்து, 43)

என வரும் இதனால் இதன் மயிரின் மாட்சியும் நீட்சியும் புலனும். முச்சி=கொண்டைமுடி. குறைந்த மயிருடையார் நிறைந்த மயிருடையாரெனத் தோன்ற விழைந்து இக்கவரியின் ஒட்டு மயிரையும் இக்காலத்தில் கட்டி முடித்து வருவதை நாம் கண்டு வருகின்றோம். மயிரில் எவ்வளவு ஆசை! இம் மானமாவின் புறமயிரைத் தலையில் வனைந்து மகிழ்வார் பலர்; இதன் அக இயல்பை உயிரில் புனைந்து உயரழகு காண்பார் மிகவும் அரியர்.

பழி பாவங்களுக்கு நாணி யாதொரு வழுவும் நேராமல் விழுமிய நிலையில் விழிப்புடன் நின்று நாட்டில் ஒழுகி வருகின்ற மேலோருக்குக் காட்டில் வாழ்கின்ற கவரிமாவை ஒப்புக்காட்டியது அதன்பால் இயல்பாக அமைந்துள்ள இனிய சீர்மையை எண்ணி என்க.

மானமுளள நலல குலமகனைக் குறித்துக் கூறுங்கால், "கவரிமான் கன்று" எனவும், மானங் கெட்டுத் திரிவோனை, "அது கழுதை" எனவும் உலகம் வழங்கி வருகின்றது.

"மானமுள ளோர்கள் தம்மைர் மயிர றின் உயிாவாழாத
கானுறு கவரிமான்போல் கனம்பெறு புகழே பூண்பார்;
மானம்ஒன் றில்லார் தாமும் மழுங்கலாய்ச் சவுங்க லாகி
ஈனமாம் கழுதைக்கு ஒப்பாய் இருப்பரிவ்வுலகிலம்மா."

என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

"அனைய நீரார்" என்று குறிப்பாகச் சுட்டி நிறுத்தியது, அந்தக் கவரிமாவின் இயல்பு முழுவதையும் நுணுகி அறிந்து கொள்ள என்க.

மயிர் நீங்க நேரின் தானுகவே அது உயிர் நீங்கிவிடுதல் போல், மானம் அழியவரின் பிறர் உணர்த்த வேண்டாமலே தாமாகவே உயர்ந்தோர் உயிரை ஒழித்துவிடுவர் என்பதாம்.

மானம் நோக்கினுல் உயிர்போய்விடும்; உயிரைப் பேணினுல் மானம் போம் என்னும் நிலைமை நேர்ந்தால் அப்பொழுது விழுமியோர் அவற்றுள் எதனைத் துணிந்து கொள்வர்? எனின், மானத்தையே விழைந்து கொள்வர் என்க. உயிர் என்றேனும் ஒரு நாள் ஒழிந்துபோம்; மானம் என்றும் அழியாது நின்று புகழ்விளைக்கும் ஆதலால் அந் நிலைமை தெளிந்த தலைமையாளர் யாண்டும் மானத்தையே தலைமையாகப் பேணி நிற்பர் என்பதாம்

"ஊனமேயான ஊனிடை யிருக்கும் உயிரினைத் துறந்தும் ஒண்பூணும்
மானமேபுரப்பது அவனிமேல் எவர்க்கும்வரிசையும்,தோற்றமும்மரபும்,
ஞானமேயான திருவடியுடையாய்! ஞாலமுள்ளளவும் நிற்றலினுல்
ஈனமே உயிருக்கு இயற்கை யாதலினுல் என்றனன் வீமனுக்கு
இளையோன்" (பாரதம், நச்சுப்பொய்கை, 18)

இது, தன் உளளக் கிடக்கையை உரை என்றபோது கண்ணனிடம் விசயன் சொன்னது. மானத்தை உயிரினும் சிறந்ததாக அம்மன்னன் மதித்திருந்த உண்மையையும் திண்மையையும் இது உணர்த்தி நிற்றல் காண்க.

மானம் உயிரை மகிமைப்படுத்தி வருதலால் மனித சமூகத்தில் அது இவ்வளவு மாட்சிமையை அடைந்து நிற்கின்றது.

"Honour is venerable to us because it is no ephemeris."
(Self-Reliance)

"மானம் என்றும் அழியாத பொருள்; ஆதலால் அது நம்மால் பெரிதும் போற்றத்தக்கது" என எமர்சன் (Emerson) என்னும் அமெரிக்கப் பெரும்புலவர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

"Life everyman holds dear; but the dear man holds
honour far more precious and dear than life."
(Shakespeare)

"மனிதரெல்லாரும் உயிரையே பெரிதாகக்கருதுகின்றனர்; ஆனல் அரிய மனிதன் தன் உயிரினும் மானத்தையே இனிதாகப் பேணி நிற்கின்றான்." என்று ஆங்கிலப் பெருங் கவிஞராகிய ஷேக்ஸ்பியர் உரைத்திருக்கின்றார்.

மனுக்குலம் பரவியுள்ள இடங்களிலெல்லாம் மானம் எவ்வாறு மதிக்கப்பட்டுள்ளதென்பதை இவற்றால் அறியலாகும்.

"உயிரினும் மதிக்கற் பாலது; உள்ளப்பேருறையின் உள்ளது;
அயிறரும் பனிக்கும திண்மை மானம்." (சூளாமணி, அரசியல், 66)

"மான அருங்கலம்" (நாலடியார், 40)
"மானமா மணி" (தாடகை வதை, 7)
"மானமதாணி ஆணியிற் றுங்கல்" (ஞானமிர்தம்)

எனவரும் இவை மானத்தின் அருமை குறித்துவந்துள்ளன. மணி என்றது அதன் மகிமை கருதி. மதாணி=வயிரப்பதக்கம்.

மானம் என்னும் உயர் குணத்திற்கு இயலுரிமையாய் இசைபெற்றுள்ள இக் கவரிமா மலைச்சாரல்களில் நிலைத்து வசிக்கும்.

" நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி
குவளைப் பைஞ்சுனை பருகி அயல
தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும்
வடதிசையதுவே வான்தோய் இமயம்." (புறம், 132)

நரந்தம் என்னும் பூவையும், இனிய புல்லையும் மேய்ந்து தன் பிணையுடன் இமயச் சாரலில் வதியும் என்றதனால் இக் கவரியின் நல்லிடமும் மெல்லியல்பும் நன்கு அறியலாகும்.

இக் கவரியில் இரு வகை உண்டு. ஒன்று கரு மயிர் உடையது. மற்றொன்று வெண்மயிர் வாய்ந்தது. பின்னதைச் சமரம் என்பர்; ஆயினும் பொதுவாக இரண்டும் கவரி என்றே வழங்கப் படும்.

" உவரி வாயன்றிப் பாற்கடல உதவிய அமுதே !
துவரி னீண்மணித் தடநதொறும இடநதொறும துவன்றிக்
கவரி பால்நிற வால்புடை பெயர்வன கடிதில்
பவள மால்வரை அருவியைப் பொருவிய பாராய் !"
(சித்திரகூடப் படலம், 5)

இது, சீதைக்கு இராமர் சித்திரகூட மலை வளத்தைக் கூறி வருங்கால் கூறியது. பவளத் தடங்களில் கவரிமாவின் பால் அனைய வால் அசைவது, பவளமலையில் மருவிய அருவியை ஒத்திருந்த தென்பதாம். ஆகவே கவரியின் வால் கருமயிருடையது போல் வெண் மயிர் அமைந்ததும் உண்டு என்பது உணர நின்றது.

3. இவ்வாறு மானநலம் வாய்ந்த மந்திரிகள் காலம் இடம் கருவி தொழில் முதலியவற்றை நன்கு ஆராய்ந்து தம் அரசனுக்கு உறுதி பயக்கும்படி கருமம் ஆற்றிவந்தனர் என்பதாம்.

" கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு." (குறள், 631)

என்றதை அடியொற்றி மேல்குறித்த கவி வந்திருக்கின்றது.

பொய்யாமொழியின் பொருள் மொழிகளை இடங்கள்தோறும் இனிது மருவிக் கவி அழகுபடுத்தி வருந் திறம் அறிந்து மகிழத்தக்கது. மதி மந்திரிகளுக்குரிய குணநலங்கள் யாவும் இனிதமைந்திருந்த நிலைமையை இன்புற விளக்கியிருக்கிறார்.

4. "தலைமகன் வெகுண்டபோதும், வெம்மையைத்தாங்கி நீதி விடாது நின்று உரைக்கும் வீரர்." என்றது,

"அறிகொன் றறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்." (குறள், 638)

என்றதைக் கருதி வந்தது. உழை=பக்கம்.

5. நல்லவும் தீயவும் நாடி நாயகனுக்கு ஓர் உயர் மருத்துவன்போல் உறுதி சூழ்ந்து உரிமையுடன் பயன் இயற்றுவர் என்பதாம். இது,

"நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும்." (குறள், 511)

என்றதை நினைந்துகொண்டு பாடியது.

அமைச்சு இயல்பைக் குறித்து வள்ளுவப் பெருந்தகை கூறியுள்ள கருக்காக்களைத் தம் கருத்தில் வாங்கிக்கொண்டு மன்னர் பிரானுடைய மந்திரிகளைக் கம்பர் இன்னவாறு நமக்குக் காட்டியிருக்கிறார். இக்காட்சி அரசின் மாட்சி அறியவந்தது.

அமைச்சர் அறுபதினாயிரர் என்றது அதிசயமாயுள்ளது. உயர்வு நவிற்சிபோல் தோன்றுகின்றது. நாட்டிலிருந்த அறிஞர் பலரும் அரசர்பிரானுடைய அமைச்சு நிலையில் தொடர்பு கொண்டிருந்தமையால் இவ்வாறு தொகை பெருகிய தென்க.

தற்காலத்தில் நமது நாடாட்சி புரியும் மன்னரது இருவகைச் சபையிலும் ஏறக்குறைய ஆயிரத்தறுநூறு பேர்கள் ஆலோசனையாளரா யமர்ந்திருத்தலைத் தெரிந்துகொண்டால், முற்காலத்து அத்திவ்விய ஆட்சியிலிருந்த செவ்விய அமைச்சர்கள் தொகைக்கு இதமாகப் பொருள் செய்துகொள்ளலாம்.

இவ்வண்ணம் திரண்டுள்ள மந்திரிகள் கூட்டத்தில் மிகவும் தலை சிறந்தவர் எண்மர். அவருள் முதல் மந்திரியாய்ச் சக்கரவர்த்திக்கு எப்பொழுதும் பக்கத்திலிருப்பவன் சுமந்திரன் என்பவன். அப்பெயரினாலேயே அவனது உயரியல்பும், ஆலோசனைத் திறனும் அறியலாகும். சயந்தன், விசயன், திருட்டி, சித்தார்த்தன், அர்த்த சாதகன், அசோகன், மந்திரபாலன் என்னும் ஏழு மந்திரிகளும் சுமந்திரன்கீழ் உறுதித்துணைவராய் உரிமை எய்தியிருந்தனர்.

முனிவருள் வசிட்டரும், வாமதேவரும், சாபாலியரும் அமைச்சு நிலைமையில் அங்கே தலைமையாளராய் நிலவியிருந்தனர்.

இவ்வாறு சிறந்த மதியூகிகளும், உயர்ந்த தவவொழுக்கமுடைய வர்களும் விரைந்து வந்து அரசவையில் உரிமையுடன் வரன் முறையே அமர்ந்தனர்.

சக்கரவர்த்தி சிங்காசனத்தில் சிறந்து வீற்றிருந்தான். வசிட்டர் வலப்புறத்தும், சுமந்திரன் இடப்புறத்திலும் அயலே அமர்ந்திருந்தனர். அமைச்சரனைவரும் நிரம்பியிருந்தமையால் அந்தப் பேரவை அறிவு நிலையமாய்ப் பெருகியிருந்தது.

மன்னர்பிரான் எல்லாரையும் இன்னருளுடன் ஒருமுறை இனிது நோக்கினன். பின்பு தான் எண்ணியுள்ளதை நன்னயமாகப் பேசலானன். அன்று இவன் பேசியிருக்கும் திறம் பெரிதும் வியந்து போற்றத்தக்கது. மதுர வாசகங்கள் சுரந்து, சதுரப்பாடுகள் நிறைந்து, முதிர்பேரறிவுடன் மருவி மன்னன் பிரசங்கம் மிகவும் இரசமாக மன்னி வந்துள்ளது.

தசரதன் மந்திரிகளை நோக்கிப் பேசியது.

“உரிமை மிகுந்த எனது அருமைத் துணைவர்களே! இன்று உங்கள் முன்னிலையில் ஒன்று சொல்ல வந்திருக்கின்றேன். அது மிகவும் அருமையுடையது. உரிமை வாய்ந்தது. உங்கள் அனைவருக்கும் ஒருங்கே இனிமையா யிருக்கும் என்று நம்புகின்றேன்.

சூரிய குலத்து மன்னர்களாகிய என்னுடைய முன்னோர்கள் நீதிநெறி தவருமல் ஆதியிலிருந்தே இவ்வுலகத்தைப் பாது காத்து வந்திருக்கின்றனர். அந்த வழி முறையில் நானும் வந்தேன். பழம் பெருமை குன்றுமல் உங்கள் உதவியால் அரசு புரிந்திருக்கிறேன். எனது ஆட்சி உங்களுடைய மதி மாட்சியாலேயே உயர்நலமடைந்து ஓங்கியுள்ளது. நீங்கள் புரிந்து வந்திருக்கும் பேருதவிக்கு இம் முழுநீருலகமும் யானும் எழுமையும் கடப்பாடுடையேம். என் இளமை போயது; கிழமை இப்பொழுது என்பால் கிழமை கொண்டுள்ளது. இந்த நிலைமையில் மேலும் தொடர்ந்து அரச பாரத்தைத் தாங்கி நிற்பது அமைதியாகுமா? இதனைப் பரிவு கூர்ந்து உரிமையுடன் நீவிர் ஓர்ந்து சிந்திக்கவேண்டும். மனிதன் பிறந்து இறந்துபோமளவும் உலக பாசத்திலேயே உழந்துகொண்டிருந்தால், அவன் உயிர்க்கு உறுதி நாடி உய்வது எங்ஙனம்? எனது முன்னோரனைவரும் ஐம்பது

வயது ஆனவுடனேயே அரசுரிமையை மைந்தரிடம் உதவிவிட்டு அரியணை நீங்கி அருந்தவநிலையில் அமர்ந்து பெரும் பேறடைந்திருக்கின்றனர். நான் மட்டும் அம்முறையில் பிழைபட்டு நிற்கின்றேன். ஞானமுடன் நோக்கின் இந்நிலை மிகவும் ஈனமாகும். உலக மக்களைப் போலல்லாமல் ஒரு தலைமைத் தன்மையை உதவி என்னை இந்நிலைமையில் வைத்தருளிய தனிமுதல் தலைவனை இனி மேலாவது நினைந்து நெஞ்சுருகி நேரே தஞ்சமடையாதுபோனல் அது வஞ்சமும் மடமையுமாம்; அதுவுமன்றி நன்றி கொன்ற பாதகமுமாகும். பிறந்த வுயிர்கள் பக்குவப்பட்டு உயர்ந்த பதவியை அடையவே இத்தனு கரண புவன போகங்கள் இங்ஙனம் பரந்து விரிந்திருக்கின்றன. பெறுதற்கரிய மனிதப் பிறவியை அடைந்தும் உயிர்க்குறுதி பெறுமல் ஒழிவது மிகவும் இரங்கத் தக்கதாம். எனது முன்னோர் பலர் என் வயதடையு முன்னரே முத்தித் திருவைக் கண்டு பேரின்ப நிலையைப்பெற்றிருக்கின்றனர். நானோ நரைத்துத் திரைத்த மூப்பைக் கண்டு பாரின்பப் பாழில் பதிந்து கிடக்கின்றேன். இந்த அவநிலையை நீங்கி இனி நான் தவநிலையை அடையவேண்டும்" என இன்னவாறு நன்னயமாக மன்னன் மேலும் தொடர்ந்து பேசினுன். தனது அருமைத் திருமகனுக்கு அரசு முடி சூட்ட அவாவியுள்ள தசரதன் அதனை வெளிப்படையாக மந்திரிகளிடம் உடனே உரையாமல் இவ்வாறு தந்திரமாய் வேதாந்தப் பிரசங்கம் செய்கின்றுன். தன் உள்ளம் கருதியதைப் பிறர் உவந்து கொள்ளும்படி உறுதிநாடி இங்ஙனம் உரைக்கலானுன். இவ்வண்ணம் உரையாடி வந்த மன்னன் பின்னர்த் தன் குல வீர நிலைமையும் தலைமையும் தெரியக் கலைநலத்துடன் பலநலங்களையும் விளக்கிக் கூறியிருக்கின்றுன். இவனுடைய உரைகளாக வந்துள்ள கவிகளில் சில அடியில் வருவன.

தசரதன் உரைத்த உறுதிமொழிகள்.

கன்னியர்க் கமைவரும் கறபின் மாநிலம்
தன்னையித் தகைதரத் தருமம் கைதர
மன்னுயிர்க் குறுவதே செய்து வைகினேன்
என்னுயிர்க் குறுவதும் செய்ய எண்ணினேன். (1)

வெள்ளநீர் உலகினில் விண்ணில் நாகரில்
தள்ளரும் பகையெலாம் தவிர்த்து நின்றயான்
கள்ளரில் கரந்துறை காமம் ஆதியாம
உள்ளுறை பகைஞருக்கு ஒதுங்கி வாழ்வனோ? (2)

ஓட்டிய பகைஞர்வந் துருத்த போரிடைப்
பட்டவர் ; அல்லரேல், பரம ஞானம் போய்த்
தெட்டவர் ; அல்லரேல், செல்வ மீண்டென
விட்டவர் ; அல்லரேல், யாவர் வீடுளார் ? (3)

இறப்பெனும் மெய்ம்மையை இம்மை யாவர்க்கும்
மறப்பெனும் அதனின்மேல் கேடு மற்றுண்டோ ?
துறப்பெனும் தெப்பமே துணைசெய் யாவிடில்
பிறப்பெனும் பெருங்கடல பிழைக்க லாகுமோ ? (4)

அருஞ்சிறப் பமைவரும் துறவும் அவவழி
தெரிஞ்சுற வெனமிகுந் தெளிவும் ஆய்வரும்
பெருஞ்சிறை யுளவெனில பிறவி என்னுமிவ்
இருஞ்சிறை கடத்தலின் இனியது யாவதே ? (5)

இனியது போலுமிவ் அரசை எண்ணுமோ
துனிவரு நலனெனத் தொடர்ந்து தோற்கலா
நனிவரும் பெரும்பகை நவையின் நீங்கியத்
தனியர சாட்சியில் தாழும் உள்ளமே. (6)

உம்மையான் உடைமையின் உலகம் யாவையும்
செம்மையின் ஓம்பிநல் லறமும் செய்தனென்
இம்மையின் உதவிநல் லிசைநடாய நீர்
அம்மையும் உதவுதற்கு அமைய வேண்டுமால். (7)

இழைத்ததீ வினையையும கடக்க எண்ணுதல
தழைத்தபே ரருளுடைத் தவத்தி னுகுமேல
குழைத்ததோர் அமிர்தினைக் கோடல் நீக்கிவேறு
அழைத்ததீ விடத்தினை அருந்த லாகுமோ ? (8)

கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப்
பிச்சமும் கவிகையும் பெய்யும் இன்னிழல்
நிச்சயம் அன்றெனில் நெடிது நாளுண்ட
எச்சிலை நுகருவ தின்பம் ஆகுமோ ? (9)

மைந்தரை இன்மையின் வரம்பில காலமும்
நொந்தனன் ; இராமனென் னோவை நீக்குவான்
வந்தனன் ; இனியவன் வருந்த யான்பிழைத்து
உய்ந்தனன் போவதோர் உறுதி எண்ணினேன். (10)

இறந்திலன் செருக்களத்து இராமன் தாதை தான்
அறந்தலை நிரம்பமூப் படைந்த பின்னரும்
துறந்திலன் என்பதோர் சொல்லுண்டான பின்
பிறந்திலன் என்பதிற் பிறிதுண் டாகுமோ? (11)

பெருமகன் என்வயிற் பிறக்கச் சீதையாம்
திருமகள் மணவினை தெரியக் கண்டயான்
அருமகள் நிறைகுணத் தவனி மாதெனும்
ஒருமகள் மணமுமகண் டுவப்ப வுன்னினேன். (12)

நிவப்புறு நிலனெனும நிரம்பு நங்கையும்
சிவப்புறு மலர்மிசைச் சிறந்த செல்வியும்
உவப்புறு கணவனை உயிரின் எய்திய
தவப்பயன் தாழ்ப்பது தருமம் அன்றரோ. (13)

ஆதலால் இராமனுக்கு அரசை நல்கியிப்
பேதைமை தாய்வரும் பிறப்பை நீக்குவான்
மாதவந் தொடங்கிய வனத்தை நண்ணுவேன்
யாதுநும் கருத்து? என இனைய கூறினன். (14)

அரசவையில் அமர்ந்து மந்திரிகளை நோக்கித் தசரதன் பேசியிருக்கும் இந்த அருமைப் பகுதியை உரிமையுடன் ஊன்றி நோக்கவேண்டும். அரிய பொருள் வளங்கள் பல நிறைந்து, பெரிய அறி வாராய்ச்சிகள் இதன்கண் மிகவும் சுரந்திருக்கின்றன.

1. உலகில் யாதொரு வழுவும் இடைமருவாமல் கண்ணூன்றிக் காத்துவந்த தன் காவலின் நன்னய நிலை தெரியக் கன்னியர் நிலையை எடுத்துக்காட்டினன். குலமகள் தன் கற்பைப் பாதுகாத்துவருதல்போல் நிலமகளை நான் பேணி வந்தேன் என்பதாம். புகழும் புண்ணியமும் இன்பமும் தன் அரசில் எங்கும் பொங்கியுள்ளமையை இங்ஙனம் புகன்றருளினன்.

மன் உயிர் என்றது ஆன்மகோடிகளை. மக்களுக்கே யன்றி விலங்கு முதலிய தாழ்ந்த பிராணிகளுக்கும் தண்ணளி புரிந்து தகுவன செய்து வந்தான் என்பது உயிர் என்றதனால் உணர வந்தது. சிற்றுயிர்களும் கொற்றவன் குடைநிழலில் குலாவியிருந்தன என்பது குறிப்பு.

உறுவதே என்றது உயிரினங்களுக்கு வேண்டிய இனிய உதவி நலங்களை. அங்கங்கே ஆவன நாடி எங்கணும் எவ்வுயிர்க

ளும் இடரின்றி இன்புற்றுவாழ அன்புற்று நின்று அரசு புரிந்து வந்தான் என்பதாம்.

இதுவரை பிறவுயிர்களுக்கு இதம் புரிந்து வந்தேன் ; இனி என்னுயிர்க்கு இதம் செய்ய எண்ணினேன் என்றது அரசைத் துறந்துபோய் அருந் தவம் புரிய விரைந்து நிற்கின்றேன் என்ற வாறு. தவமே உயிர்க்கு மிகவும் உறுதியாய் உய்திதரும் ஆதலால் அவ்வுரிமைதோன்ற உறுவது என்றான்.

> " தவம்செய்வார் தம்கருமம் செய்வார்மற் றல்லார்
> அவம்செய்வார் ஆசையுட் பட்டு " (குறள், 266)

உலக பாசத்தைத் துறந்து தவம் செய்கின்றவர் எவரோ அவரே தம் உயிர்க்கு இதம் செய்தவராவார் ; அவ்வாறின்றிப் பொருள் இன்பங்களில் ஆசைமண்டி ஐம்புலனுகர்ச்சியில் உழந்து திரிபவர் தமக்குக் கேடு செய்தவரே யாவர் என இப்பொய்யா மொழி போதித்துள்ளமை காண்க. தன் உயிர்க்கு உறுதி இன்னதுதான் என்பதை உய்த்துணர்ந்து ஒருவன் ஒழுகவேண்டிய நிலை இதனால் இனிது புலனும்.

> " ஆனைகள் ஐந்தும் அடக்கி, அறிவென்னும்
> ஞானத் திரியைக் கொளுவி, யதனுள் புகுந்து
> ஊனை இருளற நோக்கும் ஒருவற்கு
> வானகம் ஏற வழிஎளி தாமே." (திருமந்திரம்)

எனவரும் இதனால் உயிர்க்கு உறுதியான செய்கை நிலையும் உய்தி வகையும் உணரலாகும்.

என் உயிர்க்கு உறுவது எனத் தன்னுயிரை நோக்கியே மன்னன் உரைத்திருப்பினும் இராமனையும் அது குறித்து நிற்கின்றது. என்னை குறிப்பு ? எனின், ஓவிய எழிலுடைய அவனையே தனது ஆவி என இவன் கருதியிருத்தலினால் இராமனுக்கு உறுவதாகிய மகுடாபிடேகம் செய்து அரசினை உதவ எண்ணி உண்ணிறை அன்பால் இங்ஙனம் உரையாடினான் எனவும் பொருள்கொள்ளும் படி இது பொருந்தியுள்ளதென்க.

அரசபோகத்தைத் துறந்து அமைதியா யிருக்க விரும்பி நிற்கின்றேன் என்று விநயமாகச் சொன்னவன் பின்பு தன் குல வீறுதோன்ற நிலைமையைத் தெளிவாக விளக்கிப் பேசுகின்றான்.

2. மூன்று உலகங்களிலுள்ள கொடிய பகைவரனைவரை யும் அடியோடு வென்று வெற்றித் திருவுடன் வீறுபெற்று நிற் கின்ற யான் காமம் கோபம் முதலிய அற்பங்களை அடக்காமல் அவற்றிற்கு வசமாய் அடங்கி இழிந்து வாழ்வது மிகவும்இகழ்ந்து தள்ளத்தக்கது என்பதாம்.

புறப்பகைகளை வென்று புகழ்மீக் கொண்டேன்; அகப்பகை களை வெல்லாமல் அயர்ந்து அலமந்து நிற்கின்றேன் என அரசன் இரங்கிக் கூறியபடி யிது.

காமத்தை முதலில் குறித்தது எல்லாத் தீமைகளுக்கும் ஏது வாய்த் தலைமை பெற்று நிற்கும் அதன் நிலைமை நோக்கி.

"காமமே பிறவிவித் தாகும்; கணணிலாக்
காமமே சிவனடிக் கலப்பு நீக்கிடும;
காமமே அவத்தையிற கலக்கச் செய்திடும;
காமமே நரகெலாம் காணி யாக்குமே." (காசிரகசியம்)

தீமையுள்ளன யாவையும தந்திடும; சிறப்பும்
தோமில் செலவமும் கெடுக்கும்நல லுணர்வினைத் தொலைக்கும்;
ஏம நன்னெறி தடுத்திருள் உய்த்திடும இதனல
காமம் அன்றியே ஒருபகை உண்டுகொல கருதில். (கந்தபுராணம்)

காமமே கொலைகட் கெலலாம் காரணம்; கண்ணோடாத
காமமே களவுக்கெல்லாம் காரணம்; கூற்றம் அஞ்சும்
காமமே கள்ளுண்டற்குங் காரணம்; ஆதலாலே
காமமே நரகபூமி காணியாக் கொடுப்ப தென்றான்.
(திருவிளையாடற் புராணம்)

காமத்தின் கொடுமை குறித்து வந்துள்ள இவை ஈண்டுச் சிந்திக்கத் தக்கன. இதனல் அது முந்தி நிற்க வந்தது.

கள்ளரில் கரந்து உள் உறை பகை என்றது காமம் முதலிய வற்றின் இருப்பும் இயல்பும் தெரிய வந்தது. உள்ளிருந்து கொண்டே உள்ளத்தையும் உணர்வையும் கெடுத்து உயிரை அலைக் கழித்து வருதலால் உட்பகை என அவை பெயர் பெற்றுள்ளன. பகைகள் என்னுது பகைஞர் என உயர்திணையில் கூறியது எவ ரும் எளிதில் வெல்லுதற்கரிய திறலுடன் வீறுபெற்றுள்ள அவற்றின் வியத்தகு நிலைகளையும் விறல்களையும் உணர்ந்தெகை.

ஒதுங்கி வாழ்வனோ? என்ற வினவில் மன்னனது உள்ளத் துணிவும் ஊக்கப்பாடும் உயர்வீர நிலையும் ஒருங்கே ஓங்கியுள்ளன. இதுவரை கழிந்துபோன வாழ்வினுக்கு இரங்கி யிருத்தலால் கழிவிரக்கமும் இதில் கலந்திருக்கின்றது.

இவ்வாறு உரைத்த சககரவர்த்தி தனது வீரப்பிறப்பிற்குரிய கருத்துக்களை வெளிப்படையாக விளக்கி யிருக்கின்றான்.

3. போரில் இறந்தவர், ஞானிகளாய்ச் சிறந்தவர்,உலகைத் துறந்தவர் என்னும் மூவகை நிலையினரே முத்தியை அடைதற்கு உரியவர் என்கின்றான். இந்தக் கவியை நன்கு சிந்திக்கவேண்டும். "பட்டவர், தேட்டவர், விட்டவா அல்லரேல் யாவர் வீடு உளார்?" என வினவியிருக்கும் இதில் தசரதனுடைய மன நிலையும், உணர்வுறுதியும், தத்துவ நோக்கில் துணிந்திருக்கும் சித்தாந்தமும் தெளிவாயுள்ளன.

தேட்டவர்=தெளிந்தவர். உலக நிலையையும், உயிர்களின் இயல்பையும், உலகுயிர்களுக்கெல்லாம் முதன்மையாயுள்ள பரம பதியையும் தத்துவ ஞானத்தால் தெளிந்து சித்த சுத்தியுடன் வித்தகமெய்தி வியனிலையில் நிற்கும் உயர்பர ஞானிகள் என்பார், பரம ஞானம்போய்த் தேட்டவர் என்றார். போய் என்றது ஞானத்துறையில் முழுவதும் சென்று முடிவு கண்டவர் என்ற வாறு. பரிபூரணமான தத்துவ ஞானிகள் என்பதாம்.

விட்டவர் என்றது பற்றுக்களை முற்றும் கைவிட்டுத்துறந்த வரை. மண் பெண் பொன் என்னும் மூவகை ஆசைகளையும் முழுதும் நீங்கிய விழுமியோர் என்பதாம். முற்றத்துறந்த முனி வரை விட்டவர் என்றது உலகபாசங்களினின்று விடுதலை பெற்று நிற்கும் அவரது வியனிலை தெரிய.

"விட்டதே பேரின்ப வீடு" (ஔவையார்)

என்றதனால் விட்டவர்க்கும் வீட்டுக்கும் உள்ள உறவுரிமை புலனும்.

"வெறும்பொருளை விட்ட பொழுதே பரமே
உறும்பொரு ளாகி உறவாம்—வெறும்பொருளைப்
பற்றி யிருக்கும் வரையும் பரம்பொருள்
ஒற்றி யிருக்கும் உனை." (தரும தீபிகை)

எனவரும் இதனால் விட்டவர் பெற்றிருக்கும் பேறும், விடாதவர் கெட்டிருக்கும் கேடும் அறியலாகும்.

விடுதலைக்குச் செல்வத்தைத் தலைமையாகக் குறித்தது அதன் நிலைமை நோக்கி. உலக இன்பங்கள் எல்லாவற்றிற்கும் செல்வமே மூலகாரணமாயிருத்தலால் அதனைத் தொடாமல் விட்டவரே பூரணமான துறவைத் தொட்டவராவர் என்க.

ஈண்டு என்றது செல்வம் இத்தகையது என உய்த்துணர வைத்தபடி. இம்மையிடத்தே ஒழிவது, வெம்மை மிகத் தருவது, மெய்க்கதியைத் தடுப்பது, பொய்க்கதியை மடுப்பது, பொல்லாத நிலையது எனச் செல்வத்தின் எல்லா நிலைகளையும் எண்ணி நோக்கி இகழ்ந்து கைவிட்டவர் என்பதாம்.

"ஊனேறு செல்வத்து உடற்பிறவி யான்வேண்டேன்;
ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்"

எனக் குலசேகரப் பெருமாள் கூறியிருத்தல் ஈண்டுக் குறிக்கொள்ளத் தக்கது. பொய்நிலையிலீர்த்துப் புன்மைப் படுத்தும் புலைச் செல்வத்தை மெய்யுணர்வு தோன்றப் பெற்றவர் ஒய்யென ஒழித்து உய்தி பெறுவர் என்பது இதனால் உணரலாகும்.

"முல்லை முகைசொரிந்தால் போன்றினிய பாலடிசில் மகளிர் ஏந்த
நல்ல கருனையால் நாள்வாயும் பொற்கலத்து நயந்துண்டார்கள்
அல்லல் அடைய அடகிடுமின் ஓட்டகத்தென்று அயில்வார்க் கண்டும்
செல்வம் நமரங்காள்! நினையன்மின் செய்தவமே நினைமின்கண்டீர்!"

(சிந்தாமணி, 2623)

"ஈண்டல் அரிதாய்க் கெடுதல் எளிதாகி
நாண்டல சிறிதாய் நடுக்கம் பலதரூஉம்
மாண்பில் இயற்கை மருவில அரும்பொருளை
வேண்டாது ஒழிந்தார் விறலோ விழுமிதே."

(வளையாபதி)

செல்வம் நிலையற்றது என்று தெளிந்து அதனைக் கைவிட்டவர் நிலையான மேன்மையை யடைவார் என இவை உணர்த்தி நிற்றல் காண்க. பற்று அறின் பரமபதம் பற்றியருளும் என்பதாம்.

சுத்தவீரத்தாலும், தத்துவ ஞானத்தாலும், முற்றத்துறத் தலாலும் முத்தித் திருவை அடையலாம் என்பது கருத்து.

போரில் படுதலை முதலில் குறித்தது வீரப்பாட்டில் மன்னனுக்குள்ள ஆர்வ நிலையைப் புலப்படுத்தியுள்ளது. அரசர் வீர மரபினர் ஆதலால் வீரச் சாவை வியனிலை வாழ்வா அவர் விழைவுற நேர்ந்தனர்.

போரில் இறப்பு அரசர்க்கு நேரில் சிறப்பு என்றதனால் அங்ஙனம் இறவாவழி அவர்க்கு அது மிகவும் இளிவாம் என்பது பெற்றும். சண்டையில் சாதலைப் பண்டைய அரசர் இந்நாட்டில் பெருமதிப்பாகக் கொண்டாடி யிருக்கின்றனர்.

நல்ல குல மன்னர் இரணகளத்தில் இறக்கப் பெறுமல், மூப்படைந்து செத்தாலும், நோய்வாய்ப்பட்டு மாய்ந்தாலும் அங்ஙனம் வாளா இறந்தமைக்கு இரங்கி அவரது உடலை வாளால் பிளந்து வைத்தே தகனஞ் செய்வர். குழந்தைப் பருவத்தில் இறந்துபோயினும் குழவியே என்று நினையாமல் அதனையும் வாள்வாய்ப்படுத்திய பின்னரே எரிவாய்ப்படுத்துவர். அவ்வாறு வாளால் போழுங்கால், அந்த உடலை வீரவுடை தரிப்பித்துத் தருப்பைப்புல்லில் கிடத்தி ஆனை குதிரைகளுடன் படைவீரர் சிலரை அருகே சூழ நிறுத்தி அரச தளபதி நேரே நின்று "போரில் மாண்டவர் அடைந்த கதியை இந்த உடம்பில் இருந்த உயிரும் அடைக" என்று கடவுளை வேண்டிக் கைவாள் தீண்டிக் கீண்டிய பின்பே அடக்கம் செய்வர். இந்த வழக்கம் இந்த நாட்டு மன்னர் மரபில் முன்னம் இருந்தது. அடியில் வருவன காண்க.

"ஓடல் மரீஇய பீடின் மன்னர்
நோய்ப்பால விளிந்த யாக்கை தழீஇக்
காதல் மறந்தவர் தீதுமருங் கறுமார்
அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி
மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த
நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்கென
வாள்போழ்ந் தடக்கலும் உய்ந்தனர் மாதோ."

(புறம், 93)

இது, அதிகமானை நோக்கி ஔவையார் பாடியது.

உன்னோடு போரில் எதிர்ந்து இறந்துபடாமல் ஓடிய அரசர் நோயால் மாய்ந்த பின் அவரது உடம்பைத் தருப்பைப் புல்லில் கிடத்தி வாளால் கீறி அடக்கம் செய்தமையால் அவர் தீமை நீங்கி உய்ந்து போயினர் என இதில் உரைத்திருத்தல் அறிக. "நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்க" என்றது வாள் ஓச்சும் பொழுது சொல்லுகின்ற மந்திரம்.

"கொற்றம் கொண்டு குடிபுறம் காத்துச்
செற்றத் தெவ்வர் தேயம்தம தாக்கியும்
தருப்பையில் கிடத்தி வாளில் போழ்ந்து
செருப்புகல் மன்னர் செல்வுழிச் செலகென
மூத்து விளிதல்இக் குடிப்பிறந் தோர்க்கு
நாப்புடை பெயராது நாணுத்தக வுடைத்தே."
(மணிமேகலை, 23)

இது வாசந்தவை என்னும் மூதாட்டி சோழ மன்னன் மனைவியாகிய இராசமாதேவியை நோக்கிச் சொன்னது. போரில் சாவாமல் மூத்துச் சாதல் மன்னர்குடிக்கு மானக்கேடாம் என்பதும், அவ்வாறு மாண்பின்றி இறந்தோர் உடலை வாளால் போழ்ந்து வையம் சேர்ப்பர் என்பதும் இதன்கண்ணும் காண்க.

"குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்
ஆள்அன்று என்று வாளில் தப்பார் ;
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணும் அளவை
ஈன்மரோஇவ் வுலகத் தானே ?" (புறம், 74)

இது, சேரமான் கணைக்கால் இரும்பொறை என்னும் மன்னன் சொன்னது. அவன் ஒரு முறை சோழனோடு பொருது தணிந்து சிறைப்பட்டு இருந்தான். ஒருநாள் பெருந் தாகம் உண்டாயது ; தண்ணீர் கேட்டான் ; சிறைக் காவலாளர் சிறிது நேரம் தாழ்த்துக் கொண்டு வந்து கொடுத்தனர் ; கொடுத்த அந்நீர்க் கலத்தைக் கடுத்து அயல்வீசி அன்று முதல் யாதும் உண்ணுமல் பட்டினி கிடந்து உயிர்விட்டான்.

குழந்தை இறந்து பிறப்பினும், தசைப் பிண்டம் தோன்றினும் ஆள் அல்ல என்று தள்ளிவிடாமல் அவற்றையும் வாளால்

போழும் மன்னர் மரபில் பிறந்த யான் இன்னவாறு ஈனமா யிருந்து உயிர் வாழ்வேனோ? என அம்மான வீரன் கூறியிருக்கும் மாட்சியை இதில் ஊன்றி நோக்குக.

மானத்திலும் வீரத்திலும் தமிழ் வேந்தர்கள் முன்னம் என்ன நிலையில் இங்கே இருந்திருக்கின்றனர் என்பதை இவற்றால் சிறிது அறிந்துகொள்ளலாம். ஞானத்தால் அன்றி மானத்தால் போரில் வீடினார்க்கும் வீடு உண்டு என்றது என்னை? எனின், அது ஆண்டகைமை வாய்ந்த அரிய செயல் ஆதலால் அதற்கு ஓர் இனிய பயனை ஆண்டவன் உரிமை செய்துள்ளான் என்க. அந்தப் பயன் இல்லையாயின் வீரப்பண்பு மக்களிடம் மாண்புடன் விளைந்து வருதல் அரிதாம். செத்தாலும் மோட்சம் கிடைக்கும் என்று எண்ணும்பொழுது ஒருவனுக்கு எவ்வளவு உற்சாகம் உண்டாகும்?

"நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றார் என்னும பெயர் பெற்று
ஆற்றார் ஆயினும் ஆண்டுவாழ் வோரே." (புறம் 26)

இது, நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னனை நோக்கி மாங்குடிகிழார் பாடியது. அரசர் பெரும! "நின்னோடு எதிர்த்த பகைவர் ஈண்டு அமரில் ஆற்றாது மாண்டுபடினும் ஆண்டுத்துறக்க இன்பத்தைப் பெற்றுச் சிறப்புற்று வாழ்வார் ஆதலால் அவர் தவம் செய்தவரே யாவர்" என இதில் உரைத்திருத்தலறிக. நோற்றல்=தவம் புரிதல்.

"நோற்றோர் மன்ற தாமே கூற்றம
கோளுற விளியார் பிறர்கொள விளிந்தோர்" (அகம் 61)

இது, மாமூலனார் பாடியது. மூப்புப் பிணிகளால் இறவாமல் போர்க்களத்தில் எதிரிகளால் இறந்தவர் துறக்கம் பெறுதலின் அவர் தவத்தாராயினர் என இதுவும் குறித்துள்ளமை காண்க. கூற்றம் கொள விளியார்; பிறர்கொள விளிந்தார்; ஆகலின் நோற்றோர் என்றதனால் பயனுடைய சாவின் நயனறியலாகும். இறப்பினும் பயனுற இறக்க என்பது கருத்து.

புறந்தவற்கு இறந்தவன் போன்றிருந்தவன்.

" தற்புறந் தந்துவைத்த தலைமகற் குதவி வீந்தால்
கற்பக மாலை சூடிக் கடியர மகளிர்த் தோய்வர்
பொற்றசொன் மாலை சூட்டிப் புலவர்கள் புகழக் கன்மேல்
நிற்பர்தம வீரம் தோன்ற நெடுமபுகழ் பரப்பி என்றான்."

(சீவகசிந்தாமணி, 2302.)

போரில் மாண்டவர் வீரசுவர்க்கம் பெற்று விண்ணும் மண்ணும் புகழ விளங்கி நிற்பர் என இது விளக்கி நிற்றல் காண்க. கற்பக மாலை சூடி அங்கே அரம்பையரோடு கூடி இன்பம் நுகர்வர்; இங்கே கல்மேல் எழுத்தராய்ப் புலவரின் புகழ்மாலைசூடி நலமுறத் திகழ்வர் என்பதாம்.

" சண்டவெங் கடுங்கணை தடியத் தாம்சில
திண்டிறல் வளையிற் றரக்கர் தேவராய்
வண்டுழல் புரிகுழல் மடந்தை மாரொடும்
கண்டனர் தம்முடைக் கவந்த நாடகம். (1)

ஆய்வளை மகளிரோடு அமரர் ஈட்டத்தார்
தூயவெங் கடுங்கணை துணிந்த தங்கள் தோள்
பேயொரு தலைகொளப் பிணங்கி வாய்களின்
நாயொரு தலைகொள நகையுற் றார்சிலர். (2)

தெரிகணை மூழ்கலின் திறந்த மார்பினர்
இருவினை கடந்துபோய் உம்பர் எய்தினர்;
நிருதர்தம பெரும்படை நெடிது, நின்றவன்
ஒருவனென் றுள்ளத்தில் உலைவுற் றாரரோ." (3)

(இராமா, ஆரணிய, கரன் வதை)

அமர்க்களத்தில் மாண்ட அரக்கர் நிலைகளை இவை குறித்து வந்துள்ளன. சண்டையில் இறந்துபட்ட அரக்கர்கள் உடனே தேவர்களாய் அங்கே அரம்பையர்களோடு கூடி நின்று கீழே தங்கள் முண்டங்கள் துள்ளுவதைக் கண்டு மகிழ்ந்தனர். துண்டமான தங்கள் தோள்களையும் தலைகளையும் பேயும் நாயும் பேணி யிழுப்பதைப் பார்த்துச் சிலர் நாணி நகைத்தனர்; இருவினையும் கடந்துபோய் வீரசுவர்க்கம் அடைந்துள்ள இராக்கதர் இராமனது தனிமையை நினைந்து தம்முள் இரங்கினர் என முன் வந்துள்ள மூன்று கவிகளும் முறையே உணர்த்தி நிற்கின்றன.

கொடிய பாவம் உடையதாயினும் அமரில் இறப்பின் அவ்வுயிர் அமரருருவெய்தி இனிய குணநலங்களுடன் உயர்வுற்றிருக்கும் என்றதனால் செருமுகச் சாவின் சீர்மை புலனாம்.

" அஞ்சிறை அறுபதம அடைந்த கீடத்தைத்
தஞ்செனத் தன்மயம் ஆக்குந தன்மைபோல்
வஞ்சகத் தரக்கரை வளைத்து வள்ளலதான்
செஞ்சரத் தூய்மையால தேவா ஆக்கினான்."

(கரன் வதைப் படலம், 125).

நெஞ்சிரங்காத வஞ்சகராயிருந்தும் போரில் எதிர்ந்து இராம பாணத்தால் இறந்துபட்டமையால் அரக்கர்கள் தேவராயினர் என இதுவும் குறித்திருத்தலறிக. பிள்ளைப் பூச்சியின் செய்தி ஒன்றை இதனுள் பெய்து வைத்திருக்கிறார். வைப்பின் நிலையை உய்த்துணர்ந்து கொள்க.

இதுகாறும் கூறியவாற்றால்,

" பொருகளம் இறந்த பொலன்கழல் மறவர்
ஒருவளம் சிறந்த உயர்பதம் பெறுவர்."

என்பது உணரவந்தது இத்தகைய சிறப்பினையுடைய ப்பினை வீர மரபினர் விழைந்துகொள்ளுவர் ஆதலால் மகா ன நம் மன்னன், துறவு ஞானங்களினும் முதன்மையாக

வீரியம் வாய்ந்த இச்சீரிய இறப்புத் தசரதனுக்குக் கிடையாதுபோயது. என்னை? போர் வேட்டு இவன் சென்ற இடங்களிலெல்லாம் வெற்றியே பெற்றுவந்தான்; அதுவுமன்றி உள்நாட்டிலும் மறு புலங்களிலும் இவனுக்கு மாறாக வேறு பகைவா எவருமற்றெழவில்லை எனக.

* " எய்என எழுபகை எங்கும் இன்மையால் " (அரசியல், 12) என்று முன்பு குறித்ததும் இங்குக் குறிக்கொள்ளத் தக்கது.

இங்ஙனம் நேரலர் நேர்தல் இல்லாமையால் போரிடைப் படுதலாகிய வீரப்பாடு தனக்கு நேராது போயது; உலக பாரம் தாங்கி வந்தமையால் பரமஞானத் தெளிவும் பதியாது நின்றது;

* எய் என்றது பகைவர் கூறிவரும் வீரவாதமான ஆரவாரம்.

இனி, முடிவில் முடிவாகவுள்ளது பற்றுக்களை விட்டுத் துறந்து போதலேயாம்; ஆகவே அதனை யடைந்து நான் உய்யவேண்டும் என்று அரசன் உறுதிசெய்துள்ளமையால் துறவை இறுதியில் வைத்து இவ்வாறு குறிப்பாக உரைத்தான் என்க.

இப்பொழுது தனக்கு உறுதித் துணையா யிருப்பது துறவே என்பதை அமைச்சரனைவரும் தெளிவாகத் தெரிய அதன் பெருமையை உரிமையுடன் அரசன் மேலும் தொடர்ந்து பேசுகின்றான்.

4. பிறவியாகிய பெரிய கடலை கடத்தற்குத் துறவே இனிய தோணியாம் என அரசர் பிரான் துணிவுரை கூறியிருக்கின்றான்.

கடலைக் கடந்து கரை சேருவதற்குக் கப்பல் எப்படித் துணையாயிருக்கின்றதோ அப்படியே பிறவிக் கடலை நீந்திப் பேரின்பம் அடைவதற்கு துறவு துணையாயுள்ளது என்பதாம். உவமைக் குறிப்பால் துறவினது நிலைமையும், பிறவி நீக்கத்திற்கு இன்றியமையாத உறுதிச சாதனமாய் உயர் வுற்றிருக்கும் அதன் தலைமையும் நன்கு உணரலாகும்.

பிறவியைப் பெருங்கடல் என்றது எவரும் எளிதில் கடத்தற்கு அரியதாய்க் கதித்து நிற்கும் அதன் கடுமை கருதி.

"பிறவிப் பெருங்கடல்" (குறள், 10) என வள்ளுவப் பெருமான் சொல்லியுள்ளதும் ஈண்டு உள்ளத்தக்கது.

. ந்து தொடர்ந்து, யாண்டும் எல்லை காண முடியாதபடி விரிந்து பரந்து, அல்லல் அச்சம் அழுங்கல் முதலிய அலமரல்கள் நிறைந்து, ஒரு நிலையுமின்றி என்றும் அலைமோதி நிற்கும் நிலைமை நோக்கிப் பிறவியைக் கடல் எனக் கவிகள் உருவகஞ் செய்யலாயினர்.

"பிறவி என்னும் பெருங்கடல் விடூஉம்
அறவி நாவாய் ஆங்குளது" (மணிமேகலை, 11-24)

என்பதும் ஈங்கு அறியத் தக்கது.

"தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னும் காலால்
கலக்குண்டு, காமவான் சுறவின் வாய்ப்பட்டு

இன்னானவே உய்யுமா றென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முன்னைவினை முதலந்தம் இல்லா மல்லற்
கரைகாட்டி ஆட்கொண்டாய் மூர்க்கனேற்கே."
(திருவாசகம்)

பிறவிக் கடல் நிலை.

"இப்பிறவி என்னுமோர் இருட்கடலில் மூழ்கி, நான்
என்னும் ஒரு மகர வாயப்பட்டு,
இருவினை என்னும் திரையின் எற்றுண்டு, புற்புதம்
எனக்கொங்கை வரிசை காட்டும்
துப்பிதழ் மடந்தையர் மயற்சண்ட மாருதச்
சுழல்வந்து வந்தடிப்பச்
சோராத ஆசையாம் காற்றுவா னதி
சுரந்தெள மேலும் ஆர்ப்பக்,
கைப்பரிசு காரர்போல அறிவான வங்கமும்
கைவிட்டு, மதிமயங்கிக்
கள்ளவங்கக் காலர் வருவரென் றஞ்சியே
கண்ணருவி காட்டும் எளியேன்
செப்பரிய முத்தியாம் கரைசேரவுங் கருணை
செய்வையோ சத்தாகி என்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோமயானந்தமே." (தாயுமானவர்.)

மாணிக்கவாசகரும், தாயுமானவரும் பிறவியைப் பெருங் கடலாக உருவகம் செய்து வாழ்க்கையின் அவல நிலைகளை விளக்கி யிருக்கும் நுட்பங்களை இவற்றுள் முறையே நுனித்து நோக்குக. முன்னதிலுள்ள சொல்லும் பொருளும் பின்னதில் பின்னி யுள்ளன. துவர்வாயார் என்னும் கால் என்றது முன்னது; பின்னது துப்பிதழ் மடந்தையர் மயற்சண்டமாருதம் என்றது. இன்னவாறே பிறவும் எண்ணி அறிக.

துன்பமாகிய பிறவிக்கடலைக் கடந்து இன்பமான முத்திக் கரையைச் சேர்தற்கு முன்னோர் என்னவாறு முயன்று என்ன சாதனங்களைக்கொண்டு எவ்வண்ணம் அவாவி வந்திருக்கின்றனர் என்பது இவற்றால் அறிந்துகொள்ளலாம்.

"பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனும் தோல்தோணி கண்டீர்—நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ்." (நம்பியாண்டார் நம்பி)

பிறப்பெனும் பெருங்கடல் கடக்கத் துறப்பெனும் தெப்பமே துணை என முன்பு வந்துள்ள கம்பர் தூக்கையும் இந் நம்பி வாக்கையும் ஒப்புநோக்கி உறவுரிமை தெரிக. தெப்பம்=மிதவை, தோணி. பொல்லாக் கடல் என்றது அதன் எல்லாத் துயர்களும் கருதி.

காயக் கலம்கவிழ் மாயக்கடல்.

“ அறிவில் ஒழுக்கமும் பிறிதுபடு பொய்யும
கடும்பிணித் தொகையும இடும்பை யிடடறும
இனையன பலசரக்கு ஏற்றி, வினை எனும
தொல் மீகாமன் உய்ப்ப, அகநிலைக்
கருவெனும் நெடுநகர் ஒருதுறை நீத்தத்துப்
புலன்எனும் கோண்மீன் அலமந்து தொடரப்
பிறப்பெனும் பெருங்கடல் உறப்புகுந் தலைக்கும
துயர்த்திரை யுவட்டிற பெயர்பபிடம் அயர்த்துக்
குடும்பம் எனனும நெடுஙகல விழ்த்து
நிறையெனும் கூமபு முரிநது குறையா
உணர்வெனும நெடுமபாய் கிறிப் புணரும
மாயப பெயர்ப்படு காயச் சிறைக்கலம
கலங்குபு கவிழா முன்னம, அலங்கல
மதியுடன் அணிந்த பொதியவிழ் சடிலத்துப
பையர வணிநத தெய்வ நாயக
தொலலெயில உடுத்த தில்லை காவல
வமபலர் தும்பை அம்பல வாணநின்
அருள்எனும் நலத்தார் பூட்டித்
திருவடி நெடுங்கரை சேர்த்துமா செய்யே. ”
(கோயினான்மணிமாலை, 16)

இது பட்டினத்துப் பிள்ளையார் பாடினது. மனித வாழ்க்கையை உருவகித்து வந்திருக்கும் இப்பாடலின் பொருள் வளங்களை ஊன்றி நோக்கி உள்ள நலங்களை உணர்ந்துகொள்ள வேண்டும். மீகாமன்=கப்பல் ஓட்டும் சாரதி. வினையை மீகாமன் என்றதனால் தேகயாத்திரையில் அதன் தலைமைநிலை புலனும். விதிவழியே மதிசென்று வினைப்போகங்களை உயிர்கள் நுகர்ந்து வருமுறையை அது நினைப்பூட்டி நிற்கின்றது. தனித்தனியே கருத்துக்களையும் நயங்களையும் திருத்த முற நுனித்தறியின் இனித்த உணர்வுறுதிகள் பல இதில் எளிது தெளிவாம்.

உடலாகிய ஓட்டைக் கப்பல் இடையே கவிழ்ந்து உயிர் ஒழிந்துபடுமுன் நின் கருணைவடம்பூட்டிக் கடிதின் ஈர்த்து என்னை முத்திக்கரை சேர்த்தருள் என்று பரமபதியை நோக்கி அடிகள் உருகியுரைத்திருக்கும் இது உணருந்தோறும் உள்ளம் உருக்கி உணர்ச்சியை உயர்நிலையில் எழுப்புகின்றது.

பிறப்பெனும் பெருங்கடல் என்ற நம் கவியின் தொடர் மொழி இதன்கண் முழுதும் தொடர்ந்து வந்திருத்தலால் தொடர்புநிலை அறிக.

பிழைக்கலாகுமோ? என்றது தப்பிநீங்க முடியுமோ என்றவாறு. முடியாது என்னும் துணிவு தோன்ற வினா முடிவில்வந்தது.

துறப்பினாலேதான் பிறப்பினை நீக்கமுடியும் என்பது கருத்து.

துறப்பு என்பது உலகப்பொருள்களிலுள்ள பற்றுக்களை முற்ற ஒழித்துவிடுதல். அவ் ஒழிவில் அழிவில் இன்பம் விளையும் என்க. என்னே விளைவு? எனின், பின்னே நோக்குக.

புலனுகர்ச்சிக்குரிய போகப்பொருள்களில் பற்று நீங்கின் தேகப்பற்று ஒழியும்; அது ஒழியவே, யான் எனது என்னும் செருக்கு அறும்; அது அறவே, தன் முனைப்பாகிய சீவபோதம் தொலையும்; அதுதொலையவே, நிலையானசிவபோதம் தலையெடுத்து நிற்கும்; அந்நிலையில் உயிர் சிவமயமாய்த் திகழ்ந்து உயர் பரமாய் ஒளிரும் ஆதலால் என்றும் குன்றாத இன்ப நலமுடையதாம்; ஆகவே அது மீண்டுவாரா நிலையினில் நிலைத்து யாண்டும் அந்தமி லின்பமாய் ஆண்டே அமர்ந்திருக்கும் என்க.

துறவு ஒன்றே பிறவா நிலையைப் பெறச் செய்யும் என்பது நன்கு தெளிவாம்.

> "நாடுநகர் வீடுடையாள் தாய்தந்தை நட்புமக்கள்
> மாடுகுலம் பொன்னுடம்பின் வாதனைகள்—கூடத்
> தொடுத்தவலைக் கண்ணித் தொடக்கிதனை இப்போ
> விடப்பெறுவார் ஏன்பிறப்பார் மேல்." (ஒழிவிலொடுக்கம்)

என்னும் இந்நூல் உறுதியை ஈண்டு ஊன்றி நோக்கவேண்டும்.

பிறவி உள்ளப் பற்றினால் உறுவது ஆதலால் அதனை ஒழித்த பொழுதே அப்பிறவி அடியோடு அறவே ஒழிந்துபோம் என்க.

"அற்றது பற்றெனில் உற்றது வீடு." (திருவாய்மொழி)

எனத் தாம் பெற்றுள்ள அநுபவத்தைப் பிறரும் அறிந்துய்யும் படி இரத்தினச் சுருக்கமாக நம்மாழ்வார் இங்ஙனம் அருளிச் செய்திருக்கிறார்.

வீடு உறவேண்டின் பற்று அறவேண்டும் என்ற இதனால் துறப்பின் சிறப்பும், அதன் செல்வப் பயனும் தெளிய நின்றன.

துறப்பு ஒன்றினாலேதான் துன்பமயமான பிறப்பு அறவே தொலையும் என்பதாம். ஆகவே துறந்தவர் அடையும் இன்பப் பேறும், துறவாதவர் படும் துன்பத் தொடர்பும் ஒருங்கே உணர லாகும்.

"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்;
பிறவார் உறுவது பெரும்பேரின்பம்;
பற்றின் வருவது முன்னது; பின்னது
அற்றோர் உறுவது." (மணிமேகலை, 2)

எனவரும் இதனால் பற்று அற்றவரே பிறப்பு அற்றவராய்ப் பேரின்பம் பெறுவர் என்பது பெற்றும். பற்றற்றான் என்பது கடவுளுக்கே ஒரு பெயர் ஆகலான் பற்று அறுவதின் அருமை யும், அற்றவரது பெருமையும் நன்கு அறியலாகும்.

பிறவிக்கு மூலகாரணமாகிய பற்று முற்றும் அறுவழிப் பிறவி எவ்வகையானும் என்றும் அறுமென்க.

"உற்ற உதிரம் ஒழிப்பான் கலிங்கத்தை
மற்றது தோய்த்துக் கழுவுதல என்னொக்கும்?
பற்றினன் ஆகிய பாவத்தை மீட்டும
பற்றொடு நின்று பறைக்குறு மாறே." (வளையாபதி)

பற்றால் நேர்ந்த பிறவியைப் பற்றுடன் இருந்துகொண்டே ஒருவன் நீக்க எண்ணுதல், இரத்தக்கறைபட்ட ஆடையைமேலும் இரத்தம் தோய்த்து வெள்ளையாக்க விரும்புதல் போல்வதோர் விபரீதமேயாகும் என நயமாக இது விளக்கி நிற்றல் காண்க. கலிங்கம்=ஆடை. பறைக்குதல்=நீக்குதல். இதில் ருக்கும் உவமை நிலையை ஊன்றி நோக்கி உறுதி நயம் தெரிக.

துறவினலன்றிப் பிறவி நீங்காதென்றதனல் அதன் உறுதி நலனும் பலனும் இனிது புலனும்.

" உறவு தந்தைதாய் ஒண்டொடி மாதரார்
சிறுவர் வண்புவி செல்வம் பெரும்புகழ்
பிறவினும் படும் ஆசை பிரிந்த மெய்த்
துறவினல்லது துன்பம் அகலுமோ? "
(திருக்கூவப்புராணம்)

" மனைக்குரி மனையாள் தன்னை வாய்த்தநன் மைந்தர் தம்மைக்
கனைத்தலை சுருட்டும் வேலைக் கடலநிகர் செலவம் தன்னை
எனைத்தையும் இலம்பாடென்றே இம்மெனத் துறநது பெம்மான்
தனைச்சரண் அடைநதுளாரே தனைநிகர் இல்லாச் செல்வர். "
(தணிகைப்புராணம்)

" மண்ணினும் தனத்தினும் மனைக்கு வாய்த்தநற்
பெண்ணினும் மகவினும் பெரிய பேரினும்
துண்ணென விழைவினைத் துறந்த தூயரே
விண்ணினும் இன்புடன் விளங்கி மேவுவார். "
(சிவதருமோத்தரம்)

" செம்மை யாகிய சிந்தையர் சீரியோர்
வெம்மை என்பதை விட்டி விளங்கினோர்
தம்மை யுந்துறந் தேதலை நின்றவர்
இம்மை தன்னினும் இன்பத்தை மேவுவார். "(கந்தபுராணம்)

" இறப்பறு நோயால் துன்பம், செடிகொள்மூப் பதனல் துன்பம்,
மறப்புறத் துயக்கம் செய்யும மரணமே தனையால் துன்பம
பிறப்பவர் எக்காலத்தும் பெறுவது துன்பமாலை
துறபபதே கருமம் துன்பப் பிறவியாம் துயரம் நீங்க. "
(குறுந்திரட்டு)

பிறப்பினை நீக்கத் துறப்பே துணை என இப்பாசுரங்கள் ஒருமுகமா யுணர்த்தி நிற்றல் காண்க. துறப்பெனும் புணை துணை செய்யாவிடில் பிறப்பெனும் கடல் கடக்கலாகுமோ? என மன்னன் முன்னம் சொன்ன உறுதிமொழியை அடிபொற்றி யுள்ளமையால் இவை ஈண்டு உடன் எண்ண வந்தன.

துறப்பினுக்கு முன்னதாக இறப்பு நிலையை அறிவுறுத்தியிருக்கிறார். இறப்பினை மறந்திருப்பது இன்னதென்பதாம்.

"இறப்புஎனும் மெய்ம்மையை இம்மை யாவர்க்கும்
மறப்பேனும் அதனின்மேல் கேடு மற்றுண்டோ?"

என்ற இந்த உறுதிமொழி மிகவும் உய்த்துணரத்தக்கது.

பொருள் அழிவு, உயிர் அழிவுகளையே கேடு என்பர். அவற்றினும் பெருங்கேடு இன்னதுதான் என்பது இதில் நன்னயமாக உணர்த்தப்பட்டுள்ளது.

நாம் இறந்து போய்விடுவோமே என்பதை மறந்திருப்பதைக் காட்டிலும் கொடுமையான கேடு மனிதருக்கு வேறு ஒன்றுமே யில்லை என்னும் இது பெரிதும் வியப்பாகத் தோன்றும். இதில் என்ன கேடு உள்ளது? கவி எவ்வளவு உருக்கத்துடன் இந்த உண்மையை மன்னன் மூலமாக உலகிற்கு உறுதிபெற உணர்த்தி யிருக்கின்றார் என்பது அந்த வாக்கியத்தின் வேகத்தை நுனித்து நோக்கின் அறியலாகும்.

மனித வாழ்க்கை நிலையற்றது; அந்த நிலையாமையின் நிலைமையை உள்ளபடி அறிந்த பொழுதுதான் உலகப்பொருள்களில் உள்ள பற்று நெகிழ்ந்து உயிர்க்கு உறுதி நாடத் தோன்றும்; அங்ஙனம் அறியாவழிச் செருக்கும் திமிரும் மேற்கொண்டு தீவினைகளில் மண்டி என்றும் உய்வின்றித் துன்பத் தொடர்பில் மன்பதை இழிந்துபடநேரும் என்க.

ஊழியும் ஓயாத பாழுந் துயர்களில் படிந்துழலுதற்கு இறப்பின் மறப்பு ஓர் ஏதுவாயிருத்தலால் அது கொடிய கேடு ஆக இங்கே குறிக்க வந்தது. ஒரு மறப்பு பல பிறப்புக்களுக்கு நிலையாய தென்பதாம்.

மாடு மனை முதலிய பொருள் நட்டங்கள் எவ்வளவு நேரினும் அவற்றை ஈடு செய்துகொள்ளலாம்; இம்மறவி பிறவியை விளைத்துப் பெரும்பிழையாய்ப் பெருகி மேலே விளையும் கேடுகளுக்கெல்லாம் மூல முளையாய் மூண்டு யாண்டும் நேரின்றி நீண்டு நிற்றலால் இது பேரிழவாயதென்க.

அதனின்மேல் கேடு மற்று உண்டோ? என்று கேட்டதனால் இந்தக் கேட்டுக்கு நிகரான கேட்டை யாரும் எதிரெடுத்துக் காட்டமுடியாதென்பது புலனும்.

துறப்பின் பெருமை சொல்ல வந்தவர் முதலில் இறப்பினை நினைவுறுத்தியது என்னை? எனின், நிலையாமையை அறிந்ததின் பயனாய்த் துறவு நிலைத்து வருதலால் அம்முறைமை தலையாய் வந்ததென்க. திருக்குறளில் துறவு என்னும் அதிகாரத்திற்கு முதலில் நிலையாமை அதிகாரம் நிலைபெற்றுள்ளமை ஈண்டு நினைவுறத்தக்கது.

இந்த நிலையாமையுணர்வை நித்தியாநித்திய வத்து விவேகம் என்பர் வடமொழியாளர். விரத்தி, வைராக்கியம் முதலிய மோட்ச சாதனங்களுள் இது முதல் படியாகும்.

நிலையில்லாத பொருள்களை நிலையுடையன என்று எண்ணின் அது நிலையான முத்தியை இழப்பிக்கும் ஆதலால், மெய்யுணர்வுடையார் அந்த இழவினைத் தெளிந்து ஒய்யெனத் துறந்து உய்திபெறுவர் என்க.

"இல்லம் இளமை எழில்வனப்பு மீக்கூற்றம்
செல்வம் வலியென் றிவையெல்லாம்—மெல்ல
நிலையாமை கண்டு நெடியாது துறப்பர்
தலையாயார் தாமுய்யக் கொண்டு." (நாலடியார், 53).

யாமைக் காட்சிக்கும் துறவுக்கும் உள்ள உறவுரிமை இதனால் இனிது புலனும். கண்டு துறப்பர் என்றதனால் காணுதார் கருத்தழிந்து கிடப்பர் என்பதாயிற்று. பந்தச் சுழலில் பட்டு என்றும் படுதுயரடையாமல் துறவால் பிறவா நிலைமையடைந்து பேரின்பம் பெறுவர் ஆதலால் தாம் உய்ய என்றார்.

இறப்பினை மறந்தவர் இறுமாந்து கெடுவர்; அதனை மறவாதவர் துறவால் பிறவாதவராய் உயர்ந்து போவர் என்பதாம்.

பொய்யிருப்பைத் தெரிந்தபோதுதான் மெய்யிருப்பை மேவமுடியும் ஆகலான் உயிர்களின் கையிருப்பை இங்ஙனம் காட்டியருளினர்.

"இருப்பதுபொய் போவதுமெய் என்றெண்ணி நெஞ்சே
ஒருத்தருக்கும் தீங்கினையுன் னாதே—பருத்ததொந்தி
நம்மதென்று நாமிருக்க நாய்நரிகள் பேய்கழுகு
தம்மதென்று தாமிருக்கும் தாம்." (பட்டினத்தார்)

இறப்பது மெய் என்று நினைத்தவுடன் உயிர்க்கு உண்டாகும் உணர்ச்சி நலங்களையும் உள்ளப் பண்புகளையும் உறுதியுயர்வுகளையும் இது உணர்த்தியுள்ளமை காண்க.

"தேடப் படும்பொருளைச் சிக்கனவாக் கப்புதைத்துக்
கோடிக்கு ஒருநிமிடம் கொள்ளுகிறும்—கூடாத
வாறனை வினைகழிக்கும் மானிடரைப் போலமயக்கம்
பூணார்பொய் கண்டு துறப்போர்." (ஒழிவிலொடுக்கம்)

பெருந்திருவுடைய ஒருவன் திருந்திய வாழ்வில் சிறந்திருந்தான். உற்றபொருள்களை யெல்லாம் உண்மையென்று நம்பி, மேல் உறுவது ஒன்றும் உணராமல், உலகபோகங்களில் அழுந்தி உயிர்க்குறுதி நாடாமல் உடலையே ஓம்பி அவன் உழந்து வந்தான்; முடிவு வந்தது; காலன் கடுகி வந்தான்; வரவை மறுகிப் பதைத்து இதுவரை யாதொரு நலமும் செய்யாதிருந்தமைக்கு இரங்கி ஐயோ என்று அலறினான்; பலவாறு பரிதபித்து ஏதேனும் மறுமைக்கு இதமாக அறம் செய்ய விரும்பினான்; மறலியை வணங்கினான். "தருமமூர்த்தியே! இந்த உடலில் ஒரு நிமிட நேரம் வரையும் என் உயிர் இருக்கும்படி கருணைபுரியவேண்டும்; உரியதொன்று செய்ய எனது மனைவியிடம் உரை செய்து வருகின்றேன்" என்று உள்ளம் பதறி அவன் கதறியழுதான. காலன் சிரித்தான்: "எழுபதாண்டு அளவும் இங்கே இருந்துவந்த நீ யாதும் புரியாமல் இறப்பினை மறந்து இழுதையாய் நின்றாய்! பழுதே பல பகல் கழித்துப் பாழான உனக்கு இனி மீள வழியில்லை" என்று உயிரை விரைந்து கவர்ந்து அவன் பறந்து போனான். அந்த அற்புதப் பழங்கதையை உய்த்துணர்ந்து கொள்ளும்படி கற்பனை புரிந்து இந்த வெண்பா நுட்பமாக இங்ஙனம் உணர்த்தியுள்ளது.

இறப்பின் நினைவு துறப்பிற்கு ஏதுவாதலால், "பொய்கண்டு துறப்போர்" என்றார். மரணத்தின் நிலைகளை அறிவுறுத்தியுள்ளன சில அடியில் வருவன.

"நடலை வாழ்வுகொண்டு என்செய்திர் நாணிலீர்;
சுடலை சேர்வது சொற்பிற மாணமே
கடலின் நஞ்சமு துண்டவர் கைவிட்டால்
உடலினார் கிடந் தூர்முனி பண்டமே." (தேவாரம்)

"ஊரெலாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே." (திருமந்திரம்)

" பொல்லாத புலையுடலைப் புழுப்பொதிந்த போர்வைதனை
நில்லாத நீரெழுத்தை நிகரிலிதன் திருவாக்கைக்
கல்லாதார் பொருளெனவே காண்பதனைக் கலந்தறிந்து
நல்லார்கள் பொருளாக ஒருகணமும் நாடாரே."
(சிவதருமோத்தரம்)

" இளமையும எழிலும் வானத் திருவிலின் தன்மைத்தாயும்,
வளமையும கிளையும வாரி புதியதன் வரவு போலும்,
வெளியிடை விளக்கின் வீயும் ஆயுவும் என்று விட்டுக்கு
உளபகல ஊக்கம் செய்வர் உணர்வினில பெரிய நீரார்."
(மேருமந்தர புராணம்)

" எரிபுரை எழிலதாய இளந்தளிர் இரண்டு நாளில
மரகத உருவம் எய்தி மற்றது பசலை கொண்டு
கருகிலை யாகி வீழ்ந்து கரிந்துமண் ணாதல கண்டும்
வெருவிலர் வாழ்தும் என்பார் வெளிற்றினை விலக்கலாமோ?"
(சூளாமணி)

" பிறந்துநாம பெறற வாணாள் இத்துணை என்பதொன்றும்
அறிந்திலம; வாழ்தும் எனறும் அவாவினுள் அழுந்துகின்றாம்;
கறந்துகூற றுணணும ஞான்று கண்புதைத் திரங்கினலலால
இறந்தநாள் யாவாமீட்பார் இற்றெனப் பெயர்க்கலாமோ ? "
(சீவகசிந்தாமணி)

" கடுங்கால் நெடுவெளி இடுஞ்சுடர் என்ன
ஒருங்குடன் நில்லா உடம்பிடை உயிர்கள் " (சிலப்பதிகாரம்)

" பாலையாம் தன்மை செத்தும பாலனும் தன்மை செத்தும
காலையாம் பருவம் செத்தும் காமுறும இளமை செத்தும்
மீளுமிவ் வயதுமின்னே மேல்வரு மூப்பு மாகி
நாளும்நாள் சாகின்றாமால் நமக்குநாம் அழாத தென்னே."
(குண்டலகேசி)

" வேற்கண் மடவார் விழைவொழிய யாம்விழையக்
கோற்கண் நெறிகாட்டக கொலகூற் றுழையதா
நாறப திகந்தாம நரைத்தூது வந்ததினி
நீத்தல் துணிவாம் நிலையா திளமையே." (வளையாபதி)

" புழுமலக் குடருள் மூழ்கிப் புலால்கமழ் வாயில் தேய்த்து
விழுமவை குழவி என்றும விளங்கிய காளை என்றும்
பழகிய பிறவு மாகிப் பலபெயர் தரித்த பொலலாக்
குழுவினை இனபமாகக் கொள்வரோ குருடுதீர்ந்தார்."
(நாரதசரிதை)

"நெருநல் என்பது சென்றது, நின்ற
இன்றும் செல்லா நின்றது, முன்சென்று
வருநாள் கண்டார் யாரே? அதனால்
ஒருநாள் கைப்படுத் துடையோர் இன்மையின
நல்லது நாடுமின் உள்ளது கொடுமின்
வழாஅ இன்பமும் புணர்மின் அதாஅன்று
கீழது நீரகம் புகினும், மேலது
விசும்பின பிடர்த்தலை ஏறினும, புடையது
நேமிமால் வரைக்கு அப்புறம் புகினும்,
கோள்வாயததுக் கொட்கும் கூற்றத்து
மீளிக் கொடுநா விலக்குதற்கு அரிதே." (ஆசிரியமாலை)

"மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய்
அணியிழையார் வாழ்த்தொலிபோய் அழுகையொலியாய்க்கழியக்
கணமதனில் பிறந்திறுமிக் காயத்தின வருமபயனை
உணர்வுடையார் பெறுவருணர் வொன்றுமிலார்க்கொன்றுமிலை."
(திருவிளையாடற்புராணம்)

"தேடிய செல்வமாயும், சிறந்திடுங் கலவிமாயும,
நாடிய விரமாயும, நலந்திகழ் குணமும்மாயும,
கூடிய சுற்றம் மாயும், கொண்டாடு மனைதனும மாயும்
நீடிய ஞாலமெல்லாம் நிலையாமை மயமேயன்றே."
(குறுந்திரட்டு)

"சாவாத இல்லை பிறந்த உயிரெல்லாம்." (நான்மணிக்கடிகை)

"உழுநரிக் கணங்களுக்கு உதவும் ஒண்பொருள்
கழுகினுக் குணவுகட்டிய களஞ்சியம்
தழலினுக்கு இந்தன மான சட்டகம்
எழிலுறப் புனையினும் இருப்பதலலவே."
(செவ்வந்திப்புராணம்)

"பண்டை வாசனை தொக்க பயிற்சியால்
கொண்ட காயம் நிலையெனக் கொள்வரோ
அண்ட ரேனும் பிறப்புள தாமெனின்
விண்டு காயம் இறப்பது மெய்யரோ."
(பிரமோத்தரகாண்டம்)

" தவத்துறை மாக்கள் மிகப்பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டிர் ஆற்றுப பாலகர்
முதியோர் என்னுன் இளையோர் என்னுன்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்பஇவ்
அழல்வாய்ச் சுடலை தின்னக கண்டும
கழிபெருஞ் செல்வக் கள்ளாட் டயர்ந்து
மிக்க நலலறம் விரும்பாது வாழும
மக்களிற சிறந்த மடவோர் உண்டோ ? " (மணிமேகலை, 6)

" மாய்தல் உண்மையும் பிறத்தல உண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திருதரும் உலகத்து" (புறநானூறு)

" மணமாய் நடக்கும் வடிவின் முடிவில
பிணமாய்க் கிடக்கும் பிண்டம், பிணமேல
ஊரில் கிடக்க ஒட்டா உபாதி " (பட்டினத்தார்)

" நீர்க்குமிழி பூணமைத்து நின்றாலும் நில்லாமெய்
பார்க்குமிடத் திதன்மேல பற்றறுவ தெந்நாளோ ? "
(தாயுமானவர்)

" மக்களிற் பிறவியுள்ளும் மன்னர்தம் மன்னராகித்
திகெலாம் அடிப்படுத்தும் திகிரியஞ் செலவரேனும்
அக்குலத் துடம்பு தோன்ற அன்றுதொட் டின்றுகாறும்
ஒக்கநின ரூர்கள் வையத் தொருவரும் இல்லையன்றே."
(யசோதரகாவியம்)

" தழுவுறு கிளைஞர் தந்தை தாய்முதல எவரும் நாளில்
கழிவது கண்டுங்கண்டும் கண்டிலார் போல வாழ்வர்
ஒழிவற உள்ளத்துள்ளே உறைபரஞ் சுடரை ஓரார்
விழைவென நின்ற துன்ப வித்தினை விளைப்பர் அம்மா."
(பாகவதம்

" மின்னின் நிலையில
மன்னுயிர் ஆக்கைகள்
என்னும் இடத்து இறை
உன்னுமின் நீரே." (திருவாய்மொழி)

" படுமழை மொக்குளிற் பலகாலுந் தோன்றிக
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித்—தடுமாற்றம்
தீர்ப்பேமயாம என்றுணரும் திண்ணறி வாளரை
நோப்பாராயார் நீணிலத்தின் மேல் " (நாலடியார்)

" மூப்புப் பிணியே தலைப்பிரிவு நல்குரவு
சாக்காடும் எல்லாம் சலமிலவாய்—நோக்கிற்
பருந்துக் கிரையாமிவ் யாக்கையைப் பெற்றான்
மருந்து மறப்பதோ மாண்பு." (அறநெறிச்சாரம்)

இறப்பின் உண்மையை உணர்த்திப் பிறப்பு நீங்கி உய்யும்படி போதித்திருக்கும் இவையாவும் ஈண்டு ஓதி உணரத்தக்கன.

அநித்திய விவேகத்தை ஊட்டுவதாகிய ஒரே குறிக்கோளுடன் இப்பாடல்களனைத்தும் ஒரு முகமாய் வந்துள்ளனவாயினும் நூலாசிரியர்களுடைய கருத்து நிலைகளையும், உரைத்திறங்களையும், உணர்வு விளக்கங்களையும், உள்ளுருக்கங்களையும் தனித்தனியே பிரித்துநோக்கி நுனித்து உணர்ந்துகொள்க. இன்னவகையில் தொகையாக இன்னும் பல உள.

இறந்து படுதலாகிய இயல்பினை மன்பதைகள் மறந்துவிட்டு மதிமோசம் போகலாகாதென இந்தநாட்டு நூல்கள் உரைத்திருத்தல்போல் வேறு எந்த நாட்டு நூல்களும் இவ்வாறு உரைக்கவில்லை. செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என நிலையாமையைப் பலவகையாகப் பகுத்து நெஞ்சில் நிலைபெற முன்னோர் நினைவுறுத்தியிருக்கின்றனர்.

" நீரில் குமிழி இளமை ; நிறைசெல்வம்
நீரில் சுருட்டு நெடுந்திரைகள் ;—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் ! என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று." (குமரகுருபரர்)

என்று கடவுள் துதியிலும் நிலையாமை நினைவை நிலையாகப் பொதிந்து மக்களுக்கு இதமாக இங்ஙனம் மதியூட்டியுள்ளனர்.

மனிதப்பிறவி பெறுதற்கு அரியது ; அறிவு மிகவுடையது ; உறுதி நலங்கள் யாவும் ஒருங்கே வாய்ந்தது ; ஆயினும் விரைவில் அழிந்து எளிதே ஒழிந்துபோகும் இயல்பினது ஆதலால் அதன் கழிவினை நினையாமல் இழிவினிலுழந்து வறிதே களித்து நிற்பவரை மேலோர் இளித்து நிற்கின்றார்.

" இறந்தொழிந் ததுவெங் கூற்றம் என்றுளத்துணர்ந்தார்போலும்
அறந்தலை மணந்த செங்கோல் ஐவர்பார் ஏழும் காப்ப
நறுந்துழாய்ப் பகவன் தூது நடந்தநாட் கமலப் போது
மறந்தனர் மாக்கள் வாளா வருபகல் கழிக்கின்றாரால் "

என்று இறப்பினை மறந்து இறுமாந்து திரிவாரது நிலைமைக்கு இரங்கி இவ்வாறு அவரை இகழ்ந்து பழித்திருக்கின்றார். நேரும் நிலையை மறந்து, சேரும் நலனை இழந்து, கண்ணில் கண்டதை உண்டு கருத்தழிந்துழல்வார் மிருகங்களே என்பார் மாக்கள் என்றார்.

நிலையான உயிர்க்கு உறுதி நாடாமல் நிலையற்ற உலகவாழ்வினை நிலையென நம்பித் தலை மயங்கி நின்றவர் முடிவில் முடிவில்லாத துன்பங்களுக்கு அடிகோலியவராய்க் கெடுகின்றார் ஆதலால் அக்கெடுநிலையை மக்கள் உணர்ந்து உய்யும்படி தத்துவதரிசிகள் தண்ணளியுடன் உய்த்துணர்வு தந்துள்ளார்.

“ நில்லாதவற்றை நிலையின என்றுணரும்
புல்லறிவாண்மை கடை.* ” (குறள், 331)

என்னும் இதில் அடிகளது கருத்துநிலை தெரிக.

நிலையாமை நினைவு தலையாகவேண்டும் என இதுகாறும் கூறி வந்துள்ள நிலைகளை மீண்டும் கூர்ந்து சிந்தித்துக்கொள்ளவேண்டும்.

இறப்பு உணர்ச்சியைத் தமிழ் இலக்கியங்கள் இவ்வாறு விரித்துரைத்திருத்தலால் இந்நாட்டிலிருந்த நம் முன்னோர் இக லோக வாழ்வை எண்ணியுள்ள இயல்பும், பரலோக சிந்தையும், பிறவி நீக்கம் பேணி நின்ற திறமும் பிறவும் அறியலாகும்.

துன்ப மயமான பிறவியை ஒழித்தற்குத் துறவு சாதனமாயுள்ளது; உலகப்பற்றை அடியோடு விடுதலாகிய அது நிலையாமைகளைத் தெளிந்த பொழுது நேரே விளைந்து வருகின்றது; ஆதலின் இறப்பும் துறப்பும் இங்ஙனம் இணைத்து எண்ண நேர்ந்தன என்க.

---

* நில்லாத என்றது கண் எதிரே தோன்றி நிற்கும் உலகப்பொருள்களை. நிலையின்றி விரைந்தழியும் பொருள்களை நிலையுடையன என்று நம்பி நசைபுரிந்து வருதல் பிறவித் துன்பத்திற்கு ஏதுவாதலால் அது புல்லறிவு என நின்றது. இழிதுயர்களில் அழுத்தி வழிவழியே உயிர்களை ஈனப்படுத்தி வருதலால் அவ்வறிவுடைமை கடை என வந்தது. நில்லாதவற்றை நிலை என மயங்கினோர் உயர் நலமிழந்து இழிநிலையில் வாழ்ந்து ஈனராயுழல்வர் என்பது கருத்து. அம்மயக்கம் நீங்கி உயிர்க்குறுதி நாடி விரைந்து முயன்று உய்யவேண்டும் என்பது குறிப்பு.

" பிறவித் துயரற ஞானத்துள் நின்று
துறவிச் சுடர்விளக்கம் தலைப்பெய்வார்
அறவனை ஆழிப்படை அந்தணனை
மறவியை இன்றி மனத்துவைப் பாரே."
(திருவாய்மொழி 1, 7)

தத்துவ ஞானமுடைய உத்தமர்கள் அநித்தியங்களை இகழ்ந்து கைவிட்டு நித்தியப் பொருளையே என்றும் நினைந்திருப்பர் என முத்தரான நம்மாழ்வார் இதில் உணர்த்தியிருத்தல் காண்க.

" பிறந்தவர் இறத்தல பிழையாதென அறிந்தால
உறுந்துயர் ஒழிநதினிய துணை நினைவாரோ ? "

என்றபடி மரணநிலையை எதிரெண்ணி யறிந்தவர் இறைவனைச் சரணமடைந்து விரைந்து உய்ந்து போவரே யன்

ந்து நில்லார் என்க. எனவே இறப்பெண்ணம் துறப்பினுக்கு ஏதுவாய்ப் பிறப்பறுத்தருளுதலால் உயிர்களுக்கு அந்நினைப்பு பேருதியமாகவும், அதன் மறப்பு பெருங்கேடாகவும் பேச வந்

இறப்பெனும் நிலைமையை என்றது, மெய்ம்மையை என்றது அதன் உறுதியையும் உண்மையையும் தெளிவுறுத்த என்க. நேயமாக எண்ணிநின்ற வாழ்வெல்லாம் மாயமாய் மறைந்துபோக மாய்வு ஒன்றே இறுதியில் உறுதியாக அறிதியிட்டு நிற்றலால் அது சத்தியம் என நின்றது. முடிவான இந்த மெய்ம்மையை மறந்து கொடிதான பொய்ம்மையை நம்பிப் புலையாடிக் கெடலாகாதென்பது கருத்து.

எச்சதேவன் ஒருமுறை தருமர் எதிர்தோன்றி, " அறிவு நிறைந்த தருமரே ! இந்நிலவுலகில் தோன்றும் அதிசயங்கள் பலவினும் மிகவும் அதிசயமானது யாது?" என்று வினவினன். வினவவே, " செத்தபிணங்களைப் பாடைகளில் எடுத்துக்கொண்டு போவதை நாளும் நாளும் நேரே கண்டிருந்தும் நாமும் இப்படித் தானே இறந்துபோய் விடுவோம் என்று எண்ணி யுணர்ந்து மறுமைக்கு இதம் செய்துகொள்ளாமல் மனிதர் இறுமாந்து களிப்பதே எனக்குப் பெரிதும் அதிசயமாயுள்ளது" என்று தருமர் பதில் உரைத்தார். இவ்வுரையைக்கேட்டு அவன் உவந்து போனன். இதனல் மாய்வினை மறந்திருப்பது மாயையின் மயக்காம் என வியந்து மக்களது நிலையினை இகழ்ந்துள்ளமை புலனும்.

"புகைவண்டி யூர்ந்துலகை நொடிக்குள்ளே சுற்றுவோம்,
 புகைக்கூண் டேறிக்
ககனமிசைப் பறவையெனப் பறப்போம்ஓர் புகைக்கலத்தால்
 கடல் கடப்போம்,
வகையாய்மின் அஞ்சலினால் எத்திசையுள்ளோரோடும்
 வார்த்தை சொல்வோம்,
மிகையான புதுமை செய்வோம் மரணத்தை
 விலக்ககில்லோம் விபரீதமன்றோ?"

என்றபடி எவராலும் மரணம் விலக்கமுடியாது; மனிதர் தலைமேல் அது முடிவாயுள்ளது; அந்த உண்மையை யுணர்ந்து காலமுள்ளபொழுதே சீலம்தாங்கி உயிர்க்கு உறுதிசெய்து உய்யவேண்டும் என்பதாம்.

புத்தர் காலத்திற்கு எண்ணூறு ஆண்டுகளுக்குப் பின்னர் மகதநாட்டில் சத்துவசந்தன் என்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவன் ஒரு நாள் அரிய தவவொழுக்கமுடைய ஒரு துறவியைச் சோலையில் கண்டான். தொழுது முன் நின்றான். அவர் இனிது நோக்கி இருக்க என்றார். இருந்த இவன் அந்த அருந்தவரை அன்புடன் போற்றிச் சிறந்த மந்திரம் ஒன்றைத் தனக்கு உபதேசிக்கவேண்டினான். வேண்டவே அவர், "நீ மாண்டு படுதலை யாண்டும் மறந்துவிடாதே; அதுவே உனக்கு வேண்டிய நலனை விளைத்துவரும்" என்றார். அதனைக் கேட்டு மீண்டான்; அவ்வாறே நித்தமும் நினைந்து, நிலையாமை தெளிந்து சித்தசுத்தி வாய்ந்து பலவகைஅறங்களும் பரிவுடன் புரிந்து முடிவில் உலகப் பற்றற்று உயர்கதி யடைந்தான்.

இறப்பெனும் மெய்ம்மையை மறவாதவர் எவ்வுயிர்க்கும் இனியராய் இதம்புரிந்து பிறப்பு நீங்கிப் பேரின்பம் பெறுவர் என்பதை இக்கதை இனிது உணர்த்தி நிற்றல் காண்க.

நிலையாமை யுண்மையை நிலையாக நினைந்து துறவடையத் துணிந்த மன்னன் அதனை மேலும் உரிமையுடன் உருவகித்து உறுதிபெற உரைக்கின்றான்.

5. பிறவியாகிய பெரிய சிறையைக் கடத்தற்குத் துறவு ஞானம் என்னும் இரண்டும் உறுதியாகவேண்டும் என்கின்றான். பிறவிக் கடலைக்கடந்து உய்வதற்குத் துறவு தோணியாயுள்ளது

என முன்னே தனியே குறித்தான்; இதில் அத்துடன் ஞானத்தையும் சேர்த்துக் கூறுகின்றான். துறவு இருந்தாலும் ஞானம் இல்லையாயின் பிறவி நீங்காது ஆதலால் அதன் உறவுரிமைதெரிய உடனுணர்த்தினன்.

பறவைக்கு இருசிறகுகள்போல் மேல்எழுந்துபோகும் ஆன்மாவுக்குத் துறவுஞானங்கள் துணையாயுள்ளன என்பதாம். சிறை இரண்டனுள் முன்னது சிறகு, பின்னது சிறைக் கூடம். "திருந்துசிறை வளைவாய்ப் பருந்து" (புறம், 3) என்புழிச் சிறை குறித்து நிற்கும் பொருளை யறிக.

யாதொரு சுதந்தரமுமின்றி வினைவயத்தனவாய்ப்பந்தத்தில் கட்டுண்டு உயிர்கள் சீரழிந்து கிடத்தலால் பிறவி சிறை என வந்தது. குற்றம் புரிந்தவர் சிறைக் கூடத்தில் அடைபட்டிருத்தல் போல் முன்புரிந்த வினைக்கு ஈடாக ஆன்மாக்கள் பிறவிப் பெருஞ் சிறையில் பிணிக்கப் பட்டுள்ளன என்க இருஞ்சிறை என்றது கடந்து போதற்கரிய அதன் காப்புநிலையும், கொடுந் துயர் விளைவும் உடன் தெரிய வந்தது. இரும்=பெரிய.

தான் செய்த குற்றத்தின் பயனாகத் தனது தந்தை தாயரையும் தலைமையையும் இழந்து சிறைக்கோட்பட்டுப் பரிதபித்துக் கிடக்கும் ஒரு குலமகன் போல ஆன்மா பழவினை விளைவால் பரம பதியைப் பிரிந்து பிறவி வெஞ்சிறைப்பட்டுப் பேதுற்றுள்ளதென்க. எனவே சிறை நீங்கியபொழுது அம்மகன் பழைய நிலைமையான தலைமையை அடைதல்போல் சீவனும் வினைத்தளை விட்டவுடன் மீண்டு விரைந்துபோய்ச் சிவப்பேற்றை அடைந்து செம்மாந்திருக்கும் என்பது பெற்றாம்.

" சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்டு
அலைகடலில சென்றடங்கும் ஆறுபோல் மீளாது
உலைவிலரன் பாதத்தை யுற்று."

(சிவஞானபோதம், அதி, வெண்பா)

அணைக்கட்டால் தடைப்பட்டு நின்ற ஆற்றுநீர் அந்த அணை உடைந்தவுடன் விரைந்து ஓடிக் கடலிடைக் கலந்து ஒரு நிலையாய் நிற்றல்போல், மாயையால் மயங்கிப் புலன்வயப்பட்டுப் புலையாடிக்

கிடக்கின்ற உயிர் அம்மயக்கம் நீங்கின் உடனே இறைவனை அடைந்து இன்புற்றிருக்கும்; பின்பு பிறவியில் மீளவாராது என இது உணர்த்தி நிற்றலறிக. இதில் குறித்திருக்கும் உவமை நிலைகளை ஊன்றி நோக்கவேண்டும்.

கடல் நீர், சிவம்; ஆற்று நீர், சீவன்; அணைக்கட்டு, பாசம்; அப்பாசத்தடை நீங்கின், சீவான்மா பரமான்மாவுடன் பதிந்து நிறைபேரின்பமாய் நிலவி நிற்கும் என்பதாம். ஆகவே உயிருக்கும் பரனுக்கும் உள்ள உறவுரிமை இதனால் இனிது புலனும்.

எடுத்துள்ள தேகம், அடுத்து நிற்கும் உறவினங்கள், தொடுத்து வந்த சூழல்கள் யாவும் இடையே நேர்ந்த பொய்ம் மயக்கங்கள் ஆகலான், அவற்றினின்று நீங்கி என்றும் குன்றுமல் யாண்டும் நின்று நிலவுகின்ற ஆதிமூலப்பொருளே ஆதிமுதல் யாதும் பேதமில்லாத உரிமை மிகவுடையது என உண்மை தெளிந்து உயிர் உய்யவேண்டும் என்பது கருத்து.

சிறையில் கிடந்த ஒருவன் விடுதலையடைந்தபோது பெரு மகிழ்ச்சியுறுதல்போல் பிறவி நீக்கமும் பேரின்பம் தரும் ஆதலால் "பிறவி என்னும் இவ் இருஞ்சிறை கடத்தலின் இனியது யாவதே?" என்றான். இன் உருபு எல்லைப்பொருளது. கடத்தல் இனியது என்றதனால் கடவாது கிடத்தல் இன்னாது என்பது பெற்றும்.

பிறவி வெஞ்சிறையிலிருந்து தம்மை விடுதலை செய்தருளும் படி சிவபெருமானை நோக்கித் தவஞானி ஒருவர் மறுகி வேண்டி யிருப்பது அடியில் வருகின்றது காண்க.

"விரிசடை மிசை வெண்மதி கிடப்பினும்
இருள்புரை கண்டத்து ஏக நாயக!
சுருதியும் இருவரும் தொடர்ந்துநின் றலமர
மருதிடங் கொண்ட மருத மாணிக்க!
உமையாள் கொழுந! ஒருமூன் றாகிய
இமையா நாட்டத்து என்தனி நாயக!
அடியேன் உறுகுறை முனியாது கேண்மதி!
நின்னடி பணியாக் கனமனக் கயவரொடு
நெடுநாட் பழகிய கொடுவினை யீர்ப்பக்
கருப்பா சயமெனும் இருட்சிறை அறையில

சூடரென் சங்கிலி பூண்டு தொடர்பட்டுக்
கூட்டுச் சிறைப்புழுவி னிட்டுமலத் தழுந்தி
உடனே வருந்தி நெடுநாட் கிடந்து
பல்பிணிப் பெயர்பெற் றலைப் படுத்தும்
தண்ட லாளர் மிண்டிவந் தலைப்ப
உதர நெருப்பிற் பதைபதை பதைத்தும்
வாதமத் திரையின் மோதமொத் துண்டும்
கிடத்தல் நிற்றல் நடத்தல் செல்லாது
இடங்குறை வாயிலின் முடங்கி யிருந்துழிப்
பாவப் பகுதியில் இடுக் காவற்
கொடியோர் ஐவரை ஏவி நெடிய
ஆசைத் தளையில் என்னையும் உடலையும்
பாசப் படுத்திப் பையென விட்டபின்
யானும் போந்து தீதினுக் குழன்றும்
பெரியோர்ப் பிழைத்தும் பிறர்பொருள் வெளவியும்
பரியா தொழிந்தும் பல்லுயிர் செகுத்தும்
வேற்றோர் மனைவியர் தோற்றம் புகழ்ந்தும்
பொய்பல கூறியும் புலனினம் புலவியும்
ஐவரும் கடுப்ப அவாவது கூட்டி
ஈண்டின கொண்டு மீண்டு வந்துழி
இட்டுழி இடாது பட்டுழிப் படாஅது
இந்நாள் இடுக்கண் எய்திப் பன்னாள்
வாடுபு கிடப்பேன் வீடுநெறி காணேன்
நின்னை யடைந்த அடியார் அடியார்க்கு
என்னையும் அடிமை யாகக் கொண்டே
இட்டபச் சிலைகொண்டு ஒட்டி யறிவித்து
இச்சிறை பிழைப்பித்து இனிச்சிறை புகாமல்
காத்தருள் செய்ய வேண்டும்
தீத்திரண் டன்ன செஞ்சடை யோனே!''

(திருவிடைமருதூர் மும்மணிக்கோவை)

இது, பட்டணத்தார் பாடியது. பிறவியைச் சிறையாக உருவகித்து அதன் துயரநிலைகளை யெல்லாம் இதில் விரித்து விளக்கியிருக்கிறார். பெரிய துறவியாகிய அடிகள் பிறவிச்சிறையை நீக்கவேண்டி இறைவனைநாடி உருகியுரையாடியுள்ள நிலைகளையும், உணர்வு நலங்களையும் இதன்கண் ஊன்றி யுணர்ந்துகொள்க.

விரிந்த சிறகுகளுடைய பறவை இலகுவாக உயர்ந்துபறந்து போதல்போல் துறவும் தெளிவுமுடைய ஆன்மா பிறவிச்சிறையை எளிதாகக் கடந்து முத்தித்தலத்தை விரைந்து சேர்ந்து விளங்கி நிற்கும் என்பதாம். ஆகவே துறவும் ஞானமும் இல்லையாயின் சிறகிழந்த பறவைபோல் உயிர் பிறவியில் கிடந்து உழலும் என்பது உணர நின்றது.

ரை ந்கருதறகு உறுதித துணையாயுள்ள துறவினை அரசன் அடைந்துகொள்ள விரும்பியுள்ளமையால் அதன் பெருமையை இவ்வாறு உரிமையுடன் உவந்து கூறினான்.

எல்லாச் செல்வங்களும் நிறைந்து மன்னர் மன்னவனுய் மாண்புற்றுள்ள தாங்கள் ஏன் இவற்றைத் துறந்துபோக வேண்டும்? அரச திருவுடன் இங்கு அமர்ந்திருந்துகொண்டே மறுமைக்கு வேண்டிய உறுதி நலங்களைச் செய்து கொள்ளலாகாதா? என்று மந்திரிகள் ஒருவேளை சிந்தனைசெய்யவும் கூடும் என்று கருதித் தன் உள்ளக்கிடையைத் தெளிவாக அவர் உணர்ந்து கொள்ளும்படி நளினமாக அடுத்து மொழிகின்றான்.

6. அந்தமில் இன்பமான அந்த மோட்ச இராச்சியத்தை விரும்பி நின்ற மனம் இந்த மண்ணரசாட்சியை ஒரு பொருளாக எண்ணுமோ? எனத் தன் எண்ணத்தை மன்னன் இவ்வண்ணம் வெளியிட்டிருக்கிறான்.

எவ்வளவு செல்வங்கள் நிறைந்திருந்தாலும் வெவ்வினைத் தொடர்புகளை விளைத்து மேலே உய்வகையின்றிச் செய்து விடுதலால் உலகபோகங்களை மெய்யுணர்வுடையார் விழைந்துகொள்ளாமல் துறந்து செல்வாராயினர்.

ஐம்புல இன்பங்களும் ஆர நுகர்ந்து சீரும் சிறப்பும் மிகுந்து சிறந்து நிற்கச் செய்யினும் அரச திரு மீண்டும் பிறவியில் ஆழ்த்தும் ஆதலால் பிறவாமையை வேண்டித் துறவு கொள்ளத் துணிந்த மன்னன் தனது வேண்டாமையை இங்ஙனம் விளக்கி

உலக முழுவதும் ஒரு கோலோச்சி ஏகசக்கிராதிபதியாயிருந்தரசாளும் ஏந்தலுக்குச் சிற்றூரில் உள்ள ஒரு சிறு குடிசை வாழ்க்கை எப்படி ஈனமாகத் தோன்றுமோ அப்படிப் பேரின்

இராச்சியத்தைப் பெற விரும்பினார்க்குப் பாரில் உள்ள அரசு பாழாகத் தோன்றும் என்க.

" வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்
கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடமலைமேல
கானாறாய்ப் பாயும் கருத்துடையேன் ஆவேனே."
(பெருமாள் திருமொழி, 4)

அரச குலதிலகராகிய குலசேகரப் பெருமானார் தமது அரசாட்சியை வெறுத்துப் பரம பதத்தில் ஒரு சிறிய இடம் கிடைத்தாலும் போதும் என இங்ஙனம் உருகியுரையாடியிருக்கின்றார்.

நலன் என வரும் பகை என்றது புலனுகர்வின் அடியாக வருகின்ற விடய சுகங்களையும், விழைவுகளையும் என்க. இந்தச் சிற்றின்ப போகங்கள் பேரின்பப் பேற்றிற்குத் தடையாய் நிற்றலால் அவை நவை என வந்தன.

" இன்பமிதாம் இன்பமிதாம் என்ற எல்லாம் எரியென
நஞ்சென நினைக." (ஞானவாசிட்டம்)

என்றதனால் தேகபோகங்களின் நிலைமை புலனாம். போக மோகங்கள் மெய்யுணர்வை யழித்து வெய்ய துயர் விளைக்கும் ஆகலான் அக்கொடிய பகைகளை அடியோடு ஒழித்து முடிவில் இன்பத்தை அடைவேன் என மன்னன் முடிவு கூறினான்.

மோட்சத்தைத் தனி அரசாட்சி என்றது ஒப்புயர்வற்றதாய் ஒளிசெய்து நிற்கும் அதன் உயர் நிலையை நோக்கி.

என்றும் குன்றாதது ; எல்லையில்லாதது ; யாண்டும் இன்பமயமானது. அத்தகைய பேரானந்தப் பெருந்திருவைப் பெற விரும்பியிருக்கின்றேன் என்பதாம். உத்தம அரசனாய் உயர் போகங்களை நுகர்ந்து வந்தவனாதலால் முத்தி நிலையையும் அரசாக உருவகித்து இவ்வாறு உரை செய்ய நேர்ந்தான். தனது சொந்த அனுபவங்களையே மனிதன் எந்த வகையிலும் இசைத்துச் சொல்லுவது இயல்பு. அந்த இயற்கையின்படி அரசின் உள்ளம் அங்கும் அரசநிலையையே உருவகஞ் செய்து உவந்துகொண்டது.

" பூவணை யாகி வானம் பொருந்து மேற் கட்டியாகித்
தீவமதாகி இந்து செங்கதிர் வீசும் காற்று
மேவுசாமரமதாகி விடுதலை மனைவியாகிக்
சேவலம் இன்பமாகிக் கிளர்ச்சியாய் நின்றான் வேந்தன்."
(மகாராசதுறவு)

துறவியாய்ப் போன ஓர் அரசனது நிலையைக் குறித்து
ஏ உரை செய்துள்ளது. முத்தித்திருவை அரச திருவாக
ஆல் உருவகித்திருத்தலை உய்த்துணர்ந்து கொள்க.

முத்தித்தலத்தைச் சிவராசதானிஎன அரசுமுறைதொனிக்க உரைத்து வருகின்றனர். அது பரமபதம் ஆதலால் அதனை அடைய விரும்பினவர் உடனே இவ்வுலக வாழ்வெல்லாவற்றையும் எள்ளி இகழ்ந்து விடுகின்றனர். அங்ஙனம் விட்டவரை வேந்தனும் வியந்து போற்றுகின்றான். "துறவிக்கு வேந்தன் துரும்பு" என்பது இந்நாடெங்கும் எளிது வழங்கிவருகின்ற இனிய பழமொழியாகும். இதனால் துறவு நிலையின் உயர்வு நிலை உணரலாம்.

பட்டணத்தார் பெரிய செல்வர். எல்லாவளங்களும் அவரிடம் ஒருங்கே நிறைந்திருந்தன. அரசு விழை திருவினராய் நிலவியிருந்த அவர் திடீர் என்று துறவடைந்த நிலை மிகவும் அதிசயமானது. தெய்வ அருளாலே மெய்யுணர்வு தோன்றி அங்ஙனம் அவர் உய்ய நேர்ந்ததென்பர். ஒருநாள் அவர் வெளியே போயிருந்தபொழுது முனிவர் ஒருவர் தனியே வந்து ஓர் ஓலைச்சீட்டை அவருடைய மனைவி கையில் கொடுத்து, "செட்டியார் வந்தவுடன் இதனை எடுத்துக்காட்டு" என்று இசைத்துப்போனார். அவ்வாறே வந்தவுடனே மனைவியார் அந்த முறியைக் கொண்டுவந்து கொடுத்தார். அவர் வாங்கிப்படித்தார்.

" காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே "

என்று அதனிடை எழுதியிருந்தது. இந்த வாக்கியத்தை ஊன்றி நோக்கினார். உடனே உண்மையுணர்வுதித்தது. உலக வாழ்வனைத்தையும் ஒருங்கே கைவிட்டுப் பெருந்துறவியாய்ப் பே சாது போனார். சிறந்த திருவுடைய இவர் துறந்து போனதைக் கேட்டு அந்நாட்டு அரசன் மிகவும் அதிசயமுற்றான். இவரைக் காணவிழைந்து அவன் நேரே சிவிகை யூர்ந்து வந்தான். அவ்

வமயம் இவர் கோவணதாரியாய் ஓர் குப்பைமேட்டில் கால்மேல் கால்போட்டுக்கொண்டு மலர்ந்து படுத்திருந்தார். அரசன் சிவி கையை விட்டிறங்கி இவர் அருகே வந்து நின்றான். இவர் யாதும் பேசாமல் எதனையும் கவனியாமல் அதிகம்பீரமாக அமர்ந்திருந் தார். நின்ற மன்னன் நெடிதுவியந்தான். "பேரரசரும் புகழ்ந்து போற்றத்தக்க இவர் யாவும் துறந்து ஒரு கோவணத்துடன் இக்குப்பையில் கிடக்கின்றாரே!" என்று அவன் வியப்பு மீக் கூர்ந்து விநயமாக வினவ நேர்ந்தான்: "நேற்று வரையும் பெரிய இராசபோகத்துடனிருந்த நீர் எல்லாவற்றையும் இகந்து விட்டு இன்று இந்தப் பிச்சைக்கோலத்தை யடைந்திருக்கிறீரே இதனால் என்ன ஊதியம் கண்டீர்!" என்று அம்மன்னன் கேட்டான். உடனே இவர் புன்னகை புரிந்து, *"நீ நிற்க; யாம் இருக்க" என்றார். பொருள் நிறைந்த இந்த அருள்மொழியைக் கேட்டதும் அவன் தெருளடைந்து மகிழ்ந்து இவரது தெய்வப் பெற்றியை வியந்து செய்தவ நிலையை விழைந்து திரும்பிப்போனான்.

மனிதன் உள்ளத்தே பற்றற்ற பொழுது உலகமெல்லாம் அவனை உவந்து தொழும் என்பது இதனால் உணர்ந்து கொள்ள லாகும்.

இம்மை இச்சை நீங்கி மறுமையை நோக்கிய பொழுதே ஒருவன் இருமையும் பெருமையாய் இன்பமீதூர்கின்றான்.

பரமானந்த பதமாகிய அத்தனிநிலையை விரும்பிய உள் ளம் இத்துனி அரசை ஒரு பொருளாக எண்ணாது ஆதலால் எண்ணுமோ? என எதிர்வினவினான்.

---

* பழைய செல்வத்துடன் இருந்தபொழுது உம்மைக் கண்ட நேர மெல்லாம் நான் எழுந்து தொழுது வணங்கி நின்றேன். யாவும் துறந்து ஏதும் இல்லாத இப்பொழுது சீர்வலிய வந்து என்காலடியில் நிற்கின்றீர். கையும் குவிக்கின்றீர். நேற்றுத் துறந்தேன்; இன்று இப்பெரிய இலா பத்தை நேரே கண்டேன். இனி யான் அடையப்போகும் பெரும் பேற்றை யார் அளந்து சொல்லவல்லார்? பற்றற விட்டவனுக்கும் விடா தவனுக்கும் உள்ள ஏற்றத்தாழ்வுகளை அறிந்துகொள்ள இந்நிலை ஒன்றே போதும்; இந்த உண்மையையுணர்ந்து உய்ந்துகொள்க என்பதாம்.

"சிற்றின்பஞ் சின்னீர தாயினும் அந்நீரா
மற்றின்பம் யாவையுங் கைவிடப் — பற்றாந்தாம்
பேரின்பமாக் கடல் ஆடுவார் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங் கும்பியில்." (நீதிநெறிவிளக்கம், 88)

ஈண்டு இது எண்ணத்தக்கது. கும்பி=சேறு. இனிய கடலில் குளிப்பவர் இன்னாத சேற்றில் விழுவரா? என்றவாறு. விழார் என்பது கருத்து.

"அத்தனி அரசாட்சியில் தாழும் உள்ளம் இவ்வரசை இனியது போலும் எண்ணுமோ?" என மன்னன் சொன்னதையும் இதனையும் இணைத்து நோக்கி இன நலம் தெரிக.

பேரானந்தப் பெருவாழ்வாகிய அந்தத் தனி அரசாட்சியை என் மனம் விரும்பியுள்ளது; ஆகலால் நான அதனை அடைந்து மகிழும்படி நீவிர் உடனிருந்து எனக்கு உதவி செய்ய வேண்டும் என்று இதமாக மன்னன் தொடர்ந்து மொழிகின்றான்.

7. நீங்கள் உசாத்துணைவராய் அமர்ந்து உடனிருந்து உதவி புரிந்து வருகின்றமையால் நான் நீதிநெறி வழுவாமல் உலகைப் பாதுகாத்து அறம்பலபுரிந்து செங்கோலனாய்ச் சிறந்து நிற்கின்றேன். இம்மையில் இங்ஙனம் உதவிய நீவிர் மறுமையிலும் உரிமையுடன் எனக்கு உறுதிசெய்ய வேண்டும் என்பதாம். இராமனை முடிசூட்டி வைத்துவிட்டுத் தான் ஒதுங்கியிருந்து அருந்தவம் புரிதற்கு மந்திரிகளின் சம்மதத்தை மன்னன் விரும்பி நிற்கின்றான் ஆதலால், "இம்மையில் உதவிய நீர் அம்மையும் உதவுதற்கு அமையவேண்டும்" என இங்ஙனம் நயமாகவேண்டினான்.

அம்மை என்றது மறுமையை. எய்தி நின்ற இப்பிறவி அண்மையிலுள்ளமையான் இம்மை என நின்றது; மேல் எய்தவுள்ளது சேய்மைச் சுட்டாய் அம்மை என வந்தது.

"அழகும் வருபிறப்பும் தாயும் அம்மை" என்றது பிங்கலந்தை.

அம்மையில் உதவுதலாவது தன் கருத்திற்கு இசைந்து உடனே காரியம்புரிவது. அருமை மகனிடம் அரசினை உதவிவிட்டு அருந்தவம் புரியத் தான் விரும்பியிருத்தலால் அதன் பெருமையை அனைவரும் வியந்துகொள்ளும்படி இனிப்புகழ்ந்து கூறுகின்றான். காரிய சாதனையில் அரசனது வீரியம் விளங்குகின்றது.

8 தவம் மிகவும் சிறந்தது; பாவங்கள் யாவும் போக்க வல்லது; தன்னையுடையானுக்கு உயர் நலங்கள் பலவும் ஒருங்கே அருள்வது; அத்தகைய அரிய தவத்தைச் செய்யாமல் வினை உலகப்பற்றில் உழந்து கிடப்பது இனிய அமிர்தத்தை இகழ்ந்து கைவிட்டுக் கொடிய விடத்தை உவந்து குடிப்பது போன்றதோர் கொடுமூடம் என்பதாம்.

தீவிடம் என்றது உலகபோகங்களை. புலனுகர்ச்சியான விடய சுகங்கள் உயிர்களை இடையறாது பிறவியில் செலுத்திப் பெருந் துயர்ப்படுக்தும் ஆகலால் அவற்றின் தீமையும் கொடுமையும் நன்கு தெரியத் தீவிடம் என்றான்.

" விரிவிடம் விடமதன்று; விடயமே விடமாம; துனபம்
புரிவிடம கொலவது ஓர்மெய், புலன்மறுபிறபபும கொலலும்."
(ஞானவாசிட்டம்)

என்றதனல் அதன் பொல்லா நிலைமை புலனும். இங்ஙனம் உயிர்க்கொல்லிகளாயுள்ள பொறிநுகர்ச்சிகளை அறவே துறந்து நான் அருந்தவம் செய்யவேண்டும் என்பதாம்.

தவத்தை அமிர்தம் என்று குறித்தது உயிர்களை உய்யச் செய்யும் அதன் தெய்வப் பெற்றியை நோக்கி. தேவாமிர்தம் தேவ போகங்களையூட்டி ஆயுளை நீட்டுமாயினும் மூவா இன்பம் பயவாது; தவமோ, முடிவிலின்பமான மூவாத முழுப் பேரானந்தத்தை அருளும் ஆதலால் அதனினும் இதற்குள்ள வேறுபாடு தெரிய ஓர் அமிர்தம் என்று உருவகித்தார். குழைத்தது என்றது சுவை சுரந்து கனிந்து பக்குவப்பட்டுள்ளது என அதனது திவ்விய பாகம் தெரியவந்தது.

இழைத்த தீவினையையும் தவத்தால் கடக்கலாம் என்றதனல் அதன் ஆற்றலை முன்னும் பின்னும் ஓர்ந்து மன்னன் முடிவு செய்துள்ளமை புலனும்.

" கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு." (குறள், 269)

என்றது பொய்யாமொழி. யாராலும் எவ்வகையிலும் யாண்டும் கடக்கமுடியாத எமனையும் சிறந்த தவமுடையார் விரைந்து கடந்துவிடுவர் என இது உணர்த்தி நிற்றலறிக.

" ஒடுங்கு நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை
இடும்பையும் இல்லை; இராப்பகல் இல்லை;
படும்பயன் இல்லை; பற்றுவிட்டோர்க்கே." (திருமந்திரம்)

துன்பங்கள் யாவும் நீங்கி என்றும் குன்றாத இன்பப் பேற்றினைத் தவமுடையார் எளிதடைவார் என்பது இதனால் இனிதறியலாகும்.

" நஞ்சு குடித்தாலும் நவையின்று தவம் நின்றால்
அஞ்சி ஒளித்தாலும் அரணில்லை தவம் உலந்தால்
குஞ்சரத்தின் கோட்டிடையும் உய்வர் தவம் மிக்கார்
அஞ்சலிலர் என்றும் அறனே களைகண் என்பார்."
(சிந்தாமணி)

ஏனை உறுதி நலங்கள் இங்ஙனம் பல உள்ளன.

" விளக்குப்புக இருள்மாய்ந்தாங்கு ஒருவன்,
தவத்தின்முன் நில்லாதாம் பாவம்" (நாலடியார்)

என்றதனால் உயிர்க்கு ஒளிஉதவி நிற்கும் அதன்உறுதிநிலைபுலனும்.

எவரும் விழைந்து போற்றத்தக்க அரச திருவையும் இகழ்ந்துவிட்டுத் தசரதன் தவத்தைப் புகழ்ந்தது அதனால்வரும் பேரின்ப நிலையை எதிர்கருதி என்க. பெறலரும் பேற்றை அவாவியுள்ளமையால் பெற்றுள்ள சிற்றின்ப வாழ்வை இளித்துப் பேசினன். விடம் என்றது அதனிடம் தனக்குள்ள வெறுப்பை உணர்த்த.

துறவுகொள்ள விரும்பிய சீவக மன்னன் தன் உறவினை நோக்கி உரைத்துள்ளதும் ஈண்டு உணரத்தக்கது.

" கொல்சின யானைபார்க்கும் கூருகிர்த் தறுகண் ஆளி
இல்எலி பார்த்து நோக்கி இறப்பின்கீழ் இருத்தல் உண்டே
பல்வினை வெள்ளநீந்திப் பகாவின்பம் பருகின் அல்லால்
நல்வினை விளையுள் என்னும் நஞ்சினுட் குளித்தல உண்டே?
ஆற்றிய மக்கள் என்னும் அருந்தவம் இலார்கள் ஆகின்
போற்றிய மணியும் பொன்னும் பின்செலா பொன்ன னீரே!
வேற்றுவர் என்று நில்லா விழுப்பொருள் பரவை ஞாலம்
நோற்பவர்க்கு உரியவாகும் நோன்மினம் நீரும் என்றான்."
(சீவக சிந்தாமணி, முத்தியிலம்பகம்)

இந்தக் கவிகளின் கம்பீரத்தைக் கருதிப் பார்க்க.

பகா இன்பம் என்றது வீட்டின்பத்தை. யாண்டும்போகாத பேரின்பம் ஆதலால் இங்ஙனம் பேர் பெற்று வந்தது.

ஆளி, மதயானையை இரையாக நோக்குமேயல்லாமல் இல் எலியைப் பார்த்து இறப்பின் கீழ் நில்லாது; அதுபோல் மேலோர்கள் பேரின்பத்தைப் பெற விரும்புவரேயன்றிச் சிற்றின்பத்தை நச்சிச் சிறுமையுற்றிரார் என்பதாம். இறப்பு=குடிசைக் கூரையின் அடிப்பக்கம். இதில் குறித்துள்ள உவமைகளைக் கூர்ந்து நோக்கிப் பொருள் நயங்களை ஓர்ந்துகொள்க.

"இன்பம் பருகின் அல்லால் நஞ்சினுள் குளித்தல் உண்டே"

"அமிர்தினைக் கோடல் நீக்கி விடத்தினை அருந்தலாகுமோ?" என்ற இந்த இரண்டு அடிகளையும் இணைத்து நோக்கி இயைபு தெளிக. சொல்லும் பொருளும் தொடர்பொத்திருத்தலால் முன்னதை எண்ணியே பின்னது வந்திருக்குமோ? என்று ஊகிக்கவுள்ளது.

ஞாலம் நோற்பவர்க்கு உரியவாகும் எனத் தவத்தின் மகிமையை உணர்த்தியுள்ளமையான் இதுவும் ஈண்டு எண்ண வந்தது.

இத்தகைய அருமைத் தவத்தை விரைந்து பேணுமல் எனது சிறிய அரச செல்வத்தைப் பெரிதாக மதித்து இனி நான் ஒரு போதும் அயர்ந்து இரேன் என்பது குறிப்பு. தவத்திற்கு எவ்வழியிலும் எச்செல்வமும் யாதும் ஈடாகாதென்பது இதனுல் இனிது புலனும்.

தவநிலை.

"பருதி சூழ்ந்தஇப பயங்கெழு மாநிலம்
ஒருபகல எழுவர் எய்தி யற்றே
வையமும தவமும் தூககின் தவத்திற்கு
ஐயவி அனைத்தும் ஆற்ருது ஆகலின்
கைவிட்டனரே காதலர் அதனுல்
விட்டோரை விடாஅள் திருவே
விடாஅ தோரிவள் விடப்பட்டோரே." (புறம், 358)

உலக முழுவதையும் தவத்தையும் நேரே வைத்துச் சீர் தூக்கி நோக்கின் ஒரு சிறு கடுகளவும் வையம் தவத்திற்கு ஒப்பாகாது; ஆதலின் அதனைக்கைவிட்டுத் தவம்செய்தவரைத் திருமகள் உவந்து கொண்டு நயந்துகிற்பள்; செய்யாதவரை இகழ்ந்து

தள்ளிவிட்டுச் செய்யவள் அகன்றுபோவள் என இதில் உணர்த்தியிருக்கும் உறுநிலையை ஊன்றி நோக்குக. ஐயவி=சிறுகடுகு.

பற்றுவிட்டவரைத் திருமகள் பற்றி நிற்பள்; விடாதாரை விட்டு நீங்குவள் என்றதனால் துறந்து தவஞ்செய்பவர் என்றும் அழியாத இன்பத்திருவினை எய்தி மகிழ்வர்; அல்லாதார் துன்பத்தில் ஆழ்ந்து துயருழந்தயர்வர் என்பது உணரலாகும்.

"நற்றவம் பரவைஞாலம் நாமுடனிறுப்பின வையம்
அற்றமில் தவத்திற்கென்றும் ஐயவி அனைத்தும் ஆற்றாது
இற்றென உணர்ந்து நிற்பின் திருமகள் என்றும் நீங்காள்
பற்றேடே நிற்பின் என்றும் திருமகள் பற்றல்செல்லாள்."
(சீவக சிந்தாமணி, 2983)

முன்னே வந்துள்ள பாடலை முற்றும் இது ஒத்துள்ளமை காண்க.

உலக நிலையை உணர்ந்து உடனே துறந்து தவம்புரிக; அங்ஙனம் புரியின் முத்தித்திரு முன் வந்தருளும்; தவம் புரியாமல் உலகப்பற்றுடன் உறைந்திருப்பின் அவமுடைய அவரைக் காலாலெற்றிவிட்டுத் திருமகள் கண்ணோக்காது போவள் என்பதாம்.

பற்றுடையார் திருவிலிகளாய் இழிந்துபடுதலும், பற்றின்றித்தவம் புரிந்தவர் பெருந்திருவுடையராய்ப் பேரின்பம் பெறுதலும் இவற்றால் அறிந்துகொள்ளலாம்.

"நின்னையே தான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்
தன்னையே தான்வேண்டும் செல்வம் போல், மாயத்தால்
மின்னையே சேர்திகிரி வித்துவக்கோட்டம்மா!
நின்னையே தான் வேண்டி நிற்பன் அடியேனே."
(பெருமாள் திருமொழி 5, 9)

முன் குறித்த கவிகளின் கருத்தோடு இதனையும் இணைத்து நோக்குக. தனது அரச செல்வத்தை வேண்டாமல் வெறுத்து விட்டுப்பரம்பொருளையே வேண்டிக் குலசேகரப்பெருமாள் இதில் உருகியுரைத்திருக்கும் உரிமையை யுணர்க.

இவ்வாறு உயிர்க்கு உறுதியான இனிய தவத்தை விரைந்து செய்யவேண்டும் என்று அரசன் துணிந்திருத்தலால் உவமைகளைப் பொருத்தி அதன் மகிமையை அவையத்தார் தெளிந்து மகிழச் சுவையாக ஈண்டு விளக்கியருளினன்,

9. பல அரசர்கள் புடைசூழ யானைத் தலைமிசைவருகின்ற பெரிய அரச வாழ்வும் நிலையில்லை என்பதை நேரே தெரிந்திருந்தும் மீண்டும் அதனை நச்சி நிற்பது எச்சிலைத் தின்பதுபோல் மிகவும் இழிவாம் என இதில் இரங்கி மொழிகின்றான்.

பட்டத்து யானைமேல் அலங்கரித்த தவிசில் அமர்ந்து, குடை கொடி சாமரம் முதலிய எடுபிடிகளுடன் ஆடம்பரமாய்ப் பவனி வருகின்ற அரசனது இனிய கோலங்களும் அரிய போகங்களும் பெரியவாழ்வுகளும் கடகரி முதலிய தொடர்களால் தெரிய வந்தன. கச்சை=யானைக் கழுத்தில் அணியும் கயிற்று வடம். பெண்களுக்கு மங்கலம் போல் கண்டத்தைச் சுற்றிக் கவினுற்றிருத்தலால் இதனைக் கண்டம் என்பர்.

"கரியின் கச்சை கண்டம் ஆகும்" என்றது பிங்கலந்தை. இந்தக் கச்சை இல்லாத யானைமேல் மன்னர் ஏருர். இதனை இழந்து நிற்பது இளிவாகக் கருதப்படும்.

"மீனெறி தூண்டில போன்ற வெஞ்சிலை நாண்கள் அற்ற;
தேனெறி குன்றம் ஒத்த திண்கச்சை துணிந்த வேழம்."
(சிந்தாமணி, 800)

சீவகனோடு போரில் எதிர்ந்த அரசர் கையிலிருந்த விற்கள் நாண்கள் அற்றுத் தூண்டில்கள் போன்றன; அவர் ஏறிவந்த யானைகள் கச்சைகள் இழந்து குன்றம் போல் கொச்சைகளாய் நின்றன என இதில் குறித்திருத்தலறிக. யானைக்குக் கச்சை ஓர் இனிய மங்கல வுறுப்பாம் என்பது இதனால் நன்கு புலனும்.
பிச்சம் என்றது பீலிக்குஞ்சங்களை.

தானை சூழ யானைமேல் அமர்ந்துவரும் அரசவாழ்வும் ஈனமாயழிந்து இருந்த இடமும் தெரியாமல் மறைந்து போகுமே என்பான், "பிச்சமும் கவிகையும் பெய்யும் இன்னிழல் நிச்சயம் அன்று" என்று நெஞ்சங் கவன்று சொன்னான்.

யாக்கையின் அழிவாகிய இறப்பினை மறப்பது கேடு என்று முன்னம் கூறிய மன்னன் ஈண்டுச் செல்வம் அழியும் நிலைமையை இன்னவாறு குறித்தருளினான்.

ஏகசக்ராதிபதியாயிருந்து அரசாளும் போகநலனும் யோக நிலையும் இனிது தெரிய இன்னிழலைக் கண்ணெதிர்காட்டி, அவை

யும் மண்ணும் ஆதலால் அவற்றை எண்ணொழிய வேண்டும் என்று சொன்னபடியிது.

"யானை எருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாம் கொண்ட
மனையாளை மாற்றார் கொள." (நாலடியார்)

"குடைநிழ லிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்."
(நறுந்தொகை)

"கொலையானை மேலோர் குளிர்வெண் குடைக்கீழ்ப்
பலயானை மன்னர் பலர்போற்ற வந்தான்
மலையாகம் போழாக மற்றிவனே சாய்ந்தான்
நிலையாமை சால நிலைபெற்றதன்றே." (சூளாமணி)

"ஒருநாயகமாய் ஓட உலகுடன் ஆண்டவர்
கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்
பெருநாடுகாண இம்மையிலே பிச்சை தாம்கொள்வர்
திருநாரணன்தாள் காலம்பெறச் சிந்தித் துய்மினோ."
(திருவாய்மொழி)

"அரையது துகிலே, மார்பினது ஆரம்,
முடியது முருகுநாறும் தொடையல், புடையன
பாலவெண் கவரியின் கற்றை, மேலது
மாலைதாழ்ந்த மணிக்கால் தனிக்குடை
முன்னது முரசுமுழங்கு தானை, இங்கிவை
இனைய செல்வத்து ஈங்கிவர் யாரே?
தேவர் அல்லர், இமைப்பதும் செய்தனர்,
மாந்தரேயென மயக்கம் நீங்கக்,
களிற்று மிசை வந்தனர் நெருநல், இன்றிவர்
பசிப்பிணி காய்தலி னுணங்கித் துணியுடுத்து
மாசுமிப போர்த்த யாக்கையொடு
தாமே ஒருசிறை இருந்தனர் மன்னே." (ஆசிரியமாலை)

இவை ஈண்டு எண்ணத்தக்கன. நெருநல் களிற்றுமிசை வந்தனர்; இன்று துணியுடுத்து இருந்தனர் எனக் கூட்டி நோக்குக. மற்றைய கவிகளின் பொருள்களையும் உய்த்துணர்ந்து கொள்க.

கடகரிக்கழுத்தில் கவிகையின்னிழலில் பவனிவரும் அரச வாழ்வும் நிலையின்றியழியும் என நிலையாமை நிலையை அறிவுறுத்தி நம் மன்னர்பிரான் கூறியுள்ளபடி இவையும் மன்னி வந்துள்ளன காண்க. மொழிப்பொருள்களைத் தனித்தனியே நுனித்துணர்ந்து கொள்க. இறுதியிலுள்ள ஆசிரியமாலையில் கருத்துக்களை விளக்கியிருக்குந் திறம் கருதுந் தோறும் மகிழ்ச்சி மீக்கூர்கின்றது. உள்ளுணர்ச்சிகளை மொழிவழியே நம் நாட்டுக்கவிகள் வெளியே துலக்கியிருக்கும் நயங்கள் வியத்தகு கலைகளாய் விளங்கி நிற்கின்றன. பாவின் நயம் பயிலப் பயிலப் பரவி மேலெழும் ஆதலால் பாக்களைப் பலமுறையும் தாமாகவே பயின்று நோக்கவேண்டும். கவியின் சுவையான் அவியுஞ் சுவையான் என்றதனால் கவிச் சுவையாளரின் உணர்ச்சி நலனும் உயர்ச்சி நிலையும் உணரலாகும். எச்சில் என்றது இகழ்ச்சிக் குறிப்புடன் இளித்துரைத்ததாம். உண்டவற்றையே மீண்டும் மீண்டும் உண்டு மேல்நோக்கம் ஒன்றுமின்றி உழன்று வருதலால் உலக போகங்கள் எச்சில் என

"உண்ட இன்பமே மீளவும் உண்கின்றது, ஒருநாள்
கண்ட காட்சியே மீளவும் காண்கின்றது, உவந்து
கொண்ட கோலமே மீளவும் கொள்கின்றது, என்றால்
விண்ட மேலவர் நாணுறு தொழிலவரோ வெறுத்து."
(ஞானவாசிட்டம்)

இது மாவலி மன்னன் உரைத்தது. மேலவர் நாணி வெறுத்து விரைந்து துறந்து போவர் என்றதனால் வெட்கமும் வெறுப்புமின்றி விடய சுகங்களை நச்சி நிற்பவர் எச்சிலை நக்கும் ஈனங்களாக ஞானக் கண்ணுடையாரால் நாளும் இகழ்ந்து எண்ணப் படுவர் என்பது பெற்றாம்.

"அரியது துறவறம் அல்லதில்லை யான
மருவிய துறவறம் ஒருவி மன்னனாய்
உருகெழ முடிகவித் துலகம் ஆள்வது
பெருவிலை மணியினைப் பிண்டிக் கீவதே"

என முன்னொரு மன்னன் சொன்னதும் ஈண்டெண்ணத் தக்கது. சக்கரவர்த்தி ஆதலால் கச்சையங்கடகரி முதலிய உச்சநிலைகளைக் குறித்து இவ்வாறு உரையாடலானான்.

"[illegible] ஒன்றிய மன்னவர் [illegible]
[illegible];
வினை ஒன்றிய இந்திரரும் அவர்வாழ்வும்
போயினவினை [illegible],
என் ஒன்றிய பிரமனும் அவனுடைய பதங்களும்
இறந்தன [illegible];
கண் ஒன்றிய அனைத்தும் எங்கே? [illegible]
[illegible] நெஞ்சே!"

என்று சனகமன்னன் தனது அரச வாழ்வின் நிலைமையைக் குறித்து நெஞ்சொடு புலம்பி மறுகியிருக்கும் இது இங்கே அறிய உரியது.

கெடிது நாள் உண்ட எச்சில் என்றது அரசனது பருவ முதிர்ச்சியையும், இதுவரையும் அனுபவித்து வந்த அரச போகங்களில் இப்பொழுது அவனுக்குண்டாகியிருக்கும் அருவருப்பையும் வெளிப்படுத்தி நின்றது.

இப்படி வெறுப்புக் குறிப்புக் காட்டியது துறப்பின் மேலுள்ள பிரியத்தால் என்க.

"நான் துறந்து போய்விடின் இங்கே யிருந்து அரசு புரியத் தகுந்த ஆள் யார்? என்று நீவிர் யாதும் வருந்தவேண்டாதபடி சிறந்த இளவரசை அடைந்திருக்கிறீர்கள்" எனத் தனது தலைமகனது நிலைமையைக்குறித்து மேலே தொடர்ந்து பேசுகின்றான்.

10. நீண்ட காலமாகப் பிள்ளைப்பேறின்றி உள்ளம் கவன்று உளைந்திருந்தான் ஆதலால், மைந்தரை இன்மையின் வரம்பில் காலமும் நோந்தனன் என்றான். சிறந்த அரச திருவினையடைந்து உலகம் போற்ற உயர்ந்திருந்தும் மகவில்லாத ஒரு குறைபால் மன்னன் இன்னவாறு மிகவும் மறுகியுள்ளான் என்றால மக்கட்பேற்றின் மாட்சியும், அப்பேறில்லா வழி விளையும் பிழையும், பேரிழவும் என்ன நிலையில் எண்ணப்பட்டுள்ளன என்பது ஈண்டு எளிது தெளிவாம்.

"உந்து நீர்க்கடல் உடுத்தபார் முழுவதும் ஒருவகே
வந்து தாழ்தொழும் அரசியல வளமெலாம் பெறினும்
இந்திராதியர் பெருமபதத்திருக்கை எய்திடினும்
மைந்தர் இன்றியே வாழ்வது வாழ்வுமற் றன்றே."
(பிரமோத்தரகாண்டம்)

என்றதும் ஈண்டு சிந்திக்கத்தக்கது.

இங்ஙனம் அருமெபெறலான பெரும்பேற்றை முதலில் அடையாமல் நெடுநாள் மலடிருந்து தவங்கிடந்து முதிர்வயதில் பெற்றுள்ளான் ஆதலால் பொருந்துகின்ற அந்நிலையை நினைந்து மன்னன் உருகி யுரைத்தான்.

பெற்றுள்ள புதல்வர்கள் நால்வராயிருந்தும் முதல்வனுன இராமனை மட்டும் இங்கே விதந்து குறித்தான்.

பரதன் முதலிய மூவர் மீதும் பிரியமுடையனேயாயினும் தலைமகன்மேல் தனது தனிக்காதல் நிலை மீறியுள்ளமையால் அவனையே இன்னுயிரினும் இனியனுக எண்ணிப்பேசி மன்னன் யாண்டும் இன்புற்று வருகின்றுன். அரச பாரம் தாங்கி ஆறுதலருளும் பேராளன் ஆதலால் அந்தச் சீராளனையே சீராட்டிப் பாராட்டலானுன்.

"இராமன் என் நோவை நீகுவான் வந்தனன்" என்றது பண்டு அரசன் நொந்திருந்த பழைய சிந்தனைகளை விளக்கி வந்தது. இங்கே நோவு என்றது "ஓா * மறுக்கம் உண்டு" என்று முன்னம் குறித்ததை என்க.

பிள்ளை இல்லையே என்ற உள்ளக் கவலை ஒழியவும், மலடன் என்னும் பழி அழியவும், அரசை ஆள ஆள் இல்லாமையால் நாதியற்ற வீடுபோல் இந்நாடு பாடிழந்து படுதுயரடையுமே என்ற பரிதாபம் தீரவும், தனது பிறவித்துன்பம் நீங்கவும் இராமன் தனக்குப் பிள்ளையாய்ப் பிறந்திருக் கின்றுன் எனத் தசரதன் உள்ளம் உவந்து இங்ஙனம் உரைத்திருக்கின்றுன்.

அருந்தவம் புரிந்து இராமனை நான் பெற்றேன் என்னுமல் அவன் வந்தனன் என்றதனுல் அவனது உயர்நிலை உய்த்துணர நின்றது. பரமபதநாதன் பரமகருணையால் இத்தரணியிலிறங்கி உயிர்களுக்கு உதவிபுரிய எண்ணி இவ்வண்ணம் இசைந்திருக்கின்றுன் என்பது இதில் தொனிக்குறிப்பாயுள்ளது.

"அவன் வருந்த, யான் பிழைத்து உய்ந்தனன்போவது ஓா உறுதி எண்ணினேன்" என்றது, இராமன் அரச பாரத்தைத் தாங்கி நிற்க, நான் துறந்து தவம் புரிந்து பிறவா நிலையாகிய பேரின்ப வீட்டை அடையக் கருதினேன் என்பதாம்.

---

* இந் நூல் பக்கம் 236 வரி 18 பார்க்க.

# திருக்குறட் குமரேச வெண்பா

## மூலமும்—உரையும்.

கவிராஜபண்டிதர், ஜெகவீரபாண்டியனார்

செய்தருளியன.

இது, அரிய பெரிய புதிய இனிய அற்புதமான ஓர் அழகிய நூல். திருவள்ளுவரை உள்ளுறப் பெற்றது. 1330 அருமைத் திருக்குறள்களுக்கும் உரிமையான உண்மைச் சரிதங்களை உதாரணம் காட்டிக் குமரேசனை முன்னிலையாக் கொண்டு, நேரிசை வெண்பாவால் நிறைந்து சீரிய நிலையில் நிலவியுள்ளது. எளிய நடையில் தெளிய எழுதிய விழுமிய விரிவுரை யுடையது. பழைய உரைகளைக் கொண்டு எளிதில் அறிய முடியாத குறளின் நுணுகிய பொருள்களெல்லாம் இதனால் இனிது தெளியலாம். சரித வளங்கள் சால அமைந்தது. பண்டைக் காலத்திலிருந்த அரசர்கள், புலவர்கள், வள்ளல்கள், வீரர்கள், பதிவிரதைகள் முதலிய எல்லோருடைய குண நலங்களையும், செயல் நிலைகளையும், இயலொழுக்குகளையும் கண்டு மகிழ்தற்கு இது இனிய காட்சிச் சாலை போல்வது.

இவ் ஒரு நூலுணர்ச்சியே அரிய பல நூல்களின் பயனையும் எளிது உதவும் என்பதை இதனைப் பெற்றபின் எவரும் முற்றவும் தெளிவர். புலமை யுலகில் இது தலைமை பெற்றுள்ளது.

இருமை யின்பங்களையும் இனிது நல்க வல்ல இவ் அருமை நூல் ஒவ்வொருவர் கையிலும் உரிமையோடு உறுதியாக இருக்க வேண்டும். அமிர்த மயமான இந்த அறிவின் கருவூலத்தை உடனே பெற்று உண்மைகண்டு உளங்களி கூருங்கள். புத்தக நிலையங்களுக்கு உத்தம நிலையமானது. சிறந்த பதிப்பு; உயர்ந்த பைண்டு.

| | | | |
|---|---|---|---|
| அறத்துப்பால் 800பக்கம் (அழகிய பைண்டு) | .... | ரூ. | 8–12—0 |
| பொருட்பால் முதற்பாகம் 800 பக்கம் ,, | .... | ,, | 8–12—0 |
| ஷை இரண்டாம் பாகம் 800 பக்கம் ,, | .... | ,, | 8–12—0 |
| ஷை மூன்றும் பாகம் 1130 பக்கம் ,, | .... | ,, | 10–12—0 |
| காமத்துப்பால் 1160 பக்கம் ,, | ... | , | 11—0—0 |
| அறத்துப்பால் மூலம் ,, | .... | ,, | 1—0—0 |
| அகத்தியமுனிவர் வசனம் ,, | .... | ,, | 1—0—0 |
| பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் வசனம் முதல பாகம | | | 2—0—0 |

விலாசம்:—மானேஜர், திருவள்ளுவர் நிலையம்,

## இந் நூலைக்குறித்து அறிஞர்கள் அனுப்பியுள்ள

மகா மகோபாத்தியாயர், உ. வே. சாமிநாதையரவர்கள்.

"இந்நூல் மிகவும் பாராட்டற்பாலது. தமிழ் நாட்டி லுள்ள அன்பர்கள் எல்லாரும் இந்நூலை வாங்கிப் படித்து இன்புறுவார்கள் என்று நான் நம்புகின்றேன்."

K. G. சேஷையரவர்கள் ஹைகோர்ட்டு ஜட்ஜு, (Retired.)

"இந்நூலை வாசித்து யான் பெரு மகிழ்ச்சியுற்றேன். இதன் அருமையும், பெருமையும் பெரிதும் பாராட்டற்பாலன. சொல் நயத்திலும், பொருள் நயத்திலும் இந்நூல் சிறந்து விளங்குகின்றது. இதில் அடங்கியுள்ள கல்வி நலங்களைத் துய்த்து நல்லறிவு மல்கி எல்லாரும் இன்புறுவார்கள் என்று நம்புகின்றேன்."



Rao Sahib, வே. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள், G.B.V.C.

"இந்நூல் சொல்நயம், பொருள்நயம், தொனிநயம் முதலிய பன்னயமு மலிய நிலவி யுள்ளது. சுருக்கமான திருக்குறளும், அதன் பெருக்கமான இந்நூலும் முறையே வித்தும் மரமும் ஒத்திருக்கின்றன. தமிழறிந்த ஆடவர், மகளிர், இளையோர், முதியோர் முதலிய எல்லாரும் எளிதாகவும் இனிதாகவும் படித்து இம்மை மறுமைப் பயன்கள் இரண்டும் எய்தும்படி இந் நூல் இயற்றப் பெற்றிருக்கிறது."

தமிழாசிரியர், ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்.

"இந்நூலின் செய்யுட்களெல்லாம் மிக்க நயமுடையனவாயும் பொருத்தமான கதைகளைக் கொண்டனவாயும் திகழ்கின்றன. உரையின் நடை இன்பம் விளைக்கின்றது. இந் நூலினைக் கற்போர் கல்வியின் பல்வகை நலங்களை ஒருங்கே துய்ப்பர்."

K. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் M. A., M. L.

"இந் நூலாசிரியரது தெளிவான இனிய தமிழ் நடையும், சொற்பொருள் விளக்குந் திறனும் கற்றோர் யார்க்கும் களிபெரு வகை தரும் பான்மையன. திருக்குறட் பெரு நூலை எளிதாகவும், விளக்கமாகவும், திட்பமாகவும் உணர்ந்து இன்புறுதற்கு இந் நூல் சிறந்த கருவியாகும் என்பது என் கருத்து."

பல்லாவரம், சுவாமி வேதாசலம் அவர்கள்.

"அரும்பெறல் மணிகளான் திருக்குறட்பாக்களின் விழுமிய பொருள்களைத் தெளிவுற விளக்கி இந் நூல் எழில்மிகுந்துள்ளது."

தமிழ்ச் சங்கம், மதுரை.

"இது அரிய பெரிய நூல். பொய்யாமொழியின் 1330 அருங் குறள்களுக்கும் ஒவ்வோர் உண்மைச் சரித நிகழ்ச்சியை மிகப் பொருட் பொருத்தமுற இணைத்து வெண்பாவை முற்றுவித்துச் செல்லுந் திறம் வியந்து பாராட்டற்பாலது. பொழிப்புரை, கருத்துரை, விசேடவுரை, கதை விளக்க முதலிய இன்றியமையாத பலவகைக் குறிப்புகளும் தக்க மேற்கோள்களுடன் அழகுற இதில் அமைந்துள்ளன."



C. V. கிருஷ்ணசாமி ஐயரவர்கள்.

*(Secretary, Civil Justice Committee, Calcutta.)*

"இந் நூலாசிரியருடைய சிறந்த அறிவும், விரிந்த புலமையும், சுவை ததும்பிய சொல் வன்மையும் இதனால் எவர்க்கும் இனிது புலனாம். இவ் ஒரு நூலால் அரிய பல நூல்களின் பயனையும் ஒருங்கே பெறலாம்."



திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள்.

"இந் நூல் புலவர்கள் அறிவுக்கு விருந்தென அமைந்துள்ளது. தமிழுலகமுழுவதும் இவ் அருமைநூல் பெரிதும் பரவவேண்டுமென்று நாம் பெரிதும் விரும்புகின்றோம்."



S. சோமசுந்தர பாரதியவர்கள் M. A., B. L.
அண்ணாமலை யூனிவர்சிட்டி.

இந நூல் புது மொழிப் புத்தமுதாம் என்பது புனைந்துரையன்று. உரையும் பாட்டும் ஒருங்கினிய நடைநலனும் பொருள் வளமும் பொருந்தி மிளிர்கின்றன.



S. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், B. A., L. T.
*Educational Officer.*

"இந் நூலின் அருமை பெரிதும் பாராட்டற்குரியது. இதன் தெளிந்த தமிழ்நடை, தமிழ்க் கல்வி நிரம்பப் பெறாதோர்க்கும் இன்பமும் பயனும் ஈய வல்லது."

வானமாமலை மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ ஜீயர் சுவாமியவர்கள்.

"இந் நூலின் சொல் நயங்களையும், பொருள் நயங்களையும், கதைகளின் பொருத்தத்தையும் உரை நுட்பங்களையும் கண்டு பெரிதும் வியந்து உளமிக மகிழ்ந்தோம். தமிழுலகத்திற்கு இந் நூல் பேருதவி தரும் என்று யாம் உறுதியாய் நம்புகின்றேம்."

திருக்குறுங்குடி மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ ஜீயர் சுவாமியவர்கள்.

“ இந்நூல் பொய்யாமொழியினைத் தழுவி, உலகம் உய்யும் வகை அரிய நலங்களை அறிவுறுத்திச், சொற்சுவை பொருட் சுவைகள் சுரந்து. இதிகாச புராணாதி கதைகளுடன் கலந்து, தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஒத்துக் கனிந்திருக்கின்றது. இந்நூலாசிரியரது கவித்திறமும், புலமை நிலையும், பெரிதும் மேம்பட்டனவாகக் கருதி மிகுதியும் இன்புறுகின்றேம்.”

திருவாவடுதுறை ஆதீனம், பழனிக்குமாருத்தம்பிரான் அவர்கள்.

“ திருக்குறட் குமரேச வெண்பா என்னும் அரிய பெரிய நூலும், அதன் உரையும் நம் தமிழுலக முழுவதும் நன்கு மதித்துப் போற்றும் மாட்சிமையுடையன. இவ் வுண்மை அப் புனித நூலைக் கண்ணுறுவார் எவர்க்கும் இனிது புலனும்.”

H. A. POPLEY.

*Secretary: National religious work, South India.*

“ The author has tried to be simple and exact, and has produced a work that will be of real use to people in the Tamil country who desire to study this wonderful classic and to apply its teachings to everyday life.

I trust that the work will have a large circulation and heartily commend it to all Tamil scholars and to the Tamil public.”



SIR, T. N. SIVAGNANAM PILLAI, Kt.

*Minister for Development Madras Government.*

“The Commentary appended to each stanza is an interesting and novel departure from the traditional mode of annotating Kural and deserves every praise for its lucidity of exposition, exhaustiveness and wealth of illustrations and parallels from equally renowned Tamil classics. I am sure therefore that this work will form an invaluable addition to every Library, Public and Private.”



**Apply to:—**

**THIRUVALLUVAR NILAYAM,**

*No. 8, West Chitra Street, Madura.*